# ஓர் பரத்தை.






ஒரு இனிய தமிழ் நாவல்.

பல நூலாசிரியரும்
ஸங்கீத விற்பன்னரும் ஆகிய
இராமநாதபுரம்
வித்வான் மாப்பிள்ளை
வீ. தங்கவேலு ஸாமித்தேவர்
இயற்றியது.



Sacchidhanandha Press,
Madras.

*Copyright Registered.*

1913.

விலை ரூபாய் 1—4—0

# ஓர் பரத்தை.






பல நூலாசிரியரும்

ஸங்கீத விற்பன்னரும் ஆகிய

இராமநாதபுரம்

வித்வான் மாப்பிள்ளை

வீ. தங்கவேலு ஸாமித்தேவர்

இயற்றியது.





1913.

விலை ரூபாய் 1—4—0

## COPIES OF TESTIMONIALS.

MADRAS, 16th August 1904.

I have much pleasure in introducing to the public of Madras, Vidvan Thangavelu Samy Devar of Ramnad Samasthanam who is a very clever Violinist. I had an occasion to engage him for one of the entertainments in the Bagavath Katha Prasanga Saba established in the Thondamandalam High School and he pleased the audience with his skill in handling the instrument and I am sure he is deserving of all encouragement from the music knowing gentlemen.

(Sd) C. Subbaraya Pillai,
Joint Secretary, B. K. P. Saba,
Thondamandalam High School, Madras.

---

Madras, 20th November 1904.

In introducing to the general public M. R. Ry. Vidvan Thangavelu Swamy Devar Avergal of Ramnad Samasthanam, we are glad to say that he is one of the famous violinists and has the peculiar knack of pleasing the audience with exquisite music. He is very respectably connected and deserves every encouragement. We wish him success in life as an eminent violinist and a vocalist.

(Sd) C. Subbaraya Pillai,
(Sd) M. Munusamy Naidu,
Joint Secretaries, B. K. P. Saba,
The Thondamandalam High School, Madras.

Madras, 24th November 1904.

We have much pleasure in giving a testimonial to M. R. Ry. Thangavelu Swami Devar of Ramnad Samasthanam. He comes of a very respectable family and plays well on the violin. We believe he gave much satisfaction to the members of our sabha when we once engaged his services for an entertainment on 13th November 1904 when the anniversary of our sabha was celebrated. He deserves every encouragement at the hands of the music loving public of Madras.

(Sd) C. P. Ananthanarayana Aiyar,
Do T. T. Thiruvenkata Chariar, B. A, B. L.,
High Court Vakil,
Joint Secretaries,
The Sri Parthasarathy Swami Sabha, Triplicane.

---

Madras, 18th October 1904.

I have much pleasure in testifying to the excellent ability of Mr. Thangavelu Swami Devar the eminent violinist of Ramanathapuram Samasthanam. He has been in Madras for only a few months and as far as I can judge the public here have been very favourably impressed with the superior skill displayed by him in his performances whether given by themselves or as accompanied to vocal music. I have heard him follow on the violin some of the best singers of the day and the rapidity and the ease with which he

followed them are really remarkable. I earnestly hope that he will meet with all possible encouragement.

(Sd) M. Shunmuga Mudaliar,
Secretary,
Mylapore Sangita Sabha.

---

Madras, 21st September 1904.

I have much pleasure in introducing to the public M. R. Ry. Thangavelu Swami Thevar Avergal a famous master violinist of Ramnad Samasthanam. Having heard his eminence I had an occasion to engage him in the "Sri Saraswathi Gana Sabha" wherein he displayed his talents in full at the time. No doubt I find in him a peculiar feat of enriching the minds of the audience with exquisite music. He is a respectable gentleman with pleasant manners. He deserves all the encouragement and I have no doubt he will stand the test on any occasion. I sincerely wish him every success in life as an eminent violinist.

(Sd) S. A. Ragunatha Chariar,
Honorary Secretary,
The Sri Saraswathi Gana Sabha.

---

Madras, 29th June 1905.

We have much pleasure in giving testimony to the efficiency of Mr. Thangavelu Swamy Thevar of Ramnad Samasthanam in the art of playing violin, which we had the opportunity of

திய மாய்த் தெரிவித்து விடுகின்றார்கள். இவைகளால் ஸ்திரீகளும் தாமாகப் புருஷரை மயக்கிக் கெடுப்ப துண்டென்பது பெறப்படுகின்றது. இப்போது சென்னை, கல்கத்தா முதலிய பெரிய நகரங்களில் திரளான பரத்தையர் வீதிகளிற் செல்லும் புருஷர்களை லஜ்ஜை சிறிது மற்று ஆபாசமாக வலிதிற் கூப்பிட்டுச் சொல்லொணாப் பெருந்துன்பங்கள் வளர்த்து வருதல் பிரவித்தம். ஆடவர்கள் கூடி யிவ்வாறு ஸ்திரீகளை யழைப்பதைக் காணோம். இதனை விரிவஞ்சியித்துடன் விடுத்தாம்.

சென்னை, ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ் மகா வித்வானும்,உலகத்துக்குப்பல அரிய நூல்களை என்றும் சிரமம் பாராட்டாமல் திப்பியமாய் வெளியிட்டு உபகரித்துப் புகழுடம்பைப் பெற்று வருபவரும், தம்மை யடைந்தோர்க்குக் கைம்மாறு சிறிதுங் கருதாது கல்விச் செல்வத்தை யின்பமாய்த் தானஞ் செய்து வரும் பெருங்குண கணங்களுடையாருமாகிய ஸ்ரீ. கோ. வடிவேலு செட்டியா ரவர்களிடத்திற் குழுவி என்னுடன் வேதாந்த சாஸ்திரங்கள் பாடங்கேட்டவர்களுள், ஒருவராய்த் தோழமை பாராட்டியிருந்த ஸ்ரீ. எம் சண்முக முதலியாரவர்கள் இந்த நூலை அச்சிட வேண்டிய பரிசிரமமெடுத்துக் கொண்டு இனிதின் முற்றுவித்தற்காக யானென்றும் அவர்கள்பாற் கடமையுடையவனா யிருக்கின்றேன்.

சுபம்,

வீ. தங்கவேலு ஸாமி.



முருகன் றுணை.

திரு. சிவாநந்தசாகர யோகீசர் மாணவகரும்

சென்னை திருவேட்ட நாதபுரம்

கா. சிங்காரவேல் முதலியார் மகனருமாகிய

கா-சி. சிவசங்கரபண்டிதர் அவர்கள்

இயற்றிய




## சிறப்புப் பாயிரம்.

புங்கவர்க ணனிபேத்த வசுரர்குல மாய்த்தருஞ் சீர்ப் புகழே கொண்டு, செங்கையில்வே லெடுத்தடி யார்க் கருள்சுரக்கும் பெருங்கருணைச் சேயாய்க் கீரன், பொங்குசுவைத் தமிழோடு மருணகிரி நாதர்திருப் புகழே கேட்டும், இங்கெனது புன்றமிழ்க்குஞ் செவி கள்சாய் தருள்புரியு மிறைவன் றுட்கே. (1)

பத்திசெயு முழுமனத்தான் பாவாணர் நனிவிரும் பும் பண்பு வாய்ந்தோன், கத்தியமா யெமதிறைவன் கந்தபுராணஞ் சுருக்கிக்காட்டி யார்க்கும், புத்திசொலப் பரத்தை யெனு நூலியற்றி புபகரித்தான் புவியோர் வாழ, முத்தமிழுங் குடியிருக்கும் முகவையெனும் பதி யாளன் மொழியக் கேண்மோ. (2)

வேறு.

வார்தாங்கு முலைமடவார் மதனென்ன மடலெழு தும், தார்தாங்கு தடந்தோளுந் தமிழ்மணக்குஞ் செவ் வாயும், பார்தாங்கு புயமுமுடைப் பாஸ்கரசே தாசுரி மை, யேர்தாங்கு சோதரிக்கே யெழின் மாலை சூட்டின வன். (3)

சோலைகளும் வாவிகளுஞ் சூழ்மதிலும் மாளிகை யும், சாலைகளுந் தழைத்தோங்கத் தத்தையுடன் குயி லினங்கள், பாலைநிகர் மொழிமடவார் பதுமமலர்க் கரங் குலவ, மாலைநிகர்த் திடுமிளைஞர் வாழ்வுசெலும் பூச் சேரி. (4)

இத்தகைய தலத்ததிபன் எழில் வீரர் குலதில கன், வித்தகனு ரருளுடையான் வீசுபுகழ்ப் பட்ட முளான், முத்துசாமித்தேவர் மூதறிவிற் கொத்ததென நத்தியலார் சிவசுந்தர நாச்சியார் தவப்புதல்வன். (5)

வேறு.

நீதிக்குரிய நன்னெஞ்சா ணிகரில்லாத கற்புடையா, ளாதிப்பரம னடிப்புகழை யடியார்புகழைச் செந்தமி ழிற், கீதச்சுவையுஞ் சொற்சுவையுங் கிளர்த்திப்பாடும் பெருமாட்டி, சேதுக்கரசு நாச்சிவளர்த் தெடுக்கவொ ழுக்கஞ் சிறந்தோனே. (6)

வேறு.

சண்முகனர் திருப்புகழுந் தமிழ்மறையும் மற்ற வையும், பண்முறையி னிசைக்கருவி யுடன்பாடும் பண் புடையான், விண்முகத்தார் மண்முகத்தார் மெச்சு தமிழ்ப் பாவலனென், கண்முதிரு மன்புடையான் கார் தாங்கு கரமுடையான். (7)

இங்கிதமாய்ச் சங்கீத விசைபயிற்ற வவதரித் தோன், தங்கவேற் சாமிசொலுந் தனிப்பரத்தை நூல் தேர்ந்தோர், அங்கசவேள் விற்கணையா லடியுண்டு மாயமினுர், தங்குழிவீழ்ந் தொருநாளுந் தளரார்கா ணி ளமையிலே. (8)



# பாயிரம்.



மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரும்
"ஹேமலதா" வென்னும் நவீனநாடக
நூலாசிரியருமாகிய
டாக்டர் - வே. அரங்காச்சாரியார் அவர்கள்
இயற்றியவை.

முத்தமிழுக் கிருப்பிடமா முகவையெனும் பதியாளன் மூவர் பாடல், நித்தியமும் வாய்மணக்கக் கேட்பவர்தஞ் செவிமணக்க நிறைந்த பக்தி, சித்தமெலாஞ் சிவமணக்கச் சங்கீதக் கருவிகளிற் சிறப்பாய்ப் பாடி, எத்திசையும் புகழ்படைத்த தங்கவேற் சாமியெனு மியற்பே ருள்ளான். (1)

பாத்தையெனு நூலியற்றி யென்போல்வா ரகங்குளிரப் பாரோர்க் கீந்த, திறத்தையறிந் தரும்புலவர் தமிழ்நடையும் பொருள்வனப்புந் தேர்ந்து சொன்ன, கருத்துடையான் கல்விநலம் பெரிதெனவே யுரைத்திடநான் காதிற் கேட்டேன், பொருத்தமுடைத் தம்மாவிவ் வரும்புலவ னட்பிதனாற் புகழ்கொண் டேனால். (2)



வேலு மயிலும் துணை.
காங்கயம்
அஷ்டாவதானம்
ஸ்ரீ சேஷாசலநாயடு கோரு.

சங்கீத சாகித்ய சற்குணகோ லா கலவான்
இங்கீத லாற்பே ரிசைவள்ள—லங்கீதம்
பற்றுதொங்கற் சேதுபதி பாற்காமால் மைத்துனனுங்
கற்றதங்க வேற்சாமி காண். (1)

வந்தத் தினைமாவும் வாயூற லுங் கொள்குகன்
கந்தத் தினைச்சுருக்கிக் காட்டினன்—ஐந்து
முகவையன்பா லன்பன் முறைப்பெரிய சாமி
முகவையன்பா லன்பன் முறை. (2)

வாணிச்சி பிட்டின் மகிழ்ந்தோனைப் போற்றுகலை
வாணிச்சி பிட்டின் மகிமையெலாம்—பாணிக்குட்
காட்டுதங்க வேற்சாமி கத்யநிக ரோபுலவீர்
நாட்டுதங்கள் செஞ்சொல் நடை. (3)

யார்பாத்தை வீட்டை யடையாமற் கொள்வர் நெறி
யார்பாத்தை வீட்டை யடையாமல்—ஓர் பாத்தை
சால மதிப்புத் தகத்தாலே கண்டபின்பு
சால மதிப்புத் தக. (4)

அங்கிகரி யாதவனே யம்புவியே யென்றுனை
அங்கிகரி யாதவனே யம்புவியே—கொங்கையிலை
சொன்னு விடையாரைத் தோயர் தங்க வேற்சாமி
தன்னு விடையாய்ந்தோர் தாம். (5)

முத்துக்கு வித்தான மூரல்தனைக் காட்டுகா
கத்துக்கு வித்தான காரிகையார்—எத்துக்குள்
வீழ்ந் தழிபாரெந் தங்கவேற்சாமி நாவலவன்
ஆழ்ந்த பொருளுணலை யறிந்தால். (6)

கத்தியமேபா மீத கத்தியமே யாவருக்கும்
கத்தியமே யென்பலன் வீண் காதைகளைச் சத்தியமே
தங்கவேற் சாமி தமிழே தமிழாகும்
எங்கு மணமோங்கு மினி. (7)



திரிசிரபுரம் வரகனேறி உபாத்தியாயர்

## தி. கு. சேலம் சுந்தரம்பிள்ளை யவர்கள்

இயற்றியவை.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

முன்னாளில் விதிவிலக்கை யான்றோர்கள்
பத்தியத்தின் மொழிந்தார் பன்னா
ளிந்நாளிற் படிப்போர்க்குப் பத்தியம் பத்
தியமாக விருப்ப தோர்ந்தே
தென்னாருஞ் சிறப்புமிகு ராமநா தப்பெ
யர்கோ டேத்து வாழ்வோன்
மின்னாரும் வடிவேற்கை யெமதிறைவன்
கழல்பரவும் விழுமி யோனே. (1)

கத்துவார் கழல்சேரும் பாற்கரனுஞ்
சேதுபதி களித்துத் தந்த
வித்துவான் மாப்பிள்ளை யெனும் பெயரைச்
செயற்கையினல் விளங்கப் பூண்டோன்
நத்துவார் செவிமடுப்பக் கீர்த்தனைகள்
பலவியற்றி நலமே பெற்றோன்
முத்துமா லிகை பொருவ நற்காந்தச்
சுருக்கமதை மொழிந்தோன் மன்னே. (2)

இன்னபுகழ் பெறுதங்க வேற்சாமி
யெனும்புலவ னினிமை வாய்ப்பப்
பன்னருஞ்சீர்க் கத்தியத்தி னோர்பாத்தை
யெனு நூலைப் பகர்ந்தா னந்தச்
சொன்னயமும் பொருணயமு நூல்படிக்குந்
தொறுந்தோறுஞ் சுவைமிக் கோங்கு

மன்னுபலா மாவரம்பைக் கனியுண்ணன்
மானுமினும் வழுத்துங் காலே. (3)

வள்ளுவனு ருரைமறையிற் பொருட்பெண்டி
ரெனும்பாவின் வளநோக் காமற்
கள்ளுலவு மலர்க்கூந்தற் கனங்குழையே
பெண்மணியே கண்ணே யென்ன
விள்ளுவதிற் பின்னடையா துரைபுகன்று
பரத்தையரை விழைந்து நிற்குந்
தெள்ளுதலி லார்தம்மைக் கரையேற்றும்
வங்கமெனத் திகழு மாதோ. (4)



சர்வம்ஸ்வரூபமயம்.

## பூச்சேரி சே. பழனிவேலுப் பிள்ளை

இயற்றியது.

அறுசீர்க்கழி நெடில் ஆசிரியப்பா.

ஓர்பரத்தை யெனுநூலை யுலகுவப்பத்
தெண்ணடையா லுபய மாந்தர்க்
கோர்பரத்தை யெனச்சுட்டி யறியாவில்
வாழ்க்கையிரு ளோட்டு வித்தான்.
கார்கரத்தை நிகரும்பாற் கான்மகிழ்மைத்
தான்முகவைக் கண் ணமர்ந்து
பார்பரத்தும் வீசுபுக ழெந்தங்க
வேற்சாமிப் பானு மாதோ.



# பாயிரம்.



வேளாங் கண்ணி, செந்தமிழ்ச் செல்வி பத்திராதிபர்
வித்துவான் ம-ா-ா-ஸ்ரீ கோ. அருணாசலத் தேவரவர்கள்
இயற்றிய

## நேரிசை ஆசிரியப்பா.

திருவுறு பணிலஞ் செறிதரு பணையுங்
குருகுசை வலமுங் கொட்டியுங் குமுதமு
மரையுநற் குவளையும் வராலொடு சேலு
நிரை நிரை பரவு நீர்மலி தடமும்
பன்மல ரலரப் பாண்செயு ஞிமிறுந்
துன்னியாங் கெய்துந் துணையிலாச் சூழலுங்
கன்னலுங் கமுகுந் தென்னைமா பலவும்
புன்னைமா துளையும் புரையி லசோகு
மரம்பைநல் லகிலு மணிசந் தனமு
நிரந்தர மாக நீண்டுவா னளாவுஞ்
சோலையு மன்ன சாலையும் பாட
சாலையுந் தேவ ராலய மற்று
மமைதரு முகவை யம்பதி மேவு
முமைதரு பால னுளத்தமர் தங்க
வேலுச் சாமியாம் விறல்சேர் வள்ள
னாலு கவிகளு நன்கமைத் திடுவதற்
கிலக்கண விலக்கிய விருஞ்சல திகளைக்
கலக்கி யுண்ட கருமுகி லனையான்
சங்கீ தத்தி லிங்கித முடையா
னங்கச வேட னகங்குழை யெழிலான்
குணப்பெரு மலையான் குவலய மதிற்றன்

மணப்பெண்ணே யன்றி மனத்தினு நினையான்
றக்கார் நட்புச் சதாபெற் றிடுவோன்
மிக்கார் வத்தால் விளங்கவெக் காலுஞ்
சொன்னயம் பொருணயந் துகளில் நடைநய
மின்னபற் பலநய மியைந்திருப் பதனாற்
கன்னல் கற்கண்டோ வென்ன கற்றோர்கள்
வியப்பநற் காதையாய் வேண்டுவ வமைத்து
நயம் பெற்றுய்யவே யோர்
பாத்தையென் றரியநூல் பார்க்களித் தனனே.



தில்லைவளாகம் சிவானந்தானுபூதி நிலய மடாலயம்

ம-ள-ள-ஸ்ரீ ஆனந்த சண்முகசரணாலய சுவாமிகள்

இயற்றியவை.

## கவிகள்.

பன்னகர்க்குந் தலைநகராய்ப் பணிநகர்க்கு மணி குலவு பாகசாதன், பொன்னகர்க்கும் புடைநகர்க்குங் களிபயக்கும் பொற்பினதாய்ப் பொலிந் தெஞ்ஞான்று, மன்னுமற முதனான்கு பேறுமலி மாண்பினதாய் வளத்தான் மிக்க, துன்னுபுகழ் முகவைநகர் பன்னெடுநாளியற்று தவத் தோற்றம் போல்வான். (1)

அவமலியும் புன்சமய நெறிசாரார்க் கன்புடையானறிவின் மிக்கான், சிவமலியுஞ் சித்தாந்த நெறிதேர்ந்து சிவானுபவச் செல்வ மிக்கான், பவமலியா துலகாண்ட பாஸ்கரன்சோ தரிதனக்குப் பதியா யுள்ளான், தவமலியுந் தங்கவேற் சாமிபுக ழொருநாவாற் சாற்றற் பாற்றோ. (2)

சிமனையுஞ் சசிமனையுந் திகழ்மனைவிற் சேர்த்தி யிடர் தீர்க்கு மாறு, ஏமனையன் றுதைத்தவா னிடந் தோன்றி யிருங்கயிலை யிருக்குநாளிற், பூமனையோங் காரத்தின் பொருள் வினவிச் சிறைபுரிந்த புனிதன் காதை, காமனைவென் றிடுந்தங்க வேற்சாமி கத்தியமாய்க் கழறினன் முன். (3)

தெள்ளரிய நறும்பாகோ கற்கண்டோ செங்கரும் போ சீனிதானோ, தள்ளரிய வான்பாலோ வமுதோ முக் கனியோசர்க் கரையோ வென்ன, கொள்ளரிய சொன்னயமும் பொருணயமுங் குவ்விடுமிப் பரத்தை நூலை, விள்ளரிய புகழ்வாய்ந்த தங்கவேற் சாமியிந் நாள் விளம்பி னனால். (4)

சீர்பூத்த முகவையெனும் பதியமருந் தங்கவேற் சாமி செப்பும், பேர்பூத்த பரத்தையெனு நூலாய்ந் தோர் பெருங்காமப் பிணிகணீங்கி, வார்பூத்த தனத் தார்பால் மயக்கமுறு தருண்ஞான மருவி மேலா, யோர் பூத்த பரத்தையெளி தடைகுவரொன் பதுதிண்ணமிசைத்திட் டோமே. (5)

புத்தமுது திரட்டிவைத்த பொற்கலச மோநறுந் தேன் பொலியக் கூட்டி, வைத்தசுவைப் பாகுபெய்த மணிச்செப்போ கண்டினொடு வடித்த தீம்பால், வித் தகமாக் கியபொற்றட் டோதங்க வேற்சாமி விரும்பிச் செய்த, மெய்த்தகைமை யாம்பரத்தை யெனுநூலை யாதெனயாம் விளம்புவோமே. (6)

வேறு.

கைப்பொரு ளெலாங்கொடுத்து கல்வி கேள்வி கண் முதலா, மெய்ப்பொருளைக் கைவிடுத்து வேசை

முலைப் போகமெனும், பொய்ப்பொருளை கைக்கொண் டா னெவனொருவனிந் நூலைச், செப்பமுற வாய்வா னேற் றீவினையாங் கடற்படியான். (7)

வேறு.

மாசிலாத குடிப்பிறப்பு மானங்கீர்த்தி யிவைமாய வாசை நோயானது பெருக வனங்க சரத்தாலேவுண்டு கூசலின்றிக்குலத்தவரைக் குலையச்செய்தோனுயிடினும் நேசமுடனிந் நூலாய்வா னுயினரிய நிலைபெறுவான். ()

வேறு.

வேலிற்றிகழ்ந்து கயலிற்பிறழ்ந்து விடமொப்ப வெப்பமருவிப், பாலிற்றெளிந்து பிணையைத்துரத்தி பரிசூழ்பரந்து படைவேள், கோலிற்பயின்று குமிழின் மறிந்து குழையூடு செல்லும் விழியார், மாலிற்படா னவர்கள் காலிற்படா னிந்த மா நூலை யாயும் விடனும்.

வேறு.

ஆசையல்குற் பெரியாரை யருளுமிடையுஞ் சிறி யாரைக், கூசுமொழியும் புருவமுங் குடிலமாகி யிருப் பாரை, வாசக்குழலு மலர்க்கண்ணு மனமுங்கரிய மட வாரைப், பூசல் பெருக்க வல்லாரைப் பொருந்தானிந்த நூலாய்ந்தோன். (10)

வேறு.

காமமே கொலைகட்கெல்லாங் காரணங் கண்ணோ டாத, காமமே களவுக்கெல்லாங் காரணங் கூற்றமஞ் சுங், காமமே கள்ளுண்டற்குங் காரண மாதலாலே காமமே பற்றுனின்னூற் கைக்கொளப் பெறுவனுயின்.



திருவாரூர் ஆரியன் சோதிட சாலையின் அதிபர்
ம-ா-ா-ஸ்ரீ V. வயித்தியநாதஸ்வாமி ஜோதிஷர் அவர்கள்
இயற்றிய.

## நிலமண்டில வாசிரியப்பா.

உலகிய லனைத்தும் உணர வுரைப்பது
பலகன் னெறியது பண்புள பாரத்தையே
இன்ப ரஸமும் இல்லற வொழுக்கமும்
அன்புடனறைவது ஆருயிர்ப் பாரத்தையே
சைவநூற் பெருமையைத் தவறு துரைப்பது
கைவரு நன்னூற் கதையாம் பாரத்தையே
திருவருள் சுரக்கும் திருவா சகமும்
அருடா வுரைப்பது அன்பாம் பாரத்தையே
ஆங்கிலர் கீதமும் அதனின் பெருமையும்
ஓங்கியுரைப்பது உயர்வாம் பாரத்தையே
மாதர் நீதியும் மநுமுறை வழக்கும்
நீதி போதமும் நிகழ்வது பாரத்தையே
மணமகள் மணமகன் வாழ்க்கைக் கேதுவும்
அணுவதும் விடாமல் அறைவது பாரத்தையே
தேவார மென்னும் திரு அருட்பாவை
நாவாரச் சொல்லெனும் நன்னூற் பாரத்தையே
மதனனூற் கருத்தையும் மணந்து வுரைப்பது
பதனமென் றுரைப்பதும் பன்னூற் பாரத்தையே
கல்வியும் அறிவுங் கருதி யுரைப்பது
தொல்காதையு நனிச் சொல்வது பாரத்தையே
பாரத்தையும் வாழி படித்துளோர் வாழி
சிரத்தையோடுரைப்பவர் சிறப்பே வாழ்கென
சிறப்பு நல்வாழியே.



கோயமுத்தூர் தாமஸ் தெரு சாரதா விலாச சபா
செக்ரிடெரி ம-ா-ா-ஸ்ரீ C.K. நாராயணசாமி முதலியார்
அவர்கள் எழுதிய அபிப்பிராயம்.



ஐயா! தாங்களன்புகூர்ந்து விடுத்த ஓர்பாத்தை யென்னும் நவீனத்தைப் பெற்று முழுதும் படித்துப் பேரானந்தங் கொண்டேன். தங்களது கற்பனு வளமையும், காதலுறு நடையும் இாமுறுங் கோர்வையும் எழில்பெற வமைந்து வாசிப்போர்க்கு மாணவன்பும், படியா வூக்கத்தையும் தருகின்றது.

ஸ்ரீபுருஷ சம்பாஷணையைப் போல அமைந்த கதைப் போக்கு காதலர் காதலிகளின் ஒத்த வண்மையும், நித்திரை ஸ்நாநம், கற்பு ஆகாரம், பால், கடவுள் ஆதிய அதிமுக்கிய விஷயங்களைப் பிரகிருதத்திற்குப் பெரும் பிரயோஜனத்தைத் தாக்கூடிய தென்பதை நுணுகி ஆராய்ந்து அவற்றின் ஸ்வரூப விசாரங்களை நன்றுகப் புலப்பட்ட சம்பாஷணை மூலமாகவிளக்கியருளிய தங்கள் பெருமிதத்திற்கு உலகம் நன்றி செலுத்தக் கூடியதே.

சங்கீத விஷயமாக நிகழ்ந்த சம்பாஷணை மெத்த அருமையானதாய் நீண்ட அநுபவத்தை யொட்டியதாய் படிப்பவர்க்கு அத் தொழிலின் அதிமேன்மை இத்தகைய தென்பதை விளங்குந் திறத்ததாய் அமைத்த தங்களரிய சமர்த்து முழுதும் பாவசப்படுத்துகின்றது.

சின்னையன் இராக்குமுத்து பெத்த பெருமாள் பெத்தண்ணன் முதலான துஷ்டப் பரம்பரைகளின் சல்லாபனங்கள் அத்தனை விசேடித்ததல்ல.

கௌரம்மாளின் கற்பு விசேடத்தை வருணித்த கட்டம் அவசியம் புகழ்தற்குரியதே.

சுவாமியார், ஜமீன்தார், தாய்க் கிழவி முதலியோரின் சம்பவங்கள் நிஜமான அனுபவத்திற் கொத்துமிகுந்த சமத்காரமாய் ஆய்ந்து விசாரித்தறிந்த மதிநுட்ப விசேடம் மிகு மேம்பாடுடையன.

முடிவாக இந்நூல் பிரகிருதத்திற்கு மெத்த அவசியமான தென்பதே நமதபிப்பிராயம் விலை மட்டும் சற்று நயமாக ஏற்படவேண்டும்.



திருவண்ணாமலை ஆதீன வித்துவான்
காரவட்டங்குடி சுப்பிரணிய பாரதிகள் குமாரரும்
இராமநாதபுரம் சமஸ்தான வித்துவான்
சர்க்கரை புலவர் வம்சத்தவரும்
மன்னார்குடி
பின்ட்லே காலேஜ் தமிழ்ப் பண்டிதருமாகிய
ம - ா - ா - ஸ்ரீ சர்க்கரை இராமசாமிப்புலவர் அவர்கள்
மாணவருமாகிய பிரம்மஸ்ரீ நவநீத கிருஷ்ண பாரதிகள்
இயற்றிய.

விருத்தங்கள்.

இனமொளிரு துறைவரிய பசும்பொழிலிற்
கரும்புழக்கு மெருமையாரப்
புனல்பருகத் தடஞ்சார்ந்து பொருவாளை
யுடன்றுக்கப் பூங்கன் றென்று

நினைவுறலும் பயஞ்சொரிந்து நிறைதடச்செங்
கமலங்க ணில்மாடத்து
வனைமயிலார் குழலணியெல் லணிகண்டு
மலர்முகவை வாழும் வள்ளல். (1

கன்னனையும் பாரியையுங் காசினியில் வள்ளலெனச்
சொன்னவுரை பொய்யென்னத் தொன்முகவைத்—
தென்னவனும், பாற்கானின் கண்மணியாம் பாற்கரமா
மைத்துனன், நூற்கரை கண்டானுண் ணுழைந்து. (2)

வாடியுழல் பயிர்களுக்கு மழைத்துளி
டுப்பதென வறண்ட ஞானங்
கூடியுழல் பவர்மடமைக் குப்பிரசங்
கம்மழைபெய் கொண்ட லொப்பா
னீடுமணி மழைதருக்க ணிருகளெலா
முசிதமுறை நினைந்தியாத
பாடுநினைந் திகழ்கொடையான் பலகலையு
மகமகலாப் பண்பு வாய்ந்தோன். (3)

கண்டமுத நறவுபயங் கனிப்பாகைச்
சுவைபெருகக் காய்ச்சியாழிற்
கொண்டொழுக்க லோபூமாங் குயிலிசைப்ப
தோவென்னக் கொடுக்கு நாதந்
திண்குவமங் கருந்தாதுந் தீயிலிடும்
வெண்ணெயெனச் செய்யும் வண்ணக்
தண்டளிர்நேர் திருக்கரத்தாற் றனிப்பிடி
லிசைத்தருளுந் தன்மையாளன். (4)

குகனடியை மறவாத குணநிதியா
னவநிதியான் கோதிலாத

உ

முருகன் துணை.

# முகவுரை.



நமது அருமை வாலிபர்களில் அனேகர் தமது பருவத்தில் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்னும் முன்னர் அனுபவம் தெரியாமல் கபடமற்றவராய் வஞ்சத்தையே சிங்காரமாக் கொண் டிலங்கும் பரத்தையருடைய மோகவலையில்அகப்பட்டு விளக்கின்மீதுவிழும் விட்டில்போற் சீக்கிரம் கெட்டுப்போகின்றதை அடிக்கடி பார்க்க நமக்கு வெகு பரிதாபமாயிருக்கிறது பரத்தையரின் போலிப் பொலிவைத் தீநெறியெனத் தெரியாது மயங்கித் தமது மூதாதையர் பாடு பட்டுத் தேடிவைத்த பொருளை ஒட்டுக்கிளிஞ்சிலாய்ப் பொருட்படுத்தாது அவர்கள்பா லோட்டிவிட்டழித்து ஒடெடுக்குநிலையில் வந்துவிடுகின்றது மன்றிப் பூர்வ புண்ணியத்தி லரிதிற் பெற்ற தமது தேகத்தையும் எம்மருந்திற்குந் தீராத வியாதிகளுக்கு வாசஸ்தானமாக்கிச் சொரூபமுற்றுங்குலைந்து ஜன்மத்தைத் துன்பமயமாக்கிக் கொண்டு பிஞ்சிலே பழுத்து நிலை தடுமாறி விழித்திருக்கும் பல இளைஞரைப் பரிதாபத்துடன் காணும் அனுபவம் நமக்கு எங்கும்பரக்கவே உண்டாயிருக்கின்றதென்பது தெரிந்ததேயாம்; இளைஞர்வேசையரிற் பழகிப் பின் தேறவருவது விஷப்பரீட்சை செய்வதுபோலுந் துன்பந்தருவதாம். "Prevention is better than cure" என்றும், "வெள்ளம், வருவதற்கு முன்னரணை கோலி வையார், பெருகுதற்க ணென்செய்வார் பேசு" என்றும் ஏற்பட்ட ஆன்றோர் திருமொழிகட் கொப்ப அவர்கள் முன் எச்சரிக்கை இந்நூலாற்பெற்று மேம்படுவாரென எனது அற்ப அறிவைக்கொண்டு துணியலானதைக் கல்வி கேள்வி அறிவின் முதியோர் குற்ற நீக்கிக் குணங்கொண்டு ஆதரிப்பரென நம்புகின்றேன்

இந்நூலிற் சந்தர்ப்ப சுபாவங்களுக் கேற்பச் சிற்சில விடங்களிற் சாமானியமாய்க் கிராமியப்பதங்களைப் பிரயோகித்திருக்கின்றேன்.

இவைநிற்க, இப்போது நமதுநண்ப ரொருவருக்காகவும் சில ஈங்குத் தொடர்ந்தெழுத நேர்ந்தது:—

இக்காலத்திற் சிலர் பரத்தையருடைய நிலைக்கு இரங்கி அவர்கள் ஆதியில் உத்தமிகளாயிருந்தார்களென்றும் பிற்பாடே கெடுவதற் காளானார்களென்றும் பின்வயிறுவளர்த்தற் பொருட்டே அவர்கள் பல புருஷரைவிரும்பி ஒழுகத் தலைப்பட்டார்களெனவும் அவர்களை அவ்விழி தொழிலினின்றும் நீக்க முயல்வது சிறந்த காரியமென்றும் புருஷர்களாலன்றி ஸ்திரீகள் தாமாகக் கெடுவதற்குக் காரணமேயில்லை யென்றும், அபிப்பிராயம் கொடுக்கின்றார்கள். இவைகளில் நமக்கு ஆட்சேபனைக் கிடமானதை மட்டும் விசாரிக்கப் புகுவாம். ஸ்திரீகளாலன்றிப் புருஷருக்கும், புருஷராலன்றி ஸ்திரீகளுக்கும் காமக்கிளர்ச்சி யுண்டாவதில்லை யென்பது நிச்சயம். நாம் இந்நூலிற் பாரபட்சமாய் ஒருபாலரை மட்டும் இழிவு படுத்த நினைந்து துணிந்தோமல்லேம், ஸ்திரீகளுக்குப் பன்மடங்கு புருஷரினும் காமம் அதிகம் உண்டாயிருப்பதென்றாலும், அவர்களின் இயற்கை அடக்கக் குணத்தாலும் நாணத்தாலும் பிறர் தூற்றலுக்கும் நீடித் தனுபவத்தில்வந்த கட்டுப்பாட்டிற்கும் என்றும் சுதந்தரமில்லாமைக்கும் அஞ்சி அவர்கள் எக் காரியத்திலும் தாமேமுற்படத் துணிவதில்லை. இதனால் அவர்கள் தங்கள் காமவிருப்பைப் புருஷரிடம் வலிதில்தெரிவிக்கச் சாத்திய மில்லாதிருக்கின்றனர். சொந்தப் புருஷர்களிடமும் அவர்கள் தாமே தங்கள் விருப்பைக்காட்டிக்கொள்வது மில்லை. அவர்களுக்குத் தாங்கள் என்றுமே சுதந்தரமற்ற அடிமைகளென் றெண்ணுவது நீண்டகால நமது தேசத் தனுபவத்திற் படிந்து போய்க் கிடக்கிறது.

பண்டைக்காலத்திற் சுயம்வரமூலம்ஸ்திரீகள் தங்களுக்குப் பிரியமான நாயகனைத் தெரிந்து வரித்தே வந்தார்கள். தங்களுக்கு நாயகனைக் குறிக்கத் தக்க வுற்றாரற்ற காலத்தில் பெண்கள் தாமே சுயம்வர ஏற்பாடன்றித் தாங்கள் தாமே தங்கட்குப் பொருந்திய நாயகனைத்தெரிந்து மணத்திற்கொள்ளலுமுண்டு.

இக்காலத்தில் நம்மவருக்குள் ஆடவரைப் போல ஸ்திரீகளுக்கும் சுதந்தரம்கொடுக்கவேண்டுமென்ற முயற்சி நடந்தேறி

தகவுநிறை யுப்பெரிய சாமித்தே
வன்முன்செய் தவத்தினாலே
மிகுமறமே திருமேனி கொண்டதென
வவதரித்த மேன்மையாளன்
சகமுரைசெய் புகழ்காந்தப் பெருக்கமதைச்
சுருக்கிவெளி தந்தசீலன் (5)
இமையிளையாற்புரக்கும்விழி யெனவெழுத்தெண்
வரையிணையா வியைந்து காக்குங்
கமைதமிழ்மா நதிபடியுங் கவின்பரத்தை
யாங்கடலைக் கைமுமலை யென்
றமைவுறுஞ் செந்நாவினாற் கடைந்தமுதை
நார்க்களித்தா னரியைப்போலச்
சிமயவரை நிகர்யுயத்தான் சீர்தங்க
வேற்சாமிச் செல்வவேந்தே.



முருகன் துணை.

## இந்நூலாசிரியரின் வரலாற்றுச் சுருக்கம்.



செந்தமிழ்ச் செல்வியின் பிறப்பகமாகிய பாண்டி நாட்டில் தெய்வத் தன்மையும் செழுமையுமிக்க இராமநாதபுரமென்கிற முகவைப் பதியின் சேதுபதி மன்னர் குடியிலே இந்நூலாசிரியர் பிறந்தார். இவரது அன்னையார் சிவசுந்தர நாச்சியா ரென்பார் ஓர் பெண் மகவீன்று பன்னீராண்டு ஆண்மகப்பேறின்றித்தமது பூச்சேரி கிராமத்தில் விநாயகர் கோவிலொன்றும் வேலூருணி என்ற ஊருணி யொன்றும் புதுப்பித்து அன்னதான முதலியனவும் நடத்தி வந்தார். இவருடைய தந்தையாரின் பேர் வீசு புகழ்கொண்ட முத்துச்சாமித் தேவர். இவரைப்பெரியசாமித் தேவரென்றும் வழங்குவதுண்டு. அக்காலத்து உலகநாதசுவாமி என்ற அறிஞர் ஒருவர் இவர் இல்லங்குறுகி அவர் ஆதாவிற் கன்புகூர்ந்து நீங்கள் எல்லாம் வல்ல முருகக்கடவுளின் விரதாதிகளை யனுட்டித்து அன்னார் பாததாமரைகளைச் சதா வணங்கிவரின் உமக்கு சற்புத்திரன் உதிப்பன் என்று கூறினர் அங்ஙனமே ஓர் பிள்ளை பிறந்தது அதன் பெயர் தங்கவேற்சாமி யென்று முருகன் பெயரால் அழைக்கப்பெற்றது. இவர் தாயாருக்குப் பின் இவரது தமக்கையார் சேதுக்கரசு நாச்சியா ரென்பார் தமக்குப் புத்திரப்பே றில்லாமையால் இவரையே புத்திராராக வளர்த்து வந்தார். இம்மாத ரிருவரும் நல்லொழுக்கம் செந்தமிழ்த் தேர்ச்சி நல்லிணக்கம் இறைவனிடத்து நீங்காத அன்பு, அருள், இசைப்பழக்க முதலியன உடையரா யிருந்ததால் இக்குமாரரையும்

அங்ஙனமே பழக்கி வந்தனர். இக்குமாரன் அளவிலாச் செல்வக்கடலுள் வளர்ந்து வந்ததால் குறையாதுமின்றி தன் விளையாட்டுக்காலங்களிலும் முருகன் வழிபாட்டையே போதுபோக்கா யெண்ணி வளர்ந்து வந்தார் தேகம் முதிர்ந்து வளர்வதுபோலவே கல்வி, அன்பு, அருள், ஒழுக்கம், இசைஞானம் முதலியவையும் தாமே வளர்ந்து வந்தன பின்னர்மணவினைக்குறிய பருவம் வந்தது, இவரது சங்கீதத்தேர்ச்சியை யறிந்த பாஸ்கரச் சேதுபதி பூபாலரவர்கள் இவருக்கு அநேக கௌரவ சன்மானங்களுங் வித்துவான் மாப்பிள்ளை என்ற பட்டமும் அளித்தனர். இவர் பிடீல் வாசித்துக் கொண்டே குமரனைப்பாடுவர் முருகன் கழலையே கடைப்பிடித்தவர் சம்சார சாகரத்தழுந்தி வருந்தாது சாது சங்கத்திலும் சங்கீத சங்கத்திலுமே காலங்கழிப்பவர் இவருக்கு சுரபத்து,மிருதங்கம் முதலியவும் வாசிக்கத் தெரியும் ஆங்கிலமொழியினுந் தேர்ச்சியுடையவர் முருகக்கடவுளின் பேரில் அநேக கீர்த்தனைகள் உலகம் வியக்க உண்டாக்கி இருக்கின்றனர் மகா ஸ்காந்த புராணத்தை கந்தர் சஷ்டி ஆறுநாளில் பாராயணஞ் செய்யக் கூடிய வாறு வசனச் சுருக்கமாய் முடித்து வைத்தார்.

அஃது இந்நாட்டில் நன்கு விளங்கி யொளிர்கின்றது.இவர் இச்சென்னை மாநகரின்கண்வந்து சில ஆண்டுகள் வாழ்ந்திருந்தார். அப்போது அனேக செல்வர்களின் அவைக் களங்களில் தமது இசை ஞானத்தை விளக்கி புகழடைந்தார். இவர் எனக்கும் இன்னும் இங்குள்ள சிலருக்கும் கைம்மாறு கருதாது பெய்யும் புயலே போன்று சங்கீதங் கற்பிக்க முயன்றனர் அதில் நான் ஒருவனே பண்டை வினை வயத்தால் காலங்

கிடைக்காது சங்கீதஞானம் வாய்க்கப் பெறத் தவறினவன் மற்றெல்லாரும் அவ்விசையாகிய இன்பக்கடலிற்றிளைத்து மகிழ்ந்திருக்கின்றனர். இவரது நட்பு மிகவும் பாராட்டற்பாலது இவருக்கு ஓராண்மகவும் இரண்டு பெண் குழந்தைகளும் உண்டு இவரது காலமெல்லாம் நூலாராச்சியினும் நூலியற்றுவதினும் இசைக் கருவியுடன்பாடி மகிழ்வதினும் நல்லிணக்கத்துடன் சொல்லாடி மகிழ்வதிலுமே கழிகின்றன. இவர் கருவிற்றிருவுடையாரென்பது இவரது சங்கீதஞானத்தை யறிந்தவர்கட்கு நன்கு விளங்கும்.

திருவேட்டநாதபுரம்,
சென்னை, 10-6-1910.

கா. சி. சிவசங்கரன்.



கவனியுங்கள் !
வேதநயம் !

கவனியுங்கள்!
வேதபுண்ணியம்!

உ

முருகன் துணை.

## ஸ்ரீகந்தபுராணச் சுருக்கம் (வசனம்) விலை அணு 10.

(1) கந்தசஷ்டி ஆறுநாளில் ஸ்ரீகுகபகவானது திருவிளையாடல் முற்றும் (சப்தகாண்டத்தையும்) அன்பர்கள் சிரமமின்றிப் பாராயணம் செய்து உடம்பினுலாயபயனை அடைதற்பொட்டு ஸ்ரீபாஸ்கரஸேதுபதி மகாராஜா அவர்களின் ஆக்ஞைப்படி இராமநாதபுரம் வித்வான் மாப்பிள்ளை. ஸ்ரீ வீ.தங்கவேலுஸாமித்தேவரவர்கள் இதனை விரிவான முதனூலின் கதாபாகம் சிறிதும் விடாமல் படிப்போர் மனதைக் கவரும் இனிய செந்தமிழ் நடையில் சுருக்கமாய் இயற்றி ஸேதுவேந்தரவர்களின் அபிப்பிராயத்துடன் பலவித்வ சிரேஷ்டர்களின் சிறப்புக் கவிகளோடும் டிம்மி 8 கொண்ட 32 பார அளவில் (250 பக்கங்கள்) பைகா (பெரிய) எழுத்தில் அச்சிட்டு அழகிய புஸ்தகரூபமாக வெளியிட்டிருக்கின்றார்கள்.

இதனைப் படிப்போர் கச்சியப்ப சிவாசாரியசுவாமிகளுடைய செய்யுட் புராணமுற்றும் படித்தவர் போலாவார் என்பதில் சந்தேகமில்லை. குகனேரியப்ப முதலியாரவர்களுடைய உபதேசகாண்டச்செய்யுளின் கருத்தும் இத்துடன் சேர்ந்திருக்கும் விசேஷமுடையது. இப்புராணத்தைப் பல பத்திரிகைகள் பற்பலவிதங்களாக வியந்து பேசி யிருக்கின்றன. இதுகாறும் வெளியாகாத இவ்வித புஸ்தகத்தைச் சாமானியரும் சுலபமாய்ப் பெற்று நன்மை அடையவேணுமென்கிற முக்கிய நோக்கமாக அதற்கு விலை அணு (10) பத்தே யேற்படுத்தி யிருக்கிறது.

* 1000-பிரதிகள் அச்சிட்ட சில காலத்துக்குள் 900 செலவாகிவிட்டன. இன்னும் சொற்பப் பிரதிகளே இருப்பதால் அன்பர்கள் ஒவ்வொருவரும் இவ்விதப் புஸ்தகத்தை உடனே அபிமானித்து ஊக்கப்படுத்துவார்களெனக் கேட்டுக்கொள்ளப்படுகிறது.

விலாசம்:—மானேஜர்,

கந்தவிலாசம்,

இராமநாதபுரம், S. I. RY







உ

குகஸகாயம்.

# ஓர் பரத்தை.



மனோகரமாகிய மந்தமாருதம் வீசிக்கொண்டிருந்தது. உயிர்கள் உற்சாகமாயிருந்தன. பிறபொருள்களும் சோபித மாகவே விளங்கிக்கொண் டிருந்தன. ஆகாயமெங்கும் பன்மலர்களின் வாசனைகள் நிரம்பியிருந்தன. பலவகைமலர்கள் கொடிசெடி கோடுகளிற் பூத்து அன்னேரத்தில் துலங்கவந்த நட்சத்திரங்களைப் போன்றும் இலங்கின. மதுவுண்டு களிப்பிற்சுழலும் வண்டுகள் தம்பூர் சருதியன்ன ரீங்காரத்தொனிகிளப்ப அதற்கொவ்வப் பட்சிக்குலங்கள் இன்னிசைபாடிஉவப்பத்திரிந்தன. மயில்கள் நடனம்புரிந்தன. அருகிலோடும் நதியின் அலைக்குமுறலும் மிருதங்கமுழக்கமாயிருந்தது. பக்கத்துச்சோபிதம்பெற வமைந்திருந்த வுன்னதமாளிகையின் மேற்கொடிகள் ‘படாலும் படாலும்’ என வாயுவாற் றுள்ங்கிளப்பிக் கொண்டிருந்தன. இக்கர்ணாமிர்த வருஷத்தால்மதர்த்துத் தளிர்த்தோங்கி நிற்பபோன்ற மரங்கள் அவைகளுக்கு மெச்சிக்கொள்வனபோற் றங்கள் சிரங்களை அசைப்பதாயின. இவ்வித ஸங்கீதகோஷ்டிக்கு ஸந்தோஷித்துத்தியாகங்கொடுக்க பர்ப்பல கரங்களை நீட்டிவர்தமைபோலும் கொப்புற்றிரள்கள் ஆங்காங்கே தோற்றஞ்செய்திருந்தன. இவ்வித வைபவக் காட்சியின் அருமையாற் கவற்ச்சியுற்றுக்

கமலநாயகன் தனது உக்கிரமொழித் தாங்கு மேற்றிசையின் மேலுறச் சந்தநோக்குற் றிருந்தனன். வெய்யோன் ஒருவேயின செயலுக்கு மேலாகத் தனது இளங்கிரணங்களால் எல்லாப்பொருள்களையும் பொன்மயமாக்கி யிருந்தனன். பொன்னகரம்போலு மிங்கிருந்த தென்னலாம்.

பஞ்சரத்தினின்றும் வெளிவந்த கிளியோ மயிலோ குயிலோ வென்றையுற வம்மாளிகையினின்றும் சிவானந்தி யென்பாள் வெளிப்பட்டுப் பூந்தோட்டத்தில் அன்னம்நாண நடந்துவந்தனள். அவளுடைய வனப்பும் குணமும் பத்தியும்முக்கடல்போலும் அளக்கலாகா திருந்தது. இருசெல்வத்திலும் அவளுக்குக் குறைவில்லை.

வந்தவள் அங்கோர்மேடைமே லுட்கார்ந்தனள். அங்கு மன உற்சாகத்திற் கேதுவாயிருந்தவைகளிடத்தில் அவள் புந்தி செல்லவில்லை.

மேகஜாலங்கள் தமது நீர்பசையை வாளச்செய்பவனென எல்லவனைப்பணைத்து அவனது சந்தோஷநோக்கத்திற்கிடர் விளைக்கக்கருதியவாறுபோல் அவனையறவே எதிர்நின்று மூடலாயின. இம்மூடல் சிவத்துக்கும் உயிர்களுக்கும் ஊடேதிரை பொன்ற மாயையின் தொழில் போலுமிருந்தது. பாஸ்கரனும் மேற்குக் கடலில் மூழ்கு முயற்சியி லிருந்தனன்.

பெண்ணமுதமானவள் களங்கத்தையுடைய உவாமதியைப்போலுஞ் சொலித்துக் கொண்டிருந்தனள். சர்வ சரங்களெல்லாம் அவள்பேரிற் றங்களுக்குள்ள வப்பிரியத்தை யப்போது வெளிக்குக் காட்டுமாறு

போலுந் தோற்றப்பட்டன. அவளை ஆறுதல்செய்வது போலும் விளையாட வழைப்பது போலும் பொருள்களின் குறிப்புக ளுண்டாயிருந்தன. ஒவ்வோர் சமயம் அவைகள் அவளுடன் ஊடியதுபோலும் இரங்கிப் பரிதபிப்பதுபோலும் உனக்குற்ற சோபமேதென வினவுவது போலுமான பலவிதத் தோற்றங்களைக் காட்டிக் கொண்டிருந்தன.

சிவானந்தி பெருமூச்செறிந்தனள். வேனிலைச் சகிக்காப் பூங்கொடிபோலும் ஆயினள். செல்வமக்கள் கவலைதாங்கும் வன்மைபெறுவரோ! அவள் எண்ணியெண்ணி மேலு மெண்ணற்கிட முள்ளத்துப் பெருமற் கிளியைப்போலும் வாயைத்திறந்து சில பேசலுற்றனள்.

“நினைப்போது முனைப்பிரியேனென்ற வாசகத்திற்கு மூனமேற்படக் காரணங் காரணனு லேற்பட்டதே! தண்டிலேபோனு லிரண்டிலேயொன்று! ஜெயாபஜெய மியாவர்பங்கோ! சண்முகத்தெய்வமணியே யென் முகம் பார்த் திரங்கல்வேண்டும்! என்னை மணஞ்சூடு முன்னுங் கொற்றவன் பணிமேற் கொண்டுசென்று பகைவர்வென்று பல வென்றிமாலையும் புனைந்து புகழ் விசப் பெற்றிருக்கின்றார்! நங்கணவருக்கு அருச்சுனனைப்போன்றுஉயுத்தமென்றாற்பூரிப்புண்டாகி விடுகின்றதே! வீரரினிலக்கணமு மதுவேயன்றோ! பஞ்சவரு மோர்சமயமெஞ்சநேர்ந்ததே! பெரியசமுத்திரங்களைத் தாண்டியவர்க்கு மொரு சிறு காலைத் தாண்டத் திறம் போதாக்காலமு முறுமன்றோ! எனினுமென்று நம்மேற் சூர்வென்ற கோமான் றிருக்கண் ணோக்குளமட்டுங் குறை யொன்று மொன்று மென்பது பொன்றாச்

சரதமே! கணமு மெனைப்பிரியாக் கணவ னிவ்வாறு மாதக்காலமா யெனக்காறுதல் செய்தலை நீத்திருக்க வாறுதலைப் பெம்மான் றிருவரு ளிருந்தவா றென்னே! "ஆதாரமிலே னருளைப்பெறவே—நீதா னொருசற்று நினைந்திலையே—வேதாகமஞான விநோதமனோ—தீதா சுரலோக சிகாமணியே" என்று கூப்பிய கரத்தளாய்ச் சற்றுக் கண்மூடித் தியானத்திருந்து விழித்தனள்.

ஓர்பாங்கி, தானேவருஞ் சீதேவியைப்போல் அவ ளிடம் ஓடிவந்து "நம்நாயகர் சத்துருக்களைவென்று ஜெயசீலராய்ச் சகல சயிரியங்களும் புடைசூழத் திரும்பி நம் புறநகரிடத்து வந்துகொண்டிருக்கின்றார்" எனத் தனது தாமரைவாய் அமுதம்போன்ற சொற் களைச் செப்பிப் பின் அவளடிபணிந்தனள்.

சிவானந்தியென்பாள் தன்னுடைய பேர்ப்பொரு ளுக்கு ஒத்தவிதமாகப் பேரானந்தப் பொலிவடைந்து "எனது ஆருயிர்த்தோழீ!" எனத் தன்னை வணங்கிய வளை வாரி உயரவெடுத்துப் பொன்னணியீந்து உபசரித் துக் கொண்டாடினள். பின் தனது காந்தன் சீக்கிரம் வருவதா யிருப்பதனைத் தெரிந்து அவனை உபசரணைக ளுடன் எதிரேற்கக் கருத்துடையவளாய்த் தோழி குமுதவல்லியைக் குறித்து மாளிகையெங்கும் விசேஷ தீபங்களமைக்கவும் விநோதவுணவுகளைக் காலத்திற்சித் தஞ்செய்துவைக்கவும் கட்டளையிட்டனள். சற்றுநேரத் திற் பரிசனரும் எஜமாட்டியினுடைய பணிமே லுற்சா கமாய் மாளிகையை இந்திரவிமானம் தோற்கும்படி அலங்கரித்து விட்டனர். சிவானந்தனை வரவேற்கும் மாளிகை முகப்பிற் பல மங்கலச் சின்னங்களைத் தகு மெனும்படிக்குச் சோடித் தமைத்தனர். மடையர்களும்

சடைவின்றிப் பெருவிருந்தாக்கியிருந்தனர். சிவானந்தி யும் மங்கலஸ்நானஞ்செய்து அழகுக்கழகு செய்வது போலத் தன்னை ஆடையாபரணாலங்கிருதா திகளாற் பொலிவு பொங்கச் செய்திருந்தனள். மங்கையர்மங் கலச் சொற்களாலாய பாடல்களைத் திவ்யகானம்செய்து கொண் டிருந்தனர்.

சிவானந்த வீரனுடைய உயுத்த பராக்கிரமங்களை அரசன் வியந்து நயம்பேசி அவனுக்குத் திரண்ட சன் மானங்களெல்லாம் புரிந்து சகல சம்பிரமங்களுடன் அவனை ஊர்வலமாய் அவனுடைய திருமாளிகைக்கு அனுப்புவதானான். யாவரும் அவனுடைய வைபவங் களைக்கண்டு கேட்டுக் கொண்டாட இவ்வாறு வீரன் தனதுமாளிகையி லுற்சாகமாக வந்தடைந்து வந்தவர் கட்கெல்லாம் அவரவர்கட்குத் தக்கதக்கபடி யுபசா ரங்களைச் செய்தனுப்பித் தனியனானான்.

சிவானந்தி, உப்பரிக்கையிலிருந்து தனது மண வாளனது கெம்பீர வுலாவைக்கண் டுப்பி வானின்றிறங் கிய தெய்வமங்கையைப்போற் கீழிறங்கி நாயகன் வரும் வழியில் விழிகளைச் செலவிடுத் தார்வமுட னிருந்த னள். தோழியரிலனேகர் வெளியிலிருந்து அந்தப்புரம் திரும்பித் தாங்கள் கண்கொள்ளாது கண்ட ஆனந்தங் களைப் பற்பல விதங்களாகச் சொற்றடுமாற்றங்களுடன் சிவானந்திமுன் சொல்லிக்கொண்டனர்.

சிவானந்தன், பவனிக்கோலவுடையாதிகளுடன் தன்காந்தையிருக்கும் அந்தப்புரம்நோக்கி வந்தனன். உயிரானது தனக்காதாரமாகிய வொப்பற்ற தலைவனைக் கண்டகாலத் தெப்படியோ வப்படியே சிவானந்தி பேரானந்தியாய்க் காந்தியுடன் தோற்றிய தன் காந்த

னைக் கண்குளிரக்கண்டு அவனைக் கடிதிற் சமீபித்து அவன் பாதங்களின் வீழ்ந்து சேவித்தெழுந்தனள். "ஸ்ரீஷண்முகநாதருடைய கடாக்ஷம் உன்பேரிற் பரிபூரணமா யுண்டாகக்கடவது" என்று சிவானந்தன் அவளை வாழ்த்தி, "பிரியநாயகி! சௌக்கியமாயிருக்கின்ருயா" என்றனன்.

சிவானந்தி:—"பிரியநாயகனைவிட்டுத் தனித்திருக்கும்படியான துர்ப்பாக்கியமுள்ள எனக்குச் சௌக்கியமென்ன வுண்டாகப்போகின்றது? இனித் தாங்களிங்கு க்ஷேமாதி ஜெயங்க ளுடனும் வந்துவிட்டபடியால் எனக்குச் சௌக்கியத்திற் கென்னகுறை?

சிவானந்தன்:—ஆஹா! பிரியநாயகி! உன்னைப் பார்க்குங் காலையில், இப்போதுதான் சர்வாலங்கார மணக்கோலத்துடன் மாங்கல்ய தாரணம் செய்துவந்து நிற்கும் பெண்ணைப்போலும் எனக்குப் புலப்படுகின்றதே? "பாழே மடக்கொடியில்லாமனை" என்ற ஆன்ருேர்வாக்கியம் மிகப்பொருத்திக் கையாகவே தான் இருக்கின்றது. வீட்டுக்கு லட்சுமி ஸ்திரீ தானே?

சிவானந்தி:—பிராணநாயகா! ஏதோ என்னிடத்தில் உ ல் ல ா ச ம் செய்கின்றீர்கள். தாங்கள் க்ஷேமாதி ஜெயங்களுடன் வரும் சமயத்தில் நான் தங்கள் எதிரே அசுசியாகவும் நாகரீகமற்ற விதமாகவுந் தோன்றினுல் அது மங்கலகரமா யிருக்குமா? மேலும் நான் தங்களுக்கு இப்போது உண்டான மேம்பாடுகளுக்கும் சிறப்புகளுக்கும் இவ்வாறு ஸந்தோஷங் கொண்டாடக் கடமைப் பட்டவளன்ருே? தாங்கள் இல்லாத காலத்தைப்போல் இப்போது தாங்கள் வந்தகாலத்திலும் நான் இருப்பது அபசாரம் என்பதைக் கருதியே இவ்

வாறு செய்துகொண்ட விஷயம். அது தங்களுக்கு நியாயமாகவா தோன்றவில்லை?

சிவானந்தன்:—ஆ பிராணநாயகி! உனது உத்தமச் செயல்கள் அனைத்தும் எனக்கு அநுபவத்தில் வந்தமைதாமே. "ஓதலினன்றே யொழுக்கமுடைமை", கற்றதனாலாய பயனை அடைந்திருக்கின்றாய். நீ தற்காலத்தில் விளங்குவதைப் பார்க்க, உவாமதியைக்கண்ட கடல்போலும் எனக்கு அடங்காத ஆனந்தம் பெருகிக் கொண்டே யிருக்கிறது.

சிவானந்தி:—"கொண்டவன் றாற்றக் கூரையுந் தூற்றும்" தாங்கள் எனது குறைகளை நிறைவாக்காணும் படிக் கேற்பட்ட எனது பாக்கியமே பாக்கியம்.!

சிவானந்தன்:--ஸ்திரீகள் சாதாரணமாய்ப் பேசுங் காலையிலும் அவர்களுடைய குரலோசை செவிக்கு அமுதமாயிருக்கும். நீ அவர்களுக்கு அரசியா யிருப்பதுமல்லாமல் என்னிடத்தில் இப்படிப் பிரிய நயமுறவும் பேசுவது எனக்கு மெய் மறந்துவிடும்படி செய்கின்றது.

சிவானந்தி:-(புன்னகைகொண்டவளாய்) ஏ நாதா! தங்களுக்கு இப்போது தேகம் பிரயாணத்தால் மிகச் சிரமமா யிருக்கும். தாங்கள் இன்னும் காலதாமதம் இல்லாமல் வெந்நீர்ஸ்நானம்செய்து அனுஷ்டானத்தை முடிக்கப் பிரார்த்திக்கின்றேன்.

சிவானந்தன்:—நமது குலதெய்வமாகும் ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளுக்கு நமது அய்யர் நியமனப்படிக்குக் குறைவில்லாது தினம் பூசனை நடத்திப் பிரசாதம் கொடுத்து வருகின்றாரா?

சிவானந்தி:—நம்முடைய சின்னையர்தானே? அவர் சரியானபடி பூசாகாரியங்களைச் செய்யாமல் ஏதோ ஓர் விதச் சித்தப்பிரமைகொண்டவரைப்போல்வெளிக்குப் புலப்படாமல் எங்கெங்கோபோய் அலைந்து திரிகின்ற தாகச் சொல்லி நம்முடைய காரியஸ்தர் சுந்தரம் பிள்ளை என்பவர் வேறே ஒரு உத்தமப் பிராமணரைக் கொண்டு இப்போது பூஜை சரியானபடி நடத்திவரும் படிக்குச் செய்திருக்கின்றார். பிரசாதம் பெற்றுவருகி றேன்.

சிவானந்தன்:—ஓஹோ! அந்தப் பிராமணரைக் காட்டிலும் வேலர்பேரில் அன்புடனும் பூசித்துவரக் கூடியவர் வேறேயார் இருக்கின்றார்கள். நான் வெளி யேபோய் இப்போது ஸ்நானாதிகளை முடித்துவருகின் றேன்.

சிவானந்தன், வெளியேவந்து பரிமள நீராடிப் பூசை முகத்தில் இவ்வாறு தோத்தரிக்கின்றான்:—

"திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலுவாலே
பொருத்தரை மதிப்பதிலே யுன்றனருளாலே
பொருப்பரை மிகப்பொருது வென்றுமயின்மீதே
தரித்தொரு திருத்தணிகை நின்றபெருமாளே."

"ஏறுமயிலேறிவிளையாடுமுகமொன்றே
ஈசனுடன்ஞானமொழிபேசுமுகமொன்றே
கூறுமடியார்கள்வினை தீர்க்குமுகமொன்றே
குன்றுருவவேல்வாங்கிநின்றமுகமொன்றே
மாறுபடுசூரரைவதைத்தமுகமொன்றே
வள்ளியைமணம்புணரவந்தமுகம்மொன்றே
ஆறுமுகமானபொரு ணீயருளல்வேண்டும்
ஆதியருணாசலமமர்ந்தபெருமாளே."

"மூவிருமுகங்கள்போற்றி முகம்பொழிகருணைபோற்றி
ஏவருந்துதிக்கநின்ற வீராறுதோள் போற்றிகாஞ்சி
மாவடிவைகுஞ்செவ்வேண் மலரடிபோற்றியன்னான்
சேவலுமயிலும்போற்றி திருக்கைவேல்போற்றிபோற்
[றி."

"ஆறிருதடந்தோள்வாழ்க வறுமுகம்வாழ்கவெற்பைக்
கூறுசெய்தனிவேல்வாழ்க குக்குடம்வாழ்கசெவ்வேள்
ஏறியமஞ்ஞைவாழ்க யானைதன் னணங்குவாழ்க
மாறிலாவள்ளிவாழ்க வாழ்கசீரடியாரெல்லாம்."

இவ்வாறு இசைபிறழாது சொல்லமுதெடுக்கக் கனிந்துருகிப் பாடிமுடித்துப் பின்னடைந்து, "சுந்தரம்பிள்ளை எங்கே" எனக் கேட்டனன்.

சுந்தரம்பிள்ளை, பக்கத்திலிருந்தவன் எதிரே வந்து, "தேவரீர்! இதோபேட்டிக்குக் காத்துக்கொண்டிருக்கிறேன்" என்று வந்தனம்செய்தனன்.

சிவானந்தன், "ஷண்முகம் இரட்சிக்க" வென அவனை வாழ்த்தி "நீரும், உமதுவீட்டார் அனைவரும் சுகந்தானு" வென்றனன்.

சுந்தரம்பிள்ளை:—"தேவரீருடைய கிருபையினாலே யாவரும் சுகமாகவே இருக்கின்றோம்."

சிவானந்தன்:—நான் இல்லாதகாலத்தில் சுவாமிக்கிங்கு பூஜாகாரியம் குறைவற நடத்திக்கொண்டு வரும்படிக்கு நமது சின்னையரை நியமனஞ்செய்து வைத்திருந்தோமே? அவர் சீராய் நடத்திவரவில்லை என்று தெரிகிறேனே?

சுந்தரம்பிள்ளை:-சின்னையர் வெகுயோக்கியமுள்ளவராய் இதுவரை எல்லாரும் கொண்டாடும் படிக்கு

இருந்தது போக, இப்போது சுவாமிபக்தி என்பதும் இல்லாமல் கெட்டவர்களோடு சேர்ந்து சதாகாலமும் இராக்கு முத்து என்னும் தாசிவீடே கயிலாயமாகப் பாவித்து நித்திய கருமாநுஷ்டானங்களையும் கைவிட்டுக் கெட்டுப்போய்த் திரிகின்றார் ஏழைப்பார்ப்பார். இவருக்கு வந்த இந்தக் கேட்டை நோக்க வெகுபரிதாபமா யிருக்கின்றது. நாம் கொடுத்த சம்பளத்தையும் வீட்டிலோ அல்லது எங்கோ வைத்துப் போய்விட்டாராம். அவருடைய பெண்சாதி என்னேரமும் அழுத கண்ணும் கண்ணீருமாய்ச் சாப்பாட்டிற்குக் கஷ்டப்பட்டுக் கொண்டு வேறேவகையு மில்லாமல் தவித்துக் கொண்டிருக்கின்றாள். அவள் அவருக்குக் கிடைக்கக் கூடிய பத்தினி அல்ல. அவளுடைய தற்கால நிலைமையைக் கல்மனதுக்காரரும் பார்த்துச் சகித்திருக்க மாட்டார்கள். அவர் ஒருநாள் பூஜைக்கு வரவில்லை. நான் நமது சேவகன் வீமனை அனுப்பி அவர் வீட்டிற் போய்க் கூட்டிவரச் செய்தேன். அவன் வீட்டிலும் மற்ற விடங்களிலும் தேடியும் காணக்கூட வில்லையென்று திரும்பிவந்தான். பிற்பாடு பூஜைசெய்வதற்கு அவர் வரவே காணோம். சுவாமிக்குப் பூஜைநடக்காம லிருப்பது வெகு அபசாரமென்பதாய் நான் இராமகிருஷ்ணையர் என்பவர் ஒருவரை அவருக்குப் பதிலாய் ஏற்படுத்தி வைத்தேன். சின்னையரைப்பற்றி வரவர இப்போது பல ஒழுங்கீனங்களான சமாசாரங்கள் கேள்விப்பட்டும் வருகிறேன்.

சிவானந்தன்:—நன்றாயிருந்தது. சின்னையனைப்பற்றி நீர் சொன்னவைகளெல்லாம் கேட்க "சூரியன் மேற்கே உதயமானான்" என்றது போல் வெகு ஆச்சரியமா

யிருக்கிறதே! "ஆவாரையாரேயழிப்பாதுவன்றிச்-சாவா ரையாரேதவிர்ப்பவ-ரோவாம—லையம்புகுவாரையாரே விலக்குவார்—மெய்யம்பு வியதன்மேல்." சின்னையன் நம்மைச் சிறுபிராய முதற்கொண்டு நம்பினவன். அவன் ஒழுக்கமும் சத்தியமும் விசுவாசமும் நம்பிக்கையும்இவ் வாறுக மாறியது என்னகஷ்டகாலம்? வேசையுறவாற் கெடாதவர்யார்? நல்லிணக்க மல்லதல்லற்படுத்து மன் றே! ஒழுக்கமன்றோ வுயர்குலத்தி னன்றும்! "வினைப் பயனை வெல்வதற்கு வேதமுதலா மெனைத்தாய நூல கத்துமில்லை" என்றபடியால் இனியாம் என்செய்யலாம்! குமரன் பூஜையை நான் இருப்பதுபோற் கவனித்துக் குறைவில்லாமல் நடக்கும்படி செய்ததில் எனக்குப்பரம திருப்தி. "எல்லாமிருக்குது பெட்டியிலே அதை யெ டுத்துச் சமைக்கச் சட்டியில்லை" என்றபடிக்கிருந்தால் பிரயோசன மென்ன? நீர் என்பிதாகாலமுதற் கொண்டு உண்மையாயும் பாந்தமாயும் இந்த விடத்திற்கு நட ந்து வரப்பட்டவர். உமக்கு நான் உபசாரமா சொல்ல வேண்டும்?

சுந்தரம்பிள்ளை:—எல்லாம் இவ்விடத்தினுடைய அன்ன விசேஷமேயொழிய அற்பனுகிய என்னுடைய செயல் ஒன்றுமில்லை. தேவரீரவர்களுக்குப் போஜனத் திற்கு அதிக அகாலமாகின்றதே! மணி எட்டரையா கும் சமயம்.

சிவானந்தன்:—நல்லது எல்லாம் நாளைப் பேசிக் கொள்ளலாம். போஜனத்திற்குப் போய் வருகின் றேன். சின்னையன் பத்தினிக்கு நீர் இப்போதே சாப் பாடாதிகளுக்கு வகை செய்து வீட்டுக்குப் போய் வரு கின்றீரா?

சுந்தரம்பிள்ளை:—"மேருவை யடுத்த காகமும் பொன்னிறம்பெறும்" என்றபடி சமுகத்தை அண்டினவர்களுக்கு எப்போதும் என்னகுறை ? சமுகத்தினது அருளைக்கொண்டு நான் அந்த அம்மணியைப் பாதுகாத்தே வருகின்றேன். இஃதன்றி, இப்போது நம்மிடத்துவந் தமர்ந்திருக்கும் கூட்டத்தவர்களுக்கெல்லாம் போனகாதியுபசாரணைகளை மேற்பார்த்துப் பின் இல்லம் செல்ல வேண்டியவனுயிருக்கிறேன்.

சிவானந்தன் ஸந்தோஷித்துப் பின் தனது பார்வைக்கெதிர்ப்பட நிற்கும் குமுதவல்லி யென்பவளின் குறிப்பைத் தெரிந்து அந்தப்புரம் திரும்பினன்.

சிவாநந்தன்:—(அந்தப்புரத்தில் எதிர்நோக்கி நிற்கும்தனது காந்தையைக்குறித்து) நான் இந்தச்சமயத்தில் அதிக விவகாரங்களை வளர்த்திக் கொண்டிருக்கவில்லை. சீக்கிரமே இவ்விடம் வந்துவிட்டேன்.

சிவானந்தி:—தாங்கள் எப்போதும் காலாகாலத்திற் சாப்பிட்டு அநுபவங் கொண்டவர்கள். "பாலோடாயினுங் காலமறிந்துண்" அகாலமானல் தாங்கள் உட்கொள்ளும் போஜனம் தங்கட்கு அசௌகரியம் உண்டாக்குமே ?

சிவாநந்தன்:--இப்போது பாதகமில்லை. கொஞ்சம் தான்நேரமாகிவிட்டது. தமது பூமான்களிடத்தில் மந்திரிக்கொப்பாகவும் இருந்து அவர்களைச்சீமான்களாகக் காணும் பூவையர்திலகரும் அருமையே. நாம்உப்பரிகைக்குப் போவோம், அங்கு நிலவுவீசும் வெளியில் ஆனந்தமாய்ப் போஜனம் செய்யலாம்.

சிவானந்தி:—அப்படியே செய்யலாம். குமுதவல்லி!நீயும் சிறுகுட்டிகமலையும் சமயலைக் கட்டி யெடுத்

துக்கொண்டு மெத்தை வீட்டிற்கு வாருங்கள். பிராண நாதா! நாம் மேலே போகலாம். வழிபார்த்துப் படியேறி வரவேண்டும். நான் முன்னே போகிறேன்.

சிவானந்தன்:—அடி! எனக்கென்ன இந்தவித வெளிச்சத்தில் அவ்வளவு நிதானமில்லையா? சும்மாவருகிறேன். நீ வேண்டுமானால் முன்னே போவென்றனன்.

சிவானந்தி:—(இருவரும் மேலேசென்றபின்) நாம் இருவரும் மேலேவந்திருக்கிறோம் என்பதில் ஆட்சேபணையே இல்லை. இப்போது இந்தமெத்தைவீடு என்ன அழகாயிருக்கிறது? கிரீடத்தின் நாயகமணிவந்ததோ அல்லது உதயகிரியில்தான் பகலவனுற்றானோ? நாதனில்லாதவீடு காடுதானே?

சிவானந்தன்:--அடிபிரியே! இங்குலட்சுமி உதயஞ் செய்ததுபோலுமே யிருக்கிறது. வீட்டுக்கு அலங்காரம் ஸ்திரீகள் போலாமா. மடத்தாண்டிகளாய்க் கூட்டமிருத்த விடத்தும் அந்நடுவில் ஓர் ஸ்திரீயன்றோ இலக்குமிவிளக்கஞ் செய்வள்? வீட்டுக்குக் குலதீபமெனப் பெண்மணியைத்தான் ஆன்றோர்கள் பெருக்கப் பேசி யிருக்கின்றார்கள். "பாழே மடக்கொடி யில்லா மனை.

சிவானந்தி:--என்ன நாதா! தாங்கள் பேதையாகிய என்பால் தர்க்க நியாயம் உரையாடுகின்றீர்கள்? எனக்குத் தாங்கள் இங்குவந்திருப்பதுதான் இன்பாகவும் சிறப்பாகவும் திருப்திகரமாகவும் மனக்கிளர்ச்சியாகவும் இருக்கின்றது. எனக்குத் தங்களைவிடக் கதி வேறொன்றுயிருக்கின்றது? தாங்கள் இவைகளை அறியாதவர்களோ? குமுதவல்லீ! சாப்பாடா கொண்டுவந்தனை? அதனை நிலவெரிக்கும் அந்த வெளியில் வைத்துப்போ;

வந்தவரனைவருக்கும் நீயும் சாப்பாட்டு விசாரணையைக் குறைவில்லாமற் கவனித்துக்கொள்.

சிவாநந்தன்:—அடி! அன்பானவளே! நீ என்பேரில் வைத்தபிரீதியை உசிதமாப்பேச்சில் தெரிவிக்கின்றாய். யானும் அவ்வாறே என் மனத்துள்ளதைப் பேச நேரிட்டதன்றித் தர்க்கம் செய்யவில்லை. புத்தியுள்ள கண்மணீ! இங்கேவா. படுக்கை அறைகளில் இவ்வாறு திவ்யரூபங்களமைந்த படங்களைத் தூக்கிவைத்திருப்பதற்கு ஒரு விசேஷம் உனக்கு தெரியுமா ?

சிவானந்தி:—அவை யெல்லாம் கண்ணுக்கு ரமணீயமாய் விளங்கி மனதிற்கு உற்சாகங் கொடுக்கும் படிக்காம்.

சிவாநந்தன்:—ஆம் அதுமெய்தான். நான் இன்னும் ஓர் விசேஷம் சொல்வேன்.

சிவானந்தி:— நாதா! நாதா! அது எனக்குத் தெரியும். சொல்லவா ? சொல்லுகிறேன். ஸ்திரீபுருஷர் இவ்விதமான விடங்களில் அந்த உருவங்களைப் பார்த்தபடிக்குச் சேர்ந்திருந்தால் அவர்கள் இருவருக்கும் அவ்வித மங்கள ரூபங்களுள்ள புத்திரர் பிறப்பார்கள். அராபியர் தம்குதிரைகளைப் புணரவிடும்போது நல்ல ஜாதி அஸ்வங்களை அவைகளின் கட்புலனுக்குத் தோன்றுமிடத்தில் நிறுத்திவைப்பார்கள்.

சிவாநந்தன்:—நீ செப்பியது செப்பமே.

சிவானந்தி:—நாதா! "கேள்விமுயல்" என்றும், "செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ் செல்வத்து ளெல்லாந்தலை" என்றும் ஏற்பட்டவைக் இலக்கியமாகநான் தங்களை மணஞ்சூடிவந்த சிலகாலமாய்

மற்றும் எவ்வளவோ அரியபெரிய விஷயங்களைத் தாங்கள் திருவாய்மலரக்கேட்டு நூல்களைப்படியாமலே கணக்கற்ற ஞானங்களை அடைந்திருக்கின்றேன். இப்படிப்பட்ட வித்வானாகிய புருஷனை நான் அடைந்தது என்னுடைய நல்ல அதிர்ஷ்டமல்லவா? "ஆழவமுக்கி முகக்கினு மாழ்கடலி—ணாழிமுகவாது நானாழி-தோழி—நிதியுங் கணவனு நேர்படினுந்தந்தம்—விதியின் பயனே பயன்" என்றபடி நான் முன் நல் வினையுடையேன்; இல்லெனின் "வெறும்பானை பொங்குமோ மேல்" சரி- இனிச் சாப்பாட்டிற்கு அதிகமும் நேரமாகும் (என்று கம்பளம் எடுத்துவிரித்து) நான் தங்களுக்கு இப்போது சாதம் பரிமாறுகிறேன். நாதா! இதோ கம்பளத்தில் எழுந்தருளல்வேண்டும்.

சிவானந்தன்:— (கம்பளத்திலிருந்து கொண்டு, இப்படிப்பட்ட புத்திசாலியாகிய உன்னோடு சம்பாஷித்துக் கொண்டேயிருந்தால் எனக்குப் பசியேவராது; "செவிக்குணவில்லாத போழ்துசிறிது — வயிற்றிற்கு மீயப்படும்" என நாயனாரவர்கள் மெய்ப்பித்திருக்கின்றார்களன்றோ? சாப்பிடுகின்றதும் உனது அமுதவாக்கியங்களை இருந்து கேட்டு உயிர் தளிர்க்கும்படிக்குத் தான்; மேலும் "ஏறிகட லுடைப்புவியி லேதுமில ரேனு, மறிவுடைய ரேயுடைய ராகுமது வில்லாச், செறிவுடைய செல்வநிதி சேர்ந்துடைய ரேனும், வறிதுடைய தல்லதவர் மற்றுடைய ரன்றே" என்றும் ஏற்பட்டிருக்கின்றது. என்ன? நீ பரிமாறும் கறிவகைகள் அதிகமாகவும் பல விதங்களாகவும் இருக்கின்றன? எதுக்கு இத்தனை பெருமிதம்?

சிவானந்தி:—ஆ! நாதா! என்னைப்பிரிந்து ஆறுமாதகாலமாய்த் தங்களுக்கு என்னவகையான சாப்பாடு

உண்டாயிருக்கப்போகிறது ? நல்ல போஜனம் தாங்கள் அருந்தியிருந்தாலும் அதனை நான் பார்த்துத் திருப்தி யடைந்ததா யில்லையே? "தாய்க்குப்பின் தாரம்" அல்லவா ? தேவரீர் விஷயத்தில் அடியாள் அவ்விதம் நடந்து கொள்ளும் பாக்கியத்தைப் பெறலாகுமோ ? தங்களுக்கு எந்தவிதத்தில் மகிழ்வூட்டும் திறத்தினளாகின்றேன் ? "எப்பணியா லின்புறுவர் காதலர் காதலரை, யப்பணியா லப்பொழுதே யன்புறுத்தி—யொப்ப, மனங்குழையும் வண்ண மகிழ்விப்பதன்றே, கனங்குழையார் தங்கள் கடன்" என விதிக்கப்பட்டிருக்கின்றதே ? தாங்களிங்கு விஜயமாவதான சுபங்கேட்டு அடங்கா மகிழ்வுடன் வேண்டுவனவற்றையெல்லாம் என்சத்திக்கேற்றப்படி சித்தப்படுத்திவைக்கலானேன். இப்போது நல்ல போஜனத்தைத் தாங்கள் பரிவுடன் அங்கீகரிப்பது எனக்குத் திருப்திகரமாயிருக்கும். நான் உள்ள மட்டும் தங்களை ஓர்குறையிற்காண்கிலேன். நல்லவைகளை யெல்லாம் தெரிந்தநுபவிக்க வேண்டியதுதானே ? நமக்குவடிவேலர் என்ன குறைவைத்திருக்கின்றார் ? ஆனால், இனிஅவர் அருளாலே நமக்குச் சன்மார்க்கமுள்ள புத்திரோற்பத்தி உண்டாகவேண்டும்.

சிவானந்தன்:—அன்பானவளே ! நீ சொல்வது பொருத்தமாகவே இருக்கிறது. ஆனால் உனது பலவிதப் பக்குவங்கள் ஒவ்வொன்றிலும் சிறிதுசிறிது அளவாக எடுத்துண்ணினும் "பலதுளி பெருவெள்ளம்" என்றபடி சேரவரும் உணவுக்கு என் ஒருவயிறோ இடம்பெறும் ? என்றாலும் என்னாலானமட்டும் அபிமானித்துண்கின்றேன். "ஒருநா ளுணவை யொழியென்றாலொழியா, யிருநாளைக் கேலென்றா லேலா—யொரு நாளும், என்னோ வறியா யிடும்பைகூ ரென்வயிறே, யுன்னோடு

வாழ்தலரிது" என்றுவயிற்றின் சுபாவம் கூறப்பட்டிருக்கின்றது. இஃதன்றி, "மீதூண்விரும்பேல்" என்றும் "அன்னமிக வுண்பானு மாடையழுக்காவானு—மின்னொளிபோற் பல்லைவிளக்கானும்—நன்னயமாக் காலை துயில்வானுங் கைம்பெண்டடைவானு— மாலையமா மூதேவிக்காம்" என்றும் ஏற்பட்டிருப்பதால், எப்போதும் கொஞ்சம் குறைவாகத்தான் ஆகாரம் எடுத்துக்கொள்வது தேகாரோக்கியம். முழுவயிற்றில் பாதி ஆகாரமும் கால்பாகம் தண்ணீரும் ஆக முக்கால் போகக் கால்வயிறு வெற்றிடமாயிருக்கவேண்டும். "பிராமணு போஜனப்பிரியா" என்றபடிக்குச் சில அந்தணர் தம் வயிற்றில் தருப்பையைத் தளரவிட்டுக் கட்டிக்கொண்டு அந்தப்புல் சாப்பாட்டினுல் வயிறுவீங்கித் தானய் அறுந்துபோகுமட்டும் இருந்தவிடம் பெயராதிருந்து வாய் அசைப்பை நிறுத்தாமல் மேய்ச்சலைச் செய்துகொண்டு சாதிப்பார்கள். அப்பெருந்தீனியினுல் அவர்களுக்குப் பின்வரும் தீங்கினை உணரார்கள். அறியாதவர்கள் தங்கள் விலாப்புறங்கள் உப்பலெடுக்கும்படிக்கும் குரல்வளையில் ஆகாரம்வந்து முட்டித் துன்பஞ்செய்யும்படிக்கும் சாப்பிடுவதினுலே தேகம் வளப்பமாயிருக்குமென்று மதம்பேசுவார்கள். "உண்டவன் உரம் செய்வான்" என்னும் தாற்பரியம் தெரிந்துகொள்ளமாட்டார்கள். நம்போன்றவர்களுக்கு அந்தவிதம் ஆகாரத்தில் ஒருகை பார்க்கமுடியுமா? "பிராமணருக்கு அந்நிய கிரஹத்தில் போஜனங்கிடைத்தால் ஸந்தோஷம், ஸ்திரீகளுக்குத் தேசாந்தரம்போன தம் புருஷர்வந்தால் ஸந்தோஷம், பசுவுக்குப் பச்சைப்புல்லகப்பட்டால் ஸந்தோஷம், யுத்தமுண்டானுல் தனக்கு ஸந்தோஷம்" என்று அர்ச்சுனனுல் சொல்லப்பட்டிருக்கின்றது. இஃது

ஒன்றுகேள். ஒரு விப்பிரர் அயல்வீட்டில் சாப்பாட்டுக்குப் போயிருந்தார். அவர் தமக்கு முன்னே தம் தலைமட்டம் பரக்கவும் படைக்கப்பட்ட சாதம் கறிவகைகள் மற்றும் உண்டானவைகள்யாவற்றையும், தலையணைக்குள் பஞ்சைத் திணிக்கும் வாறுபோலத் தம்வாய் வழியாக அள்ளி அமுக்கி விழுங்கினர். பின் அவர் உண்டவிடத்தினின்றும் எழுந்திருக்கக்கூடாமல் ஒற்றைக்கையைத் தரையில் ஊன்றிக்கொண்டு ஒற்றைக் காலை மண்டியிட்டபடி பரக்கப்பரக்கச் சுற்றுமுற்றும் பார்த்து விழித்துக் கொண்டிருந்தார். அதைக் கண்ட ஒருவன் அவருக்குக் கைலாகு கொடுத்து, நிலைத்தேரைக்கிளப்பிய வாறுபோலக் கிளப்பிவிட்டான். அவர் பூரணகருப்பிணிபோலச் சிரமப்பட்டு மெதுவாக அடியளந்து அசைந்து நடந்துபோய்ப் பாடுபட்டுக் கை கழுவிப் பக்கத்துத் திண்ணையிற்றானே பொதிசாய்ந்தபடி வீழ்ந்திருந்து குடமுழாவன்ன வயிறுப்பலெடுப்பால் திணறிப் பாம்பின் சீற்றம்போல மூச்சினைய விட்டுச் சிரமப்பட்டுக்கொண் டிருந்தார். அதனை ஒருவன் நோக்கி, "ஏன் அய்யா இவ்வளவு சிரமம்? தங்களுடைய இரண்டு விரல்களைத் தொண்டையில் விட்டு வாந்தி யெடுத்துவிடுங்கள், சுகமடைவீர்கள்" என்றான். அதற்கு அப்பிராமணர், "அடா நீநன்றாய்ச் சொன்னாய்! எனக்கு இரண்டு விரல்களைத் வைக்கிறதற்கு இடம் உண்டாயிருக்குமாயின் நான் அதில் இரண்டு வடைகளைத் திணித்து வைத்துக்கொள்வேனே" என்றார். (இதைக் கேட்டுச் சிவானந்தி குலுங்கக்குலுங்க நகைத்தனள்). கேட்டாயா? கண்மணி! இந்த விதம் சாப்பிடுகின்றதில் என்ன சுகம் உண்டாகப்போகின்றது? ஆடவர்கள் சாப்பிடும்படிக்கு ஏற்பட்டதில்

பெண்டீர்கள் கொஞ்சமாகத்தான் சாப்பிடவேண்டும். "உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கழகு" என்று ஔவைப்பாடியார் செப்பியிருக்கின்றார்கள். புருஷர்களுடைய தேகஅமைப்புக்கும் ஸ்திரீகள் மெல்லியராய் அக்காரணப்பெயரையும் பெற்றிருக்கின்றார்களன்றோ? இவைநிற்க, நீஇப்போது என்னை உண்ண உபசரிக்கின்றதெல்லாம் வாஞ்சையினது குறிகளாகவே இருக்கின்றன வன்றிப் பிறிதொன்றில்லை.

சிவானந்தி:—மணாளா! மணாளா!! தங்களிடத்தில் இவ்விதம் சிரிப்புக் கேதுவாகிய உல்லாச வார்த்தைகளைக் கேட்டு வெகுகால மாயிற்றே? இதுபோலவே நமது குலதெய்வம் தங்களை என்னோடு எப்போதும் பிரியாதிருந் தனுபவிக்கக் கிருபை செய்யவேண்டும்.

சிவானந்தன்:—நீ ஈசன் கிருபையைக் குறித்துச் செப்பியதே சரி. ஏனென்றால் "ஒன்றை நினைக்கி னது வொழிந்திட் டொன்றாகு—மன்றி யது வரினும் வந்தெய்து—மொன்றை—நினையாதமுன் வந்து நிற்பினு நிற்கு-மெனையாளு மீசன்செயல்" அல்லவா? நான்நமது இராஜாவுக்குச் சென்ம விரோதிகளாய்ப் பொல்லாங்கிழைத்திருந்த பகைவர்களை யொடுக்கச் சென்றதில் பற்பல உபாயங்களைச் சமயம்போல் அநுசரிக்க வேண்டியதாய் நேர்ந்தபடியால் நான்உன்னை ஆறுமாத காலம் பிரிந்திருக்க நேரிட்டதன்றி வேறென்ன? மாற்றலரிடம் மூன்று விதவுபாயங்களும் சரிப்படாமலேயிருந்து தண்டத்தை கையாடநேர்ந்து நம்மீசன் திருவருளாற் செயமுடன் திரும்பநேரிட்டது. "அவனன்றி யோரணுவு மசையாது" என்பதே சாதகம். நீஒரு சன்மார்க்கமுள்ள புத்திரனை விரும்பினை. அதுவும் நீ

சொன்னபடிக்கு நமது ஆறுமுகத் தெய்வத்தினுடைய கிருபையினால்தான் ஆகவேண்டும். நமக்குப் பிள்ளையாக வந்து ஜெனிக்கக்கூடிய ஆத்துமாவானது நல்ல புண்ணியமும் தவமும் செய்ததாகவே இருக்கவேண்டும். இல்லாவிட்டால் நாம்பூசித்துவரும் ஷண்முகத் தெய்வ பக்தி நம்புத்திரனுக்குஉண்டாவதெப்படி? வழியடிமையிற் கொண்டாள நம்குமரன் நம்மிற் கருணைவையா திருப்பரோ? பூர்வத்தில் நல்வினைப் பயனை யுடைய புத்திரனை நாம் அடைவதென்றால் அபூர்வ மல்லவா? "என்ன புண்ணியஞ்செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து—முன்னை நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்—மன்னுகாவிரி சூழ்திருவலஞ்சுழி வாணனை வாயாரப் பன்னியாதரித் தேத்தியும் பாடியும் வழிபடுமதனாலே". "அத்தனை முப்பத்து முக்கோடி தேவர்க்கதிபதியை—நித்தனை யம்மை சிவகாமசுந்தரி நேசனையெங்-கத்தனைப் பொன்னம்பலத்தாடு மையனைக் காணக்கண்க—ளெத்தனை கோடியுகமோ தவஞ்செய் திருக்கின்றவே" என்று பெரியோர் வாக்கியங்கள் ஏற்பட்டிருக்கின்றன. "சும்மா கிடைக்குமோ சோணாசலன் பாதம்?" நாம் அனுசரித் திருக்கும் மார்க்கத்திற்கும் பொருத்தமாகிய நல்வினையுடைய ஆத்துமா அபூர்வமாகையால் நமக்குப் புத்திரோற்பத்தி தாமதமாயிருக்கலாம். நாம் பெறக்கூடியவற்றுள் மக்கட்பேற்றிற்குச் சமானமானது என்ன இருக்கிறது? அதிலும் ஆண்குழந்தையே விசேஷம். தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரும் "பெறுமவற்றுளியா மறிவதில்லை யறிவறிந்த — மக்கட்பேறல்லபிற" என்றருளியிருக்கின்றார்.

சிவானந்தி:—என்நாதா? 'அறிவறிந்த' என்றால் "புத்திசாலியான" என்று தாற்பரியம்?

சிவானந்தன்:—நீ நன்றாய்க் கேட்டாய். அஃது அந்தப் பாட்டினின்றும் அறிந்துகொள்ளக் கூடிய ஓர் முக்கியவிஷயம். அஃதாவது, "அறியவேண்டு மவைகளை அறிதற்குரிய" என்று அர்த்தம். 'அறி வறிந்த' என்றமையால் மக்கள் என்னும்பெயர் பெண் ஒழித்து நின்றது. பன்றி குட்டிகளைப் பிதுக்கியதைப் போலக் குணமில்லா மக்கள் எத்தனைபேர்கள் தாம் இருந்தும் என்ன பிரயோசனம்? "கொச்சை மக்களைப் பெறுதலினக்குடி எச்சமற் றேமாந் திருத்தலன்றே." சங்கையற்ற எத்தனையோ நட்சத்திரங்களிருந்தும் ஒரேஒரு சந்திரன் மட்டும் வானத்திலிருந்து உலகத்தினுடைய அந்தகாரத்தைப்போக்கி ஆனந்தத்தைப் பெருக்குகிறானன்றோ? "ஏகோபி குணவாந்புத்ரோ — நிர்குணைஃ கிம்ஸதாபி — ஏகசந்த்ர ப்ரகாஸேந — நக்ஷத்ரைஃ கிம்ப்ரயோஜநம்." பதினாறுவயது அற்பஆயுளையுடையவனா யிருந்தாலும் எனக்கு நல்லபுத்திரனையே பாலிக்க வேண்டுமென்று மிருகண்டு மகா முனிவரானவர் பரமேஸ்வரரிடத்தில் வரம் பெற்றுக் கொண்டதனை நீ அறிந்திருப்பாயே? அவ்வாறு அம்முனிவர் நல்ல புத்திரனைப் பெற்றுக்கொண்ட மகிமையினால் மார்க்கண்டனென்றும் அப்புத்திரன் பரமேஸ்வரர் அருள் பெற்றுத் தனக்கு என்றும் பதினாறுவயதாய் ஆக்கிக் கொண்டனன். இத்தகைய உத்தம புத்திரனைப் பெற்றோர்கள் சகலதீவினைகளையும் போக்கி ஆறுதலடைவார்கள். "எழுபிறப்புந் தீயவை தீண்டாபழி பிறங்காப் பண்புடை மக்கட்பெறின்". அஃதாவது, மற்றோர்பழிப்பதற் கில்லாத உத்தம குணங்களை யுடைய புத்திரரை

ஒருவன் அடைவானாயின், வினைவசத்தினால் உண்டாகிற எழுவகைப்பட்ட பிறப்பினும் அவனைத் துன்பங்கள் சேராவாம். மேலும் நாயனார், தம்முடைய மக்களினுடைய சிறியகைகளினால் அளாவப்பட்டஉண்டியானது மதுரமுள்ள அமுதத்தைக்காட்டினும் வெகு மேன்மையுடைய தென்றும், ஒருவனுடைய சரீரத்திற்கு இன்பமாவது தன்மக்களுடைய சரீரத்தைத் தீண்டுதல், செவிக்கு இன்பமாவது அவரது சொல்லைக் கேட்டல், அம்மழலைச் சொற்களைக் கேளாதவர்களே குழலின் இசையும் வீணையின் இசையும் இனிமையென்று சொல்லுவார்களென்றும் திருவாய்மலர்ந்திருக்கின்றார்.

சிவானந்தி:—ஆஹா! தாங்கள் மணக்க வாய்மலர்ந்தவையெல்லாம் மிகவும் சரியானவைகளே. ஒருபுத்திரப் பேற்றை உத்தேசித்து அனேகர் தங்களுக்குரிய பெரிய நிதிக்குவையலையெல்லாம் திரணமாகப் பாவித்து வாரி இறைத்துச் செலவுசெய்து விடுகின்றார்களே? "பொன்னுடையரேனும் புகழுடையரேனுமற்—றென்னுடையரேனு முடையரோ—இன்னடிசிற் புக்களையுந் தாமரைக்கைப்பூ நாறுஞ்செய்யவாய்—மக்களையிங் கில்லாதவர்". இவ்விதச் செல்வம் நமக்குக் காலத்தில் உண்டாக வேண்டும். ஒருவன் முப்பதுபிராய மடையுமுன் மூன்றில் ஒருபொருள் அஃதாவது கல்வியையாவது செல்வத்தையாவது நல்ல புத்திரனையாவது அடைந்திருக்கவேண்டும். அன்றேல் அந்த ஜெனனம் பாழென்று உலகு பேசும். இதற்கு நாம் மூன்று (ஆணவம் மாயை கன்மம்) அற்ற ஒரு பொருளாகிய தேவ சேனாபதியினிடம் முயற்சிக்க

வேண்டும். ஒருவருக்கு நல்லவூழிருப்பதும் இல்லாததும் யாவரும்தெரிந்துகொள்ளவியலாது. முயற்சியைத் தாழ்க்காது செய்து பின் அதிற்பயன்காணாதபோது ஒருவர் தமக்கு நல்லவூழில்லையென்பதைக் கண்டு சமாதானமாகத் தக்கதாம். "தெய்வத்தாலாகாதெனினு முயற்சி மெய்வருந்தக் கூலிதரும்" என்றபடி முன் முயன்று பின்கிட்டாவிட்டால் "ஊழிற் பெருவலியா வுளமற்றொன்று—சூழினுந்தான் முந்துறும்" என்ற படிக்குத் தேறி யிருக்கவேண்டும். "புத்" என்னும் நரகத்தினின்றும் தனது மாதாபிதாக்களை அகற்றுவிக்கும் காரணத்தாற் பிள்ளைக்குப் புத்திரன் என்னுங் காரணப்பேர் உண்டாயிருக்கிறதென அடியாளுக்குத் தாங்கள் ஓர் சமயத்திற் காண்பித் திருக்கிறீர்கள்.

சிவானந்தன்:—ஊழானது, ஆகூழ்என்றும் போகூழ்என்றும் பெரியோர் சொல்வார். ஒருவனுக்கு கைப்பொருளாதற்குக் காரணமாகிய ஊழான் முயற்சி யுண்டாவது ஆகூழ்என்றும், அம்முயற்சியழிதற்குக் காரணமாகிய ஊழான் மடியுண்டாவது போகூழ் என்றும் ஏற்பட் டிருக்கின்றன. ஆதலின், நாம் சோம்ப லின்றி முயற்சியுடையரா யிருப்பதே நமக்குப் பின் இகழ்ச்சி வராதென்னும் முற் குறியாம். நமது முயற்சிக்கு முருகன் றிருவருள் செய்யும் பருவம்வல்லையேநேரும். எல்லாப்பாரமும் அவன் றலையிலேயேற்றி நாம் கவலையில்லாச் செல்லப் பிள்ளைகளைப்போ லிருக்கவேண்டுவதே கடமை. கவலை யென்பதெல்லாம் நாமாகவே வைத்துக்கொள்வதேயாம். யோசிக்கின் கவலை திவலையும் இல்லையென்பதை உணரலாம். அடி பிரியமானவளே! இப்போது உன்பேரில் எனக்கு அதிகப்பிரியம் பெருக் கெடுத்துக்கொண் டிருக்கிறது. நான் எப்

போதும் உன்னுடைய கையினுற் பரிமாறச் சாப்பிடுவதி லிருந்தும் விசேஷித்த உருசிகரத்தை அநுபவத்திற் கண்டுவருகிறேன். அதுகணிக்கப்பட் டிருக்கும் ஆறு வித இரசங்களுக்கும் மேலான வோர்மகத்துவ மதுர மாகவே இருக்கின்ற தென்பதில் யாதொரு ஆட்சேபணையு மில்லை. (எனச்சாப்பிட்டு முடித்தெழுந்து) கமலே! என் கரம் அலம்பத் தண்ணீர் ஊற்றுவா?

சிவானந்தி:—நாதா! நான்தான் அடியாள் ஊழியம் செய்யத் தயாராய்க் காத்துக்கொண் டிருக்கின்றேனே! அச்சிறியவளைத் தாங்களேன் அவசரப்பட்டுக் கூவி யழைக்கவேண்டும்? (என்று தண்ணீர்வார்த்தாள்). "தெய்வந் தொழா அள் கொழுநற் றொழு தெழுவாள் பெய் யெனப் பெய்யுமழை" என்றதே தமிழ் வேதம். விக்கிரஹங்களைத் தெய்வங்களாகவே பாவித்துப் புருஷர்கள் கயிங்கரியாதிகள் செய்து கடைசியில் உண்மையானபெரும்பதவியிற் சேர்ந்து இன்புறுந் தன்மையைப் போல, ஸ்திரீகள் தாங்கள் தங்களுக்குப் பிராப்தமாகிய நாயகரையே தெய்வமாகப் பாவித்து அவர்களை வழிபட்டு அதன் பயனுகிய பேரின்ப வாழ்வையே அடைவார்கள். விக்கிரஹங்களை வழிபடுதலைக் காட்டிலும் ஸ்திரீகள் தங்கள் புருஷரை வழிபட ஏற்பட்டிருப்பது வெகு சுலபமான காரியமாகவும்இருக்கிறது. ஏனெனிற் கல்லாலும் செம்பாலும் ஆக்கப்பட்ட விக்கிரஹங்களில் யாருக்கும் பக்திஜெனிப்பது அசாதாரணம். ஸ்திரீகளுக்கோ பக்தியானது தங்கள் நாயகரிடத்தில் இயற்கையாகவே ஏற்படப் பலகாரணங்கள் அமைந்திருக்கின்றன. ஸ்திரீகள் ஆனந்தகரமாகத் தங்கள் நாயகர்பால் அன்பைப் பெருக்கி அவர்களுக்குத் தொண்டு பூண்டு ஒழுகுவார்களாயின் அவர்களுக்குப்

புருஷர்களுக்குக் கிடைக்கச் சித்தமாயிருக்கும் தெய்வ வழிபாட்டின் பயனே சிறிதும் எஞ்சாது கிடைக்கத் தடையில்லை. ஆதலின், நாதா! எனக்குத் தங்களுக்குப் பணிவிடை செய்வதே பெரும்பாக்கியம். அதைநான் வேறொருவருக்குக் கை தவறியும் விடமாட்டேன். அணியாதி சம்பத்துக்களை முற்றுங் கொடுத்தாலும் இத்திருப்பணியை யாவருக்குங் கொடுக்கமாட்டேன்.

சிவானந்தன்:—நேச முளளவளே! நீ ஓர் ஒப்பற்ற வளாய் எனக்கு அமைந்தனையோ லும்? "இல்லெதெனில் லவண்மாண்பாற் லுள்ளதெ — னில்லவண்மாணாக் கடை". ஒருவனுக்கு மனையாள் நற்குண நற்செய்கை யுடையவளா யிருந்தால் இல்லாதபொருள் யாது? இவ் விதப்பேற்றை யான்பெற்றேனே? முருகன்கிருபையே. நீ எப்போதும் இவ்விதமாய் என்னிடத்தில் அன்பும் விசுவாஸமும் குறையாம லிருக்கலாகுமோ?

சிவானந்தி:—நாதா! தங்களுக்கு என்ன காரணமோ இது சமயத்தில் இவ்விதமான ஓர் நினைவு உண்டாயிற்று? நாம் நம்பியிருக்கும் ஆறுமுகத்தெய்வம் சத்திய முள்ளதா யிருக்கும்பட்சத்தில் என்னுடைய நேசமும் அவ்வாறே என்றும் நலம் பெற்றிருக்கத் தடையுமொன் றுண்டோ? என்னைத் தாங்கள் மணம் புணர்ந்து ஒருவருஷகால மாகின்றது. இவ்வளவு காலம் பழகிப்பார்த்தும் என்னுடைய நல்லதும் கெட்டதுமான சுபாவங்கள், எதையும் நுட்பமா யறியவல்ல மேன்மை பொருந்திய தங்கள் புத்திக்குத் தோன்றாமலா இருக்கும்? ஸ்ரீ இராமபிரானுக்கும் தம்பத்தினியாரிடம் நிகழக்கூடாத சந்தேகம் உண்டானது உலகறிந்ததேயாம். எனினும், அவள் கற்பரசியாகவே யாவ

ரும் கொண்டாடச் சம்பவித்தது. அவருக்குண்டான சந்தேகம் நாடொப்பனை செய்யவென்று தெரிந்தது. தங்களுக்கு என்னிடத்தில் அப்பெரிய சந்தேகத்திற் கும் தன்மைக்கும் காரணமில்லை. புருஷர்களுடைய இயற்கைச் சுபாவமே யுப்படியெனத் தெரிகின்றது. அதுவும் முக்கியமாய் ஸ்திரீ புருஷ அந்நியோந்நியம் ஏற்பட்டவிடத்தே இவ்வித அசம்பவம் ஒன்று தலை காட்டுகின்றது. இது பிரமம் உண்டாயிருந்த விடத்து இல்லை யென்னும் வாக்கம் கிளம்பியது போலுமே. இல்லை என்றால் முன் உண்டாயிருந்தே பின் இல்லை என்றது ஏற்படவேண்டுமே யொழிய அன்னியதா சாத் தியப்படாது. இதுபோலவே என்னுடைய அன்பின் பேரில் தங்களுக்கு உன்டானவிபரீத எண்ணம் அவ் வன்பின் ஸ்திரத்தையே காட்டுகின்றது.

சிவானந்தன்:—பிரியமுள்ள சாதுரிய வசனீ! நான் ஸ்திரீகளிடத்திற் பழகி அவர்கள் சுபாவங்களை இதுவரை தெரிந்தவ னல்லேன். ஏட்டுச் சுரைக்காய் கறிக்காகுமா? நானும் வேறொருவிதமாக வுன்னைக் கரு தினே னென்பதில்லை. நமது அன்புக்கோர் உற்பத்தி என்றுண்டோ அப்போழ்தே அதனுக்கோர் இலயகாலம் தர்க்கநியாயமாய் ஏற்பட்டுள்ளதை மறுப்பார் யாரே?

சிவானந்தி:—இந்த அன்பு இப்போது தழைத்த தென்பது என்ன நியாயம்? பூர்வ காரணமில்லாமல் இந்த அன்புகாரியம் நிகழுமா? கொஞ்சம் யோசிக் கின் நமதன்புக்கோர் முடிவில்லை என்னத் தடையேது? நமது அன்பு, இருக்கவேண்டிய உத்தம அன்பு இஃது இனி யென்றும் மீளாப் பேரின்பக் கடலிலே நிலையுறு மென்பதி லையமின்று. இப்போதுள்ள நமது அன்பு அப்

பேரின்ப வாரிதியின் ஓர் திவலையென்னலும் ஒக்குமோ? ஆதலின், என்று மோர் குறையுண்டா யிருப்பதாகத் தேவரீருக்குக் கவலை வேண்டுவதின்று.

சிவானந்தன்:—எனது புத்தியுள்ள இன்பரசமே! நெருப்பானது ஒருகாலத்திற் சுடுகின்ற தன்மையும் மற்றொரு காலத்திற் குளிர்ந்திருக்கும் குணமுமுடையதாமோ? காக்கையின் கரியநிறம் வெண்மையாய் மாறுவதுண்டோ? கழுதையானது குதிரையாய் மாறுமோ? அதனதன் சுபாவகுணம் நன்மையாக விருந்தாலும் தீமையாக விருந்தாலும் அது ஒருகாலத்து மாறக்கூடியதன்று. இந்நியாயத்தால் நற்குண முடையோர் ஒருபோதும் தீக்குண மடையாரென்பது நிச்சயம். அரிச்சந்திரன், தனக்குத் தாங்க முடியாத துன்பம் வந்தபோதும் தன் நிலைமையி னின்றுந் தவறிலன். அந்தப்புரத்திருந்து அரசச் செல்வத்தை அநுபவித்திருந்த தமயந்தி ஒருகாலத்தில் காட்டிடைச் சிக்க நேர்ந்தபோது காமுகனாகிய வேடுவனிடம் அவள் தன் கற்புக் குலையவில்லை. எனக்கு எல்லாம் வெகு ஸந்தோஷமே. இப்போது அகால மாகின்றமையால் நீ சாப்பாட்டை முடித்துக்கொண்டு வருதல் நலம். எனக்கு நீ தாம்பூலம் மடித்துக் கொடுப்பதற்கு இப்போது அவசரமில்லை.

சிவானந்தி:—(இயற்பகை நாயனாரின் பத்தினியார் தருமத்தையும் 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' என்பதையும் நினைந்து) தங்கள் அபிப்பிராயம் போல நான் சீக்கிரமாய்ப் புசித்து இதோ வருகிறேன் (என்று தனது நாயகனுடைய பரிகலத்திற் புசிப்பதாய் அமர்ந்து) தேவரீர் அடியாளுக்கு அதிகப் பசி

கலம் வைத்து விட்டீர்களே? எதோ கூட்டிய வாறில் அருந்துகின்றேன் (என்றாள்).

சிவானந்தன்:—பெண்ணே! நீ முன்னிலும் இப்போது அசாத்தியமாய்ப் பேசுகின்றாயே?

சிவானந்தி:—"வற்றியவோலை கலகலக்கு மென்ஞான்றும் - பச்சோலைக் கில்லை யொலி" என்றபடியும் நான் இருக்கிறேன். எல்லாம் தாங்கள் இன்று என்னிடம் வந்துசேர்ந்த ஸந்தோஷ விசேஷந்தான் காரணம். முற்று முணர்ந்த தங்களுக்குத் தக்கவாறிற் பேசித் திருப்தி கொடுக்கலாமென்றும் பிரயாசைப் பட்டேன். என்னபேசியு மெனக்குப் பெண்புத்தி பின்புத்தி தானே? ஏதோ முன்பின் யோசியாமல் உளறித் தள்ளாடுகிறேன். ஆகாப் பெண்சாதியானால்தான் புருஷர்களுக்குத் கால்பட்டாற் குற்றம் கைபட்டாற் குற்றம்?

சிவானந்தன்:-மாதரசி! இஃதென்ன? நீபோஜனம் செய்வது சாவதானமாக வல்லவா இருக்க வேண்டும்? ஆகாரத்தை வாய்நீருடன் (Saliva) சேரும்படி நன்றாய் மென்று பின்பு விழுங்குவதே நன்மை. வேகமாய் உண்பதில் ஆகாரமானது சரியாய் மெல்லப்படாமலும் வாய் நீரோடு செவ்வையாய்ச் சேர்க்கப் படாமலும் போவதால் அது தேகபோஷணைக்கு உத்தமமாயிருக்கமாட்டாது. வாய்நீர்சேர மென்று இறக்குவதில் ஆகாரம் நன்றாய் ஜீரணமாம். எல்லாம் வல்ல பரமன் அந்த நீருக்கு அவ்விதமான ஓர் குணத்தை அமைத்துவைத்திருக்கின்றார். துரித போஜனமும் தாமத ஸ்நாநமும் நன்மையென அக்காலத்தவர் கற்பித்தனர். ஆனால் தாமதஸ்நானம் இக்காலத்திலும் விசேஷமாம்.

சிவானந்தி:—மணாளா! அந்தப்படியே மெதுவாய்ப் புசிக்கின்றேன். ஆங்கிலேயர் ஏதாவது விஷயங்களைப் பேசிமுடிவு செய்து கொள்ளும் படிக்குத் தீனிவைப் பார்களென்றும், அத்தீனிச் சமயத்திலே அவர்களின் அபிப்பிராயங்களை நீளப் பிரஸ்தாபித்துப் பின் ஒரு முடிவு செய்துகொள்வார்களென்றும்தேவரீர் எனக்கு முன் ஒருசமயம் கட்டளையிட்டிருக்கின்றீர்கள். பேசிக் கொண்டே அக்கூட்டத்தார் ஸாவதானமாகச் சாப்பிடுவது அவர்களுடைய தேகங்களுக்குக் குணமே செய்யத் தக்கதுதானே? ஆ! அஃதென்னமோ பேரிரைச் சலும் சந்தடியுமாய்த் தெற்குத் தெருப்பக்கம் கேட்கிறதே! எநாதா! தாங்கள் அதனைக் கவனித்தீர்களா! கலகமோ அல்லது கொள்ளைதானோ!

சிவானந்தன்:—ஆம்! அடிமாதே! பெரும் ஆரவாரமாகத்தான் புலப்படுகின்றது. அஃதென்ன சந்தடியென்பது தெரியவில்லை. எல்லாம் காலையில தானாகவே தெரியவரும்.

சிவானந்தி:—(கோப்பையில் தீம்பால்கொணர்ந்து சிவானந்தனைச் சமீபித்து நின்றாள்). நான் சாப்பிட்டாய் விட்டது. இப் பாலைச் சாப்பிடுங்கள்.

சிவானந்தன்:—(தனது நாயகியின் திருமுகத்தை மலர்ச்சியுடன் பார்த்து அவளுடைய புயத்தில் ஒரு கரத்தை வைத்து மற்றொரு கரத்தாற் பாலைவாங்கிச் சாப்பிட்டனன்). கண்மணி! "பாலெல்லாம் நல்லாவின் பாலாமோ" என்று பெரியோர் உரைத்தவண்ணம் பசுவின்பாலே மேலானது. பரமேஸ்வாருக்கும் இதுபுனிதமாய் அபிஷேகத்திற்கும் உரித்தாகின்றது. இதுபசுவி

னின்றும் உண்டாகும் ஓர்வகைத்திரவப்பொருள் ஆகை யால் பற்பல திரவிய மாறுதல்களை யடைந்து கடைசி யில் ஊசிப்போகுந்தன்மை யுடையது. அதில் நோக்கு காரணமாகும் பரமாணுக்கள் சம்பந்தப் படுமாயின், அதன்மூலமாய் நோய் அதனைப் பருகுவோர் யாவருக் கும் உண்டாகும்.

சிவானந்தி:—ஏநாதா! பால் நல்லதா யிருப்பதும் கெட்டதா யிருப்பதும் எப்படி அறிந்து கொள்ளு கிறது?

சிவானந்தன்:—நல்ல பாலும் கெட்ட பாலும், பசுவின் தன்மைக்கும் அதுகட்டப்பட்டிருக்கும் இடத் தின் தன்மைக்கும் தக்கபடி தானிருக்கும்.

சிவானந்தி:—ஏ நாதா! முதல்தரமான பசுவா யிருந்தால் அது ஒருநாளைக்கு எத்தனைபடி பால் கறக் கும்?

சிவானந்தன்:—நமது தேசத்திலுள்ள முதல்தர மானபசுக்கள் ஒருநாளைக்கு நான்கு படிக்குமேற் கறக் கிறதில்லை. ஆனல், குளிர்ச்சியும் செழிப்புமுமான சில விடங்களில்மட்டும் இரண்டொருபடி இந்த அளவுக்கு அதிகமாகக் கறந்தாலும் கறக்கலாம். கன்றுக்கே பாலில் லாம லிருக்கிற மாடுகள் அனேகமுண்டு. அதிலுங் கோடைகாலத்தில் மாடுகளைப் பார்க்க வெகுபரிதாபமா யிருக்கும். நமதுதேசத்தார் பாலினது தன்மையைச் சிறிதும் அறியாதவர்களாய்த் தங்களுக்கு எவ்விதத்தி னாலாவது எதேஷ்டமாய்ப் பாலுண்டாயிருந்தாற் போ துமானதென்பதாய் மாடுகளுக்குக் கண்ட கண்ட வுண வுகளை யெல்லாம் அருந்துகின்றார்கள். பசுவுக்கு நாம்

நல்லவுணவுகளைக்கொடுத்தால் அதுநமக்குச் சுத்தமான பாலைக்கொடுக்கும். அந்தப்பால் சிறந்த ஔஷதமாய்ப் பருகுவோருக்கு நோயை யுண்டாக்கமாட்டாது. சுத்தமானபால் கிடைக்கும்பொருட்டுப் பலபிரயத்தனங்கள் செய்யவேண்டும். குப்பை அமேத்ய (மல) முதலானவைகளைப் பசுக்கள் தின்னக்கூடா. மாட்டுக்கொட்டில்களை எப்பொழுதும் கற்றோட்டமாகவும் சுத்தமாகவும் வைக்கவேண்டும். மாடுகளின் பேரிலுள்ள சாணம் மண்முதலான அழுக்குகள் போகும்படியாய்க் காலையிலும் மாலையிலும் அவைகளைத் தண்ணீர் விட்டுத் தேய்த்துக் கழுவவேண்டும். பால்கறப்பதற்கு முன் மாட்டின் மடியைச்சுத்தமாகக் கழுவ வேண்டும். பால்கறக்கும் பாத்திரங்களைச் சுத்திசெய்து, கொதிக்கும் வெந்நீர் விட்டுக் கழுவியபின் அவைகளிற் கறக்கவேண்டும். பாலைக் கறந்தபின் அதில் தூசிகள் விழாதிருக்கும்படி அந்தப் பாத்திரத்தை மூடிவைக்கவேண்டும். விஷபேதி அம்மைமுதலிய ரோகங்களிருக்கும் வீட்டிலுள்ள பாற்காரர்களும் அப்படிப்பட்ட வீடுகளுக்குப் போக்குவரவுள்ளவர்களும் சொறி சிரங்கு முதலிய தொற்று வியாதிகளுடையவர்களும் பால்கறக்கக் கூடாது. வியாதியில்லாதவர்களும் கைகளைச் சுத்தமாய்க் கழுவிக்கொண்டு பால்கறக்கவேண்டும். பாலுடன் ஜலம் கலக்கவேண்டுமானால் கொதிக்க வைத்த வெந்நீரை உபயோகப்படுத்த வேண்டும். ஆனால், ஜலம் கலக்கிறதே மோசமான காரியம். பசுக்கள் தினந்தோறும் வெளியே போய் நல்ல புல் முளைத்திருக்கும் மைதானங்களில் மேய்ந்துவரவேண்டும்.

சிவானந்தி:—நாம் ஒவ்வோர் காரியத்திலும் பொதுவாய்ச் சுத்தத்தை ஜாக்கிரதையாய்ப் பேணி வருவதற்

குச் சமானமொன்றுமில்லை. "சுத்தஞ் சோறுபோடும்' என்பது சாதாரணப் பழமொழியேனும் அதன் இரகசியம் சாலவும் மேம்பாடுடையதே. ஏ! நாதா! அப்படிக் கண்ட கண்டபடிக்கு மாடுகளுக்கு என்ன தீனிகளைக் கொடுக்கிறார்கள்?

சிவானந்தன்:—அழுக்குப் பிடித்த வைக்கோலையும், புளித்தசோற்றுத் தண்ணீரையும், ஊளைமோரையும், வறட்டுத்தவிட்டையும், பிண்ணாக்கையும் பெரும் விருந்து செய்வதுபோற் பசுக்களுக்கு இடுவார்கள். புளித்த தண்ணீரையும் நாற்றமெடுத்த மோரையும் குடிக்குமானால் அவை பாலை யெளிதிற் கெடுத்து விரைவிற் புளித்துப்போகச் செய்யும். ஆயினும் நமதுநாட்டார் அவையனைத்தும் அப்படியே நல்லபாலாக மாறி மாடு நன்றாய்க் கறக்கிற தென்று நினைக்கின்றார்கள். அன்றியும் மாட்டுக் கொட்டில்கள் மிகச்சிறியதாயும் கேடுகெட்டதாயும் அமைக்கப்பட் டிருக்கின்றன வன்றிச் சாக்கடையோடு வேறே சம்பந்தப்பட் டிருக்கின்றன. இதனால் மாடுகளுக் குண்டாக்கக்கூடிய தீமைகள் யாரால் அளவிட்டுச் சொல்லமுடியும்? இப்படிநெருக்கமான விடங்களில் மாடும்மனிதரும் கலந்துகுடியிருப்பதால் நல்ல காற்றில்லாமல் இருவருக்கும் பெருங்கேடு உண்டாவது திண்ணம். இது சாக மருந்துண்பாரைப் போலிருக்கிறதேயன்றி வேறொன்றில்லை. ஒருவன் நல்ல காற்றைச் சுவாசித்து நோயின்றித் திட்டமாய் வாழ வேண்டுமாயின் ஒருமணி நேரத்திற்கு மூவாயிரம்கன அடிகொண்ட சுத்தமான காற்று வேண்டும். இந்தக் கணக்கின்படியே பார்த்தால் மாட்டுக்குத் தக்கபடி மாடொன்றுக்குப் பதினாயிரம் முதல் இருபதினாயிரம் கன அடி வரையில் காற்றுவேண்டும்.

சிவானந்தி:—ஏநாதா! ஜனங்கள் அடர்ந்த வீடுகளில் மாட்டுக்கு இத்தனை சுகம் பார்க்கமுடியுமா? எஜமானனே இடமில்லாமல் அவதிப்படுகையில் மாட்டிற்குச் சுகம்கிடைப்பதெப்படி?

சிவானந்தன்:—என்பெண்ணே! அப்படிச் செப்ப வேண்டும்? எல்லாம் அப்பியாசத்தைப் பொறுத்திருக்கின்றன. எந்தக்காரியமும் முடியாதென்றால் முடியாது தான்; முடியுமென்றால் எல்லாம் முடியும்தான். "வருந்தினல் வாராத தொன்றில்லை" என்றதும் இதற்கு ஒட்டவே சொல்லலாம். "செய்வன திருந்தச்செய்" என்ற வாக்கியத்தைக் கவனித்து என் நடக்கக் கூடாதோ? அதிலும் இந்நாட்டார் பிராணனுக்கே பெரிய அபாயத்தை யன்றோ தேடிக் கொள்ளுகிறார்கள்? இங்கிலண்டிற் பசுக்களைக் கட்டியிருக்கும் இடங்களைப் போய்ப் பார்த்தால் நிர்மலமாய் வெகு ரமணீயமா யிருக்கும். அப்பசுக்களிற் பெரும்பான்மை யானவை குடங்குடமாய்க் கறக்கின்றமையால் அவைகளைக் குடப்பாற் செல்வியென் னலாம். நமதுதேசத்துப் பசுக்கள் பெரும்பான்மையும் நாழிப்பால் கறப்பதுகூடப் பெருங் கஷ்டமா யிருக்கிறது. சில பசுக்கள் கன்றுக்கே பால் தருவது வருத்தம்.

சிவானந்தி:—நாதா! தாங்கள் சொல்லுவது நிரம்பச்சரி. ஏனென்றால், வடக்குத்தெரு அக்கிரஹாரத்துப் பிராமணத்தி யம்மாள் என்னிடம் ஒருநாள் வந்திருந்தபோது அவர்கள்வீட்டில் நாலைந்து பசுக்கள் கறந்தும் குழந்தைக்குச் சாப்பிடப் பாலில்லாம லிருப்பதாகச் சொல்லித் தாவந்தப்பட்டார். நம்முடைய பசுக்களையெல்லாம் நன்றாய் நாம் வைத்துக்கொண் டிருக்கிறோம்.

சிவானந்தன்:—அடிகண்மணி! அதைப்போன்று எல்லாரும் தெரிந்து தங்கள் பசுக்களைக் கவனிக்கின்றார்கள்? நஞ்சுள்ள பாலைப் பருகுவதனாற் பலவிதநோய்கள் உண்டாகின்றன. அதில் முக்கியமாய்க் குடலைப்பற்றிய வியாதி மிகக் கொடியது. தீயபாலை யுண்டு மாண்ட குழந்தைகள் கணக்கில்லை. பெரியவர்கள் அப்பாலை உட்கொண்டு வயிற் றுளைவினால் வருந்துவார்கள்.

சிவானந்தி:—நாதா! நம்முடைய புஸ்தகசாலையில் பாலைப்பற்றி யெழுதப்பட்ட புஸ்தகங்கள் அனேகம் இருக்கக் கண்டிருக்கிறேன். நான் அவைகளை ஒவ்வொன்றாய்ப் படித்தறிந்து கொள்ள வெகு ஆவலாயிருக்கிறேன்.

சிவானந்தன்:—சாஸ்திரங்கள் பலவா யிருக்கின்றன. அவைகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விஷயத்தைப்பற்றிப்பேசும். முற்றுமுணர்ந்த முனிவர் நூலன்றி மற்றவர் நூல்களும் உண்டாயிருக்கின்றன. இந்நூல்கள் முதல் நூலைஒட்டியே இருப்பன. "முற்று முணர்ந்தவரில்லை முழுவதூஉங் கற்றனமென்று களியற்க" என்றபடியால் ஒவ்வொருவர் தங்கள் தங்கள் கல்விக்கும் அநுபவ அறிவிற்கும் ஒத்தவாறில் கூடிய வரையில் தெரிந்துகொண்ட ஒவ்வோர் விஷயத்தை நூன்முகமாய் வெளியிட் டிருக்கின்றார்கள். அத்தகையா ரிடத்தும் எல்லாவிஷயங்களும் தெரிந்ததாகக்காணல் மிகவும் அபூர்வமே. ஒவ்வொருவருடைய மனச்சார்புக்குத் தக்கபடியே விஷயங்களைக் கிரஹிக்கும் தன்மை யுடையவர்களாகின்றார்கள். இவ்விதத்தில் தெரிந்துகொண்ட வைகளை மட்டும் உலோகோபகா ரார்த்தமாய் வெளியிட் டிருக்கின்றார்கள். எல்லா நூல்களையும் ஆராய நமது வாழ்

நாள் போதுமா? ஆனால் எல்லா நூல்களையும் நாம் கற்க வேண்டியதில்லை யென்பதும் பொருந்தாது. நீ பாலைப் பற்றிய நூல்களைப் படிக்கத் தடையுமில்லை. எல்லா நூல்களும் மானிடரின் உபயோகத்திற்காகவே ஏற்பட்டிருக்கின்றன. "நீரிற் பாலுண்குருகிற்றெரிந்து" என்றபடிக்கு நாம் அவைகளில் நமது இயல்பிற்கும் பிரயோசனத்திற்கும் இன்றியமையாதனவற்றைத் தெரிந்து கற்றுக்கொள்வது முக்கியம். "வேதநூற் பிராய நூறு மனிதர் தாம் புகுவரேனும் - பாதியு முறங்கிப் போகு நின்றது பதினையாண்டு-பேதைபா லகனதாகும் பிணி பசி மூப்புத் துன்பமாதலாற் பிறவிவேண்டே னரங்கமா னகருளானே" என்றதால் மானிடப் பிறப்பினுடைய தன்மைபொருந்தவேவெளியாகின்றது. இவ்வளவு நிர்ப்பந்தங்களைநோக்கிப் பார்க்கும்போது ஒருநூலையேனும் நிரவாராயக் காலமில்லையெனவே தெரிகின்றதல்லவா? நீ உன்னுடைய பதினாறு பிராயத்திற்குள் கற்றுக் கொண்டிருப்பவைகளையும் மேலும் கல்வி பிரியமாயிருப்பதனையும் நினைக்க நினைக்க எனக்கு வெகு சந்தோஷகரமுண்டாகின்றது. "பெருந்தடங்கட் பிறை நுதலார்க்கெல்லாம் - பொருந்து செல்வமுங் கல்வியும்பூத்தலால் வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும் விருந்துமன்றி விளைவனயாவையே." படிப்பின் நாகரீகத்தில் உயர்ந்த அனேக மேதாவிகள் தங்களுக்கு வாழ்க்கைத் துணைவிகளாகப் படிப்பறிவில்லாத ஆடுமாடுகளைப் போன்ற மூடாத்துமாக்களைக் கட்டிக்கொள்ள நேரிட்டு குளிர்க்கப்போய்ச் சேறுடிய கதைப்போல் அதில் ஏற்படவேண்டிய உற்சாக முற்றுந் துறந்து வாட்டமுற்றிருக்கின்றதனை நாம் வெகுவாய்ப் பார்க்க நேரிட்டிருக்கின்

றதே? களஞ்சி விபூதியில் ஒட்டுமா? "நற்றாமரைக் கயத்தினல்லன்னஞ் சேர்ந்தாற்போற்-கற்றாரைக் கற்றாரே காமுறுவர்-கற்பில்லா-மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் முதுகாட்டிற்-காக்கையுகக்கும் பிணம்" என்றபடி கற்றவர்களைக் கற்றவர்களும் துஷ்டர்களைத் துஷ்டர்களும் விரும்புவார்கள். ஆடவர்களும் தம்மைப்போன்ற கற்றோரிடத்திலேயே நேயம்பாராட்ட அமைந்துள்ளதைத் தவிர்த்துப் படிப்பறிவில்லாத மூடாத்துமாக்களிடம் சல்லாபிப்பது அவர்களுக்கு எட்டிக்கசப்பிலும் மேலாகவேயிருக்கும். "ஒருவர் விட்டுக்கும் ஒருவர்காட்டுக்கும்ஒருவர்மேட்டுக்கும்ஒருவர்தாவுக்கும்' என்றபடியே இல்வாழ்க்கையானது சதிபதிகளில் ஒத்துநடவாதிருக்கும். இதனால் நெரிடுந்துன்பங்களை விரித்து முடியாது. "குஞ்சியழகுங் கொடுந்தானைக் கோட்டழகு - மஞ்சளழகு மழகல்ல-நெஞ்சத்து - நல்லம்யாமென்னு நடுவுநிலைமையாற் - கல்வியழகே யழகு." இவ் வெண்பாவில் "மஞ்சளழகு" என்று செப்பியிருத்தலால் அது பெண்பாலருக் குரித்தானதென்று பெண்கல்வி விசேஷத்தைக்கொள்ளல் வேண்டும். "அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்-புறங்கடை நல்லிசையு நாட்டு-முறுங் கவலொன்-றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூஉங் கில்லை-சிற்றுயிர்க் குற்றதுணை." இதில் "சிற்றுயிர்க்கு" என இருபாலர்க்கும் பொதுப்படக் கூறினமை அறியத்தக்கதாம். ஜோடியாயுள்ள இரண்டுகண்களில் ஒன்று பொட்டையானல் எப்படி விகாரமோ அதுபோல, ஸ்திரீபூமான்களில் ஒருவர் கற்றுணர்வின்றி யிருத்தல் கோரமே. மேனியழகுமட்டு முடையவளிடத்து காமநுகர்ச்சியிற் சற்றுநேரமின்பம் ஆடவனுக் குண்டா

யிருக்கும். அதோடு அவளுக்குக் கல்வியழகும் சேர்ந் திடலாயின் நாயகனுக்கு என்றும் பரிபூரணமாய் எல்லை யில்லா ஆனந்தம். "கற்றோர்க்குக் கல்விநலனே கல னல்லான்-மற்றோரணிகலம் வேண்டாவா-முற்ற - முழு மணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே-யழகுக் கழகு செய்வார்." கற்றவாடவர் கல்வியி னருமையையே மிக வும் பாராட்டத்தக்கவர்களா யிருப்பார்கள். ஆகையால் மூடப் பெண்டிரைக் கலவிசெய்வதில் அவர்களுக்கு இன்ப மிருக்கமாட்டாது. பிணத்தோடு போராடுவது போலவே யிருக்கும்.

சிவானந்தி:—நாதா! ஸ்திரீகள் படித்தால் தம் கணவருக்கு அடங்கி நடக்கமாட்டார்களாம். பரபுருஷ ருக்கு நிருபம் வரைவார்களாம். ஸ்திரீகள் அடங்கியவர் களாய்க் கீழ்ப்படியும் சுபாவத்தைப் பெற்றவர்களாக இருக்கிறார்கள். சிலஆடவர்களுடைய விபரீத ஒழுக்கத் தால் அவர்கள் சுபாவம் மாறுபடக் காண்கின்றோம். வித்தைக்குத் தெய்வமா யிருக்கும் சரஸ்வதியாரே பெண்ணுயிருக்கப் படிப்புக்கு ஸ்திரீகள் ஏன்உரியவர்க ளாகமாட்டார்கள்? "கல்லாரேயாயினும் கற்றோரைச் சேர்ந்தொழுகின்- நல்லறிவு நாளுந்தலைப்படுவர்-தொல் சிறப்பின்-ஒண்ணிறப்பாதிரிப்பூச் சேர்தலாற் புத் தோடு - தண்ணீர்க்குத் தான்பயந்தாங்கு" என்றபடி யான் தங்களைச் சேர்ந்திருக்கும் இன்ப முடையேன்.

சிவானந்தன்:—அடி பிரியை! புருஷர் நல்ல நடத் தையுடையவராயிருந்தால் அவர்களுடைய மனைவியரும் அதனை கவனித்துத் தக்கபடி நடந்துகொள்ளப் பழகி விடுகின்றார்கள். மனைவியரைப் புருஷர்கொண்டு நடத் தும் விதத்தால் அவர்கள் நல்லகாலட்சேபம் செய்யக்

கூடியவர்களாயும் ஆவார்கள். பெண்கள் எப்போதும் கல்விக்குரியவர்கள் என்பதில் யாதொரு ஆட்சேபனையு மில்லை. சாமானிய நிலையிலுள்ள ஸ்திரீகளும் சாதாரணப் பேச்சுகளினூடே கற்றோர் வியக்கும்படிக்கும் அவர்கள் புத்தியில் அதிக அனுபவம் படும்படிக்குமுள்ள பழமொழிகளை வழங்கிவரும் சுபாவ முடையவர்களா யிருக்கின்றார்கள். அப்பழமொழிகள் எதுகையுடனும் மோனையுடனும் கட்டழகுற விளங்குகின்றன. இதனால் ஸ்திரீகள் தொன்றுதொட்டுக் கல்விக்குரியவர்களா யிருந்தவர்க ளென்று யூகிக்க நியாய முண்டாகின்றது. ஔவையார் பழமொழி என்றால் அதனை இந்நாளும் எப்பெரிய ஆடவரும் பேணி வருகின்றனரே. ஆகாரம் சாப்பிடும்போது அதுதொண்டையிற் சிக்குற்றடைத்து ஒருவன் மரிக்க நேரிட்ட காரணத்தைக் குறித்து மற்றவர்களும் ஆகாரம் சாப்பிடக்கூடாதென்று அதைவெறுத்திருந்திடுவார்களோ? அதுபோல யாரோ ஒருஸ்திரீ பரபுருஷனுக்கு நிருபம் விடுக்க நேரிட்டால் அப்படியே எல்லாரும் செய்வார்களென நினைப்பது என்ன நியாயம்? நிருபமூலமாகத் தான் ஸ்திரீகள் அந்நியபுருஷரை விரும்பும்படிக்கான மார்க்கம் ஏற்பட்டிருக்கின்றதோ? வீட்டைக் கொளுத்தின அக்கினியென்றும் பழிக்கொலைக் கேதுவான ஆயுதங்களென்றும் அவைகளைநாம் உபயோகித்துப் பயனடையத் தவிர்கின்றோமா? தமயந்தி, சீதை, சந்திரமதி, உருக்குமணி, சாவித்திரி முதலான ஸ்திரீரத்தினங்கள் படிப்பின்கரைகண்டு அழியாப் பெரும்புகழை உலகில் நிறுத்தி இருக்கின்றார்களன்றோ? ஔவையார், காரைக்காலம்மையார், ஆண்டாள் இவர்கள் கழறிய

நூல்களைக் காளையர் கற்றிருந்தும் பெண்கல்வி கூடாதெனப்பேசமுன்வருவதென்பயன்? கல்விப்பயிற்சியும் விவகாரஞானமு மில்லாமல் அனேக மாதர்கள்பூஸ்திதியுடனாவது செல்வத்துடனாவது இருந்தால் அவர்களைச் சிலர் திருட்டுத்தனமான உபாயங்களினால் நயவஞ்சக வார்த்தைகள் பேசியும் அவர்களை ஏமாற்றியும் சொத்துக்களை வாயிற் போட்டுக்கொள்ளுகிறார்கள். அல்லது வியர்த்தமான வியாச்சியச் செலவுகளிற் கொணர்ந்து நுழைத்து விடுகிறார்கள். இப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் மாதர்களுக்குத் தங்களுடைய சொந்த விவகாரங்களை நடத்திக்கொள்ளும் சக்தி யிருக்குமானால் மேலே சொன்னபடி பணத்தை விரயமாக்காமலும் வஞ்சனைக்காரரின் ஏமாற்றலுக்கு உட்படாமலும் தம் காரியங்களைக் கவனிக்க இடமிருக்குமல்லவா? கற்றவள் தன் மாமி முதலிய முதியோர்களின் மரியாதைகளைக் கைதவறவிடாள். தேகத்தையும், ஆடையையும், போஜனத்தையும், வீட்டையும் சுத்தமாய் வைத்துக்கொள்வள். தன்னுடைய பிள்ளைக்கு இளமைப் பிராயத்திலேயே கல்வி அறிவு ஒழுக்கங்களைப் பதிவித்து விடுவாள். நீதி நூலினும் காவியத்திலும் பாகசாஸ்திரத்திலும் கணித நூலிலும் வைத்திய நூலிலும் கைத்தொழிலாதி சாஸ்திரங்களிலும் உள்ளவைகளை ஆராய்ந்து வெகுபிரயோஜன முள்ளவ ளாவாள். இன்னவள் தரும்பயனை விஸ்தரிக்கலாகுமா? கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியையும் ருசிப்பள். "கார்யே ஷுதாஸிகருணேஷு மந்த்ரி-ரூபேஷுலட்ச்மி க்ஷமயாதரித்ரி - ப்ரியேஷு மாதா ஸயநேஷு வேஸ்வா-ஷட்கர்மநாரி குலதர்ம பத்நி".

சிவானந்தி:—ஆம்நாதா! "அன்னைதனையும் அடியாள் பணிவிடையும்-பொன்னினழகும் புவிப்பொறையும்-வன்னமுலை-வேசிதுயிலும் விறன்மந்திரி மதியும்-பேசி லிவையுடையாள் பெண்" என்றும், "கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவாள்-உட்குடையாள் ஊர்நாண் இயல்பினள்-உட்கி—இடனறிந்து ஊடி இனிதின் உணரும்-மடமொழிமாதராள் பெண்" என்றும் ஏற்பட்டிருக்கின்றன. ஸ்திரீகள் அரைகுறைப் படிப்பினாலே தான் யதார்த்த அறிவைப் பெறாமல் உள்ளந் தடுமாறிப் போகின்றார்கள். அவர்கள் அந்த உபாயப் படிப்பைக் கொண்டு கெட்டபுஸ்தகங்களைச் சாவகாச தோஷத்தால் வாங்கிப்படிக்கின்றார்கள். அப்புஸ்தகங்களில் மதுரைவீரன் பொம்மியம்மாளைத் தூக்கிப்போனான் என்றவிதங்களான பலவெகு ஒழுங்கீனங்களெல்லாம் நினைத்த நினைத்தபடி எழுதப்பட்டுக் கிடக்கின்றன. அவைகளைச் சரியான படிப்பைப் பெறாத இளம் பெண்கள் புஸ்தகமென்றமட்டில் நன்மையைப் போற் கருதிவாங்கிச் சதாஉல்லாசமாகப் படிக்க நேரிட்டு விடுகின்றமையால் அவர்களுடையமெல்லிய சித்தமானது அவைகளிற் சொல்லப்பட்ட விஷயங்களிற் படிந்து கெட்டுப் போகின்றது. மறுபடி, முறையாய்ப் படித்துத் தெளிந்த அறிவிற் சிறந்தமாதர்கள் ஒருகாலும் கோணல் வழிகளிற் பிரவேசிக்க மாட்டார்கள்.

சிவானந்தன்:—அன்புடையாளே! நீ சொல்வது சரியானதே. நல்லபெண்களிடத்திற் கெட்டஸ்திரீகள் கூட்டுறவால்தான் அனேகமா யிப்படிக் கெட்டுப்போகக் காரணம் ஏற்படுகின்றது. கெட்ட ஸ்திரீகள் தாங்கள் நாடகங்களிற் கேட்ட காமப்பாடல்களை எப்போதும்

தியானித்துப் பாடிக்கொண்டிருக்கின்றார்கள். காமப் பாடல்கள் அடங்கிய புஸ்தகங்களையும் வைத்து இராகம் போட்டுப்பாடி அவைகளின் வசப்பட்டு உருக்குகின் றார்கள். இத்தகைய கூத்தாடிப் பெண்களுடைய சேர்க்கையைப் பெற்ற குற்றமற்ற ஒருத்தி அவர்களின் மனமுருக்கும் இராகங்களினுடைய அயோக்கியமான பாடல்களைக்கேட்டு அவைகளில் அடங்கியுள்ள வார்த் தைகளின் காமம் கிளப்பும் பொருள்களால் தனது உண்மைநிலை குலைந்து அனலிடு மெழுகுபோல் மனம் உருகிஅந்தத் துராகிருதப் பெண்களைப்போலத் தா னும் அவ்வாறு ஒழுகத்துணிந்து விடுகின்றாள். பின் அவளும் மற்றவர்களோடு சேர்ந்து ஷோக் ஷோக் என்பதாக எப்போதும் பாட்டும்கூட்டுமாய்த் தன்னையும் மறந்து கிடைக்கரும் பேரானந்த முற்றவள்போல் உல் லாசமாய்த்திரியத்தொடங்குகின்றனள். இராகமயக்கத் திற்சென்று வலையிற்பட்டுக்கெடும் மானுதிகளைப் போல அந்த ஆனசாரப் பெண்களின் மார்க்கத்தை அநு சரித்த பேதை ஒருகாலும் திரும்பி நல்வழிக்கு வரமாட்டாள். காய்ந்தஇரும்பு உண்டநீரை திரும் பப் பெறலாகுமா? அவள்பிறர் தூற்றுக்கும் பின்கூற் றுக்கும் கூடஅஞ்சாத நெஞ்சுபடைத்தவளாய்த் தேறி விடுகிறாள். எப்போதும் குலப்பெண்களுக்கு நாணங் கெட்ட தாசிவேசையரின் வாடைகூடப் படக்கூடாது. பன்றியுடன்கூடிய கன்றும் நரகலைத்தின்னு மன்றோ? "இணக்கமறிந் திணங்கு." "தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற தீயார்சொற் கேட்பதுவுந்தீதே-தீயார் குணங்களுரைப்பதுவுந் தீதே யவரோ டிணங்கிஇருப் பதுவுந் தீது". ஸங்கீதமும் சாஹித்யமும் பேரின்பத் திற்கு எப்படி வழிகாட்டிகளோ அதுபோலவே சிற்

றின்பத்திற்கும் அவைகள் துணைக் கருவிகள். அவைகளை அறிந்து உபயோகிப்பவர்களுக்குத் தகுந்தபடி பிரயோசனம் தருகின்றன.

சிவானந்தி:—நாதா! தாங்கள் செப்பியவைகள் செவ்விதே. ஆனால் நாடகம்பார்ப்பதிற் கெடுதியா? அதில்தான் புண்ணிய சரித்திரங்களும் படிப்பினைக்கான உத்தமச்செயல்களும் பிரத்தியட்சமாய் நடித்துக் காட்டி யாவர்க்கும் நல்லறிவு விளைக்கக் கூடியதாயிருக்கிறதே?

சிவானந்தன்:—பெண்மணீ! நீ அதிபால்யையான படியினாலே உனக்கினி வரவரத்தான் மற்ற அநுபவங்கள் தெரியவரும். நாடகத்தில் நல்லறிவு உண்டாகிக்கொண்டிருந்த காலமெல்லாம் போயிற்று. இப்போதுள்ளவர்கள் நாடகத்தினது உண்மையான தன்மையைக் கைப்பற்றுவதில்லை. நாடக அவயவிகள் காமன் அனுப்பிய தூதுவர்போல் சிற்றின்பத்தையே எங்கும் பரவ விடுகின்றார்கள். இதனை விரிக்கிற் பெருகும். யோக்கியத்தை விரும்பிய பெண்கள் நாடகம் பார்கப் போகிறதும், ஆறு குளம்முதலான பகிரங்க விடங்களுக்கு ஸ்நானத்திற்குப் போகிறதும், திருவிழாபார்க்கவென்று போகிறதும், நினைத்தபடி அயல்வீடுகளிற் போய்த் திரிகிறதும், தனிவழி போகிறதும் கூடாதவைகள்.

சிவானந்தி:— நாதா! தாங்கள் சொன்னவெல்லாம் எனக்குத் திருப்திகரமே. நமது சுந்தரம்பிள்ளை வீட்டில் வந்திருந்த நாடக மாது ஒருத்தி என்னிடம் ஒருநாள் வந்திருந்தனள். அவள் சிறுத்தொண்ட நாயனார் நாடகத்தின் பாடல்களைத் திவ்யமாய்ப் பாடினாள்.

நான் அப்படியே உருகிவிட்டேன். அதுமுதல் எனக்கும் ஒருசமயம்நாடகம்பார்க்கக் கிடைக்குமோவென்று எண்ணமிட்டல்லவா இருந்தேன்.

சிவானந்தன்:— அடிபிரியை! உன்னைப்போல மன அழுக்கு இல்லாத விதரணை யுடையவர்கள் நாடகம் பார்க்கலாம்தான். என்றாலும் விஷத்தோடுபழகி வருதலைப்போலவே அஃதாகும். அதில்நேரும் விபரீதங்களை மேலோர் அறிந்தே இருக்கிறார்கள். நாடகத்தில் ஸ்திரீகள் தங்கள் ஆடவர்களைப் பிரிந்து தங்களுக்கெனப் பிரத்தியேகமாக அமைக்கப்பட் டிருக்கும் ஓர் பக்கத்தில் தங்குகிறார்கள்: அவ்விடத்தில் யோக்கியமான ஒரு ஸ்திரீயைக் காணுதல் குதிரைக்கொம்பு. வேசையரும் அடக்குவாரற்ற பலமாதர்கள் கூட்டமு மாகவேதான் அதில் நிறைந் திருப்பார்கள். நாடகமேடையிற் கூத்தர்செய்யும் நடை யுடை பாவனைகளைப் பார்த்தும் அவர்களின் காமக் குரோதமான பாடல்களைக் கேட்டும் எவ்வளவோ கற்புடைய ஸ்திரீக ளெல்லாரும் தங்கள் சித்தம் தடுமாறிக் கெட்டலைந்து போயிருக்கிறார்கள். எரியுந் தழலுக்கு நெய்வார்த்தது போலத் துராசாரப் பெண்கள் கூடியவிடத்தில், அவர்கள் அடிக்கடி கூத்தாடும் அழகிய வாலிபரைப் பற்றியும் அவர்களின் அபிநயங்களைப் பற்றியும் துன்மார்க்கப் புகழ்களுடன் தங்கள் ஆசைக்குறிகளையும் கிளப்பிக்கொண்டேயிருப்பர்கள். தங்களொருவருக்கொருவர் வெட்கம்சிறிதுமின்றிக் கூத்தரைப்பற்றிக் கற்பு நிலைக்குமாறான சம்பாஷணை செய்வார்கள். கூத்தர்களுடைய செய்கைகளைப்பற்றிச் சொல்லவேண்டிய தில்லை. அவர்கள் வெளிவேஷமாய் விபூதி உருத்திராக்க முதலியவைகளை அணிந்

திருக்கிறார்கள். அவைகளால் தாங்கள் அழகுறவிளங்கு வதை விரும்புவார்கள். என்றுங் குடிவெறியும் காம வெறியுங் கொண்டுமே நாடகத்துநடிக்க வருவர். நாட கத்து நடிக்கவரும் வேளைமேல் தங்கள் மனத்துள்ள ஆசையைக்காட்டுவார்கள். கூத்தியும் குத்தியுந்தங்கள் கண்பார்வைக் கெதிர்ப்பட் டிருந்தால்தான் அவர்களில் அனேகருக்கு நாடகம் நன்றாய் ஆடமுடியும். இவ்வித மதிகெட்ட கூத்தைப் பெருந் தன்மையும் யோக்கிய தையு முடையோர் கனவிலுங்கூடச் சிந்தியார். இஃ தொரு சங்கதி யுண்மையாய் நடந்ததைக் கூறுகிறேன். ஒருவேசையின் புத்திரி தனவந்த னொருவனுக்குட் பட்டு இருவரும் ஒருவர்பேரி லொருவர் வைத்த அன் பின் மிகுதியால் இரதியும்மதனும்போலக் கூடிக்குலாவி வாழ்ந்திருக்கும்போது அவளுடைய நேசன் ஏதோ காரியார்த்தமாய் வெளியே போயிருந்தான். அந்தச் சமயத்தில் அவளுடன் பாலிய முதல் நேசித்துவந்தவ னன வீணைவாத்தியத்தில் தேர்ச்சியடைந்த வொரு வன் அவளிடம்வந்து பெண்கொடியே! வெகுகாலமாக உன்னுடைய காமவின்பத்தை யனுபவிக்கத் தவஞ் செய்துகொண் டிருக்கின்றேனே! இப்படி என்னை மற ந்துவிட்டாயே! நான் என்னசெய்வேன்! என்று பலவா று தாவந்தங்களை எடுத்துரையாடி வேண்டிக் கொண்ட போது, அவள் அவைகளைச் சிறிதும் லட்சியம் செய் யாமலிருந்தனள். அவன் அங்கு கூடத்திலிருந்த வீணை யை யெடுத்து வாசித்துக்கொண்டு "சொந்தமுள்ள கண்மணியே என்சோகம்தீரக் கலவியின்பந் தாராயோ" என்று பாடித் திவ்ய கான வருஷம் பொழிவதானன். அதனைக் கேட்டுக்கொண்டிருந்த பெண்ணனவள் வர வர மேலோங்கி வளர்ந்த காமவெம்மையால் வருந்திச்

சகிக்கக்கூடாமல் நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்பவைகளைத் துறந்து தன்செயலையே முற்றுமறந்தவளாகி வீணைவாசித்துக்கொண் டிருந்தவன் பக்கலில் வந்து அவன்பேரிற் சாய்ந்து அவனைத்தன் கைகளாற் கட்டிக்கொண்டனள். இவ்விதம் இந்த ஸங்கீதம் இவளுடைய ஓர்மையைக் குலைத் தழித்ததென்றால் ஐம்புலன்களையும் ஒருங்கே கவரவல்ல நாடகத்தினால் எவ்வளவோ தீங்குகள் விளையுமென்பதைக் கேட்கவும் வேண்டுமோ?

சிவானந்தி:—இது என்னநாதா! தாங்கள்சொல்லுகிறதைக்கேட்க என் னுடம்பெல்லாம் நடுங்குகின்றதே நான் எப்போதும் வீணையிலேயே காலம் போக்கக் கூடியவளா யிருக்கின்றேனே!

சிவானந்தன்:—அடிபிரியே! (அவளை அணைத்துக் கொண்டான்) இஃதென்ன உனக்கு நேர்ந்த விபரீதம்? நீ ஏதுக்கு அஞ்சிச்சோம்ப வேண்டும்? "எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினுமப் பொருண் மெய்ப் பொருள் காண்பதறிவு". ஸங்கீத மென்றால் எல்லாம் ஸங்கீதமா? "கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ" மானிடர் ஒன்றுபோலத் தோற்றப்பட் டிருந்தாலும் அவர்களிற் குணமன்றோ விசேஷமாக் கொள்ளத் தக்கது? இப்போது நம்மவரில் எவ்வளவோ பெண் மணிக ளெல்லாரும் வீணையில் தேறிப் புகழவிருக்கவில்லையா? உன்னுடைய ஞானமும் படிப்பும் அவைக்கேற்ற ஒழுக்கமும் எவ்வளவோ விசேஷமாக வன்றோ இருக்கின்றன? ஸங்கீதமில்லை யெனில் வேதங்களுக்கும் மகிமை யேது? நீ பாடி வாசிக்கும் தியாகையரவர்கள் முதலினோர் அரியகீர்த்தனங்களும் தேவாரம் திரு

வாசகம் முதலியனவும் பக்தியில்லாக் கல்நெஞ்சையும் இளகச்செய்து என்றும் பேரின்பத்தை நாடச்செய்கின்றனவே? இக்கலியில் நாமஸங் கீர்த்தனத்தை விட்டால் உயிர்கள் எவ்வாறு இலகுவில் அரனது திருவடிக்காளாகும்? ஒருவன் தனது இறுதிகாலத்தில் என்னமுடிவுரை சொன்னான் என்பதை உலகத்தோர் முக்கியமாய்க் கவனித்துக் கேட்டுக் கொள்வது வழக்கம். அப்படி யிருக்க, இசைமுழுது மெய்யறிவு மிடங் கொள்ளுநிலை பெருக வந்தவதரித்த ஸ்ரீ சம்பந்தசுவாமிகள் கடைசியி லுயிர்கட் குறுதிப் பொருளாய் அருளியதென்ன வென்பதை முக்கியமாய்த் தெரியக் கடமைப் பட்டுள்ளோம். அந்தஒப்பற்ற தென்னவெனில். "அரனுமமே சூழ்க" வென்பதாம். ஆதலின் நாமஸங்கீர்த்தனத்தை அனைவரும் செய்து சிவனருள் பெறவேண்டுமென்பது தெற்றெென விளங்கவில்லையா? சரியை கிரியை யோகம் என்பவைகளுக்கு மேலானபதம் ஞானமென்பது. இத்தகைய ஞான சம்பந்தம் துலங்க "ஸங்கீத ஞானம்" என்று பெரியோர் அபிப்பிராயங்கொண்டு வழங்கிவருகின்றனர். பட்டணமென்பது பொதுவாஞலும் சென்னைக்கே வழங்கப் படுகின்றது. புருஷனென்பது பொதுப்பெயராஞலும் அது பஞ்சேந்திரியங்களையும் அடக்கியாளுந் திறமை யுடையவனுக்கே கொள்ளத்தக்க தாகின்றது. இவைபோல ஞான மென்பதையும் ஸங்கீத ஞானத்துக்கே சிறப்பாயும் பாராட்டத் தக்கதா யிருக்கின்றது. நாலாம்பதமாகிய ஞானமானது ஸங்கீதத்தாற் சுலபமா யடையக் கூடிய தென்னும் அநுபவத்தை மஹான்கள் தேர்ந் திருக்கின்றார்கள். நாரதாதி முனிவர்க ளிதற்குச் சான்றுவார்கள். இஃதன்றி, நாதப் பிரஹ்மம் என்னும் வழக்கும் உண்டு.

"அலையுமனத்தை யகத்தடக்கு மவனே சரியை முடிந்தோனும் - அலையு மனத்தை யகத் தடக்கு மவனே கிரியை கடந்தோனும்-அலையு மனத்தை யகத் தடக்கு மவனே யோகதற்பரனும்- அலையு மனத்தை யகத் தடக்கு மவனே ஞானியதிசூரன்" என்று ஏற்பட்டதற்கிணங்கச் சிரமத்தால் யோகம் பயின்று மனத்தை யடக்க முயலுகின்றார்கள். இவர்கள் பூர்வ புண்ணிய மற்றவர்க ளென்பது இம்முயற்சியில் இவர்கள் படும் பாடுகளும் அபாயங்களுமே நன்றாய்க் காட்டுகின்றன. பூர்வத்திற் சிவபிரானுக்குத் தேன்பால் அபிஷேகஞ் செய்த புண்ணிய பலத்தால் இந்த ஜென்மத்தில் ஸங்கீத ஞானத்தை லகுவி லடைந்த மகத்துக்களுக்கு மனத்தை யடக்கிச் சுகநிலைகாணல் சர்வ சாதாரணமே யாம். "பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை பெறாப் பேதை யறிவளோ பேரானந்த முற்றவர்க்கே கண்ணீர் கம்பலையுண்டாகு - முறாதவரே கன்னெஞ்ச முடையராவார்" என்றபடிக்கு, ஸங்கீதத்தால் மனமடங்கு முண்மை அநுபவம் மேலோர்க்கே தெரியவரும். ஸங்கீத ஞானமில்லா வன் னெஞ்சருக்கு இது விளங்கவே மாட்டாது. "கன்னலங் கனிந்தபாடற் காயகனல்லனே னு-மின்னிசை கேட்டுநெஞ்ச மிளகிடா திருப்பன் வஞ்ச-மன்னவர் துரோகமாதி மாபாவஞ் செய்யத் தக்கா-னன்னவன் றனை நம்பாம லகற்றிடவேண்டு மன்றே".

"The man that hath no
music in himself,
Nor is not moved with
concord of sweet sounds,
Is fit for treasons, stratagems and spoils:

The motions of his spirit
are dull as night,
And his affections dark
as Erebus;
Let no such man
be trusted".

என்றும் ஆங்கிலக் கவி சிரேஷ்டராகிய (Shakespeare) பெரியோர் அபிப்ராயங்க ளுண்டாயிருக்கின்றன. "பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்", "ஆடுகின் றிலை கூத்துடையான் கழற் கன்பிலை யென்புருகிப்பாடு கின்றில்லை", "பாட்டுக்கோ வன்பினுக்கோ பத்திக்கோ வன்பர்தங்க ளீட்டுக்கெல்லாங் குறுகி நின்றாய் பரா பரமே" என்ற புண்ணிய மூர்த்திகளின் திருவாக்கியங்க ளுக்குப் பொருந்தப் பரமனையே கானஞ்செய் துய்யற் பாலதாம். இவ்விதம் பக்தி மார்க்கமே நித்ய சாஸ்வத மென்பதை யாவரே மறுக்கக் கூடும்? இதனை யொழி த்து மனவாக்குக் கெட்டாத பிரஹ்மத்தைப் பற்றியும் மாயையைப் பற்றியும் உலக விகற்பங்களைப் பற்றியும் காரணமறியவும் பிறரிடம்வாய்மதம் பேசவும் திரிந்து அரிய அற்பவாழ்நாளைக் கடத்துவதிற் பயன்யாது? நரி வாலைக்கொண்டு கடலாழம் பார்ப்பதுபோல, அத்தகைய பெரிய விஷயங்களில் உழன்றயர்வதினும் பரமனையே பாடியும், "அன்பர்பணி செய்யவெனை யாளாக்கிவிட்டு விட்டா—லின்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" என்றபடி பாடுவாரைப் பேணியும் இருக்கு மார்க்கமே சிவத்தை யடையும் இலாக்கிய முடையதாம். கனிவிருட் சத்தின் நிழலிலிருந்துகொண் டிருப்பவனுக்கு நிச்சய மாய் அதினின்றும் விழும்பழம் கிடைக்காமற்போமா?

அதுபோலும் பக்தி மார்க்கத்திலிருப்போருக்குப் பரம சுகம் தானே கிடைக்காமற் போவதில்லை. "கைத்தலத் தவுய்த்துச் சொரிந்திட்டரிப் பரித்தாங் கெய்த்துப் பொருள் செய்திடல்" என்றபடி, கையிற் கிடைத்த மெய்ப் பொருளாம் பக்தி மார்க்கத்தை விட்டு வேறேதோ வுளதாக மயங்கிக் கோமணாண்டியாய்க் கண்மூடிக்காண முயல்வது நித்திரைசுகத்தைத் தவிரப் பலிப்ப தொன்றில்லை. இது அரசனைநம்பிப் புருஷனைக் கைவிட்டவள் கதைபோலாகும். சமுத்திரத்தைப் படவின் ஏதுவாற் கடப்பதன்றி ஒரேவாக்கி லொருவன் அதைத் தாண்டிக் கரைசேர முடியுமா? தம்முடைய அறிவுஅற்பம் என்பதனை உணரும்வன்மை யில்லாதவர்களோ அரிய பெரிய விஷயங்களை ஆராயக் கூடியவராவர்? தெய்வத்தன்மை யுடைய பேரறிவாளர் உயிர்கள் கடைத்தேறக் கருணை கொண்டு பொல்லாங்கிலாத மார்க்கத்தை உள்ளங்கை நெல்லிபோலும் காட்டியுள்ளார்கள். "ஸக்கநி ராஜமார்க்கமு" என்று கான மூர்த்தியாய் அவதரித்திருந்த தியாகையரவர்கள் கீர்த்தனரூபமாகக் கற்பித் திருக்கின்றார்கள். ஸத்ய பலம் ஸங்கீதமே யாகும். இப்பக்திமார்க்கத்தை யனேகம் ஸ்திரீகளும் அந்நாளிற் கையாண்டு பலன்பெற்று வந்திருக்கும் விதங்களை நீயறியாதவளோ? விச்சாவதியையும் பாணப் பத்தர் மனைவியையும் பற்றிய சரித்திரங்களை நீ முன் செப்பக் கேட்டிருக்கின்றேன். சிவபெருமானுக்குரித்தான சத்து சித்து ஆனந்தம் என்னு மூன்றில் விசேஷம்பெற்ற ஆனந்தத்தி னின்றும் ஸங்கீதம் உண்டானதெனப்படும். ஆனந்தமில்லாத சங்கீத மில்லை. ஸங்கீதமில்லாத ஆனந்தமுமில்லை. இதனை உலகாநுபவத்திலுங் காணலாம். ஒருவனுக்கு ஸந்தோஷமுண்டானகாலத்து

அவன் தன்னை அறியாமலே பாடுகிறான். ஸங்கீத வழி தெரியாதவனா யிருந்தாலும் தப்பாகவேனும் ஏதோ ஒரு இராகத்தை இழுத்தே தீருவான். (இதனை இசை தெரிந்தோர் அநுபவப் பட்டுப் பரிகசித்து வருகிறார் கள்). மனைகளிற் ஸந்தோஷ முண்டான காலத்தும் ஸங்கித கோஷமுண்டாயிருக்கும். ஸங்கீதமானது என்றும் ஆனந்தத்தைத்தர வல்லதாகலின் அரசர் மாளிகைகளி லும் தெய்வ ஸ்தலங்களிலும் அநுசரிக்கப்பட்டு வருகிறது. இவ்வநுசரிப்பால் எல்லா மங்களங்களும் உண்டா யிருக்கின்றன. சுருதி இலயத்துடன் கானம் நடப்பது எந்தவிடமாறுலும் அவ்விடத்தில் மும்மூர்த்திகளும் தம்பரிவாரங்க ளுடன் வந்திருப்பரெனப் பெரியோர் சொல்வர். உலகில் காற்று இரைவது கடல் கோஷிப்பது முதலிய யாவும் நாதமயமேயாம். பலவாற்றானும் உலகானது நாதமய மாகவே விளங்கி யிருக்கிறது. இவ்வித நாதமயத்தி லிருந்து தெளிந்ததே சுநாதமாய்க் கானத்துக் குபயோக மாகின்றது. அது நீர்நிலையில் அடியில் உறைந்த மண்டியைத் தவிர்த்து மேலே தெளிய நின்றதை உலகோர் கொள்ளுமாறு போலவாம். ஒருநதியினுடைய உற்பத்தி தொடங்கி அது கடலினிடத்துச் சங்கமமாகும்வரை யுள்ளபற்பல ஒலி வேற்றுமைகளைத் தொடர்ந்து ஆங்கிலேயர் அவர்களுடைய ஸங்கீத லட்சணப் படிக்குக் காட்டியிருக்கும் அருமை மிகவும்பாராட்டத்தக்கது. இதனால் உலகத்தில் ஏற்பட்ட எவ்விதமான ஒலியையும் ஸங்கீதத்திற்குப் பொருந்தச் செய்து ஒருவாற்றாற் சிறப்பக் காட்டலாமென் றேற்படுகிறது. பட்சிக ளிடத்திலும் பூச்சிகளிடத்திலும் இனிமையான வேறுபல ஸ்வரங்கள் அற்புதமா யுண்டாயிருக்கின்றன. வானம்பாடிக் குருவி

பாடுங்காற் கவனித்தால், மனிதனுக்குப் பாடுவதற்கு எத்தனை ஸ்வரங்கள் தேவையோ அவ்வளவு ஸ்வரங்களும் அப்பாட்டில் அமைந் திருப்பதாய் அறிந்து கொள்ளலாம். இவ்விதமாய் ஸ்வரங்க ளெல்லாம் அமையப் பாடும் பறவைகள் அனேகமுண்டு. ஓர்தேசத்தில் கின்னரப் பூச்சி யென்னு மோர்வகை ஜெந்துக்களை யவற்றின் இனிய பாடலை உத்தேசித்து அபிமானத்துடன்வளர்த்துவருவதாகக்கேள்விப்பட்டிருக்கிறேன். மழைகாலத்தில் நம் நாட்டில் சில்லுவண்டு எனபதான தொன்றுநீண்டரீங்காரத்தொனி,(தித்தியானது பாட்டுக் கிசையச் சுருதி கொடுக்கும்;வாறேபோல்) விடாது இன்பமாய் இசைத்திருக்கக் காண்கின்றோ மன்றோ? பட்சியானதுதானேபாடித் தன்னை ஆனந்தப்படுத்திக்கொள்வதுமல்லாமல் அப்பாட்டைக் கேட்கும்மற்றவர்களையும் ஆனந்திக்கச் செய்கின்றது. பட்சியின் பாட்டுக்குச் சாஹித்யம் சேர்ந்து இன்பம் உண்டா யிருப்பதாயில்லை. இதனாற் சொல் தவிர்ந்த நாத மட்டுமே இன்பந்தரப் போதுமான தெனக் காண்கின்றோம்.சொல்லோ அதின் பொருளைத் தெரிந்தவருக்குமட்டும் இரசமுண்டாக்குகின்றது. நாதமோ, பசு பாம்பாதி தாழ்ந்த ஜெந்துக்களுக்கும் பிரியத்தைக் கொடுக்கிறது. சொல்லுக்கு முதற்காரணமா யிருப்பது ஒலியே. "மொழி முதற் காரணமா மாணுத்திர ளொலி யெழுத்து". "வெவ்வேறெழுத்தொலியாய் வரல்" என்பனவற்றால் அதுவிளங்குகின்றது. ஒலியானது ஈஸ்வராம்ஸமான ஆகாயத்தினிடத்தில் ஜெனிக்கின்றது. ("ஸத்யோஜாதாதி பஞ்சவத்ரஜ ஸரிகமபத நிவாஸப்தஸ்வர" என்று பரமசிவனுடைய ஸத்யோஜா தாதி முகங்களி லிருந்தும் ஸ்வரங்கள் உற்பவித்ததாய்க் கூறப்பட் டிருக்கிறது).

சொல்லேக்காட்டிலும் இப்போது ஒலிமேலானதென்று தெரிகிறோம். அதனாற்றான் "ஸங்கீத ஸாஹித்யம்" என்று ஆன்றோர் முறையின் வைத்துப் பேசவமைந்திருக்கின்றது. இந்த ஸங்கீதமும் ஸாஹித்யமும் ஸ்ரீ சரஸ்வதி யாருக்குள்ள இரண்டு குயங்களென்று ஏற்பட்டிருக்கின்றன. இவ்விரண்டு குயங்களில் ஸங்கீதமாகின்றகுயம் வலப்புறத்துள்ளதால் அது ஸாஹித்யத்தினும் சிலாக்கியம் பொருந்தியதெனக் கருத இடமாகின்றது. "சொல்லிறந்தவிடம் சுகம்" என்றபடிக்குச் சொல்லற்று விளங்கும் வெறும் நாதமயமே சுகமெனல் பொருந்தும். சொல்லா லாகிய பாடலின் மூலத்தை நோக்கின் அதுவும் சொல்லற்ற இராகமயமாகவே, சுகந்திகழ வருகின்றது. இராகங்களை வரையறுக்குங் காரணமாகவே ஸ்வரங்கள் பின்தேவையாயின. இராகங்களோ அனந்தம். அவைகளில் ஒருஇராகத்தை இவ்வளவுதான் பாடலாம் வாசிக்கலாம் என்று முடிவுகண்டவர் இதுகாறுந் தென்படவில்லை. இவ்விதாதிகளை நினைக்க நினைக்கப் பெரும் வியப்பே யாகின்றது. நாதமற்றபோது வேதமே வீரியமற்ற தாகின்றது. மற்றவைகளைப்பற்றிக் கூறுவ தென்னோ? இவ்விதத் தெய்வீக ஸங்கீதசம்பத்தை யுடைய கட்டழகியை யென்றும் என்பக்கத்தே வைத்து முத்தாடி யின்புறும்படியமைந்த வெனது அதிஷ்டத்தை யென்சொல்வேன்? ஒருஸட்ஜமம் மற்றொரு ஸட்ஜமத்துடன் சேரும்போதும், ஸட்ஜமத்துடன் பஞ்சமம் சேரும்போதும் எவ்வளவு இன்பம் ஜனிக்கின்றது? அஃதென்ன காரணத்தினு லென்பது தெரியவில்லை. தந்தியானது ஒழுங்கின் முறையில் ஆகாயத்தை அதிரச் செய்வதிலிருந்து நுட்பமாய் ஆங்கிலேயர் ஒவ்வொரு ஸ்வரங்க

ளுக்கு முள்ள தாரதம்மி யங்களைக் கணக்கிட் டிருக்கின் றார்களென்றாலும், மேற்கூறப்பட்ட விதமான சுகம் ஜெனிப்பதின் தத்துவம் ஆராய்தற்கிடமா யிருக்கின் றது. ஒவ்வோர் ஸ்வரத்தோடு மற்றஸ்வரங்கள் சேரின் கூடிய வொற்றுமை யுண்டா யிருப்பதேனும், யின்னும் சில ஸ்வரங்கள் சேருவதில் கேட்க விகாரமாயிருக் கின்றன. எல்லாமத வாதிகளுக்கும் பொருத்தமாய் நாயனாரவர்கள் குறள் இபற்றி யிருக்கின்றார்களென்பது சரதமன்றோ? "செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச் செல்வஞ் செல்வத்துளெல்லாந் தலை" என்றார்கள். நாதப்ரம்ம வாதிகள் "செவிச்செல்வம்" என்றதைக் கான மென்கின்றார்கள். நாயனாரவர்களுடன் பிறந்தார் களானமையால் ஔவைப் பாட்டியாரும் அ ற் கொத்து "கேள்வி முயல்" என்றார்கள். அஃதாவது நல்லகானம் கேட்க முயற்சி செய்யென் றாகின்றது. இதனால்கெட்டகானம் அதாவது அபஸ்வரங்களோடுங் கூடியது கேட்கலாகாதென்றாகிறது. அதனைக்கேட்போ ருக்கு அசௌக்கியமும் அமங்கலமும் தரித்திரமும் உண்டாகின்றன. இதனைக் கவனிக்காமல் அனேகர் சுபகாலங்களில் அபசுர வாத்தியங்களைக் கையாண்டு வருகின்றார்கள். முக்கியமாய் அனேகம் தேவஸ்தானங் களில் அபசுரவாத்தியோபசாரணை சுவாமிக்கு உண்டா யிருக்கிறது. ஆலயத்தி லமர்ந்துள்ள கடவுளுடைய அருமையைத் தெரியாதவர்களைப் போலவே தெய்விக சங்கித மாட்சிமையும் தெரியாதவர்கள் செய்யும் ஆபா சம் இதுவாம். ஒரு ஆ ல ய த் தி ல் பாரம்பரியமாய்த் தொண்டூழியம் செய்பவனாகிய நாகசுரக்கார னிருந் தான். அவன் ஊதுவதற்கு நாகசுரத்தை வாயில் வைக் கப்போகும்சமயத்தில் சுவாமியானவர் அஞ்சிஆலயத்தி

னின்றும் வெளியே போய்விடுவார். இலிங்கத்துக்கு மற்ற ஆராதனைகள் சரியாய் நடந்துவந்தன. அப்படியிருந்தும் சிலகாலத்தில் ஊரில் கொடிய பஞ்சமும் நோயும்பிடித்து ஜனங்கள் அருபமடைந்தார்கள். சிவ தெரிசனுர்த்தம் ஒருபெரியவர் வந்து "ஆலயத்திற் சுவாமி இல்லையே" என்றனர். அதனைக் கேட்டவர் அதன் விபரத்தைத் தெரிவிக்கப் பெரியவரைவேண்டிக் கொண்டனர். அவர் பகவானைப் பிரார்த்திக்கப் பகவான் அவருடைய கனவில் தோன்றி "நாகசுரக்காரனுடைய அபசுரம் நம்மாற்கேட்டிங்கு ஸகித்திருக்கக் கூடவில்லை அதினால் நாம் ஆலயத்தி னின்றும் விலகியிருக்கின்றோம்; அவனோநம்மிடத்தில் அன்புடையவன்; நமது ஆலயத்தை நீண்டகாலம் நம்பியவன்; அவன் உணவுக்குக் கஷ்டப்படாமல் அவனுக் கேற்பட்ட கட்டளையைக் கொடுத்து வருவதன்றி வேறே நல்ல நாகசுரக்காரனையும் அமர்த்தி வைக்க வேண்டியது. அப்படியானல், நாம் இவ்வாலயத்தில் வாசஞ் செய்வோம்" என்று திருவாய்மலர்ந்தனர். இதனைப் பெரியவரால் தெரிந்துகொண்டவர், உடனே அவ்வாறே ஏற்பாடு செய்தனர். அதன்பேரில் ஊரில் பஞ்சமும் நோயும் நீங்கிச் சுபட்சமுண்டா யிருந்தது என்பதான கதையும் உண்டா யிருக்கிறது. கதைக்குக் காலில்லையென்று இதனை மறுப்பார் உளராயினும் அதில் ஏற்படும் உண்மைப் படிப்பினைக் கொள்ளாதார் யாருமிருக்கார். ஆங்கிலேயருடைய ஸங்கீத சரித்திரத்தில் ஏற்பட்ட வோருண்மையைச் சொல்லுகிறேன். ஒருவன் பிறப்பிலேயே ஸங்கீத ஞானமுடையவனு யிருந்தான். அபசுரம்கேட்க நேர்ந்தால் அவனுக்கு உடனே வலிப்பு நோக்காடு உண்டாகிக்கொண் டிருந்தது. இஃதன்றிப்

பரமனையே பாடி யிசையை நிறுத்தி வைத்த தியாகையர வர்கள் ஒருசமயம் ஆனந்த பயிரவி இராகத்தை அபசுரமாய் ஒருவனிடம் கேட்கநேர்ந்ததில் மிகவருந்திப் பின் அந்தஇராகத்தில் தாம்கீர்த்தனையே கற்பியாதிருந்து விட்டனர். சுத்தஸ்வரமாய்க் கானம் செய்யும் அவ்வையரவர்களிடம் ஸ்ரீராமமூர்த்தி பிரத்தியட்சமாயிருந்ததும், தங்கத் தாம்பாளத்தில் நறுமணத் தாம்பூலம்மென்று பிரசாதமாய் உமிழ்ந்ததும், திருப்பதியில் திரை கிழியச்செய்து ஸ்ரீவெங்கடாசலமூர்த்தி, அய்யரவர்களுக்குத் தம் தெரிசனம் தந்ததும், அய்யரவர்களின் அபூர்வகானத்தைக் கேட்டானந்திக்க நாரத முனிவரே நேரில்வந் தருளிச்சென்றதும் பிரஸித்தமாகத்தெரியவருகின்றன. அகப்பட்ட இராவணன் கயிலையின்கீழ் அகப்பட்டு நொந்தவாறு தன் கானத்தால் தவிர்ந்து பெரியவரங்களுக்கு முரியானனது சிறிதோ? பாண்டியன் தானே ஆட்டம் பயின்றதும் சுந்தரேஸர் விறகுதலையனுய்ப் பாடியதும் எனக்கு கியாபத்திற்கு வருகின்றன. சரஸ்வதியாரே எப்போதும் தம்கரத்தினிடத்தில் வீணையை யானந்தமாக்கொண் டிலங்குகின்றனரே! சிவபரஞ் சுடர்ஆனந்தத் தாண்டவ சொரூபத்துடனும் மாதவர் புல்லாங் குழலுடனும் என்றும் மங்களமா விளங்க நின்றார்களன்றோ? அம்மகிமைகளை உணர்ந்துரைக்க யாராலுங் கூடுமோ? மன்னுயிர்க்குப் போக மருளப் பரமனுமையோர்பாகங் கொண்டனன். அதுபோலத் தெய்வங்க ளிசைக் கருவிகளை கொண்டிலங்குங் காரணங்களையும் நம்மனோராய்ந் தவ்வழியிற் கடைத் தேறுவாராக. உலகத்தில் ஏற்பட்டிருக்கின்ற கலைகளிலெல்லாம்கானமானது இன்பமுடையது.எனது பிரத்தியட்ச அநுபவத்தில் இதுமனதிற்குரிய வேலைச்

சிரமத்தையும் சரீரசம்பந்தமான வேலைச் சிரமத்தை யும் தனிவழிப் போகுமிடத்துண்டாகிய பீதியையும் போககிவைத்திருக்கின்றது. தனிவழிக்குப்பாட்டொரு துணைவன். "பஸுர்வேத்தி விஸுர்வேத்தி வேத்திகா நாஸம்பணிஃ" புல்லாங்குழலில் மாடுகளும், தாலாட்டிற் சிசுக்களும், மகிடியிற் பாம்புகளும் இன்புறுஞ்சுபாவங் களை நாம் நிஜ தெரிசனமாகக் காண்கின்றோம். சிலபசுக் கள் பால்கரக்கவிடாமற் குறும்புசெய்யும் சமயத்தில் இடைப்பையன் அதனெதிரே ஆடிப்பாடுகிறான். அவன் முகமாய்ப் பசுவானது திரும்பிச் சாந்தமாய் நின்றுவிடு கிறது. இதனை "ஆடிகறக்கிறமாடு பாடிக்கறக்கிறமாடு" என்று உலகத்திற் சொல்லுகிறார்கள். நம்மிடமுள்ள ஜோடிக்காளைகள் விஞ்ஞானத்தின் வசப்பட்டுப் பரவ சமாத்தம் செவிகளும் வாற்களும் எடுப்புறச் செய லற்று நின்றுவிடுவதை நீ அடிக்கடி தெரிந்திருக்கின்றாய். காட்டுமான்கள் குழலிசைக் குருகித் தம்மறைவிடம் விட்டு வெளிவந்து வேடுவரிற் சிக்குப்படுகின்றன. வண்டியிற் பூட்டப்பட்ட காளைகள் தம்மை நடத்துப வரது இனியபாடல்களைக் கேட்டுக்கொண்டு பாரமிழுக் குஞ் சிரமந்தோன்றாமல் மெல்லெலன வின்பமாய் வழி நடக்கின்றதைப் பார்க்கலாம். மேய்ப்பர் தம் ஆடுகளை உத்தேசித்துப் புல்லாங் குழல் ஊதித்திரிவதுமுண்டு. பால்கொடுக்கத் தாய்வராத சமயத்திலும், நோயின் உபாதியுண்டான காலத்திலும் சிசுக்களுக்குக் கானமா னது சாந்த பரியாயமாய் உதவுகின்றது. "பாம்பென்றாற் படையுமஞ்சும்" என்றதோர் பழமொழி. இவ்விதச் சர்ப்பமானது இசைவயப்பட்டுத் தம்கொடுமைகளடங் கிப் பிடாரனிடம் விளையாடுவதைப் பார்க்கலாம். அவன் நேத்திரத்தில் முத்திகொடுக்கின்றது. ஓரிரவு ஊரடங்

கிய சமயம் ஒருவர் வாத்தியம் வாசித்துக்கொண்டிருந்தார். ஒருசர்ப்பம் அந்தக் காரணத்தை நாடிவந்து அவர் பார்வைக்கெதிரில் தலையைத்தூக்கிப் படமெடுத்த படிக்கே அசைவற்றிருந்தது. வாத்தியக்காரர் அதைப் பார்த்த நிமிஷம் மிகவும் திடுக்கிட்டுப் பயந்தாரேனும் மனத்தைச் சமாதானஞ் செய்துகொண்டு மெதுவாய் வாத்தியத்தைக் கீழே வைத்து விலகிப் போயினர். பாம்பானது உடனே தலையைக் கீழே போட்டுச் சாந்தமாய் நகர்ந்து மறைவிடஞ் சென்றது. இதனை யான் கண்ணாலே பார்த்தேன். உன்னையான் திருமணஞ் சூடிக்கொள்வதற்குச் சின்னாள் முந்தி இம்மாளிகையிற் சிலஅரவங்கள் இராக்காலத்திற் புழங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தவர்கள் பயந்து என்னிடம் தெரிவித்தார்கள். சிலர் அவை மனைப்பாம்புகளென்றும் யாவருக்குஞ் சேதம் விளைக்காவென்றும் செப்பினர். மனையிலுள்ளோர் பயந்து அடிக்கடி சிரமம் கொடுப்பதை உத்தேசித்து அப் பாம்புகளைப் பிடித்துவிடப் பிரயாசைப்பட்டதில் அவைகள் பகற்போதில் தென்படுவதாயில்லை. பிடாரனை வருவிக்கச் செய்தேன். அவன் நமது பூந்தோட்டத்தில் மகுடி வாசிக்க, பத்து நிமிஷங்களிற் கற்குவியல்களி லிருந்து பாம்புகள் ஒன்றின் பின் ஒன்றாய் யாவரும் பகலிற்கண் டதிசயிக்க வெளிகிளம்பித் தாவிவருவதாயின. அப்படி அஞ்சவந்த அந்தப் பாம்புகள் ஐந்து. அவைகளைப் பிடாரன் மகுடி ஊதிக்கொண்ட படிக்கே தான் கொண்டுவந்திருந்த வட்டமூங்கிற்பெட்டிகளுக்குள் ஒவ்வொன்றாய் அடைத்துவிட்டான். நான் மகிழ்ந்தவனுக்குப் பரிசளித் தனுப்பினேன். இவ்வாறிருக்க ஆறறிவுயிர்களாகிய யாம் எவ்வாறு கான மயக்கினின்றும் நீங்கற்பாலம்? பிராணி

களை வசப்படுத்துவதில் வாயினாற் பாடும் பாட்டைக் காட்டிலும் வாத்திய நாதங்களே அதிக வல்லமையுடையனவா யிருக்கின்றன. வாய்ப்பாட்டிற்கு இன்பம் கொடுப்பதும் வாத்தியமாகிய ஒரு தம்பூரேயன்றி வேறென்ன? ஸங்கீதத்துக்குள்ள இன்னொரு மகிமை சொல்லுகிறேன். அதற்கு நமது அரசரே சாட்சியா யிருக்கின்றார். இவருக்குத் தீராத தலைநோ யிருந்தது. எத்தனையோ வைத்தியங்களினும் தீரவில்லை. அரமனை வைணிக நிபுணர் தாம் அதைத் தீர்க்க விரும்பினர். அரசர் ஸங்கீதத்திற் குருகுஞான முள்ளவ ரென்பதனை வைணிகர் தெரிந்தவரா யிருந்த படியினாலேயே அவர் அவ்வாறு அரசரை வேண்டிக் கொள்வதானார்; அரசர் அதற்கிணங்க, வைணிகர் தமது ஒப்பற்ற சாமர்த்தியத்தினால் வீணையில் திவ்யகானம் அவர் பக்கத்திருந்து அமரிக்கையுடன் உசிதமாய்ச் செய்தனர். மண்டையிடி அரசருக்குச் சிறிதுசிறிதாய் நின்று விட்டது. இவ்வாறு தினம் ஒவ்வொருபொழுது மருந்தைப்போல வீணாகானத்தை நமதுஅரசர் அநுபவித்துச் சில தினங்களிற் பூரணசுக மடைந் தானந்தித்து வைணிகருக்குப் பெரிய சன்மானங்களுஞ் சாசுவத பூஸ்திதிகளும் கொடுத்து அவரைப் புகழ்பரவ அமர்த்தி வைத் திருக்கின்றார். இதைப்போன்ற இன்னொரு உண்மையான சம்பவத்தையும் சொல்லுகிறேன்.

ஒருவாலிபன் கொடிய சுரநோயாற் பீடிக்கப்பட்டு வருந்தினன். இவனுக்கு இஷ்டமாகிய வைணிக னொருவன் அவனுடைய சிக்கைப்பார்க்கவந்தான். அப்போது வாலிபன் தான் இனிநோய்நீங்கிப் பிழைப்பது அருமையென்றும் திவ்ய கானங்களைக் கேட்கும் பாக்கியம் தனக்கு இனி உண்டா யிருப்பதில்லை யென்றும் பலவாறு

னுக்கித்து முறையிட்டான். வைணீகன் இரங்கித் தனது நண்பனைத்தேற்றி நீர்சுகமடையத்தடையில்லை, ஸங்கீதப் பேரானந்தம் இன்னும் நீர்திளைக்கும் புண்ணியத்தையே உடையீர் என்று பின் அவனைத் திருப்தி செய்யும் பொருட்டுத் தனதுவீணையைக் கொணர்ந்து அவன் படுக்கைக் கருகிலிருந்து அரியகானம் செய்வதானார். வாலிபன் அதனால் சிறிது சோபம் நீங்கியெழுந்து படுக்கையில் உட்கார்ந்து ஆசையுடன் கானாமிர்தத்தை முகமலர்ச்சியுடன் உண்டிருந்தான். இவ்வாறே உற்றோர் கொண்டாட இரண்டு தினங்கள் கேட்டுப் பின் மூன்றாவது தினத்தில் திடீரென வெழுந்து தன் கட்டிலைவிட் டிறங்கி வைணீகனருகில் வந்துட்கார்ந்தான். அவன் உறவினர் அதைக்கண்டு படுக்கையாயிருந்த இவனுக்கு இப்போது எதிர்பாராத காரியம் எப்படி யுண்டானதென் றதிசயித்து அவன்உடம்பைத் தொட்டுப்பார்த்தார்கள். ஜன்னிக்கோளா றென்ற சந்தேகமுமில்லை. அவனுக்குச் சுரம் பூரணமாயில்லாதிருந்தது. சிக்குக்காரனும் "எனக்குத் தேகாரோக்கியமாயிருக்கின்றதென்றான்". பின் சிலநாட்கள் வைணீகனின் அற்புத கானத்தைக் கேட்டுக்கொண்டிருந்து முற்றுமவன்காயவி னுபாதியினின்றும் விலகிச் சௌக்கியமாயிருந்தான். இவ்வாறு, சுரத்தாற் சுரம்போனது. எழுசுரமுன் னொரு சுரந் தலைகாட்ட வல்லதோ? அன்றுமுதல் வைணீகனும் காயற்காரனும் மற்றுமுள்ளோரும் கானத்திற்குச் சிக்கைப் போக்கும் தெய்வீகக் குணமுண்டாயிருக்கின்றதெனு முண்மையைப் பாராட்டினார்கள். கான சாஸ்திரத்தில் மழைபெய்யச் செய்யவும் கல்லுருக்கச்செய்யவும் பட்டமரம் தளிர்க்கச் செய்யவும் இன்னும் இவ்விதப் பலஅற்புதச் செயல்கள்

செய்யக் கூடியதாகவுமான இராகங்கள் உண்டாயிருப்பதாக அறிகிறோம்.

சிவானந்தி:—வர்ணங்களாலும் பலவியாதிகளைப் போக்கக் கூடியதாயிருக்கிறதெனத் தெரிகிறது.

சிவானந்தன்:—ஆம்! "வர்ண வைத்தியசாஸ்திரம்" என்பதான நூல் இப்போது பரவிவருகின்றது. அதுவும் சிந்திக்கத் தக்கதாகவே யிருக்கின்றது. நிற்க. இப்போது ஸங்கீதமானது ஒவ்வொரு ஜாதியாரிடத்திலும் அவரவர் நடைநொடி பாவனைகளைப்போல் ஒவ்வொருவிதமாய் அமைந் திருக்கின்றன. நாம் கையாண்டு வரும் இந்துஸங்கீதமே நம்மதமாதிகளைப்போல் எவற்றினும் தலைசிறக்க விருந்து அந்நியராலுங் கொண்டாடப் படுகின்றது. வேதத்திற்குச் சுரம் அமைத்துப்பாடி வருவதை நோக்குங்கால் இக்கானமானது மிகவும் புராதன காலந்தொடங்கி மனிதரால் அநுசரிக்கப் பட்டு வந்திருப்பதாகத் தெரிகிறது.

சிவானந்தி:—தேவரீர் உரையாடியவைகளெல்லாம் அநுபவத்தை யொட்டியே யெனக்குவியப்பையும் ஸந்தோஷத்தையும் தருகின்றன. ஆதியில் ஆரியர்கள் கானத்தைப் பரிபாலித்து வந்ததன்றித் தமிழர்களும் அதனைப்போற்றி வந்திருக்கின்றார்களன்றோ? தமிழ்ப் பாஷையானது இயலிசை நாடக மென முப்பகுதிப் பட்டு நிற்கின்றது. ஆதியில் தமிழில் இசைநூல்கள் பலவிருந்ததாகச் சிலப்பதிகார உரையால் விளங்குகின்றது. இக்காலத்திய கீர்த்தனங்கள் முன்னிருந்தனவென நம்புதற் கிடனில்லை. கீர்த்தனங்கள் ஸ்வர ஸாஹித்யங்களோடு எழுதிவைக்கப்பட் டிருந்தாலும் அவை ஸங்கீத வித்வான்களாலும் இன்னவிதமென்று

கண்டு பாடிக்கொள்ளச் சாத்தியமாகா திருக்கின்றன. அவைகள் பாரம்பரையாகவே ஒருவர் மற்றொருவருக்குச் சொல்லிவரக்கூடியதாகவே இருக்கின்றன. ஆங்கிலேயருடைய ஸங்கீதத்தில் இந்தவிதச் சிரமத்தை ஸ்வரக்குறியிட்டினால் (NOTATIONS) நீக்கிக்கொண்டிருக்கிறார்கள். இந்த வழியானது அவர்களுடைய கண்டப்பட்ட ஸங்கிதத்திற்கு மட்டும் பொருத்தமாயிருக்கின்றதேயொழிய அகண்டமாகிய இந்துஸங்கிதத்திற்குப் பொருந்தவில்லை. இந்தக்குறி யிட்டில் நமது கீர்த்தனைகள் அடங்கா திருக்கும்போது இராகங்களுக்கு எப்படிச்சரிப்பட்டுவரும்? நம்மவர் இந்த ஆங்கிலக்குறியிட்டைமேவிப் பலவிருத்தி விகற்பங்கள் இந்து ஸங்கிதத்துக்கென ஏதோகூடியமட்டும் கற்பனைசெய்திருக்கின்றார்கள். அதனை நாம் உள்ளமட்டில் ஸந்தோஷிக்கவேண்டியதாகவே இருக்கின்ற தன்றிப் பூரண திருப்திக்கேதுவில்லை. ஸங்கிதத்திற்குருகு ஞானமில்லாதாரா யிருந்தாலும் ஆங்கில ஸ்வரக்குறி யீட்டுப் புஸ்தகத்தைப் பார்த்தபடிக்கு அவர்கள் ஆங்கிலேய வாத்தியத்திற் பழக்கவேது வொன்றைக்கொண்டு மாத்திரம் வாசித்துவிடக் கூடியதா யிருக்கிறது. ஒருபாஷையின் எழுத்தைக் கண்ணினாற் பார்த்து வாயினால் உச்சரிக்கப் பழகிய எதுவினால் எந்தப்புஸ்தக வாசகத்தையோ செய்யுட்களையோ பின்யோசனைசிறிது மின்றி வாசிப்பதுபோல ஸங்கிதக்குறி யீட்டுப்புஸ்தகங்களைக் கண்ணினாற் பார்த்துக் கையினால் வாத்தியத்தில் தாராளமாய் வாசிக்கு முறை ஆங்கிலத்தவர்களுக்கு ஏற்பட்டிருக்கின்றது. மற்றக்கலைகளெல்லாம் கஷ்டப்பட்டுக் கற்றுக்கொள்ளலாமென்றாலும் இந்த ஸங்கீதம் கஷ்டப் படுவதால்மட்டும் வருவதில்லை யென்பது சித்தம். "வித்யா

ஸ்சதஸ்ரோ ஸாத்யாஸ்யுர்ஜந்மநா ஸம்பவா:—கர்ந்தர்வம் "ஸகவித்வம்சஸௌரத்யந்தாந வீலதா" என்றபடி ஸங்கீதமானது ஒருவனுக்குத் தானாகவே அவனது இயற்கையை ஒட்டிவரக்கூடியதாம். மற்றைக் கலா சாஸ்திரங்களிற் பெரியபட்டங்களைப் பெற்றவர்களும் இந்த ஸங்கீதம் கற்றுக்கொள்ளச் சிரமப்படும் அநுபவம் உண்டாயிருக்கின்றது. ஸங்கீதமானது எழுதிப் படிக்கக்கூடிய வித்தையன்று. அது எழுத்திற்கும் குறியீட்டிற்கும் அடங்கா திருக்கின்றது. ஆதியில் எழுதி வைக்கப்பட்ட இதரமான அரிய நூல்களெல்லாம் இக் காலத் திருந்தாற் பிரயோசனம் வெகுவாய் உண்டாயிருக்கும். ஸங்கித சாஸ்திரங்களும் "சிதலைக்கில்லைச் செல்வமும் செருக்கும்" என்றதுபோல் அந்நியர் அநியாயங்களுக் குட்பட்டு அவைகளுடன் சேர்ந்தழிந்து போயின. அக்காலத்து ஸ்வர ஸாஹித்யங்களோடுங் கூடிய கீர்த்தனங்கள் இக்காலத்துக் கிடைக்கக்கூடியதாயிருந்தாலும் பிரயோசன மில்லை. நமது முன்னோர்களாகிய மஹாநிபுணர் அகண்டமா யிருக்கும் நமது ஸங்கீதத்தை உணர்ந்தே அதுகுறி யீட்டில் அடங்காதென அதனை அநுசரிக்கா திருந்தனர் என்பது திண்ணம். அக்காலத்து ஸங்கித சாஸ்திரங்கள் இக்காலத் திருந்தால்பிரயோசனமாகவே இருக்கும். எழுதப்பட்ட நூல்களே தொலைந்தன வென்றால் கர்ணபரம் பரையில் வரக்கூடிய கீர்த்தனங்கள் எவ்வாறு உலகிற்பரவ எதுவுண்டாயிருந்தன? பழய நூலைக்கொண் டாராயுமிடத்து இசைக்கருவி ஐவகைத்தென்றும் அவை தோல் நரம்பு தொளை கஞ்சம் மிடறு எனப்பேர் பெறுமென்றும், வீணையும் மிருதங்கமும் புல்லாங்குழலும் நாகசுரமும் தாளமும் அக்காலத்து நடைபெற்று வந்து

இசைக்கருவிக ளென்றும், யாழ் (வீணை) என்பது பேரியாழ் மகரயாழ் சகோடயாழ் செங்கோட்டியாழ் எனநான்கு பாகு பாடுடையதென்றும் தெரியவருகின்றன. சாரங்தா சுந்தரி தபலா டோலக் கஞ்சரி முதலான வாத்தியங்கள் இந்துஸ்தாங்காரரைப்பிரதானமாச் சேர்ந்திருக்கின்றன. (VIOLIN) அஃதாவது பிடில் அங்கிலேயருக்கே உரித்தான வாத்தியங்களி லொன்று யிருக்கிறது. இலங்காதிபனகிய இராவணன் கயிலேயின்கீழ்ச் சிக்கி வருந்தும்போது நாரத முனிவரால் தெரிவிக்கப்பட்ட படிபரமசிவனைப்பாட முயன்றுனென்றும் அக்கால்தன துசிரங்களிலொன்றையும் கரங்களிலொன்றையும் கொய்து பிடிலேப்போன்ற தொன்று செய்து தன் நரம்புகளை அதற்குத் தந்திகளாக உபயோகித்து வாசித்துப்பாடிப் பரமனுர்க் குவப்புண்டாக்கிச் சுகப்பட்டானென்றும் அதுவே இக்காலத்து வழங்கப்பட்டு வரும் பிடில்என்றும் ஒருவர் சொல்லக் கேட்டிருக்கின்றேன். அது பொருந்தவிருக்கினும் எம்மட்டும் நிஜமோ தெரிகிலேன். பண் ணென்னும் பெயரியதாய்த் தேவாரங்களுக்கு இராகங்கள் வகுக்கப்பட் டிருந்தனவெல்லாம் இப்போது காலத்துக் கேற்றபடி மாறுபட்டு வழங்கப்படுகின்றன. "எதற்குரு காதவனு மிசைக் குருகுவான்" "இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று" என்று முள்ளவாறு கட்கிணங்கத் தமிழ்ப்பாடல்களுக்கு இராகங்களை வகுத்திருக்கின்றுர்கள். வெண்பா இராகம் சங்கராபரணமென்றும், அகவல் இராகம் ஆரபி அல்லது தேவகாந்தார மென்றும், விருத்த இராகம் சௌராஷ்டிரமென்றும், கலித்துறை இராகம் பைரவி யென்றும் கூறப்பட் டுள்ளன. இதனை அநுசரிப்பாரும் இக்காலத்திலர். எனினும், எந்தஇராகங்களில் இவைகளைப் பாடி

ஞானும் இன்பம் பெருகிக்கொண்டே யிருக்கும் அநு பவமில்லா திருப்பதில்லை. கானம் கற்போர் சிலரேனும் அதைக்கேட்டின்புறுபவர் பலரே. ஆனந்தியார் ஒருவரு மிலர். அவ்வாறுளரேல் அவர் இயற்கைப்பொருளுட் சிறந்த மக்கட்குலத்தவருடன் ஒருங்கெண்ணப்படார்; ஐயறிவுயிர்களினுங் கடைப்பட்டவரே யாவர். இக்கா லத்துத் தாழ்ந்த குடிப்பிறந்தோர் ஸங்கீதம் கற்றுக் கொண்டு மௌடகத்தை உயர்குல ஸங்கீத வித்வான்க ளிடம் காட்டுகின்றது வெகு அருவருப்பா யிருக்கிறது. ஒவ்வொரு ஜாதியாருக்கும் ஒவ்வொருவிதமான சங்கீ தம்போலவே வெவ்வேறுவித வாத்தியங்களும் அமைந் திருந்தன. முக்கியமாய் இராஜபுத்திரிகள் வீணையைக் கௌரவமாய்ப் பாவித்துக் கற்றுவந்தார்கள். இக்கால நாகரீகத்தில் எல்லாத்தொழில்களைப் போலவே இந்த ஸங்கீதமும் வாத்தியங்களும் யாவருக்கும் பொதுவாகி விட்டன. சாஸ்திரத்தை ஒட்டிக் கானஞ் செய்த்தக்க தென்ப துண்டெனினும், "பண்வனப்புக் கேட்டார் நன்றெனல்" என்றபடியால் செவிக்கின்பமா யிருக்க வேண்டியதே கானத்திற் கின்றியமையாத தொன்றும். சிலர்சாஸ்திரப் பிரியராய்க் கற்கும் சுபாவத்தராகி அத னைதுவால் ஒழுங்காக ஸங்கீத சாஸ்திரங்களைப்பிரசுர ஞ் செய்திருக்கின்றார்கள். இவர்கள் தாம் ஸங்கீத நுட் பங்களைமுற்று முணர்ந்தோராய்ப் பாவித்து இன்பான ஸங்கீதகச்சேரிகளில் வந்திருந்து கல்லையுங் கனிவிக்கும் கானத்திற்குருகாத நெஞ்சராய்க்கருவித் துவிரைத் துப் போகின்றார்கள். எவ்விதக் கானத்திற்கும் ஒப்பிப் புள கிதமடைந்துசிரக்கம்பஞ் செய்யார். இஃதன்றி ஸங்கீத சாஸ்திரங்களில் மூலை முடுக்குகளிலுள்ள அனுவசிய மான சிலவிஷயங்களைமட்டும் இவர்கள் பாடஞ்செய்து

இங்கிதமாய்ச் சபையிற் கானம் செய்யவல்லவரைக் கேள்விகேட்டு விழிக்க வைக்கின்றார்கள். ஞானஸ்தர் இன்பமாய் அநுபவ வித்துக்கொண்டிருந்த ஸங்கீதத் துக்கு உடனே தடைஉண்டாகி ஸங்கீதகச்சேரியானது தர்க்க வியாகரணக் கச்சேரியாய் மாறிவிடுகின்றது. சபையிலுள்ள மற்றவர்களின் ரஞ்சனையையும் கவனி யாது நம்முடைய ஸங்கீதஞானமே மேலென்பதை உணர்த்த முற்பட்டுப் படுகின்றார்கள். மறுபடி இத்தகை யாருக்கு ஸங்கீத மென்பதின் அருமையே சிறுமை யடைந் திருக்கின்றது. ஸங்கீத சபையார் "சிவபூஜை வேளையில் கரடி வந்து புகுகின்றது" என்று அவர்களை என்னதூறினும் அதனைக் குறிப்பில் தெரியக்கூடிய யூகம் அவர்களுக்கு மௌடீகத்தால் உண்டாவதில்லை. அவர்களுக்கு ஒருசிறிது ஸங்கீதம் பாடவோ வாத்தி யத்தில் வாசிக்கவோ இழுத்துப்போட்டு அடித்தாலும் வரவேமாட்டாது. இவர்கள் சிவவேடத்தை மட்டும் கொண்ட வஞ்சரைப்போ லாவார்கள். கானசுகத்துக் கான பாக்கிய மில்லாதவர்கள். கானமானது சுகமாயிரு க்க வேண்டியதே முக்கியம். பசு சிசு பாம்பாதிகளும் சுகப் பிரதானமான அவ்விதகானத்திற் பிரீதியடையா திருப்பதில்லை யன்றோ? பட்சிகளி னிராகம் உயிர்களுக் குப் பொதுவா யின்பங் கொடுத்தற்குச் சுகமொன்றன் றோ காரணம்? பேரறிவுடையார் மானிடராதலின் அவ ர்கள் கான சாஸ்திரமுறை பிறழாது ஸங்கீதமெனும் பேர்ப் பொருத்தத்திற் கொவ்வ அதிலினிமையைப் புகுத்தவே முக்கியம் கவனிக்கவேண்டும். படித்தபாடம் ஒப்புவிப்பது போன்ற ஸங்கீதம் பிரயோசன மில்லை. தானனுபவித்துப் பிறர்க்குக் கொடுக்கும் ஸங்கீதமே

கோடிபெறும். வியர்க்கவிண் சிரமப்பட்டுக் கோர அபிநயங்களுடனும் பாடுவார் அல்லது வாத்தியம் வாசிப்பாரிற் சுகம் காண லெவ்விதம்? இந்த விகாரச் செய்கைகளைப் பெரும்பான்மையோர் சபைகளிற் பரிகசித்துக்கொண் டிருக்கின்றார்கள். பெரும்பாரமுள்ள தொன்றைச் சிரமப்பட்டுத் தூக்குமொருவனிடம் இவ்வித விகாரத் தோற்றங்கள் உண்டாவது ஸகஜம். அதுபோலப் பாட்டிலோ வாத்தியத்திலோ சிரமமான வேலைசெய்ய நேரிடும்போது வித்வான்களுக்குத் தங்களை அறியாமலே கோரரூபங் காட்டயேற்பட்டுவிடுகின்றது. ஆதிமுதலே அவர்கள் அவ்விதவிகாரத்தோற்றங்கள் கிளம்ப வொட்டாமற் பழக்கத்திற் கொண்டுவந் திருக்கவேண்டியது முக்கியம். ஒருவித்வான் எஜமானுக்குத் தூரத்திலிருந்து பாட்டுத் தொடங்குவாராம். முடிந்து மங்களம்பாடும்போது எஜமான் முன் கிட்டிப்போ யிருப்பாரம். அஃதாவது அவ்வித்வான் தமது கைகளிரண்டையும் நீட்டி நீட்டிப் பாடிக்கொண்டே இருந்த விடத்தினின்றும் முன்னாலே போய்விடும் அப்பியாச முள்ளவரென்பதே. அதைப்பற்றியாராவது அவ்வித்வானைக் கேட்டால் பிரபுவின் சமீபத்திற்போயிருந்து தானே சன்மானம் வாங்கிக்கொள்ள வேண்டுமென்றும்வரவா முன்னுக்குப் போகவேண்டுமேயொழிய பின்னுக்குப் போகலாமா வென்றும் தன்குற்றம் தோன்றாமற் பேசுவாராம். அளவுக்கு மிஞ்சின அபிநயம் என் செய்யவேண்டும்? இதமான ஸங்கீதவித்வானுக்குப்பொருத்தமாகிய பக்க வாத்தியக்காரரைச் சேர்ந்துக் கேட்கும் பாக்கிய முடையவர்களும் உண்டு. அவ்விதகானம் நடக்குமிடம் கைலாசமோ வைகுண்டமோ

சத்தியலோகமோ! இன்றேல், அச்சங்கீதம் வெங்கீத மே. அது எத்தகையதா யிருப்ப தென்றாலும் பாழ் பாழேயாம். ஸங்கீதஜமாவில் ஒவ்வொருவரும் சரியான ஞானமுள்ளவர்களாய் ஒத்துநடத்துங் கானமேஸ்ரா வியமாய்த் தெவிட்டாப் பேரின்பந் தரத்தக்கதாம். சொல்லுக்கு ஆதியாயிருப்பது நாதமெனத் திருவாய் மலர்ந்தீர்கள். அவ்விதமான நாதவியக்கத்தை மட்டும் விமரிசையிற் காட்டக்கூடியதாய் அமைந்தது வாத்திய மொன்றேயாம். நாதத்தின் ஒலி பேதங்கள் ஸப்தஸ் வரங்களாகிய சரிகமபதநி என்று உச்சரித்த மாத்திரத் தானே விளங்கக்கூடிய தொன்றுமில்லை. இவ்வொலி பேதங்களை இவ்வித அட்சர பேதங்களாற் குறிப்பதை யும் ஒழித்து நாதமாத்திரமாயுள்ள எழுதிருஷ்டாந்தங் களைப் பெரியோர் ஒப்பக் காட்டி யிருக்கின்றார்கள். அவையாவன:—ஷட்ஜம் மயில்தொனியையும், ரிஷபம் ரிஷபத்தொனியையும், காந்தாரம் மேஷத் தொனியை யும்,மத்யமம் க்ரௌஞ்சபட்சித் தொனியையும், பஞ்ச மம் கோகிலத்தொனியையும், தைவதம் குதிரைத்தொ னியையும், நிஷாதம் யானைத்தொனியையும் ஒத்துநடக் குமென்பதாம். இதனால் நாதத்தினுடைய வியவகாரமா னது எழுத்தைப்பற்றியாவது சொல்லைப்பற்றி யாவது நிற்பதில்லை யென்பது தேறப்பட்டது. அப்படியானால் மேற்கூறப்பட்ட ஜெந்துக்களின் தொனிகளை எழுதிக் காட்டக்கூடியதா யிருக்கவேண்டு மன்றோ? அதுசாத் தியமாவதெப்படி? நாதமாத்திரமாயுள்ள வாத்தியமா னது வாய்ப்பாட்டிலும் சிலாக்கிய முள்ளது. வாய்ப் பாட்டிற் சொல் லுச்சரிக்கும் விசேஷ முண்டென்ப ருளராயினும் சொல்லிறந்த சுகமாகிய வாத்தியநாதத்

திற்பயனின்றெனக் கழறமுன்வருவரோ? சொல்லெனப் படுவதில் நாதசம்பந்தமில்லாமல் முடியாது. சொல்லுக் குப் பிராணுதாரமா யிருப்பது நாதமே. வரிவடிவைக் கொண்ட எழுத்துக்களாலாகிய சொல்மட்டும்தோன்ற லாவதிற் பயன்யாது? சொல் லில்லாமலும் நாதமயம் உயிர்களுக்குப்பல அபிப்பிராயங்களைத்தரவல்லதாகவே இருக்கின்றது. வாத்தியப் பிரதானமாகப் பாட்டு விசே ஷம் பெறும். வாய்ப்பாட்டில் எப்பெரிய சமர்த்தனு யிருந்தபோதிலும் அவனுடையபாடலை மூலமாயிருந்து சிறப்பிப்பது வாத்தியமாகிய தம்பூரொன்றே. மேலும் சாரீரம் எல்லாப் புருஷருக்குமே நன்றாயிருப்பதில்லை. அவர்களில் யாருக்காவது சாரீரநயம் ஏற்பட்டிருந்தால் அவனை ஸ்திரீகண்ட முடையவனெனச் சொல்வார்கள், இதனுற் பெண்பாலருக்கு நல்லகண்ட முண்டாயிருப்ப தாய் விளங்குகின்றது. ஸ்திரீஜாதியாருக்குள் ஒருத் திக்கு நல்ல சாரீரம் உண்டாயிருந்தால் அதனைவீணு கானம்போலும் இனிமையா யிருக்கின்ற தென்பார் கள். பின், வீணைக்குள் வீணையையே ஒப்பிட்டுத் தார தம்மியம் பேசக்கூடியதா யிருக்குமேயன்றி வேறில்லை. புருஷருக்கு வலிய சாரீரமும் ஸ்திரீகட்கு மெல்லிய சாரீரமும் இயற்கையிலேயே ஏற்பட் டிருக்கின்றதை நிதானிக்கச் சுகமான கானத்துக் குரியவர் ஸ்திரிகளே எனத் தெரிகின்றது. வலிய சாரீரத்திலும் ஸங்கீதம் ஓர் வித ரசமேதர வல்லதாம். திருவுருவுடைய மெல்லிய ரின் குரல் இனிமையே யெனினும் அதனை வீணையின் நாத வினிமையுடன் ஒப்பிடலாகாது. "பெண்ணென் றாற் பேயுமிரங்கும்" ஆதலின், முற்றத் துறந்தவரே னும் பெண்ணைக் காதலிக்க நேர்வதால், அவள் குர

ஆக்கு வீணாநாதம் மட்டென்னு முபசார வழக்கே யேற்படலாமென்னு மையமுண்டாகின்ற தன்றிப் பிறி தில்லை. பாவையரும் தாம் வாசிக்கும் வீணையினது நாதம்போலவே தம்குரலை வயப்படுத்திக் கொள்ளப் பிரயாசைப் படுகின்றார்கள். தந்திநாதத்துடன் குரலைப் பொருத்திப் பாடவேண்டு மென்பதே சாஸ்திரசம்மத மாயு மிருக்கிறது. இப்போது வீணாகானம் மேலென்ப தாகத் தெரிகின்றே மல்லவா? கானத்திற்காக ஸ்திரீ புருஷருடைய குரல்களில் மட்டும் உயர்வு தாழ்வுகள் உண்டாயிருக்கின்றதாத் தெரிகின்றதே யன்றி வாத்தி யங்களுக்குள் இந்தச்சங்கையே கிடையாது. ஆனால் வாத்தியங்களுக்குள் உயர்ந்த நாதமுடையதென்றும் தாழ்ந்த நாதமுடையதென்றும் உண்டு. வாத்தியத்தில் தாழ்ந்த நாதமுடைய தென்பதிலும் இன்பமானது குடிகொண்டேயிருக்கும். பட்டைகளில் விறகுகளைக் போல் ஷாப்புகளில் அடர்ந்து கிடக்கும் பிடில்களில் தரக்குறைவான தொன்றைச் சோதிக்கினும் அதி வின்பநாத மில்லாதிருப்பதே யில்லை. இதனாற் கானத் திற்குச் சிலாக்கியமாய் அமைந்துள்ளது வாத்தியமே யன்றோ? வாய்ப்பாட்டில் ஒருவன் எவ்வளவோ நிதான மாய் அப்பியசித்திருந்தாலும் வேகமாய்ப் பாடும்போது ஸ்வரசுத்தம் காணப்படல் அருமை. வாத்தியமோ பாடு பட்டதற்குத் தகுந்தபடி வேகத்தில் ஸ்வரஸ்தானங்கள் வழுவாது உதவிப் பரமானந்தத்தைப் பெருக்கிவிடும். ஏற்பட்ட மூன்று ஸ்தாயிகள் பாட்டில் உதவுவது யாருக்குமில்லை. வாத்தியத்திலோ அம்மூன்று ஸ்தாயிக ளுக்கு மேலும் வாசிக்கின்றார்கள். பியானோ (Piano) வில் கீழ்தொடங்கி மேல்வரை யெத்தனையோ ஸ்தாயி

கள் உண்டா யிருக்கின்றன. பாட்டில் தொண்டை வரண்டு தேகாரோக்கியம் சிக்கிரம் கெட்டுத் தீரா நோவுக்கும் இடமுண்டாகி விடுகின்றது. வாத்தியம் வாசிப்பதிலோ தேகாப்பியாசமாயும் தேகத்திட னுண்டாகின்றது. வாத்தியத்தைப் பிரதானமாய் வைத்துக் கொண்டு அதனுடன் ஒற்றுமையாய் வேண்டுமளவு உபாயமாயும்சிரமமில்லாமலும்பாடக்கற்றுக்கொள்வது சிலாக்கியமாகும். பாட்டிலாகவேண்டிய மேலானவேலைகளைத் தேவையானதற்கு மேல் வாத்தியத்தில் வாசித்து விடலாம். வாத்தியத்திற் சாத்தியமாவது போலப் பாட்டொன்றிலேயே எல்லாம் துல்யமாகக் காட்டமுடியாது. இஃதொரு உத்தமமானவழியல்லவா? பாடகருக்குப் பிராயம் சற்றுகடந்துவிட்டாற் பின்பாட்டின்பாட்டைச் சொல்லமுடியாது. வாத்தியக்காரருக்கோ அதிற்பாத்தியம் வரவர மேற்போகின்றது. பாட்டில் ஒரே சமயத்தில் இரண்டுமூன்று ஸ்வரங்கள்பேசமாட்டாது. வாத்தியத்துக்கோ அது சொல்ல வேண்டியதில்லை. வாத்தியத்தில் அடக்கமும் நட்பமுமாகிய மெல்லிய ஓர்வித ஸ்வரங்கள் சுநாதமாய்ப்பிறந்து வெகுகர்ணமிர்தம் விளைப்பன வெல்லாம் பாட்டில் ஸ்மரிக்கவும் வகையில்லை. வாத்தியத்தில் நடக்கும் ஒவ்வோர் செய்கைகளை வாயாற்பாட முயற்சிக்கின் அவைகள் சாமர்த்திய முடைய வரையும் அவமானத்திற் குள்ளாக்கி விடும். இவைகளாற் பாட்டைத் தள்ளுபடியாகக் கூற வில்லை. தொண்டை கிழியக் கத்தி அரிய ஆவியைப் போக்கிக் கொள்வதைக் காட்டிலும் வாத்தியமொன்றில் அமைதியாய்ச் சாதகத்தை அபாரமாய்ச் செய்து கொள்ளலாமேயென்னும் கருத்தேயொழிய வேறில்லை.

ஸங்கிதாப் பியாசமுறையை வாத்திய வழியிற் காட்டல் சுலபமா மமைமந் திருக்கின்றது. ஸங்கீதப் பிரவேசத்திற்கு வாத்தியமூலம் பிரதானமாகும். ஆங்கிலநோட்டுகளை வாயாற் பாடக்கேட்பதினும் வாத்தியத்திற் கேட்பதே இன்பகர மாகின்ற தநுபவம். உலகத்தில் ஒவ்வொரு தொழிலேயும் காலியாகாமற் கொண்டாள ஒவ்வொருவர் தயாராகவே இருந்து வருகின்றார்கள். ஸங்கீதத்திலுள்ள ஒவ்வொரு பாகத்தையும் அப்படியே ஒவ்வொருவர் பேணிக் கையாண்டு வருகின்றார்கள். அந்தப்பாகங்களில் சுருதியுக்தி அநுபவங்களுக்கொத்த விதத்தை யநுசரித்தலே மேன்மை யென்பதாக எடுத்துக் காட்டினேன். மேற்குறித்தவைகளை நான் வல்லோர்பேசக் கேட்டது மன்றி அவைகளைப் பேணி ஆராய்ந்து அநுபவத்திலுங் கண்டிருக்கிறேன். நான் வீணைக்காகப் பாடுகிறதே யல்லாமல் என்பாட்டுக்காக வீணைவாசிக்கின்றதில்லை. வாத்தியத்தின் கானத்தால் சிலநோய்கள் தீர்ந்தனவென வுரைத்தீர்கள். நோயாளருக்கு அமைதியும் இன்பமுமுள்ளது வாத்தியநாதமே யன்றிப் பாட்டு உரித்தான தன்று. ஏழு வர்ணங்களைக் கொண்டு வியாதிகளைத் தீர்க்கின்றார்க ளென்பதனைத் தெரிந்தோர் ஏழுஸ்வரங்களி னேதுவைக் கொண்டும் நோயைத் தீர்ப்ப தென்பதனை நம்பாமலா யிருப்பார்? மெஸ்மர் என்பவர் அயலாருக்கு நித்திரை வருவிக்கவும், அயலாரை ஆகர்ஷிக்கவும் நோய்களைப் போக்கவும் ஓர் சூழ்ச்சி கண்டுபிடித் திருக்கின்றாரே? வாய்ப்பாட்டைக்காட்டிலும் வாத்தியத்திற் கற்றுக்கொள்வது வருத்தம். ஸங்கீத ஞானம் இயற்கையில் உண்டாயிருக்கமட்டும் பெற்றுவிட்டால் ஒருவருக்கு வாயிற்

பாடக்கூடியது தன்னாலே ஏற்படும். நாம் சுலபமாய் நடக்கின்றோமே? இத்தொழில் இலகுவான காரியமா? குழந்தையா யிருக்கும்போது நாம் நமது சரீரத்தைச் சமப் படுத்திக்கொள்ளத் தள்ளாடியது கொஞ்சமா? பிற்பாடு நமதுதேகத்தைச் சமன்செய்து நிற்கும்படி செய்துகொள்ளும் அநுபவத்தைப் பெற்று வரவரச் சர்வ சாதாரணமாய் நடக்க ஓடத் தாவ எல்லாம் சுலப மாய் விடுகின்றன. அதுபோல் அதிபால்ய காலமுதல் அவர்களுக்கு வாய்ஒலியின் ஏதுவைக் கொண்டு சிறிது சிறிதாகப் பேச்சுப்பழக்க வாசனை யேற்பட்டு அவ்வித அப்பியாசபலத்தால் அவர்களுக்கு வழங்கத்தெரிந்து விட்டசொல்லை இராகத்துடன் உச்சரித்துப் பாடிவிடு கின்றார்கள். அப்பாற் சொல்லமையப் பெறாத இரா கங்களையும் பாடவல்லுன ராகின்றார்கள். இவர்களுக்கு அடிக்கடி ஸங்கீதக் கேள்வியால் அவ்வாறு பாடும்சக்தி விசேஷமாய் உண்டாகிவிடுகின்றது. இவ்வித இயற்கை ஞான முடையவர்களுக்குச் செயற்கையாய் ஸங்கீதம் பயிற்றுவித்தால் பொன்மலர் நாற்ற முடைத்தானவாறு போலச் சோபிதமாகு மென்பதைப் பேசவும் வேண்டு மோ? ஸங்கீதத்திற்கான மூளை யில்லாதவர்களுக்கு நூறாண்டு பயிற்றுவித்தலைக் காட்டிலும் துன்பம் வே றொன்றில்லை. மேற்கூறியபடிக்கு இயற்கையிலேயே ஸங்கீத ஞானமுடையவர்களா யிருந்தாலும் வாத்தி யத்தில் அவர்களுக்கு வாசிக்கவென்றால் முடியவே மாட்டாது. ஏனென்றால் அவர்களுக்குப் பாலியமுதல் நாப்பழக்கம் ஏற்பட்டு வந்ததுபோல வாத்தியத்தில் விரற்பழக்கம் ஏற்படக் காரண மிருந்ததில்லை. குழந் தைப்பிராயத்தில் வாய்பேச ஆரம்பிப்பதேபோலும்,

அவர்கள் பிற்காலத்தில் வாத்தியத்திற் குழறித் தடு மாறி ஸ்வரங்களாதியாகப் பழகத்தொடங்கி அதைத் தம் ஸ்வாதீனத்திற்குக் கொண்டுவரவேண்டிய சிரமம் இருக்கிறது. தெருக்களில் திரியும் இளைஞரும் சாமா ன்யமாய் வாயால் ஞானத்துடனே கூடிய கேள்விப் பலத்தால் இன்பமாயும் பாடுகின்ற அநுபவம் உண்டா யிருக்கின்றது. வாத்தியமானது தனக்கு அந்நியமான உணர்வற்ற பதார்த்தம். நமது இஷ்டம்போல் அதைப் பேச வைப்பதென்றால் சுலப சாத்தியமா? வாத்தியத்திற் சாஸ்திரக் கிரமமாக ஸ்வர வரிசையாதிக ளெல்லாம் சிறிதுசிறிதாக நாட்படப் பழகியபின் நமக் குத் தேவையான விதங்களிலெல்லாம் வாசிக்கக் கூடிய தாகுமேயன்றி வேறல்ல. அப்படிக்கான சிரமத்தைப் பாராட்டாது அமைதியாயிருந்து முறையாய் அப்பிய சித்து விட்டாலோ, அதற்குச் சமானமான ஆனந்தம் பிறிதொன்றில்லை. பின், நம்முடன் பிறந்த நாவைப் போலுமே அவ்வாத்தியமும் நமது பண்பட்ட மனம் போலெல்லாம் பேசக் கூடியதா யமைந்து நமக்கும் மற்றவருக்கும் இன்பத்தைப் பெருக்கத் தந்து கொண் டே யிருக்கும். வாயால் ஒருசிறிது பாடத்தெரிந்தவர் எங்குமுளவாயிருப்பர். ஆனால் வாத்தியத்தில் ஒரு சிறிது வாசிக்கத் தெரிந்தோர் அபூர்வமே. அப்படி ஒரு சிறிது வாசிப்பவருக்கும் வாத்தியத்தில் ஸ்வர விசாரணையன்றி கிடையாது. குருட்டுப் பாட்டாய் அனே கர் பாடுகின்றார்கள். அவர்களை வாத்தியத்தில் அந்தப் பிரகாரத்தில் ஒருசொற்பமேனும் வாசிக்கச்சொன்னால் தெரிவதற்கு வகையில்லை. வாத்தியத்தில் அப்பியாசக் கிரமத்தாலன்றி நடக்கக்கூடிய தொன்றுமில்லை. பாடு கிறவர்களுக்கு லட்சியக்கியானம் பலத்திருக்கும். வாத்

தியக்காரருக்கு லட்சணக் கியானம் பதிந்திருக்கும். இலட்சியத்தின் அநுபோகமாக விதம் விதமாய்ப்பாட வல்லரேனும் அப்பாட்டில் நடந்துகொண் டிருக்கும் ஸ்வர வியவகாரங்க ளெல்லாம் நிஜதரிசனமாகக் கண் டனுபவிக்கத் தக்கவன் வாத்தியக்காரனே. பாட்டில் ஸ்வரஸந்தேகம் வந்தால் வாத்தியத்தைக் கொண்டு தெளிகின்றார்கள். பாட்டில் உலக மெங்கும் கியாதி பெற்ற ஒருமஹா வித்வான் ஒவ்வோர் சமயம் தனித் திருந்து ஒருவாத்தியத்திற் பழகியிருந்ததனைக் கண்ட அவருடைய நண்பரொருவர் அவரை வியந்துநோக்கி "நீர் இவ்வாறு இந்த வாத்தியத்தில் சிரமப்பட்டுப் பார்ப்பதெற்றிற்கு" என்றுவினவ, வித்வான், "பாட்டி லுள்ள விஷயங்களெல்லாம் இதில்நன்கு புலப்படுகின்ற விநோதம் உண்டாகின்றதன்றி இதில் எனக்குத் தெளி வான ஞான விர்த்தியும் தழைக்க ஏதுவாகின்றது. நீயும் இந்தஉண்மை அறிவாயாக" என்றார். தாங்கள் செப்பியபடி பசுவுக்கும் சிசுவுக்கும் பணிக்கும் கான ரசம் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் எனக்கு ஒருவகை யில் ஊகிக்கவிருக்கின்றது. இவை மூன்றினுந் தெய்வீ கத்தன்மை பொருந்தி யிருக்கின்றது. பசுவினது சரீ ரத்தின் ஒவ்வாரு பகுதியிலும் ஒவ்வொரு தேவதை யிருப்பதாம். அதற்கு மற்றவிசேஷங்களும் சாஸ்திரத் திற் கூறப்பட்டிருக்கின்றன. சிசுவானது சாதுவுக்குச் சமானம். பல உபசரணை களையும் அதுபெறுகிறது. பெரியோ ரெனப்படுவோர் சிசுவினது குணங்களைப் பொருந்தி யிருப்பரென ஏற்பட்டிருக்கின்றது. பணியா னது தாண்டவமூர்த்திக்குப் பணியா (ஆபரணமா) யிருக்கும் பெருமை பெற்றது. யோகவலி முதலிய அருங்குணங்கள் அதற்குண்டு. வெகுகாலம் ஆயுளுடை

யது. மனிதரால் தெய்வமெனக் கொண்டாடப்படு கின்றது. நாகப்பிரதிஷ்டை யென்பதான ஓர்சடங்கும் செய்வார்கள். பொல்லாத சுபாவமுடைய அதற்குமேற் கூறிய தன்மைகளால் நல்லப்பாம்பு என்றுபேர் வழங்கு கிறார்கள். ஆனந்தத்தினின்றும் கானம் பிறந்ததாகவும் குறிதீர்த்தீர்கள். அப்படி ஆனந்தத்தினின்றும் உற்பத் தியான கானமானது துக்கத்தையும் ஜெனிப்பிக்கக் கூடியவாறேது? நீலாம்பரியையோ அல்லது முகாரி யையோ கொண்டு பிரலாபிப்பதில் சோகத்தை யதிகமு முண்டாக்கிவிடக் கூடியதா யிருக்கிறதே? (ஆங்கிலேய ருக்குத் துக்கத்திற்கேதுவாகிய (Deadmarch) உண்டா யிருக்கின்றது. இது எவ்வாறு பொருந்து மென்பதை எனக்குத் தெரிந்தமட்டும் தங்களை ஒட்டியே பிரஸ்தா பிக்க நினைக்கின்றேன். மாசற்ற சூரியன் கடல்நீரில் உபாதியுடன் கூடியிருப்பதினால் அவனுக்குப் பாதக மென்ன? பெற்றோர் தம்மக்களைக் கண்டிப்பது கொடு மையாவதோ? அதுதோற்ற மாத்திரத்திற் கொடுமை போனுமாயினும் சிறார்நலத்தையே பொறுத்ததன்றோ? அழுதுதுயருறுவதும் ஒருவருக்கு ஆறுதலுண்டாக்கு மன்றோ? அழுதுதீர்த்தாலன்றி ஒருவர்கொண்ட துய ரம் போகமார்க்கமெங்கே? ஆடு பின் வாங்குவதெல்லாம் முன்சென்று தாக்குவதற்கேயாம். சோகமு மின்பா மென்பதாற் "சோகரசம்" என்று வழங்கப்படுகிறது. இந்தரசத்தில் யாவரும் இன்புறுதிருப்பதில்லை. ஈஸ்வர னிடத்து ஆனந்திதோன்றி நாதவடிவாய்ப் பின் உயிர் களின்நாவுதோறு மிருந்தியங்கவல்லளாயினள். மேலும் சுகத்திலிருந்து துக்கமும் துக்கத்திலிருந்து சுகமும் உண்டாகின்ற தென்பது கவனிப்போர்க்கு நன்குவிளங் கும். சுகமுந் துக்கமும் ஒன்றை விட்டொன்றிருப்ப

தில்லே. சுகத்துள்ளே துக்கமும் துக்கத்துள்ளே சுகமும் என்றுமுளவா யிருக்கின்றது. சுகமுந் துக்கமும் ஒருவருக்கு ஆறிடுமேடு மடுவும்போல் வருகின்றன. ஒருவனுடையஸந்தோஷத்திற் கேதுவா யிருக்கும் அவனுடைய குழந்தை ஒன்றே பின் இறந்துவிட நேரிட்ட காலத்துத் துக்கவேதுவை யவனுக்குத் தருகின்றதன்றோ? முன்னம் அவனுக்கு அந்தக் குழந்தை ஜெனிக்காமலே இருந்து விட்டால் இந்தத் துக்கம் உண்டாயிருக்கக் காரணமேயில்லே. இதனால் பெரியோர் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாகப் பாராட்டுவார்கள். இவ்வாறு பாராட்டுவதே சொல்லிறந்த ஆனந்தமென்பார். "சொல்லொணுதிந்த ஆனந்தமே". இதுபோல் ஸங்கீதம் ஒன்றே இன்பத்திற்கும் துன்பத்திற்கும் காரணமாகவைத்துக்கொண்டு கடைசியில் ஆனந்தத்தைப் பிராப்தமாக்குகின்றதென்று ஏன்சொல்லக்கூடாது?

சிவானந்தன்:—காதலியே! உனது கல்விக்கேற்ற நுட்பபுத்தியைப் பார்க்க எனக்குப் பிரமானந்தமாயிருக்கிறது. "சொல்வன்மை யின்றெனி னென்னும்" "சொல்லுதல் வல்லான் நூறுயிர வருளொருவன்" அன்றோ? "சொல்லல் வல்லன் சோர்விலனஞ்சா னவனை இகல் வெல்லல்யார்க்குமரிது". வாத்தியமானது வாய்ப்பாட்டிலும் சிலாக்கியமென்று நீ பலசாஸ்திர நியாயங்களால் தெரிவித்தனே. இதனைப் பாட்டுக்காரர் தெரிந்தால் தம்தொழில் குறைவுபட்டதா வென்று எதிர்வழக்குப் பேசுவரென்று நினைக்கிறேன். அப்படிப்பேசுபவர்கள் தமக்கு எவைகளை ஆதாரமாகக்கொண்டுமெய்ப்பிப்பார்களோ என்பதைத் தெரியவும் மிகவிருப்பமாகின்றேன். வீணையுடனொட்டி மெல்லிய குரலாற் பாடுவது ஓர்சாரிருக்க வாய்ப்பாட் டொன்றையே

பூரண சாரீரத் தொனியுடன் பாடிப் பரவசம் தரு கின்றவர்களும் உண்டா யிருக்கின்றார்கள். எல்லாந் தெரிந்து உசிதமார்க்கங்களை யாராய்ந்து ஒத்து நடக்கும் இயல்பினை வாய்ந்தவள் நீயன்றோ? உமாதேவியார் து திருமுலைப்பாலுண்ட பெருமையா லன்றோ நந் திருஞான சம்பந்தப் பெருமானும் பண்கனிந்த தேவாரங்கள் பாடவல்லவரானார்? அதுபோல உனக்குண்டா யிருக்கும் ஸங்கீதஸாஹித்ய ஞானத்திற்குக் காரணமென்ன வென்பது தெரியவில்லை. இவ்விரு ஞானங்களில் ஒருவருக்கொன்றிருந்தால் மற்றொன்று பூச்சியமாயிருப்பது உலகாநுபவம். நீ கலைமகளின் பூரண அநுக்ரஹத்தைப் பெற்றவ ளென்பதே பொருந்தும்.

சிவானந்தி:—நாதா! நாதா!! தேவரீர் என்னை இவ்வாறு புகழ்ந்துரையாடு கின்றீர்களே? "நுண்ணறி வுடையோர் நூலொடுபழகினும் பெண்ணறி வென்பது பெரும்பேதமைத்தே". எல்லாந்தாங்கள் சிறியவள்பேரில் வைத்திருக்கும் அன்பேதான் காரணம். யாருக்கும் புதிதாய்க்கிடைத்த வொன்றிற்பிரியமதிகமுண்டாவது சகஜமே? அன்பான வென்னை யிவ்வளவு நீண்டகாலமாக விட்டிருந்தீர்களே?

சிவானந்தன்:—(அவளை இறுகத்தழுவிக் கொண்டான் அடிப்பிரியை! உன்னிடத்தில் வீணைகேட்டு வெகு காலமாயிற்றே? சற்று வாசிப்பையாயின் கேட்கலாம்?

சிவானந்தி:—(உடனே வாசித்துக்கொண்டு ஓர் இராகம் பாடுகிறாள்).

சிவானந்தன்:— (பரவசமானான்) அடிகட்டழகி! இந்த இராகம் செவிக்கு அமுதவாரியா யிருக்கிறதே! இது என்ன இராகம்?

சிவானந்தி:—இது "சிந்து ராமக்கிரியை"

சிவானந்தன்:—ஆஹா! சுகவாரிதியே! இராகங்களுக்கு அமைந்திருக்கும் பேர்களின் அழகும் ஓர் அழகாயிருக்கின்றன. இந்த சிந்துராமக்கிரியை யென்பது எந்தமேளத்தில் ஜன்யம்?

சிவானந்தி:—"மாயாமாளவ கௌளை" யிற் சந்நியம். (கீர்த்தனை வாசித்துப் பாடுகிறாள்). தேவதிதேவஸாதசிவ. ... ... ... ... ...

சிவானந்தன்:—ஆஹா! கட்டிக்கரும்பே! இஃதென்னநேர்த்தி! என்னநேர்த்தி!! என்ன ஸௌகுஸ்யம்!!! என்ன கர்ணாமிர்தம்! தந்திக்கும் குரலுக்கும் வித்தியாசமே தெரியவில்லையே! என்பிரியை? இது சிவபுறமான கீர்த்தனையாய்த் தெரிகிறதே? கடைசியில் தியாகையரவர்களின் முத்திரை யிருக்கிறதே? என்ன விநோதம்!

சிவானந்தி:—தியாகையவர்கள் சிவபுறமாகவும் பல கீர்த்தனங்கள் செய்தே யிருக்கின்றார்கள். அவைகளில், "சித்தாஞ்சநி" இராகத்தில் "நாததநுமநிஸம் ஸங்கரம் நமாமிமே மந ஸா சிர ஸா" என்பதும், "பங்கராள" இராகத்தில் "கிரிராஜஸுதாதநயா" என்பதும் எனக்குப் பாடம்.

சிவானந்தன்:—அடி இன்பரசமே! அய்யரவர்கள் சிவபுறமாகவும் வேறேகீர்த்தனங்கள் செய்திருக்கிறார்ளா? அவை யெனக்கு இதுவரைகவனிக்க நேரவில்லை. கடந்த ஞானிகள் ஹரிஹரபேதங் கொள்வதில்லை. "சிவாயவிஷ்ணு ரூபாய சிவரூபாயவிஷ்ணுவே", "தாழ்சடையு நீண்முடியு மொண்மழுவுஞ் சக்கரமுஞ்-சூழரவும் பொன்னாணுந் தோன்றுமால்-சூழுந்-திரண்டருவி பாயுந் திருமலைமே லெந்தைக் கிரண்டுருவு மொன்றா

யிசைந்து". (பேயாழ்வார்)—கொஞ்சம்படித்தவர்களே குறைகுடம்போல் வா யலப்ப லாடுவார்கள். "நிறை குட- நீர்த்தளும்பலில்". செந்நாப்போதாரும், "வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்-பச்சோலைக் கில்லை யொலி" எனக் காட்டியுள்ளார். பூம்பாவாய்! நீசிவபுற மான மற்ற இரண்டு கீர்த்தனங்களையும் முற்றும் பாடி வாசித்து விடுவாய்!

சிவானந்தி:—அவ்விரு கீர்த்தனங்களையும் பாடி முடித்தபின், திருச்சிற்றம்பலம். தோடுடைய செவி யன், கூற்றாயினவாறு விலக்ககிலீர், பித்தாபிறைசூடீ என்றவைகளை ஆதியாகவுடைய தேவாரங்களைப் பாடி னாள்.

சிவானந்தன்:—(உரோமஞ் சிலிர்ப்ப உச்சிமேற் கரத்தனாய் இருகண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் ஊற்றெடுத்திழிய விருந்தனன்). அடி பாக்கியவதி! நீ பாடியவை, ஸ்ரீசம்பந்த சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரங்க ளின் முதன்மையானவைக ளல்லவா?

சிவானந்தி:—ஆம், இதுவொன்றும் கேளுங்கள். "தம்மையே புகழ்ந் திச்சை பேசினுஞ் சார்வினுந் தொண்டர் தருகிலாப்-பொய்ம்மையாளரைப் பாடாதே யெந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள் - இம்மையே தருஞ் சோறுங் கூறையு மேத்தலாமிடர் கெடலுமா- மம்மையேசிவ லோகமாள்வதற் கியாதுமையுறவில் லையே".

சிவானந்தன்:—(இதன்பொரு ளின்புடன்சேர்ந்த கானரசத்தாற் சொல்லொணாப் பேரின்பங் கிளைத் தான்). அடிபுண்ணியவதி! ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள்

திருவாக்கினாற் சொல்லப்பட் டிருப்பதைப் போலவும் வீண்நர ஸ்துதிகளைப் பாடுவதிற் பிரயோசனமில்லை. நீ ஈஸ்வரனைப்பாடித் துதிக்கும் பாட்டுகளே பாட்டுகள். ஈஸ்வரசம்பந்தமான பாட்டுகளைக் கானரசம் பொருந் தாமற் பாடுவதிற் பயனில்லை. சிவேசனைப் பஜிக்க வேண்டுவதில் ஆசைகொண்டே ஒருவர் இந்த ஸங்கீத ஸாஸ்திரத்தைத் திறக்க வேண்டும். அப்படி யின்றி யாதாமொருவர் இந்தத் தெய்வீகம் பொருந்திய நூலை வேறு வீண் காரியங்களை உத்தேசித்துத் திறந்து அங்குள்ளவைகளைக் கற்போரானால் அத்துராத்துமாக் களுக்கு மகரிஷிகளுடைய கொடியசாபங்கள் திரளாய்க் குவிந்துகிடக்கின்றன. இந்தவுண்மையை இக்காலத்தில் உலகத்திற் பெரும்பாலர் அறியாமல் வயிறு வளர்ப்பின் பொருட்டும் வித்வத் சம்பிரதாயத்தின் பொருட்டும் காமத்தின்பொருட்டும் பலவாறுகளாகக் கற்கமுயன்று சீர்கெட்டு அலைகின்றார்கள். அந்தோ! என்னபரிதாபம்! ஒப்பற்ற ஸங்கீதத்தின் பெருமை இவ்வாறும் சிறுமை யடையலாகுமோ!

சிவானந்தி:—நாதா! ஈஸ்வரனை நாம ஸங்கீர்த்த னம் செய்யவேண்டியது முக்கியமென்றாலும் நீதியாதி நல்ல விஷயங்களில் உற்சாகத்தை யுண்டாக்கக் கூடிய மார்க்கங்களிலும் உசிதமாய் ஸங்கீதத்தை யநுசரிக்க லாமன்றோ? (திரும்பி வீணையைமீட்டி வாசித்துப் பாடு கிறாள்). "அல்லல் வினைவாராதுமறலிதூதெதிரா தருங் கவலை சற்றுறாது: அடர் பில்லியேவல் வஞ்சனை சூனி யங்கள் வந்தடையா நவக்ரகங்கள் - வில்லங்கமான துர் ஸ்தானத்தை நோக்காது மேகமுதலான கர்ம, வியாதி களு மணுகாது விடதிஷ்ட மாயினும் விலகுமேலேறி டாது-சல்லியஞ்செய் ப்ரம்ம ரட்சசு முதற் பிசாசுங்

களுமெதிர்ந்திடாது, சரவணபவாவெனத் திருநீறெடுத் துச்சரித் தணிந்தவர்தமக்கே-மல்லேறு மிமையாசலக் குமரிபாலனே வள்ளிகுஞ் சரிமணாளா, வனசமலரயன் மதனை யருள்சரச கோபாலமருக சரவணமுருகனே".

"வாழ்வாவதுமாய மிதுமண்ணாவது திண்ணம் - பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய் செய்தபரிதான் - ழூழா தறஞ்செய்மின் றடங்கண்ணன் மலரோனுங் - கீழ்மேலுற நின்றான் றிருக்கேதாரமினீரே".

"நடலைவாழ்வு கொண்டென் செய்தீர் நாணிலீர்- சுடலை சேர்வது சொற்பிரமாணமே - கடலினஞ்சமு துண்டவர் கைவிட்டா - லுடலினார் கிடந்தூர் முனி பண்டமே"."பூக்கை கொண்டரன் பொன்னடி போற்றி லார்-நாக்கைக்கொண்டர னாமநவிற்றிலார்-யாக்கைக்கே யிரைதேடியலமந்து காக்கைக்கேயிரையாகிக்கழிவரே".

"வாழ்த்தவாயு நினைக்கமடநெஞ்சும் - தாழ்க்கச் சென்னியுந் தந்த தலைவனைச் - சூழ்ந்த தூமலர்தூவித் துதியாதே - வீழ்த்தவாவினையே னெடுங்காலமே".

"கற்றுக்கொள்வன வாயுள நாவுள-விட்டுக்கொள் வன பூவுள நீருள - கற்றைச் செஞ்சடையானுள னாமு ளோ - மெற்றுக்கோ நமனால் முனிவுண்பதே".

"வாழ்க வந்தணர் வானவரானினம்-வீழ்கதண் புனல் வேந்தனுமோங்குக-வாழ்கதீயவெல்லா மரநாம மே - சூழ்கவையக முந்துயர் தீர்கவே".

திருச்சிற்றம்பலம்.

சிவானந்தன்:—ஆஹா! எனது அன்புள்ள அமுத வாரிதியே! சிவத்தினது ஆனந்தத்தைப் பெருக்கு வதால் உனக்குச் சிவானந்தி யென்றபேர் பொருத்த மாகவே யிருக்கின்றது. உன் அற்புத கான வழியில்

யானும் அவ்வானந்தத்தை அநுபவிக்கப் பிராப்தமாயிருக்கின்றபடியால் எனக்குச் சிவானந்தன் என்னும் பேரும் பொருத்தமா யிருக்கின்றது. நீ முந்தின ஜென்மத்தில் தேன் பால் பரமேஸன்முடியில் சொரிந்ததும் இந்தஜென்மத்தில் தேனினும் பாலினும் இனியகானத்தை என்செவியிற் சொரிந்ததுமான விதங்களைப்பற்றி இப்போது யெனக்கு ஒன்றும்சொல்ல நாவெழவில்லை. பிரமானந்தத்தையும் நிதரிசனமாக்கண்டு அநுபவித்தேன். "சொல்லொணுதிந்த வானந்தமே" என்றபடி இதனை யெவருமேயிது காவஞ் செப்புந் திறத்தா ரில்லாதபோழ்து யானென்செபவேன்?"படிக்கின்றிலே பழநித்திருநாமம் படிப்பவர் த ண் முடிக்கின்றிலே"."ஆடும் பரிவே லணிசேவ லெனட் பாடும் பணியே பணியாவருள்வாய்" என்ருதி மேதக்க திருமொழிகளின் றிறமிருந்தவாறென்னே!

சிவானந்தி:—(இதுவரை தன்னுடைய கானத்தினின்றும் சேரப் பெருகிய இரசத்தைப் பானஞ்செய்து இன்பலாகிரியிற் சொக்கிச் சற்று அயர்ந்திருந்தாள். பின்மெல்லெனத் தெளிந்து வீணையை மீட்டிப் பாடுகிருள்). "காதலனைக்கண்டேன் என்றன் கவலையெல்லா மொழிந்தேன்........."

நல்ல நிலவு வீசிக்கொண்டிருந்தது. மாருதம் மெல்லென மணமருவி புலவியது. எங்கும் நிசப்தமாயிருந்தது. தந்தியுடன் சேர்ந்த பாவையவள் குரலோசைமட்டும் ஆனந்தமாய் அங்குதமைத்திருந்தது. அப்போது அப்பூமானுக்கும் பூவைக்கும் உண்டாயிருந்த மனோற்சாகங்களைவருணிக்க நாவலனெவனுமாகாது. வெகுநாட் பிரிந்த காதலியைச் சிவானந்தன் இப்போது

கண்செய்த பாக்கியமாய் வந்து காணவும் அவளது சிங்கார கானத்தைக் கேட்கவுமான மனோகரமான இந்த நேரத்தில் அவனுக்கு இன்பம் உண்டா யிருந்ததெனி னும், அவளை அநுபவிக்கப் பெரும்வரையி லுண்டான துன்பமும் ஒருபுறம் முளைத்தோங்கி வந்தது. இவ னது கலவிக்கு இணக்கமுள்ளவளாய்ச் சிவானந்தி அருகிலிருந்தாலும் இன்னம் அவளைச்சேரப் பெறுமை யால் சிவானந்தன், அவளது கூரியமுலைக்கொம்பாலும் புருவவில்லிற் பூட்டிய நேத்திர வேலாலும் தாக்கப் பட்டுத் தேகம்நொந்து உள்ளுடைந்திருந்தனன். அவ னது காமக்கனலை விருத்திக்கக் கானக்காற்று முண்டா யிருந்ததன்றே? கையில் அமுதம் கிடைத்தா லும் அதனைப் புசிக்குமட்டும் பயனெப்படி யுண்டா கும்? எமனுனவன் பெண்ணின் சொருபமா யிருக்கிறு னென்று நூல்பேசுகின்றது. சிவானந்தியானவள் சிவா னந்தனுக்கு உரிமையுள்ள இன்பமனைவியா யிருந்தா லும் இப்போது அவள் அவனுக்கு எமனைப்போலும் வாதனைக்கிடம்தர ஏற்பட்டதே? போருக் கஞ்சாத சிவானந்தனுடைய தீரமெல்லாம் இந்த வொர்பெண் ணைக் கண்டவுடன் எங்கேயோ ஒழிந்தோடிப் போய் விட்டதே!

சிவானந்தன்:--என்உயிர்க் காதலியே! நீயேயெனக் குப் பலவாற்றானும் இப்படிச் சகிக்கமுடியாத கொடுந் துன்பினைத் தரக்கூடியவ ளாகிவிட்டால் எனக்குவேறு புகல் என்ன இருக்கிறது? இயற்கையிலேயே மேனி முழுதும் அழகுமயம் ஜொலித்துக்கொண் டிருக்கும் உனக்கு இந்த ஆபரணங்களால் என்னபயன்? அவை கள் பாரமாய் உனதுமெல்லிய திருமேனியைத் தளரச் செய்யுமென வருந்துகின்றேன். மேலும் அவைகள்

உனது தேகவடிவினை எனக்குச் சரியானபடி காட்டாமல் மறைத்தும் இருக்கின்றனவே? உனக்கு விலைமதிக்கவும் கூடாத கல்விஆபரணம் ஒன்றே போதாதா?

சிவானந்தி:—(வீணையை நிறுத்திச் சற்றுநாணமும் புன்சிரிப்பும் உடையவளானாள்). சுவாமி! நான் இப்போது தங்களுக்கு என்கையாரக் கலவைச் சந்தனம் பூசுகிறேன். பிரியமுடன் தாங்கள் அதனை அங்கீகரிக்க வேண்டும்.

சிவானந்தன்:—அடி உத்தமி! நானல்லவோ இப்போது உன்னுடைய அபார கானத்துக்காகச் சந்தோஷப்படுத்திச் சன்மானம் செய்யவேண்டும்? புயல் போலும் நீபொழிந்த கானமழைக்குக்கைம்மாறு எங்கும் காண்கிலேனே? அப்படியிருக்க நீ எனக் குபசாரம் செய்யத் துணிந்தனையே?

சிவானந்தி:—சுவாமி! யாருக்கு யார் சன்மானஞ் செய்கிறது? அடியாளாகிய நானே தேவரீருக்குச் சகல உபசாரங்களையும் செய்யக் கடமைப்பட் டிருக்கின்றேன். தேவரீர் அவைகளுக்குப் பதிலாக அன்புமழை மட்டும் என்பேரிற் பொழிந்து என்னை வளமுறத் தளிர்க்கச் செய்யவேண்டும். அதனைத்தவிர அடியாளுக்குச் தேவையானது வேறொன்றில்லை.

சிவானந்தன்:—புத்தியுடையவளே! நானெவ்வித குணத்தனா யிருந்தபோதிலும் உன்னுடைய குணவிசேஷங்களால் என்னையென்றும் உன்னிடத்தில் அன்புடையனாகவே செய்து விடுகின்றனை. நீ அந்தச் சந்தனக் கோப்பையை அந்தமுற என்முன் வைத்து நீயும் சமீபமாய் உட்காரு. நானே உனக்கு முன்னாற் பூசிவிடப் பிரியமுள்ளவனா யிருக்கிறேன். வங்கியசூடாமணி

என்னும் பாண்டியராஜன் தன் மனைவியினது கூந்தலில் மட்டும் இயற்கையோடுங் கூடிய வாசனை யுண்டா யிருந்ததாகத் தெரிந்தனன்; ஆனால் நானோ உனது பாதாதிகேசாந்தம் இயற்கை நன்மண முடைத்தெனத் தெளிந்திருக்கின்றேன். நித்யனுயிருக்கும் பரம்பொரு ளுக்கும் வாழ்த்துக்கூறும் சம்பிரதாயம்போல உனக்கு மணமேனியிற் கலவை பூசவிரும்பினேன் (என்று திவ்ய பரிமளமாலையை அவள் கழுத்தில் அணிந்து அவளை இன்புற நோக்கினன்).

சிவானந்தி:—(நான் தங்களுக்கு முதலில் ஒரு பொட்டிடுகிறே னென்று சந்தனத்திலதம் வைத்தாள்). நாதா! இதோ பார்த்தீர்களா? நான்தங்கள் நெற்றியி லிட்ட பொட்டு சந்திரனைப்போன்று விளங்கிக்கொண் டிருக்கிறது.

சிவானந்தன்:—இதோ நானுனக்கு ஒருபொட்டு இடுகிறேன். இப்போது நானிட்ட பொட்டை யுனது வளைந்த நெற்றியில் நான்பார்க்கும்போது அதுமூன்றும் பிறையும் பூரணமதியும் சேர்ந்திருப்பதைப் போல விளங்குகிறது. நீயும் பூரணமதி உடையவளே தான். உன்முகமாகும் தாமரை அந்த இரண்டு சந்திரருக்கும் குவிந்திருப்பதை யொழித்து அவைகளின் சமீபத் திலே மலர்ந்திருக்கும் தோற்றமானது எனக்குப் பெரி ய வியப்பைப் பெருக்குகின்றது.

சிவானந்தி:—நாதா! தாங்கள் சொல்லியது வெகு நேர்த்தியாயிருக்கிறது. ஆ னு ல் சந்திரனுக்கும் ஒளி யைத்தர வல்ல சூரியனைப்போலும் மகத்துவமுடைய தங்கள் சந்நிதியின்முன் எனது முகமாகிய தாமரை மலர்ந்திருக்கும்படிக்கு ஏற்பட்டது தங்களுக்கு ஓர் ஆச்சரியமும் விளைக்கக்கூடியதோ!

சிவானந்தன்:—பேஷ்! பேஷ்!! அறிவுள்ள எனது கண்மணியே! இவ்விதம் கற்பனைபேசிய உனதுபவளத் திருவாய்க்கு நான் இப்போது ஒருமுத்தம் கொடுக்காம லிருக்கக் கூடவில்லை. (முத்தமிட்டு ஆனந்தித்தான்).

சிவானந்தி:—நான் புத்தியிலாவது குணத்திலாவது அழகிலாவது சிறந்தவள் அன்று. பேதையர்க்குப் பேதையான நான் ஒருத்தி. இப்படிப்பட்ட என்னிடத்தில் தாங்கள் அன்பு கூருவதற்குக் காரணம் தங்களுடைய மேதக்க உத்தமகுணத்தோடும் நமதுசிவசுப்பிரமணியக் கடவுளினது பேரருளும் ஒன்ற விருக்கின்றதினாலே தான்.

சிவானந்தன்:—"அவனன்றி யோரணுவு மசையாது" என்பதற் கிணங்க நீ நம் ஈசனைக் குறிப்பிட்டு வன்னமாச் சொன்னது வாஸ்தவ்வியமே. ஆனால், அந்தக் கடவுள் என்னில் அநுக்கிரகமாய் நீ முன் கூறியபடிக்குள்ள மூன்று அரிய குணங்களையும் உன்னிடத்தில் அடைவித்துப் பின் அத்தகைய உன்னை என்னிடத்திற் சேர்ப்பித்த கருணைத்திறத்திற்கு நான் யாது கைம்மாறு செய்யக்கூடும்? மேகம் வழங்கிச்செய்யும் பேருபகாரத்திற்கு உலகம்பிரதி அளிக்கக்கூடுமோ?

சிவானந்தி:—காந்த! இதோ இவ்வெற்றிலைச் சுருளை வாயில் வாங்கிக்கொள்ளுங்கள். பாக்கைமாத்திரம் அப்போது வாயிற் போட்டுக்கொண்டபடிக்கே பேசியிருக்கின்றீர்களே? தங்களுடைய வாயானது கற்பனைகளினால் மணம்பெற்றிருப்பது பற்றி இந்நறுமணத் தாம் பூலமும் இனத்தை இனமடையும் நியாயம்போல அவ்வாயைச் சேர்ந்திருக்க விருப்பங்கொண்டு அவசரப் படுகின்றதே?

சிவானந்தன்:—நாரியர் நாயகமே! நீ சுபாவமாய்ப் பேசுங்காலையிலும் அது அமுதம்போன்ற வீணைகான மாய்ப் புளகிதம் தரக்கூடியதாகின்றது. அது பொன் மலர் நாற்ற முடைத்தானவாறு போலச்சொற்பொருட் சுவையுடனும் சேர்ந் திசைக்கும் பெருமை கொண் டெழுதலு மாகலின் எனக்கு அடங்காப் பேரானந்தம் தழைத்தோங்குகின்றது. அவ்விதம் தழைத்தோங்குவ தற்கேய்ப்ப உன்பேரில் எனக்கு ஆசையைமூட்டி நிற் கும் பேராசை தணியும்வகை சீக்கிரம் ஏற்பட்டா லன்றி யான் சிறிதும் தரித்திருப்பேனோ? அடி பெண் ணமுதமே! (என அவளை இறுக்கச்சேர்த் தணைத்து முத்தாடி அவளுடைய கந்தரத்திலும் பின் அவளு டைய வளையல்க ளணிந்தஉபய திருக்கரங்களையும்பற்றி அவைகளிலும் கந்தக்கலவையைப் பிரியப்பெருக்குடன் பூசுவதானான்).

சிவானந்தி:—(மோட்ச சாம்பிராயச்சியத்தினைப் பெற்றவள் போலப் பரவசமாகி) ஏ! பிரியநாத! தாங் கள் எனது கரங்களிற் சந்தனக்குழம்புபூசி அவைகளில் நெளிக் கோலம் போட்டீர்கள். நான் தங்களுக்குக் கலவை பூசிவிடுகின்றேன் (என்று திவ்யசுகந்தக்கலவை யைத் தனது தாமரைபோன்ற கரங்களால் எடுத்துத் தன்பிராண நாயகனது திருவுடலில் திமிர்ந்து பின் அப்பூசலிற் பலவித விநோதச் சித்திரிப்புகளால் அவய வங்கள் தோறும் கோலமுறச்செய்து சவ்வாதுப் பொட் டிட்டுப் பூமாலையும் செண்டும் உதவி உவந்தனள்.

சிவானந்தன்:—அடி! காமரசப் பெருக்கே! நீ என்ன காரியம் செய்தனை? எனக்குப் பூசியது குளிர்ச்சி பொ ருந்திய சந்தனமோ? எனக்கு உண்டாகிய விரகாக்கி னிக்கு நெய்வார்த்ததுபோல் ஆயிற்றே? உன்ஜாதிச்

சவ்வாதுக் கலவையில்மிகவும் என்சிந்தை நாடுகின்றதே? உன்னுடைய பந்தன்ன சந்தனத்தையே என் உரத்தில் இது சமயம் பொருத்தி என் தாபத்தைப் போக்குவிப்பாய்! உனதுகூரிய தனத்தினது தாக்கலினால் என்மார்பு கீண்டால் அதின்வழி அங்கு என்னை வாட்டியுள்ள காமக்கனல் வெளிக் கிளம்பலாகி யான் பேருறுதலடைவேன்! நான் தழைக்கவரும் அமுதமே! (என்றபின், இருவரும் இரதியும் மதனும்போலக் காமநூல் இலக்கணப் படிக்குக் கிரீடித்துத் இன்ப சமுத்திரத்திலாழ்ந்து அதின்கரை காண்கிலர்களாய் இருந்தார்கள்).



(2.)

சின்னையன் கரியநிறத்தன் - மெலிந்ததேகத்தன்-அகன்றஇடையன்-ஒடுங்கியநெஞ்சன்-கூனல் முதுகன்-நீண்டமூக்கன் - உருண்டு பருத்த விழியன் - அகன்று புடைத்த நெற்றியன்-உச்சிச் சிறுகுடுமியன் - அரையினின்றும் அடிக்கடிதானே நெகிழக் கூடிய வஸ்திரமுடையவன்-பேதமைப்புத்தி யுடையவன் - விசாரணையின்றி எதையும் நம்பும் சுபாவத்தன்-சாப்பாட்டுப் பிரியன் - எழுத்துவாசனை அனேகமாய்த்தெரியாதவனெனலாம்-சைவ வைணவ புராணங்களைக் கேள்வியாற் கற்றுக்கொண்டு கதைகள் சொல்லத் தெரிந்தவன்-ஸ்ரீசுப்பிரமணியக் கடவுளிடம் மூடபக்தி யுடையவன் - இருபத்தைந்து பிராயத்தன் - சுந்தரமும், கூடியகல்வியும், கற்புமுடைய கௌரி யென்னும் மனைவியை யுடையவன்.

சின்னையன்.—அடி! கௌரீ! இன்றைக்குக்கார்த்தியல் தெரியுமாடீ! எப்பொழுதும் போலே வீடுவாசக்க

மொளுகுபோ. நான்சாமிபூசைக்குக் கடைக்குப்போய்ச் சீக்கிரம் வந்திடுகிறேன். இந்தாடீ! அடிகௌரீ! எங்கே போறாய்? விடிஞ்சு எட்டடிக்கப்போகுது - சுறுக்குப் பண்ணு!

கௌரி:—(கிட்டி வந்து) கார்த்திகை நாளைக்காமல்ல?

சின்னையன்:—இல்லேடி! இன்னைக்குத் தாண்டி. அங்கே பிறையிலே ஒத்தைரூபாய் வச்சேன். கொண்டு வந்துதா நான்போய்த் தேங்காய் பழம் எல்லாம் வாங்கித் திரும்புகிறவன், பொக்குணு வரவேண்டும்.

கௌரி:—இது என்ன உங்களுக்குத்தான் இந்த அவசர தடபுடல் போகிறதில்லையே. வீட்டில் ஒரு விசேஷம் வந்தால் இப்படித்தான். வந்தது வந்ததுதான், போனது போனதுதான். ஆறஅமர ஒழுங்காய் நடத்திக் கொள்ள வேண்டாமோ (என்றுபோய் பார்த்துவந்து) பிறையிலே ரூபாயைக் காணோமே?

சின்னையன்:—(கண்களை அகல விழித்து நிமிர்ந்து மூக்கின்பேரில் விரலைவைத்து அமர்ந்திருந்து ஆலோசித்துத் திடீரென உடம்பைக் குலுக்கி) இல்லையடி மறந்தாப்போலே சொன்னேன். எரவாரச் சுவத்திலேபாரு. நல்லாத் தடவிப்பாரு. திடீரென்றுவாடீ நேரமாச்சு நான்போய்த் திரும்புறவன்.

கௌரி:—"இந்த அவசரத்திற் குண்டு சட்டியிலும் கை நுழையாது" என்று போய்த் திரும்பி வந்து, "இந்தாருங்கோ! சுவற்றில் தானிருந்தது. இந்த பாருங்கள்? நீங்கள் பூ அதிகம்வாங்கி வாருங்கள். சுவாமிக்கு நிறையாச் சாத்தி நான்நன்றாய் வைத்துக்கொள்ளவேணும். சும்மா அவசரப்பட்டுத் துடிக்காதிர்கள். இந்துத் துடிப்

பால் சீக்கிரம் வேலை ஆகிவிடுவதாய் நினைக்கிறீர்கள்! இதனால்தான் அதிகநேரமெல்லாம் ஆகிவிடுகிறது. வீட்டில் ஒன்று இருந்தால் ஒன்று இல்லாமற் போய்விடுகிறது. அதனைச் சற்று சாவதானமாய்ப் பார்த்துக் கொள்ளவேண்டாமா? பட்டண மஞ்சளும் நல்லதாய் வாங்கி வருகிறீர்களா?

சின்னையன்:—மஞ்சளைச் சுமங்கலிக்குப் பிரம்மா நிறுத்துப் போட்டிருப்பான். அதனை நீ அதிகமாகப் பூசிப்பூசி என் ஆயுசைக் குறையாதே. தெரிகிறதா! சரி நல்லது. மஞ்சக்கிஞ்ச ஆறுகாசுப்பூ எல்லாம் வாங்கி வாறேண்டியோ! பெண்டுக பேச்சைக் கேக்கப் படாதடியோ! சரி இருக்கட்டும். நீ சாக்கிரதையா யெல்லாம் பார்த்து வையடீ நான்போய் வந்து விடுகிறேண்டீ" (என்று தலைவாசலில் நின்றுகூவி வெளியே விரைந்தனன்).

கௌரி:—(தன்புருஷன் எட்டச்சென்ற சமயத்தில் திரும்பக் கூப்பிடுகிறாள்) இந்தாருங்கோ ஓ! உங்களைத் தானே எ!!

சின்னையன்:—(திரும்பிப் பார்த்து) என்னடீ இ! போகையி லேதுக்கிரீத்தணமாக் கூப்பிடுறே!! சங்கதி என்னஅடீ இ!!!

கௌரி:—உப்பு! உப்பூ உ!!

சின்னையன்:—சரி உப்பு கிப்பு எல்லாம் தெரிஞ்சிக்கிட்டேன்! நீ போடீ இ! வேலையைப்பாரு உ! தலையை முழுகிப்பிட்டுஇரு உ!

கௌரி:—(தன் நாயகன் விரைந்துபோய்க் கொண்டிருக்கும்போது மறுபடியும் கூப்பிடுகிறாள்) இந்தாருங்

கோ ஒ! ஒங்களெத்தானே! இங்கே பாருங்கோ ஒ ஒஹோ ஒ!

சின்னையன்:—(திரும்பிப்பார்த்து) அது என்னடீ அது உ! சும்மா எண்டி கூப்பிடுகிறேள! பெரிய சகுனத் தடையாவல்லோ தோணுதூஉ! நான் போய்வருகிறவ னில்லேயா! சங்காதி என்னடியோஒ! சட்டுணுசொல்லு வேஎ!

கௌரி:—(எட்டமட்டும் அவன் சமீபம்சென்று இதோ! பாருங்கள்! உளுந்தும் மறந்துவிட வேண்டாம். இன்னம் தேவையானவைகளை ஞாபகமாய் ஒருவாக் கில் வாங்கிவந்து விடுங்கள்!

சின்னையன்:—ஆகட்டுமடீஇ! வெற்றிலே பாக்கும் தெரியும் நீபோடீஇ! நான்சீக்கிரம் வருகிறேன்! (என்று போய்விட்டான்).

கௌரி:—(தானேபேசிக் கொள்ளுகிறாள்) இதென்ன இப்படியும் அவசரப்பட்டுப் போவாருண்டா? சொஞ்சம் ஆறஅமர இருந்து வீட்டுக்கு வேண்டும் சாமான்களைச் சரியாய்த் தெரிந்துகொண்டு பின் சென்று வாங்கி ஒழுங்காய் வந்தால் என்ன? தெருவில் யாரிருந்தாலு மில்லே. நான் ஓடிஓடி அவரோடே சங்கதி பேச வேண்டியதா யிருக்கிறது. (வீட்டில் அமர்ந்து வேண் டும் வேலேகளைச் சித்தப்படுத்திக்கொண் டிருந்தாள்).



(3.)

சின்னையன் தன்வீட்டைவிட்டுத் தூரமாய் நடந்து வரும் சமயத்தில், தேவடியாள்வீட்டுத் தெருத் திண்ணைத் தட்டிமறைவி லிருந்த பெத்தப்பெருமாள்

பிள்ளை என்பவன், தனது கையைத்தட்டி, ஓஹோ! அய்யரே! இந்தாரும் சற்று வந்துபோரும். என்ன ரொம்பத் தடபுடலாக அக்கம்பக்கமும் திரும்பிப் பாராமல் கைகளைப் பரக்க விரித்துவீசிக்கொண்டு அவசரமாய்ச் செல்கிறீர்?

சின்னையன்:—(அது யாரென்று முகத்தைச்சுளித்துக் கவனித்துப் பார்த்துப்பின்) ஓஹோ! தாங்களா (என்று அவனிடம் வந்து நின்று) என்ன? தங்களை வெகுநாளாகக் காணோமே? இந்தவூரில்தானா யிருக்கிறீர்கள்? க்ஷேமம்தானா?

பெத்தப்பெருமாள்:-எல்லாரும் க்ஷேமந்தானையா. இப்போது கொஞ்சம் பொடிக்கொடும். மற்றதெல்லாம் பின் பேசிக்கொள்ளலாம். வெகுநேரம்வரை பொடியில்லாமல் பெரும்அவஸ்தையா யிருக்கிறது.

சின்னையன்:—(தனது இடுப்பிற் செருகியிருந்த வெள்ளிப் பொடிடப்பியை விரைவாக எடுத்து) இந்தாருங்கோ - பொடியெடுத்துக் கொண்டு சீக்கிரமாய் என்னை விடுங்கள் - கொஞ்சம் அவசரகாரியம்.

பெத்தப்பெருமாள்:-(அந்த டப்பியின் பொடியிற் சிறிது எடுத்து மூக்கின்வழியேற ஒருதரம்மிலாய்த்து ஆஹா! ஹா! ஹா! கயிலாசவாசல் படக்கெனத்திறந்தது காணும்-இந்தப்பொடி எங்கே சம்பாதித்தீரையா? பேஷ்! பேஷ்! பாண்டியா! ரொம்பதிவ்யமாயிருக்கிறதே? (என்றவாக்கில் பொடிக் காரத்தின் சுகத்தால் தனது கண்களைச் சற்றுநேரம் சொக்கவிட்டுப்பின் திறந்து விழித்தான்).

சின்னையன்—(தனது கோரப்பற்கள் விளங்க வாயைத்திறந்து) இந்தப்பொடி வாங்கி மூன்றுநாள்

ஆச்சுது - இப்போது ஒருவாரமாய்ப் புதிதாக ஒருவன் கடை வைத்திருக்கிறான். அதிற்புதுப்பொடி வாங்கிப் போட்டுப் பார்த்தால் அப்போது இதைப் பார்க்கிலும் பத்துமடங்கு ஷோக்காயிருக்கும். நான் கடைக்குத் தான் இப்போது போகிறேன். வேணுமானால் வரும் போது உமக்கு ஒரு பட்டைவாங்கிவந்து கொடுத்துப் போகிறேன்.

பெத்தப்பெருமாள்:—நல்லது அதிகஸந்தோஷம், அப்படியே வாங்கிக்கொடுத்துப் போகத் தயவுசெய்ய வேணும் - இதுபொடிக் காரியமானாலும் அதுஎனக்கு எவ்வளவோ பெரியகாரியம். புதுப்பொடியாகவாங்கிப் போடும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமா? உமது அருமைக்காக வந்தனம் செலுத்துகிறேன். (என்று சொல்லிப்பின் வீட்டுக்குள் இருப்பவளைக் குறித்து) அடீ! இராக்குமுத்தூ! சற்றுவந்து போவேண்டி இ!

இராக்குமுத்து:—(பகட்டு மினுக்குத் தளுக்குத் துலங்க வெளியேவந்து) பிள்ளையவாள்! ஏன் கூப்பிட்டீர்கள்?

பெத்தப்பெருமாள்:—இந்தா! இந்தடப்பிப்பொடியிற் கொஞ்சம் எடுத்துப்போட்டுப்பார் (என்று நீட்டினான்).

இராக்குமுத்து:—(ஒய்யாரமாய்த் தனது கையை நீட்டி அந்த டப்பியை வாங்கிஸொகுஸாக அதில் ஒரு சிமிட்டா எடுத்துத் தனது நாசிவழியாக "விற்ற்" என்று இழுத்தாள்) ஆஹா! என்னநேர்த்தி! என்ன நேர்த்தி! ரெம்பவுந் நன்றாயிருக்கிறதே! பொடிப்போட்டால் இப்படியல்லவா போடவேணும்! நான் ஏதோ கூப்பிடுகிறீர் என்றல்லவா வந்தேன். பேஷ்!

பேஷ்! இந்தடப்பியும் அந்தப் பொடிக்கேற்ற டப்பி யாகத்தான் அமைந்திருக்கின்றது. (மற்றோர் சிட்டிகை எடுத்துப் போட்டுக்கொண்டு) ஆஹா! பொடியின் மகத்துவத்தைப்பேச யாரால் முடியும்! அதனாலன்றோ! "நஸ்ய தா ந மஹாதாநம்-வஸ்த்ரதா நஞ் சமத்யமம்- அதமம் கந்திகா தானம் - அந்நதாநம் விர்தாவிர்தா" என்றேற்பட்டிருக்கிறது. மேலும் "பொடியினை மடியில் வைத்தே போடுவார்க்கில்லை யென்னும் - படிதனைக்கிழேதள்ளிப் பதைத்திட வுதைப்பதற்கே-துடியிடை யுமையாள்காணச் சொற்பொருள் கடந்தவீசன்- அடிதனைத் தூக்கிநின்றே யம்பலத் தாடினனே" என்றும், "வாசிக்கழகு மிகுவேகவோட்டமதித்தபா-தேசிக் கழகு ஞானமும் பத்தியுஞ் சீருடைய - தாசிக்கழகு நல்லாடையும் பூணுமித்தாரணியில், நாசிக்கழகு புகையிலைத்தூ ளெந்தநாளைக்குமே" என்றும், "ஜபேஷு ஜப மத்யேஷு - ஜபாந்தேஷு புநஃபுநஃ—நாஸிக்காசூர்ண மாதாய - கோடியக்ஞபலம் லபேத்" என்றும் மகான்கள் அருளிச்செய் திருக்கின்றார்கள்

சின்னையன்:—(இவைகளைக் கேட்டு ஆச்சரியத்துடன் வாயைத்திறந்தபடிக்கிருந்து) தங்கள் வாக்கு சரஸ்வதி வாக்காய்ப் பிறக்கிறதே! ரெம்பச்சரியாகவே அவைகள் அனுபவத்துக்கும் ஒத்திருக்கின்றன.

இராக்குமுத்து:—ஓய்! அய்யரே! இன்னம் இந்தப் பொடியினது வரலாற்றைச் சிறிது சொல்லுகிறேன் - கேட்கிறீரா? பிரமன் மனைவியாகிய சரஸ்வதியும், நாராயணன் மனைவியாகிய மஹாலக்ஷ்மியும், பரமேஸ்வரனுடைய மனைவியாகிய பார்வதியும் ஒரு சமயம் உல்லாசமாகச் சேர்ந்து கங்கையில் நீராடித் தம் இருப்

பிடங்களுக்குத் திரும்பிச் செல்லும்போது வழியில் லக்ஷ்மியானவள் துளசிச் செடியைப்பார்த்து அதனைத் தன்நாயகனுக்கு உகந்ததென்னச் சேர்த்தணைத்துக்கொண்டாள்-பார்வதியும் அங்கிருந்த வில்வமரத்தைக்கண்டு அதுதன் காந்தனுக்குப் பிரீதியானதெனக் கட்டிக்கொண்டாள் - பிரமபத்னியாகிய கலைமகளோ! எங்குந்தேடிப்பார்த்தும் ஒன்றும் கிடைக்காமையால், பெரியசங்கடத்திற்குள்ளாய் யோசிக்கிறாள். சகல சராசரங்களையும் படைக்கும் கர்த்தனாகிய நமது நாயகன் இவ்விருவருக்கு மாத்திரம் இரண்டு இலைகளைச் சிருஷ்டித்துவிட்டு நமக்கு ஒன்றுமில்லாமற் சந்தியில் விடாரேயென்று பலவிதங்களில் எண்ணி வியாகூல முற்றவளாய் மயங்கும்போது, லக்ஷ்மியும் பார்வதியும் கைகொட்டி நகைத்துச் சிரித்தார்கள். உடனே கமலைக்குச் சகிக்கமுடியாத பெருங்கோபமுண்டாகி மனம்பதறி வாய்விட்டுக்கதறிக் கைகால்களையுதறிப் பெருங்கூச்சலிட்டு, ஓ! பாழும்பிரம்மாவே! நீ இருந்தென்ன சிறந்தென்ன இறந்தென்ன? இந்தவஞ்சனை உனக்கு ஆமா? உனக்குக் கழுத்துக் கொடுத்து நான் என்ன சுகமடைந்தேன்? உன்னைக் கட்டிக்கொண்டழுவதைப்பார்க்கிலும் உரலைக்கட்டிக்கொண்டாலும் குற்றிக்காய்ச்சிக் குடிக்கலாமே. நீயோஎனக்குப் புருஷனைப்பட்டவன்? சம்போகத்துக்காவது பாத்திர முள்ளவனா என்றால் பல்லுப்போன பொக்கைவாய்க்கிழவனாயிருக்கிறாய். உனக்குப்போகம் ரோகம்தான். உடம்பெங்கும் நரைத்துத் திரைத்துக் கிழக்குரங்காய் விட்டாய். நீ முதலாவதுதொழிலாகிய சிருஷ்டிக்குக்கர்த்தனாயிருப்பதால் நான்மற்றத் தேவஸ்திரீகளிலும் சிலாக்கியமான தன்மையிலிருக்க வேண்டியதுபோக எல்லாரி

னும் கீழ்ப்பட்டவளாய் எல்லாருக்கும் பரிகாசம்செய்து நகைக்கும்படியாகி விட்டதே! அடா! உன்கோயில் இடிந்து குட்டியச்சுவராய்ப்போக என்று சாபமிட்டனள். (அதினால்தான் பிரம்மாவுக்குப் பூவுலகிற்கோயில் எடுபட்டுப்போயிற்றும்). இந்தக் கூப்பாடுகளைச்செவியுற்றுப் பிரமன்ஓஹோ! ஹோ! இதென்ன பெரியவிபரீத மாகி விட்டது.-கிணறுவெட்டப் பூதம்புறப்பட்ட கதைபோலாச்சே - இனிஇதனால் என்ன விளைந்திடுமோ தெரியவில்லையே என்று கலகலத்து விலுவிலுத்து இனிநாம் ஒரு விநாடியும் தாமதிக்கக்கூடாது வெள்ளம் வருமுன் அணைபோட்டுக்கொள்வதே சுகம்என்று தடபுடலாய்ப் புறங்கால் புட்டத்திலடிபட ஓ டோ டி யு ம் வந்து சரஸ்வதியைக் கட்டிக்கொண்டு முத்தம் வைத்து இன்பவார்த்தைகளாற் சமாதானப்படுத்தி, ஓ! என் பிரியமுள்ள வாணியே! மயிலே! குயிலே! பொன்னே! தெவிட்டாத அமிர்தமே!இதுஒரு அற்பவிஷயம் இதற்காக இவ்வளவு கோபமும் மனஸ்தாபமுங்கொண்டு இப்படிக்கெல்லாம் பேசலாமா?நீஒன்றுக்கும் யோசிக்க வேண்டுவதில்லை - பதறவேண்டுவதில்லை. ஒருகாரியமும் கெடாது. நான்நினைத்துவிட்டால் ஆகாத்காரியம் ஒன்றுஉளதோ? இதோ இந்தநிமிஷம் உன்மனம்போல் நிறைவேற்றுகிறேன்பார். என்பிராணசகி! என்சமீபமாய் உட்காரு. அவர்களுக்கு நியமித்த வில்வம் துளசிகளைக் காட்டிலும் அற்புதமான இலையை உனக்கு ஏற்படுத்தித் தருகிறேன். இதோ டை நிமிஷம் என்றுசொல்லித் தன் முன்னிருந்த அக்கினியிலிருந்துவந்த புகையில் ஒரு பிடிபுகையைக் கையாற்பிடித்து மந்திரித்து ஓர் இலையை உண்டாக்கி, ஓபெண்ணே! இதோ இந்தஇலையைப் பார்ப்பாயாக - இது புகையினின்றும் வந்தமையாற்

புகையிலை என்னுந்திருநாமம் பெற்றதாகும். துளசி வாயிற் போட்டுக்கொள்ளவும் வில்வம் சிரசில் சூடிக் கொள்ளவும் உபயோகமாகும். ஆனல் உனக்குநான் இப்போதுதந்த புகையிலையோ அமுதப்பிரயோகத்துக் கும் ஆஸனப்பிரயோகத்துக்கும் நாசிப்பிரயோகத்துக் கும் மட்டற்ற உபயோகந் தரத்தக்கது. தாம்பூலத் துடன் உபயோகிப்பதாலும், புகையிலைக்காம்பை ஆச னத்துவாரத்தில்விட்டு மலத்தை வெளிப்படுத்துவதா லும்மூக்கில்தூளாய்உபயோகிப்பதாலும்முறையேமேற் கூறிய மூன்றுவிதப் பிரயோகங்கள் எனப்பட்டன. நாசித்தூள் உபயோகிப்பதால் மூக்கின் நீர்ஓட்டம் தலை வலி பீனிஸம் இவைகள் விலகிப்போம். கண்டத்திற்கு மேற்பட்ட அநேக வியாதிகளையும் கண்டிக்கும் - சோம்ப லுண்டாக மாட்டாது - புத்தியை விசாலிக்கச் செய்யும் - நவநவமான யோசனைகள் கற்பனையாத் தோன்றும்-துன்பத்தை யோட்டி இன்பத்தைப் பெருக் கும் - மறந்துபோன விஷயங்களை ஞாபகமூட்டும் - நல்லவர் நேசத்தைக் கூட்டிவைக்கும் - தயிரியத்தைக் கொடுக்கும் - இன்னம் இந்தத் தெய்விக இலையின் மகிமைகளை எத்தனை நாப்படைத்து எத்தனைகாலஞ் சொன்னலும் அஃதோர்முடிவுக்கு வரமாட்டாதுஎன்று பிரமன் தன்பத்தினியைத்தேற்றி யழைத்துத் தன் இருப்பிடஞ் சென்று சுகித் திருந்தான். கேட்டீரோ ஏ அய்யரே!

சின்னையன்:—ஆஹா! ஹா! ஹா! ஹா! என்ன நேர்த்தியாயிருக்கிறது! இந்தமகிமை தெரிந்தவர்களுக் கன்றோ பலன்!

இராக்குமுத்து:—(பெத்தப்பெருமானை நோக்கி) ஏ! பெருமாளே! இந்தத்திருநாளைக்கேளும் - முத்தண்ணு

அவுட்டில் எனக்குத் தோற்றுவிட்டான் - சவட்டிவிட்டேன். வேறே மேசைவைத்து ஆட ஆசைப்பட்டும் அவன்கையிற் காசைக்கணோம்-அவன்கை காட்டுகிறேனென்ற பேச்செல்லாம் இப்போது முட்டுவாயிற் கைவைத்துக் காட்டிக்கொண் டிருக்கிறதுதான் - சாயந்திரம் வேறே ரூபாய் கொண்டுவருகிறே னென்று சொல்லிக் கொண்டிருக்கிறான்.

பெத்தப்பெருமாள்:—அடிகெட்டி- அவன்பாடும் தீர்த்துவிட்டாயா! உன்னோடு சீட்டுவிளையாடுவ தென்றால் எப்படிப்பட்டவரும் சீட்டுக்கொடுக்க வேண்டியதுதான். சகுனிக்கும் உன்னோடு விளையாட நல்லசகுனம் ஏற்படமாட்டாதே (என்றுசொல்லிக்கொண்டு இராக்குமுத்துவுடன் வீட்டுக்குட் சென்று வாடியிருக்கும் முத்தண்ணவை) நீபட்டம் வாங்கிப் பறக்கவிட்டுத் திரிந்த கொட்டமெல்லாம் இப்போது அடங்கிற்றா? மீனாட்சி யம்மன் தாயாரைப்போல் உன்முகம் பார்க்க நன்றாய்த்தான் இருக்கிறது. இந்தஅழகைப் பார்க்க உனக்கு ஒருகண்ணாடி யில்லையா? முழங்காலைக் கட்டிக்கொண்டு இரு-இராக்கு முத்துவைக் கட்டிக்கொள்ளத்தான் முடியாதே!

முத்தண்ணா:—(கோபமாய்) இருக்கட்டு மடாபயலே! நீஅவளோடுசேர்ந்த வாயாடிப்பயல் அல்லவா? இந்தச் சிறிக்கியை யார்விட்டது? இதோ வீட்டுக்குப் போய் வரும்போது பணம் சகிதம் கலகலென வருகிறேன். அவளை உட்கார வைக்கிறேன். அவள் இறுமாப்பை அடக்கிக் கிடத்துகிறேன்.

சின்னையன்;--(மோடியாயிருக்கும் இராக்குமுத்துவைத் திறந்த பல்லைகப் பார்த்து) பொடிடப்பிக்கு

உத்தரவாகவேணும். நேரமாகிறது. நான் கடைக்குப் போகிறவன்.

இராக்குமுத்து:—ஏன்காணும் பார்ப்பான்? நீர் முன்னைப் பின்னைத் தேவடியாள் வீட்டுக்கு வந்து புழங்கினவ ரில்லைப்போ லிருக்கிறது?

சின்னையன்:—(பல்லைக்காட்டிக்கொண்டு) இன்றை யத்தினம் கார்த்தியல் நான்கடைக்குப்போய்ச் சீக்கிரம் பூசைக்காக வேண்டிய சாமான்களை வாங்கிக்கொண்டு போய்ப் பகவத் ஆராதனத்தின்பேரில் விரதமிட வேணும். அதிக நேரமாகிறது. தயவு செய்யவேணும் (என்றுவேண்டினன்).

இராக்குமுத்து:—நீஎன்ன சுத்த இளிச்சவாயனாய் இருக்கிறாய்? பழுக்கக்காய்ந்த இரும்புண்ட நீரைப்பெற் றாலும் தேவடியாள் கையேறியபொருளைத் திரும்பப் பெறலாகுமோ? நீவேணுமானால் இங்கே யிருந்து போகலாம். சுவாமிபூசையைக்காட்டிலும்தேவர்களுக்கு அடியாளாகிய (தேவடியாள்) என்னுடைய பூசையே விசேஷம். "தொண்டர்தம் பெருமையைச் சொல்ல வும் பெரிதே" என்பது தெரிந்ததில்லையோ ?

சின்னையன்:—(அவள் தன்னைப்பார்த்து இவ்வளவு தூரம் பேசநேரிட்டதில் அவனுக்கு ஒருஇன்பம் ஜெனி த்துக் கோரப்பற்கள் துலங்க இஹி ! அஹா ! இஹி ! என உள்ளானந்தம் வெளிக்குத்தோன்ற நகைத்து) தா ங்கள்சொல்லுகிறது வாஸ்தவந்தான். எல்லாரும் தங்க ளுக் குள்ளானவர்கள் தானே? சந்தேகம் வேறேயா?

முத்தண்ணா:—(சின்னையனைப் பார்த்து) அடே! இரும்ஓய்! நானும் வருகிறேன் - எல்லாருமாய்ப் போ வோம்.

சின்னையன்:—என்பெண்ஜாதி எனக்காக வீட்டிற் காத்துக்கொண்டே யிருப்பாள்.

முத்தண்ணு:—நீஎன்ன பார்ப்பான்! இவளுடைய காலின் அழகில் கோடியில் ஓருபங்காவது உன்சம்சாரம் இருப்பாளா? என்ன சமாசாரம் பேசுகிறுய்? வீட்டுப் பெண்டுகளைக்கட்டி அழுகிறதிலும் சொறிக் கழுதை யைக் கட்டிக்கொண்டு அதன்கால் உதையாற் சுகம்பெற லாமே! உனக்கு இவ்வளவு வயதாகியும் ஒருஅநுபோக முந் தெரிந்தவனுயில்லை. கட்டியபெண்டாட்டி யெல் லாம் முட்டுக்கால் தட்டிக் கழுதைகளே. நாகரீகமுள்ள வர்கள் அந்த ஆபாசங்களிடம் முகம் கொடுத்துச் சல் லாபிக்கவே மாட்டார்கள். பெரியபிரபுக்கள் முதல் மோகன சுந்தரிகளையே அருகில்வைத்து ஜென்ம சா பல்லிய மடைந்து வருகின்றதை நீதெரிந்திருப்பதில்லை யோ? நீபுத்திசாலி இல்லை-விதரணையில்லாமல் ஏதோ உளறிவிட்டாய் (என்று சொல்லிப் பின் தாசி வீட்டு வேலைக்காரப் பையன் சொக்கு என்பவனைக் கூவி யழைத்து அவனிடம்) எனக்கு இன்னம் கொஞ்சம் தனியாக ஒருதிராம் போட்டுக்கொண்டுவா.

இராக்குமுத்து:—(அதைக் கேட்டு) அடபயலே சொக்கு! எனக்குவேண்டுமடா - விஸிக்கி பாட்டிலைத் தொடாதே! வீட்டுக்கு அதுவல்லவோ சம்பத்தா யிருப்பது. சம்பத்துப்போனுலும் எனக்குப் பாவா யிருக்காது. இப்படி யெல்லாவற்றையும் வெறித்தன மாய் ஒரேவாக்கில் குடித்தழித்துக் குடியைக் கெடுக்க இவனொருவன் வந்தான். முத்தண்ணுவுக்கு என்ன? அவனுக்கு இப்போ திருக்கும் முருக்கே போதுமா னது தான்.

முத்தண்ணு:—அடி இராக்கு முத்நாஊ! நன்தானே பாட்டில்கள் எல்லாம் வாங்கிக்கொடுத்தேன். ஒரு திராமில் உனக்குக் குறைந்தா போய் விடும்?

இராக்குமுத்து:—அறுபத்து மூன்று நாயன்மார்களைக் கோவிலில் வரிசையாக வைத்திருக்கிறார்கள் அல்லவா? அதுபோல் பாட்டில்களெல்லாம் வரிசையாகச்சேர்த்து வைத்துப் பார்ப்பதில் எனக்குப்பிரியம். நீ வாங்கிக்கொடுத்தால் குத்திகளைக் கொள்ளை கொள்ளவா வேணும்? ஒருமாம் தளிர்க்க வென்று தண்ணீர் தூறுக்கு வார்த்து மேற் கிளைகளைக் களைந்து கொண்டே யிருக்கலாமோ? இருக்கப்பட்டதில் ஒருஅளவாய் எடுத்துக் குடித்துக்கொண்டு வந்தால் பின்நாம் பாட்டில்களைக் குறையாமல் வாங்கிச் சேர்த்துக்கொள்வது சுலபமாயும் இருக்கும். அவைகளைக் கண்ணுக்கழகாய் அறையில் வரிசைப்பட வைத்துப் பார்த்துக்கொண்டிருந்தாலும் போதுமே? மேலும் கருப்பண்ண சாமிக்குப் பூசைபோடுவதற்கு அந்த பாட்டில்களெல்லாம் வேணும். குண்டோதரனைப்போல் நீஇப்படி மண்ட ஆரம்பித்தால் அவைகளெல்லாம் உனக்கு ஒருகடை வாய்க்கும் காணுமோ? ஒரு திராம் திராம் என்று எத்தனையோ பூசைகொண்டு விட்டாய். இனி இங்கே உன் பாஜா நடவாது. இருக்கட்டும். இன்னம் ஒருடஜன்பாட்டில்கள் வாங்கிக் கொடுக்கிறாயா?

முத்தண்ணு:—(உடம்பை விரைத்துகொண்டு அவளை எடுப்பாகப்பார்த்து மூக்கரைக் குரலுடன்) நீ வெகு கெட்டிக்காரி. பேச்சு மட்டும் ஒன்றுக்கு ஒன்பதாய்க் கொடை கொடுத்துவிடுகிறது. கைப்பண்டமோ கருணைக்கிழங்குதான். தோவிருக்கக் கனிவிழுங்கி

என்று உன்னைத் திவ்யமாய் அழைக்கலாம். உனக்குக் கொட்டி அழுததெல்லாம் கடலில் பெருங்காயம்கரைத்த விதம்தான்.

இராக்குமுத்து:—ஓஹோ! அய்யாவாள் இப்போது வெகுமுறுக்கி லிருக்கிறார்கள். சும்மாவே இந்தப்பாடா யிருக்கிறது. இதில்இன்னம் ஆவேசம் ஏற்றிக்கொள்ள வேணுமாம். எல்லாரும் வாய்வழியாகப் பேசுவார்கள். இவருக்கு அதின்வழி பேசத்தெரியாது என்பது நிசமே. மூக்குவழியே இவர் பேச்சில் மூப்பெடுத்தவர். என்னமோ இவர் பணம் வெகுவாய் அளந்துவிட்டு விட்டாராம். நான்கொடுத்த அரைப்பணத்துக்கு விலை மதிக்கக்கூடாம லிருக்கின்றதென்பதை அறியும்புத்தி இல்லை. அருமை தெரியாத அசட்டுக்கு என்ன செய்யலாம்?

முத்தண்ணு:—அடிஎன்னடி! நீரெம்ப முறுக்கித் தோளில் போட்டுக் கொள்ளுகிறாய்? நீஅரைப்பணம் கொடுத்த சுகத்தின் பலன் தலைமுறைக்கும் போதும். இனிக் கால்பணமும் தருகிறேனென்று தலையில்ஏறிமிதி அப்படி மிதித்தாலும் என் தலையி லெழுத்துத் தொலையாது.

இராக்குமுத்து:—இப்போது என்ன காரியம் முழுகிப் போனதாக நீர் இப்படி வம்புவளர்க்கிறீர்? ஒரு பேச்சுப் பேசவிடுகிறீர் இல்லை. ‘ஆகாதபெண்டாட்டி கால்பட்டாற் குற்றம் கைபட்டாற் குற்றம்’ என்றபடி தான் இருக்கிறது.

முத்தண்ணு:—நீ பின்ஒருதிராம் எனக்குக் கொடுக்கமாட்டேனென்று இல்லாத வம்புக் கடையெல்லாம் விரிக்கிறாய்! உனக்கு இந்தநிமிஷம் எத்தனை டஜன்பாட்

டில்கள் வேணும்? எனக்கு இஃதொரு பெரியகாரியமா? இப்போது சமயத்துக்கு ஒருதிரா மென்றால் வாய்ப் பூச்சி கடித்துவிட்டு என்னென்னமோ பூசிமெழுகு கிறாய்?

இராக்கு முத்து:—நான்பூசி மெழுகுக் கோலம் போட்ட விடத்தில் தங்களை உட்கார வைத்து கண் ணுக்கு அழகாய்ப் பார்ப்பேன். எனக்கு தாங்கள்டஜன் டஜனாய் வாங்கிக் கொடுப்பது பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம். இப்போது ஒருடஜனுக்குப் பெரிய மனதுபண்ணினால் கோடி கொடுத்தது போலத்தான்.

முத்தண்ணா:—ஆஹா! அப்படியா? ஆனால் நீ மட்டும் இந்தச்சமயத்தில் எனக்குப் பெரிய உபகார மாய் இரண்டு டிராமாகக் கொடுத்துவிடு. நான் ஒரு டஜன் புட்டிகள் உனக்குக் கொணர்ந்து ஒப்படைத்து விடுகிறேன்.

இராக்குமுத்து:—சரி அப்படியானால் அதிக ஸந் தோஷம். அய்யரவாள் தயவு சொல்லிய வாய்பிசகி னால் அப்பால் அரைவாய் தாளிட்டுக் கொள்ளும் தெரி கிறதா? சொக்கு உ! இருவருக்கு இரண்டு திராமும் எனக்கு இரண்டு திராமுமாகப் போட்டுக்கொண்டுவா!

(பெத்தப்பெருமாள்பிள்ளை என்பவன் முன்இராத் திரியில் அதிகநேரம் குடித்து உண்டு கழித்திருந்த படியாற் சாய்ந்துக்கொண் டிருந்த வாக்கில் குறட்டை வாத்தியம் கிளப்பி ஆழ்ந்த நித்திரை போய்விட்டான்).

சின்னையன்:—(சொக்கு என்பவன் கிளாஸில் பள பளப்பாகக் கொண்டுவந்து தனித்தனியாய் இருவருக் கும் கொடுத்ததைப்பார்த்து)இது பருப்புரஸமா?மிளகு ரஸமா? இஃதென்ன மிளகாய் ரஸமோ? என் வீட்டு காரி இவைக ளெல்லாம் திவ்யமாய் வைப்பாளே.

இராக்குமுத்து:—(குடித்துவிட்டு)ஏன்காணும்ஓய்! நீர்சாப்பிடுகிறீரா? உமக்குப் பிரியம்போ லிருக்கிறதே?

சின்னையன்:—நீங்கள் செய்ததை நான் பிராமணன் சாப்பிடலாமா?

இராக்குமுத்து:—முத்தண்ணாவைக்காட்டிலும் நீ உயர்ந்தபிராமணனோ?

முத்தண்ணா:—(வெறியில்) ஏ! கிறுக்குளிப் பார்ப்பான்! உளறுகிறாய்? இந்தப் பார்ப்பாரச் சாதிக்கு ஏற்பட்ட மௌடீகமும் குறும்பும் போவதில்லை. நீ சாகக்கிடந்தால் ஆஸ்பத்திரித் தண்ணீரை மண்ட மாட்டாயோ?மருந்துமுதலிய எத்தனையோ பான வஸ்துக்களுக்குத் தீட்டு ஏது? நாங்கள் இப்போது சாப்பிட்டது இந்தவீட்டிற் செய்ததா? சீமையில் வெள்ளைக்காரர் திராவகமாயிறக்குகிற உத்தமஜாதிரஸம். வெள்ளைக்காரர் தேவப்பிறப்பல்லவா? தேவர்களுக்கு அமுத பானம் ஏற்பட்டது.வெள்ளைக்காரருக்கு இந்தச்சஞ்சீவியாகிய பானம் உண்டாயிருக்கிறது. வெள்ளைக்காரர் தேவலோகத்தில் கந்திருவ வகுப்பைச் சேர்ந்தவர்களன்றோ? அவர்கள் பூலோகத்தில் இந்த உயர்ந்த பதார்த்தத்தைச் சாப்பிட்டு யுக்தி புத்தியுடையவர்களாயும் தேஜஸ் உடையவர்களாயும் விளங்குகின்றார்கள். உன்பெண்ஜாதி வைக்கிற ரஸம் நேர்த்தியென்றாயே? அறியாத ஊரில் இலுப்பைப்பூச் சர்க்கரையான கதையாகவே இருக்கிறது. எறும்புக்கும் யானைக்கும் எவ்வளவு வித்தியாசம்? நீவேணுமானாலும் இதைச்சாப்பிட்டு அந்த நாஸூக்கையும் ருசியையும் பார்!

சின்னையன்:—(ஆச்சரியத் தோற்றத்துடன்) ஹா! அப்படியா? ஆனல், அதெல்லாம் தங்களைப் போன்ற

அந்தஸ்து உடையவர்களுக்குக் கிடைக்கிறது. எளியவனாகிய எனக்குப் பொக்கைவாயன் பொறிமாவை மெச்சிக்கொண்டவிதம்போல் என்வீட்டு ரஸம்தான் சிலாக்கியமா யிருக்கிறது. முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டாற் கிட்டுமோ?

இராக்குமுத்து:—(அதைக்கேட்டு) ஏன்காணும் நீர் வேணுமானால் சீமை ரஸத்திற் கொஞ்சம் ருசிபாருமே? தருகிறேன். எல்லாம் மதுரைவீரனுக்கு நைவேத்தியம் செய்தபடியே வைத்துக்கொண் டிருக்கிறேனேயொழிய வேறில்லை. நீர் பிராமணனாகையால் உமக்கு அதில் சிறிது தானம்செய்யும் பலனும் எனக்கு உண்டுதான்.

சின்னையன்:—(பல்லைக் காட்டிக்கொண்டு) தங்களுடைய திருக்கரத்தாற் கொடுத்தால் ருசிபார்க்கத் தடையென்ன? வெள்ளைக்காரர் என்ன என்னமோ கண்டுபிடித்து இருக்கிறார்கள். செத்தவர்களைத்தான் பிழைப்பூட்ட முடியவில்லை. பிராமணராகிய முத்தண்ணு சாப்பிடும்போது நான்சாப்பிட்டால் என்ன?

இராக்குமுத்து:—நல்லது, வெகு ஸந்தோஷம்: அடே சொக்கூஉ! இந்த அய்யருக்கு ஒருடிராம் போட்டுக்கொண்டுவந்து கொடு.

சொக்கு:—(ஒருகிளாஸில் உஸ்கி வார்த்துவந்து) சாமீ! இந்தாருங்கோ (என்று நீட்டினான்).

சின்னையன்:—(இராக்குமுத்துவைப் பிரீதியுடன் பார்த்து), தங்கள்கையினால் எனக்குக் கொடுத்தால் ஆகாதா? நான் அவ்வளவு பாக்கியம் செய்யவில்லைப்போலிருக்கிறதே?

இராக்குமுத்து:—அடே பையா! அதை யென்னிடம்கொடு; நான் அவருக்குக் கொடுக்கிறேன்(என்று வாங்கித் தன்கையால்) இந்தாரும்! சாப்பிடும்! (என்று கொடுத்தாள்).

சின்னையன்:—(முகமலர்ந்து அடக்கிக்கொள்ளக் கூடாத ஸந்தோஷத்துடன் தனது இரண்டு கைகளாலும் மரியாதையாக ஏந்திஅதைவாங்கிஆட்டிப்பார்த்து) அடே! இஃதென்ன நேர்த்தி! அழகு! தெளிவு! தங்கத்தை யூற்றி வார்த்ததுபோ லிருக்கிறதே! பார்க்கவே இப்படி யிருக்கிறதே. இதை உள்ளுக்குச் சாப்பிட்டால் என் கரியமேனி முழுதும் பொன்மேனி யாகிவிடும் என்பதில் சந்தேகமும் உண்டோ? மாசில்லாத பதார்த்தம் இதுவே (என்று மூக்கை மெதுவாக கிளாஸின் வாய்விளிம்பிற் பொருத்தி முகர்ந்துபார்த்தான்).

இராக்குமுத்து:—(சின்னையன்செய்கையைக் குடிவெறியிற் பார்த்து அதட்டி) அடே! சட்நான்ஸென்ஸ்! ஏமாளிப்பார்ப்பான்! அப்படியே சும்மா சீக்கிரம் ஆவி போகுமுன் குடித்துவிடு.

சின்னையன்:—(அவள் அதட்டியதில் திடீரெனத் தேகத்தைக் குலுக்கிப் பயந்து) ஓஹோ! ஆவிப்போய் விடக்கூடாதோ! (என்று அண்ணாந்து சாப்பிடப் போனான்).

இராக்குமுத்து:—(வெறியால் இரத்த விழிகளை உருட்டி மூர்க்கமாய்ப் பார்த்து) அடே டியாம் பூல்! சும்மா கிளாஸில் வாய்வைத்துச் சாப்பிடு. ரசம் காட்டமா யிருக்கும். குரைப்பூரும்.

சின்னையன்:—ஆஹா! அப்படியா! என்று வியந்து பயந்து நயந்து தனது இரண்டு கண்களையும் உருட்டி

விழித்து நீண்ட கழுத்துடன் தலையை உயர நிமிர்த்திக் கொண்டு ஓரேவாக்கில் வாயுள் ஊற்றிப் படக்கெனக் குடித்துவிட்டான்.

இராக்குமுத்து:—ஷபாஷ்! ஆவி போகாமற் குடித்துவிட்டீர். உமக்கும் ஆவிபோக மாட்டாது. எப்படிக் காணும் இருக்கிறது?

சின்னையன்—கேட்பானேன்? ரெம்பவும்நேர்த்தியாய்த்தான் யிருக்கிறது. நான் இந்தமாதிரி இதுவரை சாப்பிட்டதே இல்லை. ஆனால் சோதனைக் கென்று கொஞ்சமாய்க் கொடுத்தீர்கள்போல் இருக்கிறது.

இராக்குமுத்து:—இப்போதைக்கு இவ்வளவு போதை போதும். இராத்திரிக்கு எல்லாம் சாப்பிட்டு உற்சாகமா யிருக்கலாம். நீர் விஸுவாஸமாக இன்னம் இங்கேவந்து போய்க்கொண்டிருந்தால் உமக்கு எல்லா நன்மைகளும் கிடைக்கும். நீர் இப்போது சாப்பிட்டதற்குப்பேர் "உஸ்கி". அதன்பொருள் என்ன தெரியுமா? "உஸ்" என்று நமது தேகத்திலிருக்கும் வியாதிகளையெல்லாம் விரட்டிப் போக்கடிக்கிறது; அவ்வியாதிகள் "கி கீ" என்று பயத்தால் கத்தி ஓடுகின்றன. இதனால் அதற்கு "உஸ்கி" என்ற பொருத்தமானபேர் அமைந்தது.

சின்னையன்:—ஆமா ஆமா என்று வன்மையுடன் தலையை ஆட்டிப் பின் கழுத்தை நீட்டிச் செறுமிக் கொண்டு தனதுகைகளால் அதை மாற்றிமாற்றி உருவிவிட்டு) அடிஅம்மா அ! என்னமோ ஒ "விர்ர்" என்று ஏறுகிறதே? மதுரைவீர சாமிதானோ தெரியவில்லையே எ!

இராக்குமுத்து:—அடே அசட்டுச்சவமே! சும்மா கோட்டிபண்ணுமல் இரு. "அற்பனுக்கு பகிஸிவந்தால் அர்த்தராத்திரியில் குடைபிடிப்பான்" என்றபடி உன் நடபடியிருக்கிறது. உனக்கு உள்ள அழகே போதுமானதா யிருக்க அழகுக்கழகாய்மேலும் பகட்டுகள் செய்கின்றாய். நீசொல் இப்போது உன்உடம்புக்கு உஷாராகவும் புத்திதெளிவாகவும் இருக்கவில்லையா?

சின்னையன்:—(வெறி யேறியதால்) ஆமா அ ஆமா அ! வெகுமுறுக்காய்த்தான் இருக்கிறது; ஜோர் கொடுக்கிறது. அதுதெரியாமலா நீங்கள் எல்லாரும் சாப்பிடுகிறீர்கள்? எனக்கும்தான் என்ன? மகம்மேருவை அடுத்தகாகமும் பொன்னிற மல்லவா? தங்கள் சகவாசம் எனக்கு உண்டாகிவிட்டமட்டில் இனிநானும் அதிற் பழகிக்கொள்ளுவேன். இப்போது எனக்கு வெகு பிரம்மானந்தமாகவே இருக்கிறது. ஆகாயத்தில் தூக்கிக்கொண்டு போகிறது. இந்திர லோகம் பிரம லோகக் காட்சிகளெல்லாம் என்கண்ணுக்குத் தெரிகின்றன. சாக மருந்தா கொடுப்பீர்கள்? எனக்கு இப்போது "விர் விர்" என்று ஏறிக்கொண்டே யிருக்கிறது. இந்தச் சுவற்றைத்தான் ஒரு முண்டாக்கொடுத்துக் கீழே தள்ளிவிடலாமா என்று தோன்றுகின்றது. சும்மா யிருக்கமுடியவில்லை. உன்பேர் இராக்குமுத்து அல்லவா? நீ போட்டிருக்கும் ரவுக்கை வெகுநேர்த்தியாயிருக்கிறது. அதில் வைத்திருக்கும் ஜெண்டி என்கண்ணைப் பற்றிப் பறிக்கிறதே? அதை நீ எங்கே வாங்கினுய்? இவற்றையெல்லாம் என்ன விதமாகத்தான் செய்கிறார்களோ தெரியவில்லை.

இராக்குமுத்து:—ஆமா! ஆமா! ஏமாளிப் பார்ப்பான். இவ்வெல்லாம் உன்பெண்ஜாதி நன்றாய்ப் போட்

டுக்கொண் டிருப்பாள் அல்லவா? நீ சும்மா என்கிட்ட வந்து இந்தஜண்டியைத் தொட்டுப்பாரேன்?

சின்னையன்:—(இந்த வசனத்தைக் கேட்டவுடன் அடங்காத ஸந்தோஷத்தில் "ஏஹே! ஏஹே!!" என்று பற்களை இளித்துச் சிரித்தவாக்கில் இராக்குமுத்துவின் சமீபமாகப்போய் அவளுடைய திருப்புஜத்தின்பேரில் இருக்கும் ஜெண்டியைத் தொட்டுப் பார்த்து) இதில் தான் என்னநேர்த்தியாகப் பூப்போட் டிருக்கிறான்! எல்லாம் வெள்ளைக்காரப்பயல் வேலைதான். என்ன என்ன வேலையெல்லாம்தான் செய்துவிடுகிறான்! செத்தால் பிழைக்கச் செய்ய முடியவில்லை (என்று பின் அவள் மகமல் இரவிக்கைத்துணிமேல் கைவைத்துத் தடவிப்பார்த்து), அஹா ஹா"! இந்தத்துணி எவ்வளவு மிருதுவாகவும் வழ வழ வழ வழ என்று கைவழுக்கக் கூடியதாகவும் இருக்கிறது! என்ன இருந்தாலும் உங்களுடைய ஸொகுஸு மற்றொருத் தருக்கு வா வா என்றாலும் வரப்போட்டு வச்சா கிடக்கிறது? (என்று விழித்த கண் விழித்த படிக்கே அதிசயமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தான்).

(மூக்கறை முத்தண்ணா என்பவன் இவைகளை அறியாதபடிக்கு இருந்த விடத்தில்தானே குடியினாற் சோர்ந்து முன்னமே நித்திரைபோ யிருந்தான்).

இராக்குமுத்து:—நீஎன்ன மெல்ல தடவிக்கொண் டிருக்கிறாய்? என்மேலெல்லாம் வலிக்கிறதே? நன்றாய் நறுக்கென்று அமுக்கிவிட்டா லென்ன? (என்று அவள் இருந்தபடிக்கே தனது இரண்டு கைகளையும் மேலே உயர்த்திக்கொண்டபடிக்குச் சாய்ந்தாள்).

சின்னையன்:—அவள் அவ்விதம் இருக்கும் விதத்தைப்பார்த்து ஆசையாலும் அதிசயத்தாலும் பேழை போன்ற வாயைத் திறந்தபடி "திரு திரு" என்று விழித்தகண் விழித்தபடி அவள்மேனியின் அழகைப் பார்த்து அருமைப்பட்டுப் பின் வாயைச் சப்பிச்சப்பி அடிக்கடி உமிழ்நீரைக் குடித்துக்கொண்டு வாய்குழற லாய்), அதுக்கென்ன! நன்றாகவே பிடித்துவிடுகிறேன். எனக்கு இவ்வளவுதூரம் உங்களுடையதயவு கிடைப்ப தற்கு நான் என்ன புண்ணியம் செய்தேனோ? (என்று அவளைக் கிட்டிஇருந்து தனது உடம்பும் தலையும் முன் னும் பின்னும் அசைந்தாட அவள் தேகாதிங்கமும் பிடித்துவிட்டு, முத்தண்ணா கண்மூடி அயர்ந் திருக்கி றாளு என்பதையும் அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண் டிருப்பதானான்).

இராக்குமுத்து:—(அந்தச்சமயத்தில்) என் அய்ய ரே! உம்முடைய பேர் என்ன? உமக்கு என்னவேலை? காணிபூமி உண்டா?

சின்னையன்:—எனக்குச் சின்னையன் என்று பேர், எல்லாம் உங்களுடைய தாஸன்தான். சிவானந்த வீரருடையவீட்டில் எனக்கு மாதம் அஞ்சுரூபாய் சம்பளம். அவர்கள் அபிமானத்தின் பேரில் எனக்கு வேண்டிய உதவிகளெல்லாம்செய்து பிள்ளையைப்போல்ஆதரித்து வருகிறார்கள். உபாயநிலம் எனக்கு இருந்ததைக் கடனுக்காக விற்று அதை தீர்த்ததுபோக மீதம் இருநூறு ரூபாய் போல் வட்டிக்குப்போட்டு வைத்திருக்கிறேன்.

இராக்குமுத்து:—(இவன் சுத்தப்பேதையென்றும் இவனிடத்திலுள்ள சொத்துக்களைத் தந்திரமாய் வசப் படுத்திக்கொள்ளவேண்டுமென்றும் தீர்மானித்தவளாய்

அவனைநோக்கி) நீஇந்தவிதத்திலிருந்துகொண்டு என்ன சுகத்தை அனுபவிக்கப்போகிறாய்? இதுவெல்லாம் நீகாலட்சேபம் செய்வதற்கென்று பார்த்தாலும் எப்படிக் கட்டிவரும்? இன்றைக்கிருந்தாரை நாளைக்குக் காணோமே?ஏதோ? இருக்குமட்டும் உல்லாசமாய் நீஇப்போது இருந்துகொண் டிருக்கிறபடிக்குக் காலத்தைக் கடத்த வேண்டியதுதானே கைகண்டபலன்? பொருளில்லாதவர்களுக்கும் கூட இப்படிப் பட்ட சுகானுபவங்கள் அனுபவிக்க கிடைத்து விடுகிறது. அது அவரவர்களுடைய அதிர்ஷ்டம். பணக்காரரா யிருக்கிறவர்களுக்குக்கூட இப்படி அனுபவிக்கக் கொடுத்துவைக்காமற் போகிறது. அவர்கள் பணங்காத்த பூதங்களும் பிணங்களுமேயாம். யாராயிருந்தாலும் சுகபோகங்களிலெவன் ஆனந்திக்கின்றானோ அவனே ஜென்ம மெடுத்தபயனைச் சரியானபடி அடைகிறான். உனக்கென்ன இவ்வெல்லாம் ஒருவர்சொல்லியா தெரியவேணும்?

சின்னையன்:—இந்தப்படிக்கு யாரெனக்கு உரித்தாக யதார்த்த தத்துவங்களை எடுத்துப் போதிக்கப் போகிறார்கள்? கைப்புண்ணுக்குக் கண்ணாடியா வேணும்? தாங்கள் ஆயிரத்தி லொருவார்த்தையே சொன்னீர்கள். இவ்விதந்தெரிந்து பேசியதங்கள் தன்மையை என்னவிதமென்று மதிப்பேன்? நல்லவர்கள் இன்ன குலத்தில்தான் பிறப்பார்களென்ற விதாயம் உண்டா? தாங்கள் ஸ்திரீஜாதிதானே என்று மிதமாய் நினைத்துவிடலாமா? எனதுயோக க்ஷேமங்களையும் சிரத்தையாய் விசாரித்தீர்களே? இன்றைக்கு நான் யார்முகத்தில் விழித்தேனோ? தானாகவே யென்னை இந்தவிடத்திற் கொண்டுவந்து சேர்த்தது. யோகம் வந்துவிட்

டாற் கொடுக்குந் தெய்வம் கூட்டியும் கொடுக்கும் என்ற பழமொழி வீண்போகுமோ? தாங்கள் ஜகதிஸ் வரியைப்போல் என் கண்ணுக்கு ஜொலித்துக்கொண் டிருக்கிறீர்கள். இப்படிப்பட்டதங்கள் பரிபூரணகடாக்ஷ மட்டும் என்பேரில் மாறாமல் எப்போதும் உண்டா யிருக்குமாகில் நான் முன்னுக்கு வந்துவிடுவேன். தங் கள் தயவைக்காட்டிலும் வேறொரு பாக்கிய மிருப்ப தாக நான் நினைக்கவில்லை. நான் எத்தனையோபேர்கள் பார்த்திருக்கிறேன். தங்களைப்போல் அருமை யுடைய வர்களைக் காணோம். தாங்கள் புதிதாக வந்த என்னிடத் தில் முதலாவதாகத் தொடங்கிய அபிமானமே எனக்கு அளவிடக்கூடாத பேரானந்தமா யிருக்கிறதே! அது சொல்லி முடியக்கூடியதோ! தங்கள் உடம்பெல்லாம் "கம கம கம கம கம" என்று வாசனைமயமாய் என் மூக்கைப் பிச்சுக்கொண்டுபோகிறதே! தாங்கள் தேவ லோக புஷ்பம்போலவே யிருக்கிறீர்கள்! என்று அவ ளுடைய திருமேனியில் மூக்கைப்பொருத்தி நெடுகி லும் மோந்து பார்த்தான். அவள்பேரிற் காமங் கொண்டு) எனக்கு இப்போது என்னமோமாதிரியாகக் கை கால்களெல்லாம் படபடப்பாய் வருகிறது. நன் றாய்ப்பேசவும் நாவெழுகிற தில்லை. தொண்டையை அடிக்கடி ஏதோவந்து அடைக்கிறது.

இராக்குமுத்து:—அவனிருக்கும்நிலைமையைநிதா னித்தவளாய்த் தனதுகாலை அந்தப் பார்ப்பான்பேரிற் போட்டுக்கொண்டு) எனது பிரியமுள்ள சின்னையா! நீ ஒரே நிதானமாக எனக்குமேல் அமுக்கிவிடாமல் நீ என்ன இப்போது வரவர முறட்டுத்தனங்கள் காட்டு கிறாய்? சுகமாகவல்லவா அமுக்கவேணும்?

சின்னையன்:—ஓஹோ! நல்லது! நல்லது! அப்படியே! தங்கள்சித்தம் என்பாக்கியம்(என்று மெதுவாகத் தடவி அமுக்கிக்கொண்டு) தங்களுக்கு இப்போது சுகமா யிருக்கிறதா!

இராக்குமுத்து:—ஆஹா! இதுதான் விருதுபெற்ற கை பொற்கை. மற்றவை கரிக்கை சக்கை உலக்கை தாம். உன் திருக்கையைக் கொடடா! (என்று அவன் கரத்தை வாங்கித் தன்கண்களில் ஒற்றி முத்தம் கொடுத்தாள்). இப்போது நீ இன்பமாய் அமுக்கும் சுகத்தோடே எனக்குத் தூக்கம் சொக்குகிறது. சுக்குப்பொடி போட்டுத்தான் என்னை மயக்கிவிட்டாய். என் கண்ணிறைந்த கட்டழகா! பெண்பிள்ளைக்கு எப்போதும் ஆண்பிள்ளைகள் அமுக்கிவிடுகிறதே இன்பம். அதுபோலவே ஆண்களுக்குப் பெண்கள் அமுக்குவது சுகம். முத்தனும் பெத்தனும் எனக்கு அமுக்குவார்கள்; என்றலும், இப்போது நீ அவர்களைக்காட்டிலும் இனிப்பானவனாய் எனக்கு வாய்த்துவிட்டபடியால் நீ அமுக்குகிறதே எனக்கு வெகுபிரியமாயிருக்கிறது. மகாவிஷ்ணுவுக்கு ஸ்ரீதேவியும் பூதேவியும் மேல் அமுக்கிவிட்டால்தான் நித்திரைவரும். வள்ளிநாய்ச்சியாருக்குச் சுப்பிரமணியர் கால்பிடித்துவிடவேணும். அறியாமலா தெய்வங்களுக்குள்ளும் இப்படி ஏற்பட்டிருக்கிறது? நீதரும் கைச்சுகத்தோடு இப்படியே நான் கொஞ்சம் தூங்கியெழுந்துவிடப் பிரியமா யிருக்கிறேன். அதற்கு இங்கு சௌகரியமில்லை. இந்த அறைக்குள் படுப்பதற்கு வெகு யோக்கியமாய் அமைந் திருக்கிறது. நீ என்னோடு அறைக்குள்வந்து இதுபோலவே சற்று மேல் அமுக்கிவிடுகிறாயா?

சின்னையன்:—ஆஹா! ஆஹா! அமுக்கிவிடுகிருயா என்று என்சம்மதமா கேட்கவேணும்? கரும்புதின்னக் கூலி கொடுப்பார் உண்டோ? ஆஹாஹா! என்ன அருமையும் பெருந்தன்மையுமான வார்த்தை! இந்த வார்த்தை ஒன்றுக்கே மூன்றுலோகமும் ஈடுபெருதே! எவ்வளவு நேரமானலும் நான் அமுக்கிக்கொண் டிருக்கச் சலிக்கமாட்டேன். அப்படி அமுக்குவதில் தங்களுக்குமட்டும் அல்லவே? எனக்கும் வரவரச்சுகானந்தமாகத்தானே இருக்கிறது! தெவிட்டாக்கனி என்று கேள்வித்தான். அந்த அநுபவத்தை இப்போது தான் இங்கு சரியானபடி கண்டேன். தாங்கள் சீக்கிரமாக எழுந்து உள்ளேவந்து படுங்கள். இன்னம் வெகு சுகமாய் அமுக்குகிறேன்.

இராக்குமுத்து:—எனது ஆருயிர்ச் சின்னையா! உன்பேரில் எனக்கு அதிகமும் ஸந்தோஷம். புருஷர்களில் உத்தமன் நீயே. சரி உள்ளுக்குப் போவோம் வருகிருயா?

சின்னையன்:—முன்னலே அறைக்குள் பிரவேசித்து அவ்விடம் சுவர்களில் வரையப்பட் டிருக்கும் திருவுருவங்களைக் கண்டு பயந்து அப்பால் அதிசயமடைந்து சீக்கிரம் வெளியேவந்து இராக்குமுத்துவிடம் அதனைத் தெரிவித்தனன்.

இராக்குமுத்து:—(அவனைத் தேற்றி) அவைகளெல்லாம் லீலைகளின் விதங்களைத் தெளிவாய் விளக்கத் தக்கன; (எனச்சொல்லி, உடனே சிலாக்கியமாய் அலங்கரித்துள்ள தனது சயனஅறைக்குட் பிரவேசித்து மெத்தென்றிருக்கும் திவ்யமாகிய அம்சதூளிகாமஞ்சத்திற் கண்ட எப்புருஷரும் காமவலையிற்பட்

ருகும்படிக்குத் தனது மார்பின் அவயவங்களைக் ச்சைக்குமேல் ததும்பிப் பூரித் திருக்கும்படிக்குக் காட்டிக் கால்களையும் சோர்வாற்பார்க்க விட்டமைபோ லும் பாசாங்குசெய்து படுத்துக் கள்ளத் தூக்கங்கொண் டிருந்தனள்).

சின்னையன்:—(அந்தமாயவித்தைக் காரியைப் பின் பற்றிவந்து ஏமாளிச் சுபாவமாய் அவளைச் சமீபித் திருந்து அவள்சயனித்திருக்கும் விதத்தையும் அவய வங்களின் அழகிய காட்சிகளையும் விடாமல் விரிந்த பேதைக் கண்களோடும் கவனிப்பாய்ப் பார்த்துப்பார்த் துப் பெருமூச்செறிந்து காமநோய்ச் சகிக்கமாட்டாதவ னைத் தாமரையிலைத் தண்ணீரைப்போலத் தயங்கி னன். தரித்திரன் குபேர சம்பத்தைக் கண்டதுபோ லிருந்தது. வீட்டிற் சந்தடியேதுமில்லை என்றாலும் சின்னையனுடைய அகமாகிற வீடானது சலனமின்றி யிருக்கவில்லை. எண்ணாத எண்ணமெல்லாம் அவன் மனத்திடத்தே துள்ளிக் குதித்துக் கோட்டிசெய் திருந்தன. அறுபத்து நாலுவித லீலைகளையும் அவன் சுவரிற் சுற்றுமுற்றும் பார்த்தனன். இராக்குமுத்து என்பவள் அவனிடத்திற் காட்டிய பிரியவசனங்களை யும் நயங்களையும் அருமைகளையும் நீளச்சிந்தித் தான்). இவளை இந்தப்படிக்கே நாம்கூடி ரமித்து விட்டால் அதனாற் பிற்பாடு பாதகமேதும் உண்டா யிருக்குமோ? நமதுபேரில் அதிகப்பிரியமாகவே தான் அவள் இருந்தாள். அப்படியிருக்க நாம் ஆசைதீரக் கட்டிக் கலந் தணைந்துவிட்டால் இவள் அதற்குடன் படாமலிருப்பாளா? நாம் இவள்பேரில் ஆசைப்பட்டது போல் அவளும் நமதுபேரில் ஆசைப்பட்டதான குறிப்புகளும் உண்டா யிருந்தனவே? இவளுடைய

பிரியத்துக்குத் தகுந்தபடி நாம் இந்தச் சமயத்தைத் தப்பவிட்டு விடாமல் இவளைக்கூடி ரமித்து விட்டாற் பிற்பாடு இருவரும் உடல்இரண்டு உயிர் ஒன்று என்ற விதமாய் இருந்து விடலாமல்லவா? இந்தச் சமயமும் நமக்குப்பிற்பாடு கோடிபொன் கொடுத்தாலும் கிடைப்பது அருமையேயாம். காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளவேண்டுமே? கலவிச் சுகம் நாம் இவளுக்குக் கொடுத்து ருசிகாட்டி விட்டாற் சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போலும் இவளுடைய பிரியம் ஸ்திரமாய் ஏற்பட்டுவிடுமல்லவா? ஸ்திரீகள் வலியப் புணர அழைப்பது எங்குமில்லையே. இவளும் நம்மிடத் திற் பலகுறிப்புகளெல்லாம் பாக்கியில்லாமற் காட்டித் தான் பிற்பாடு இப்படிப் படுத்துக்கொண்டவளாயிருக்கிறாள். குறிப்பறியமாட்டாத மரமாகிவிடுவேனோ? கையிற் கிட்டியதை வாயில் வைத்துச் சுவைக்கத் தவிர்ந்திடுவேனோ? இவள்தான் இனிமேலென்ன இவைகளைக் காட்டிலும் நமதுவிஷயத்திற் செய்துகாட்டக் கூடியதயாவிருக்கிறது? சீனிக்கட்டியை ஊட்டினால் நாம் விக்கிக்கொண்டவிதம்போ லிருந்தால் யார்பேரிற் குற்றம்? என்பேரில் இவளுக்கு மனதோடே பிரியம் அதிகம் என்பதற்கு நான் சுடுநெய்யிற் கைவிடத் தடையுமொன்றுண்டோ? (என்று அவள்சுந்தரமேனி தன்உடலிற் பொருந்த அணைந்துக் கட்டிக்கொண்டிருந்தான். 'காமம் அரிபிரமாதியரையும் விட்டதோ! அதினும் அஸிதிச்சிறியனை அதோகதியாக எடுத்துவிழுங்கி விட என்னதடை?' அய்யன் மெல்லெனப் பின் கொஞ்சம் கொஞ்சமாக அவளுடைய துயிலைப் பலவிதங்களிற் சோதனைசெய்தும் அவள் இணங்கியவளைப் போலும் பொறுமையாயிருப்பதனைக் கண்டு கடைசியில்

அவன் கொடுங் காமவெம்மைக்குத் தாளமாட்டாமல் அவளை ரமிக்கும்படிக் கான முயற்சியில் தொடுப்ப தானுன்).

இராக்குத்து:—(ஜாலமூலவேசியாகையால், அந்த அரவத்தால் விழித்துக்கொண்ட பாவனையை மேற் கொண்டு திடீரென ஒலித்த பேரிடிபோல்) டா! டா! ஹா! ஹா!

சின்னையன்:—(எதிர் பாராத சமயத்தில் அவள் அதட்டித் துடித்துக் கிளம்பியதிற் பேதை அய்யன் திக்பிரமைகொண்டு க்ஷணமே மஞ்சத்தினின் றும் புறம்பில் தாவிக் கீழே புட்டம்நையவிழுந்து விரை வில் எழுந்துநின்று நெஞ்சந்தடுமாறினுன்).

இராக்குமுத்து:—அடா! வெறிப்பார்ப்பான்!என்ன அக்கிரமம் செய்யத் துணிவுகொண்டனே! அடே பாத கா! பழிகாரா! பஞ்சமா பாதகா! முண்டாகொடுக்கு! இந்த அடாததனமும் அழும்பும் உனக்கு ஆகுமோ? வளர்த்தகிடாய் மார்பிற் பாய்ந்த கதையாச்சே! (என்று பலவிதங்களாக இடிபோற் குமுறிப்பேசிப் பற்களைநெற நெறவெனக் கடித்துக் கோபத்தீயெழப் பார்த்தாள்).

சின்னையன்:—(பதைபதைத்துப் பிராணன்போகு பவருக்குப்போற் கைகால் உதறலெடுத்து) ஒன்று மில்லை! ஒன்றுமில்லை! அடியேனை மன்னிக்கவேணும்! அபராதம்! பெரியஅபராதம்! கன்னத்தில் அடித்துக் கொள்ளுகிறேன்! (என்று அடித்துக் கொண்டான்). இந்தாருங்கோ! உக்கியும்இதோ ஒண்ணுஒன்றாந் தம்பி யாகப் போடுகிறேன்! எண்ணி ஒப்புக்கொள்ளுங்கள்! (என்று போட்டான்). ஐயோ கெட்டேனே! ஐயோ! கெட்டேனே!தங்களுக்கு அனேககோடி ஆசிர்வாதம்!

இராக்குமுத்து:—வாதமாவது ஓதமாவது! எனக்கென்னத்துக்குவாதம்! நீதான் வாதநோக்காடு கண்டு ஓதமும் உப்பிவெடித்துச் சாகவேணும்! அடாபுத்தி கெட்ட அவிசாரிப்பயலே! மடப்பயலே! குரங்கே! கோட்டானே! எச்சிக்கலை நாயே! பிணம்பிடுங்கிப் பேயே! கழிச்சலிலேபோவாய்! தாயில்லை பிள்ளையில்லை உனக்கு! மாட்டுச்சென்மமே! என்னை யாரென்று நினைத்துவிட்டாய்! இதோபார்உன்உயிரை ஒரேகுண்டு! என்னிடத்தில் என்னகாரியம்செய்யமனங்கொண்டாய்! என்னை வைத்துக்கொண்டிருப்பவர்கள் இதோ வெளியிலே தூங்கிக்கொண்டிருக்கிறார்கள்! இந்நிமிஷம் நான் அவர்களை எழுப்பி உன்னைச் சித்திரவதை செய்து உயிரை எமலோகத்துக் கனுப்பச் செய்கிறேன் பார்! அடாதூர்த்தா! (என்று விரைந்தனள்).

சின்னையன்:—விரைவாய் ஓடிவந்து அவளுடைய பாதங்களைப் பெயர்த்து வைக்கக் கூடாதபடிக்குக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு) அம்மணீ! சிறியவனாகிய நான் தெரியாமற் செய்துவிட்ட குற்றத்தைப் பெரிய மனதுபண்ணிப்பொறுத்து என்னைக் காப்பாற்ற வேண்டும். நீங்கள்தான் என்னைப்பெற்ற தாயார். நான் உங்கள் வயிற்றிற்பிறந்தேன் பிறந்தேன். உங்கள் பாதத்தைப் பிடித்து நமஸ்கரிக்கின்றேன். அடியேன் பேரிற் கோபம் வேண்டாம். நான் ஒருத்திக்கு ஒரு மகன். ஒற்றைப் பெண்டாட்டியும் ஓவென்றுகத்திச் செத்துப்போவாள். லோகாம்பிகைப்போல என்னை இதுசமயம் ரெட்சித்துக்காப்பாற்றவேணும். அம்மாடீ! அந்தப் பேர்வழிகளை யெழுப்பவா? நினைக்க வயிற்றில் அக்கினியாப் பற்றுகிறதே! (என்று அழுகைக்குரல் இராகம்பாடினான்).

இராக்குமுத்து:—(அக்கினிப்பெருமூச்செறிந்து) அடா பயலே! அவர்களெல்லாம் மலைமலையாகத் திரவியங்களையும் ஆபரணங்களையும் இன்னம் எதெதுகளையெல்லாம்கொண்டு வந்து வந்து எனக்குப் பாதகாணிக்கை வைத்து என்னுடைய தயவுக்கு எப்போதும்எதிர்பார்த்துக் காத்துக்கொண்டு திரிகிறார்கள். இப்ப வந்த தரித்திரப்பயல் உனக்கு இவ்வளவு அகம்பாவமும் தாதுபுஷ்டியுமா? ஏழைக் குறும்புப் பயலே! (என்று ஆங்காரித்தாள்).

சின்னையன்:—அம்மா அ! அம்மா அ! தெரியாத அடியேன்பேரிற் பரிபூரண தயவு செய்ய வெணும் வேணும்! இரைய வேண்டாம் வேண்டாம்! அவர்கள் எழுந்திருந்து விடுவார்கள்! அப்பால் என்கதி அதோகதிதான்! எனது பொடிடப்பியைத் தாங்களே யெடுத்துக் கொள்ளுங்கள். இதோ என்னுடைய அஞ்சுவராகன்பெற்ற வெள்ளி அரைநாணும் இருக்கிறது எடுத்துக்கொள்ளுங்கள் (என்று கழற்றிக்கொடுத்து)இன்னம் எனக்கு உண்டாயிருக்கும் பொருள்கள் யாவும் தங்களுடையதேதான்! நானும் உங்களுக்கு விலைதான்! என்னைக் காப்பாற்றிவிடவேணும்! எனக்கு இரைந்து பேசப் பயமாயிருக்கிறது! (என்று அழுசொல் மொழிந்தான்).

இராக்குமுத்து:— (அரைநாணைத் தன் கையில் வாங்கிக்கொண்டு) ஏண்டா! நீசொல்லுவ தெல்லாம் வாஸ்தவந்தானே? (என்று சற்றுநேரம் யோசிப்பவள் போலிருந்து, பின்) சரி, ஆனல் ஆண்பிள்ளைகளை நம்பக் கூடாதே!

சின்னையன்:—என்ன அம்மா! என்னை நன்றாய் நம்பலாம். நான் வேணுமானால் என் குலதெய்வமாகிய சுப்பிரமணியக் கடவுள்பேரில் ஆணைசெய்து தருகிறேன் (என்று அழுதனன்).

இராக்குமுத்து:—நல்லது அந்தப்படி எனக்கு உண்மைசொல்லிக் கொடுத்துவிடு!

சின்னையன்:—உஹூ உஹூ! (என்று அழுது கொண்டே) நல்லது நல்லது இந்தாருங்கோ பிடியுங்கோ! எற்றுக்கொள்ளுங்கோ! நான் சத்தியம் செய்து தருகிறேன் (என்று உறுதிசெய்துகொடுத்தான்).

இராக்குமுத்து:—பஞ்சகாலத்து மழைபோற் புன்னகையுடன்) உன்னை நம்பலாம்போல்தானிருக்கிறது. இனி நீபோனால் இங்கே வாராமலிருக்கக்கூடாது. நீ நல்லபார்ப்பானாகத்தானிருக்கிறாய். இனி நீ ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். (என்று கிட்டஅழைத்துத் தன் சுந்தரக்கையால் அவனைத் தடவித் தட்டிக்கொடுத்தாள்).

சின்னையன்:—(பயந்தீரத் தானாகவே தன்னெஞ்சைத் தட்டிக்கொண்டு வடிந்திருந்த கண்ணீரைத் துடைத்து உருட்டி விழித்து) அப்பா அடி! இப்போதுதான் எனக்கு உயிர்பிடித்தது.

இராக்குமுத்து:—நீ ஸந்தோஷமாயிரு. முத்தண்ணாவும் பெத்தப்பெருமாளும் நான் எதுகேட்டாலும் தடையில்லாமற்கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். ஆகையினாலே நான் அவர்களுக்குக் காமநூலிற் சொல்லப்பட்டிருக்கும் இலக்கணப்படிக்கு அளவிறந்த சுகபோகங்களை மனம்பூரிக்கக் கொடுத்து வருகிறேன்.

நீயும் அப்படியே எனக்கு இனிமேற் கொடுப்பதாகச் சொல்லி யிருக்கிறபடியினாலே நான் உன்னை நம்பி உனக்கும் அவ்விதமான சுரத லீலைச் சுகங்களைப் பெருக்கமாய்த்தர விருப்பங் கொள்ளுகிறேன். ஆனால் நீ அவர்கள் இருவரைக்காட்டிலும் அழகுள்ள வாலிபனு யிருக்கின்றபடியினால் எனக்கு உன்பேரில்தான் அதிகப் பிரியம் மனதோடே இருக்கிறது. இந்தச் சங்கதியின் உண்மை நீ நன்றாகத் தெரிந்துகொண்டாயா? உன் சம்மதம் என்ன?

சின்னையன்:—(இனிய குரலோடும் குளிரப்பேசிய மேல்வாசகங்களைக் கேட்டு அடக்கிக்கொள்ளக் கூடாத பேரானந்தத்திற் பேச்சுத்தடுமாறலுடனும்) ஆ! என் அந்தரங்க நேசமுள்ளவர்களே! என்ன! தங்களுடைய அபிமானம்! பிரீதி! வாஞ்சை! ஆஹாஹா! என் அதிர்ஷ்டவசத்தையும் என்ன சொல்லப்போகிறேன்! கோபமுள்ளவிடத்தில்தானே குணமிருக்கும்? நீங்கள் இப்போது சொல்லிவந்தவைகளில் கோடிமடங்கு எனக்குச் சம்மதம்தான். அந்தப்படிக்கே உண்மையாய்க் கட்டுப்பட் டிருப்பேன் என்பது சத்தியம். தாங்கள் நம்பவேணும். மாறமாட்டேன்.

இராக்குமுத்து:—உன் பெண்ஜாதி உன்னைக் கோபித்தால் இங்கே வரமாட்டாயே?

சின்னையன்:—அவள் கெட்டாள் முண்டே. தங்களைப்பேசிய வாயால் இனி அவளைப் பேசவா? அவளைப்பேசிய வாயைச் சுத்தம் பண்ணுவதற்குத் தக்க தீர்த்தம் உலகத்திற் கிடையாதே. உங்களுடைய அழகென்ன உல்லாசமென்ன ஜோரென்ன கட்டிலென்ன

மெத்தையென்ன வாசனையென்ன ஒய்யாரமென்ன டாலென்ன நீட்டென்ன மேட்டென்ன குலுக்கென்ன டப்டஸ் புஸ் என்றாலும் இ ர க் க ம் தயை தாட்சணியமென்ன? இந்தக் கொட்டடியில் உங்கள் சந்திரவிம்பம் போன்ற முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாலே பசியெடுக்காதே! தங்கள் முகத்திற் குடிகொண் டிருக்கும் லெட்சுமி களை ஒன்றே எனக்குச் சகல பாக்கியங்களையும் தருமே! என் பெண்ஜாதியா? அவள் என்னைக் கண்டால் 'கிடு கிடு கிடு' என்று நடுங்கவேணும். நான் என்ன பெண்டுக்கு மேக்கியா?

இராக்குமுத்து:—அடே நான் என்னமோவென்று உன்னை ஒருவிதமாக வல்லவா நினைத்திருந்தேன்? நீ கடைந்தெடுத்த ஆசாமியாக வல்லவாயிருக்கிறாய்? பலே கெட்டி (என்று அய்யன் திரும்பத் தன்னிடம் வரும் படிக்கு ருசிகாட்ட மனதிற் கருத்துக்கொண்டு) நீ அதிகக் கெட்டிக்காரனாகத்தான் தோணுகிறது. எல்லாருக்கும் பலகுணங்களெல்லாம் பொருந்தி யிருக்கும். ஆனால் உதாரத்துவம் மட்டும் அபூர்வம். நீயோ தாராளமாகக்கொடுக்கும் கொடையாளனாகவும் இருக்கின்றாய். இவைகளை நான்முன்னமே தெரிந்துகொண் டிருப்பேனாகில் நான் உனக்கு யாதொருவிதமான சிரமமும் கொடுத் திருந் திருக்கமாட்டேன். உன் விஷயத்திற் பெரிய அநியாயம் செய்துவிட்டேன். கவலை சகிக்க முடியவில்லை. இந்தப்பாவத்தை நான் எங்கே கொண்டு போய்த் தொலைப்பேன்? திவ்யமான பொடிடப்பியை அன்றி அரைநாணையுங்கூட எனக்குக் கொடுத்து விட்டாயே? இப்போது உன்பேரில் எனக்குப் பிரியம் அதிகமாய் உண்டாகிவிட்டபடியினாலே, நீ அற்பமான

பொருள்களைக் கொடுத்தாயென்று நினைக்க எனக்கு மனம் வரவில்லை. நீஎனக்குரிய கட்டழக னாகிவிட்டாய். இப்போதுநான் உனக்கு விலைமதிக்கக்கூடாத பேரின்ப சுகத்தினைக் கொடுக்கப் பிரியமா யிருக்கிறேன் (என்று பார்ப்பான் தோளின்பேரில் தன்கையைப்போட்டு இழுத்து அணைத்து முத்தமிட்டுத் தன் படுக்கையிற் சேர்த்துக்கொண்டு அவனுக்குத் தெவிட்டாத போக சுகத்தையூட்டி, காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளுமாறுபோல, அவளுக்கு வேண்டிய காரியங் களையெல்லாம் அச்சுகவேளையில் அவனிடத்தில் ஸ்திர மாய் அனுகூலப்படுத்திக்கொண்டனள்).

சின்னையன்:—(அவளுடைய கைதேர்ந்த காமக் கலவியில் தேனில்வீழ்ந்த வண்டுபோலும் தன்செய லற்று மயங்கிச் சோர்ந்துகிடக்கப் பின் இராக்குமுத்து தெளிவிக்கத் தெளிந்து) அம்மாஅ! தாங்களிப்போது கொடுத்த இந்தவிதமான சுகத்தைப்போல நான் முந்தின ஜென்மங்களிலும் இனி மேல்ஜென்மங்களி லும் அநுபவிக்கப்போவதே இல்லை. இந்தஜென்மத்தில் நான்செய்த பாக்கியமே பாக்கியம். தாங்கள் எனக்குச் சொல்லமுடியாத சுகமயம் ஒன்றைத்தவிர எனக்கொரு சிறிது தொழிற் சிரமமே கொடுக்கவில்லையே?

இராக்குமுத்து:—எந்தத்தொழிலும் அதைக் கை யாளுகிறவர்களுடைய சாமர்த்தியத்தைப் பொறுத் திருக்கிறது. நான் கலா சாஸ்திரத்தினுடைய நுட்பங் களையெல்லாம் கற்றுத் தேர்ந்திருக்கின்றேன். என்னைப் போலதில் தேர்ந்தவர்கள் எங்குங் கிடையாது. பேரின்ப மொன்று இதைப் பார்க்கிலும் வேறே இருப்பதாக மூடாத்துமாக்கள் நினைத்துக் கெட்டுழல்கின்றார்கள்.

உலகம் தோன்றியதுமுதல் தற்காலம்வரை அதைப் பார்த்தவர்கள் ஒருவராவது உண்டோ? நீ பிரத்தியட்சமாய் இப்போது கண்டதே பேரின்ப மெனப்படும். "மக்ட்குத் தாய் தன் மணாளனோடாடிய சுகத்தைச் சொல்லெனிற் சொல்லுமா றெங்ஙனே" என்றபடி இந்தச் சுகாநுபவத்தை இன்னபடி யென்று தெரியாதார்க்குச் சொல்லியுணர்த்தக் கூடுமோ? தவளையானது தாமரையோடே வசித்திருந்தாலும் அதன் தேனை உண்ண அறியாது. காட்டிலுள்ள வண்டானது அம்மலரின் இனிய தேனை உண்டுகளிக்கும். இப்பூவுலகினிடத்து ஸதிரீ ரத்தினங்களின் சுகபோகங்களை அநுபவிக்கச் சௌகரியமாய் ஜெனித்த புமான்கள் எவ்வளவோ நிறைந்திருந்தாலும் அவர்களிற் புண்ணியவான்களா யுள்ளவர்களுக்கே அந்நல்லாரின் பேரின்பம் பிராப்தமாகின்றது. "தண்டா மரையி னுடன்பிறந்துந் தண்டேனுகரா மண்டூகம்-வண்டே கானத் திடையிருந்தும் வந்தே கமல மதுவுண்ணும்-பண்டே பழகி யிருந்தாலு மறியார் புல்லோர் நல்லோரைக்-கண்டே களித்தங் குறவாடித் தம்மிற் கலப்பர் கற்றோரே".

சின்னையன்:—அடா டா டா டா! இப்படி உள்ளதை உள்ளபடியே காட்டிப் போதிக்கக் கூடிய சாமர்த்திய முடைய தங்களால் எனது இந்தஜென்மம் பிரயோசனப்பட்டது. தங்களுக்குப் பிரதியுபகாரம் ஏழையான நான் என்ன செய்யப்போகிறேன்? தாங்கள் ஒரு பிரயோசனமு மில்லாத என்னை வலியவந்து ஆட்கொண்டீர்களே!

இராக்குமுத்து:—நீ இப்படிக்கான பிரமானந்தம் ஒன்றிருப்பதாக இதுவரை தெரிந்ததேயில்லை. மனை

யாட்டிபைக்கட்டித்தீவினையிலே உன் அரிய வாழ்நாளைக் கழிக்க நேர்ந்திருந்தது. என்னபிரயோசனம்? என்னை மனப்பூரணமாய் நம்பியவரைக் கடைத்தேறச் செய்து விடும் சுபாவம் என்னுடையது. மேகமானது மழையை உலகத்திற்குத் தருகிறது. அதற்காக அம்மேகம் உலகத்தினிட மிருந்து பிரயோசனம் பெறுவதில்லை; பெறவிரும்புவதுமில்லை. அதுபோல் நான் உன்னிடத்தில் பிரதி ஒன்றும் விரும்பேன். விரும்பினும் அதற்கு ஈடு செய்யும்படிக்கானது கிடையாது. புதிதாய் விவாகமான மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் பள்ளியறைச் சிங்காரிப்பு எப்படியிருக்கவேணுமென்பது யாருக்கும் தெரிவதில்லை. இராஜாக்களும் பெரிய பிரபுக்களும் தங்கள் மாளிகைகளில் மணவறை அலங்காரம் செய்யும்படிக்குத் தாசியரையே தருவிக்கின்றார்கள்? ஸ்திரீ புமான்களுக்குக் கலவிக்கு உரித்தானஇடம் எவ்விதம் ரமணீயமாயும் இச்சை பெருக்கக்கூடிய விதமாயும் இருக்கவேணு மென்னும் சூட்சுமங்களை நாங்கள் அறிந்திருப்பதுபோல் வேறே யாருக்குத்தெரியும்? புதுப் பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் நாங்கள் உல்லாசம் உண்டாகும்படி அவர்களை நெருங்கி யிருந்து லாலி ஊஞ்சல் நலங்குமுதலிய உசிதமான பாட்டுகளை இன்பமாய்ப்பாடிப் பயனைத்தருவோம். பெண்ணுக்கு என்ன விதமான அலங்காரம் செய்யவேணு மென்பதைத் தெரிந்தவர்கள் நாங்கள்தான். "வன்னமுலை வேசி துயிலும்" என்று ஏற்பட்டிருப்பதற்கொப்ப, அந்தப்பெண் கூச்சமில்லாமல் தன்நாயகனுடன் கலந்தின்புற வேண்டிய விதங்களை ஊகமாய்க் கற்பிக்கின்றவர்களும் நாங்களே. இஃதன்றிப் புணர்ச்சிவித அநுபவந்தெரியாத புது மாப்பிள்ளைக்குக் குருவாக இருந்து அவனுடன் கிரீ

டித்து இன்ப நிலைகளைக்காட்டி உபதேசிப்பவர்களும் நாங்களே. எங்களிடத்தில் முதலாவதாக வந்து நன்ருய்ப் பழகிக்கொண்ட வாலிபனே ஒருசுந்தரவதியைக் கட்டி அவளுக்கு இன்பநலந்தருந் தாதாவாய் இல் வாழ்க்கையிற் சுகமுற இருப்பானேயொழிய வேறில்லை. கலவிக்குரிய இடத்தைப்பற்றியும், எப்படிக் கலவி செய்கிறது என்பதைப்பற்றியும், கலவிக்குரிய பெண் எவ்வித லட்சணங்களோடும் அமைந்திருக்க வேணும் என்பதாதிகளைப்பற்றியும் கவனியாமற் பெரும்பாலும் மிருகத்தைப்போற் புணர்ச்சியைக் கையாண்டு வருகிருர்கள். சயனஅறை ஆபாசமா யிருக்கும். நேர்ந்தவிட மெப்படிப்பட்டதாஞலும் அதனைச் சயனவிடமாகக் கொள்வார்கள். ஆடவரேயன்றி ஸ்திரீகளானேரும் தங்கள் உடம்பைச் சுத்தமாய் வைத்துக்கொள்வதில்லை. பாக்கியவான் மகளா யிருந்தாலும்தான் என்ன? தீபாவலிக்குத் திபாவலி எண்ணை முழுக்கும் ஸந்தேகம். தலையில் ஈறும்பேனும் குடியிருப்பு. கூந்தல் குரங்கழித்த வனம்தான். இவ்விதத் தன்மைகள் பலவாய்ந்த ஆபாசரூபிகளையும் ஒருவன் மனமொப்பிப் புல்லிக்கொள்ளுகிருனே! குரூபிகளான ஸ்திரீகளிடத்திலும் ஆடவர்களிடத்திலும்முறையே போழகுள்ள ஆடவர்களும் ஸ்திரீகளும் காமவிச்சைகொண்டு சீரழியும் புதுமைகளும் இவ்வுலகி லுண்டாயிருக்கின்றதை நோக்க வெகு அருவருப்பாயிருக்கிறது. இதற்கு என்ன காரணமென்பதைச்சொல்ல எனக்குத்தெரியாது. நல்ல லெட்சணமுள்ள பெண்களே கலவிக் குரியவர்களாவார்கள். நான் எல்லாவற்றிலும் பொருத்த முடையவளாய் எப்படி ஜொலித்துக்கொண்டிருக்கிறேன் பார்த்தாயா? அதனை அறிந்துகொள்ளக்கூடிய ஞானவானகத்தான் நீ யிருக்கிருய்.

சின்னையன்:—ஆஹா! ஹா ஹா! தாங்கள் சொல்லியவைகளே மிகவும் சரியானவைகள். எப்படிப்பட்டவர்களும் இவைகளை ஆட்சேபிப்பார்களோ? உண்மை வாசகத்துக்குமுன் பொய் தலை எடுத்தாடுமோ? அற்பனாகிய நான் என்ன சொல்லத்தரவான்? ஏதோ நான் ஏழை தஞ்சமாகத் தங்களைவந் தடைந்துவிட்டேன். என்னைப் பட்சித்தாலும்சரி ரெட்சித்தாலும்சரி.

இராக்குமுத்து:—பரத்தை விளக்கும் பரத்தையரைச் சேரவேணுமென்பதாய், "மெல்லியாடோள்சேர்" என்றும், அப்படிச் சேர்ந்தகாலத்து அப்பாற் பிரியக்கூடாதென்பதாய்க் "கூடிப்பிரியேல்" என்றும், சேரக்கூடிய மாதர்களிடத்தைத் தெரிந்துசேரவேணுமென்பதாய்ச் "சேரிடமறிந்துசேர்" என்றும்,வீட்டுப்பெண்டுகளின் துன்பத்திற் கிடங்கொடாமல் அவர்களைவிட்டகலவேணு மென்பதாய் "துன்பத்திற் கிடங் கொடேல்","மைவிழியார்மனையகல்" என்றும்,பேரின்பமாம் போகசுகத்தின் குணத்தைக்கண்டபின் அதனைவிடக்கூடாதென்பதாய்க் "குணமது கைவிடேல்" என்றும், மெத்தென்றிருக்கும் பஞ்சணையிற் கூடிரமிக்கத்தக்கதென்பதாய் "மெத்தெனப்படுத்த னித்திரைக்கழகு", "இலவம்பஞ்சிற் றுயில்" என்றும்" நல்லசுகங்கொடுத்தவளை விட்டுப்பிரியாமல் நிலையாயிருக்கவேணு மென்பதாய் "நிலையிற் பிரியேல்" என்றும் ஒளவைப்பாட்டியாரே உலகுஉய்யப் புத்திகள்சொல்லி யிருக்கின்றார்கள். மற்றப் பெரியோர்களும் தங்கள்தங்கள் சாஸ்திரங்களில் இவ்விதங்களாகவே மக்கள் பிழைக்கும் வகைகளை வகுத்துவைத் திருக்கின்றார்கள்.

சின்னையன்:—ஆஹா! தாங்கள் சாஸ்திரங்களை எல்லாம் கரைத்துக்குடித்திருக்கிறீர்கள். ஆனால் தங்களுடைய ஒடுங்கிய இடையை அடுத்திருக்கும் ஆலிலை போன்ற தங்கள்வயிறு அவைகளை யெல்லாம் எப்படி அடக்கிக்கொண் டிருக்கிறதோ! ஆச்சரியம்!

இராக்குமுத்து:—ஏன்? குறுமுனியாகிய அகஸ்தியர் வயிற்றில் அகண்டமாகிய கடலும் கண்டப்பட்டு அடங்கிநிற்க வில்லையோ? எனக்குத்தெரியாத சாஸ்திரமும் ஒன்றுண்டோ? மறுபடி, இந்தப்பகட்டுச்சாஸ்திரிகளுக்கெல்லாம் நான்பிளாஸ்திரி ஒட்டி அனுப்பி விடுவேனே

சின்னையன்:—ஆஹா!தாங்கள் இப்படிப் படிப்பினாலேதான் பேரானந்தசுகம் இன்னதெனத் தீர்மானமாய்க் கண்டுபிடித்திருக்கிறீர்கள்.

இராக்குமுத்து:—அதில் ஒரு சந்தேகமும் உண்டோ? நீ எப்போதும் என்னிடத்தில் வந்து போய்க்கொண்டிருப்பாய். ஆகையினாலே உனக்கு இன்னம் எவ்வளவோஆனந்தங்களெல்லாம் பெருகிக்கொண்டே கிருதார்த்த னாகிவிடுவாய். இனி என்னை "அம்மா! அம்மா! என்று கூப்பிடாதே.

சின்னையன்:-வாஸ்தவம் தான். அதுகன்றுக்குட்டி தாயைக் கூப்பிடுவதுபோ லிருக்கிறது. இனிமேல் அப்படிக் கூப்பிடவில்லை. தங்கள்உத்தரவுக்கு இரண்டா? தாங்கள் என்பேரில் இவ்வளவு பிரியம்வைத்து விட்டீர்கள். இனி எனக்கு என்னகுறை? செத்தாலும் நல்ல கதிதானே? தாங்கள்மட்டும் எப்போதும் என்னைக் கை தவறவிடக்கூடாது.

இராக்குமுத்து:—நான் தவிக்கும்படிக்கு என்னை மறந்துவிட்டு விஸுவாஸமும் இல்லாமல் நீ போய் விடக்கூடாதென்று உன்பேரில் அந்தரங்கப் பிரியமாய் நானே கேட்டுக்கொண் டிருக்க வில்லையா? அப்படி இருக்க நானே எப்படி மாறிநடப்பேன்? நாய் அற்ப ஜெந்துவா யிருந்தாலுங் அதனிடத்தில் உள்ள விஸு வாஸகுணத்தை நான் தெரிந்து கற்றுக்கொண் டிருக் கின்றேன்.

சின்னையன்:—நீங்களும் என்னை விடாதீர்கள். நா னும் உங்களைவிடமாட்டேன். பிஸினும் ரப்பராயும் இழுபட்டுக்கொண் டிருப்போம். ரதியும் மன்மதனும் என்றபடிதான். நீங்கள்தான் ரதி நான் மன்மதனைப் போலேதானே இருக்கிறேன்!

இராக்குமுத்து:—ரதிக்குவந்தவன் மன்மதன் அல் லாமல் இருப்பானோ? ரதியைப்போல் நானெப்போதும் வாலிபமும் குறைவுபடாமலே இருப்பேன். மற்றஸ்திரீ கள் என்னைப்போலிருக்க வரம்பெறவில்லை. கொஞ்ச நாளிலே சுரைக்காய்களைத் தொங்கவிட்டுச் சொரூபம் குலைந்து போவார்கள்.

சின்னையன்:—அஃதென்ன? சுரைக்காய் என்கிறீர் களே? சு ரை க் கா ய் காய்க்கும் பெண்பிள்ளைகளும் உண்டோ?

இராக்குமுத்து:—அவைகளைத்தான் அப்பெண்டு கள் தம்மிடம் படுத்துக்கொள்ளவரும் ஆடவர்களுக்கு மெல்லிய தலையணையாகவும் கொடுத்து வருவார்கள். இது தெரியா தென்கிறாயே? சிலஆண்பிள்ளைகளிடத்தி லும் சுரைக்காய் பூசணிக்காய் இருப்பது உண்டே?

சின்னையன்:—பூசணிக்காயும் கூடவா? ஆஹா! ஹா! அப்படியா! எமீதா தாங்கள் எல்லாம் தெரிந்தவர்கள். எனக்கு என்னதெரிகிறது? நின்றவாக்கிற் படுக்க முடியுமா? கொஞ்சம்கொஞ்சமாகத்தான் இனித்தங்கள் வித்தைகளையெல்லாம் கவனித்துப்படித்துக் கொள்ள வேண்டியதாயிருக்கிறது. என்றாலும் உங்களைப்போல் எனக்குவருமா?

இராக்குமுத்து:—நான் நினைத்தால் உனக்கு எல்லாம் வந்துவிடும். பிரம்மாநினைத்துவிட்டால் ஆயுசுஒரு பாரமா? உன்னை என்றும் சிரஞ்சீவியாகவும் மாறாத கட்டழகனாகவும்கூட இருக்கும்படிக்கு என்னாற் செய்து விடமுடியுமே? (இவனைஒருசமயம் மருந்தீட்டால் வசப்படுத்தலாமென்று இவ்வாறுபேசினாள்).

சின்னையன்:—ஹா! அப்படியா! தங்களை அண்டிய என்னைப் பேரழகனாகவும் சிரஞ்சீவியாகவும் செய்து கண்ணுக்கழகாய்ப் பாருங்களேன்?

இராக்குமுத்து:—என் ஆசைக்குரிய உன்னை அவ்விதம் செய்துவிடாமல் வேறேயாரை விழலு (விழல்-வீண்) க்கு இறைத்த நீர்போலச் செய்யப்போகிறேன்? எனக்கு இரச வாதமும் வரும். இதுதெரியுமென்று அனேகர் பயனுப்பண்ணிப் பெருங்கொள்ளை யடித்துப் போகிறார்கள். மகான்களிலும் கோடியிலொருவர் இந்த ரசவாதம் செய்வார்கள். அவர்களும் செம்பை வெள்ளியைத் தங்கமாக்குவார்கள். அந்தவேலை எனக்குச் சர்வ சாதாரணம். நான் கல் மண்முதலிய எந்தப் பொருளையும் தங்கமாக்கிவிடுவேன். இந்த அரியவேலையை வேறே யாருக்காவது நான் சொல்லிக் கொடுத்தால் பிற்பாடு எனக்குப் பலிக்காதென்று சாட்சாது தேவியே என்

நேரில்வந்துசொல்லி வரம் கொடுத்துப் போயிருக்கிறாள். நான்இரசவாதஞ்செய்து கட்டிலிலும் மெத்தையிலும் நன்றாய்ச்சாப்பிட்டுத் தூங்குவதில் என்னமகிமை? எனக்கு முத்தன்பெத்தன் முதலியவர்க ளெல்லாரும் வரவும்போகவும் வேலைகள்செய்யவும் தமாஷாயிருக்கவும் வேணுமென்பதே விருப்பம். அதனால் எல்லாம் தெரிந்தும் தெரியாதவள்போல் இருக்கிறேன். தேவர்கள் நரைதிரை மூப்புப்பிணி அகலச் சாப்பிட்ட அமுதத்தையும் எனக்குத் தயாரித்துவிடத் தெரியும்.

சின்னையன்:—எனக்குக்கிடையாத பெரியசம்பத்துக் கிடைத்து விட்டது; எனக்குச் சமானமானவன் மூன்று லோகத்திலும் ஒருவன் உண்டாயிருப்பானென்பதில்லை. தங்களுடைய சக்தி மிகவும் அபாரமாயிருக்கிறது. என்பேரில் ஒருசமயம் தங்களுக்குக் கோபம் வந்தால் என்னை எரித்துவிடாதீர்கள். இப்படி சர்வவல்லமையுள்ள தங்களுக்கு நான் உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தம் செய்யாமல் இருக்கலாகுமா? தங்களையே சரணமாகநம்பி அடைந்து விட்டேன்.

இராக்குமுத்து:—நீ முன்னுக்கு வரவேண்டியவைகளில் எல்லாம் நான்சிரத்தை வைத்துக்கொள்வேன் என்பதை நீநம்பிவிடு. எனது பிரியமுள்ள சின்னையா! நான்பேசியவைக ளெல்லாம் ரகசியமாய் நீதெரிந்துகொண்டமட்டும் இருக்கட்டும். நான்வேறு நீ வேறு இல்லையென்று ஆகிவிட்டதால் இவைகளை உனக்குத் தெரிவிக்கலானேன். பரப்ரம்மமே ஸ்ரீராமமூர்த்தியாய் அவதாரம் செய்திருந்தது. அம்மனுஷாவதாரத்துக்குப் பொருந்தத் தமது தெய்விக சுபாவங்களைஒழித்து உலகநடையையே மேற்கொண்டுகாட்ட விருந்ததல்லவா? அதுபோல நானும்எனது தெய்வீகத்தன்மைகளை

உலகத்துக்குக்காட்டாமல் மறைத்துக்கொண் டிருக்க வேண்டியதாயிருக்கிறது. இப்போது சிலநாளில்எனது குலதெய்வமாகிய கறுப்பண்ண சுவாமிக்கு நான்நேர்த் திக்கடன் செலுத்தப் போகிறேன். இவ்விடத்தில் அத ற்குவேண்டிய வேலைகளையெல்லாம் நீகெட்டிக்காரனாக யிருப்பதினாலே பொறுப்பாய் மேற்பார்த்துக்கொள்ள வேணும். எல்லாரைக்காட்டிலும் எனக்கு உன்னிடத் தில்தான் நம்பிக்கை. நான்அப்படி உன்பேரில் நம் பிக்கையாகவும் பிரியமாகவும் இருக்கிறேனென்றுமற்ற வர்களுக்குத் தெரியக்கூடாது. மனம்மனம் சாட்சியாக இருக்கவேணும். தெரிகிறதா?

சின்னையன்:—அம்மா! எனக்கு நீங்கள் சொல்லிய வைகளெல்லாம் நன்மைகளென்று தெரிந்துகொண் டேன். நான்என்ன அவ்வளவு முன்னுக்குவரும் வழிக ளைத் தெரியாத பயித்தியக்காரனா? என்பிராணன் நீங் கள்தான். தங்களுக்கு வேண்டிய எந்த ஊழியங்களும் செய்ய எப்போதும் தயாராயிருக்கிறேன்.

இராக்குமுத்து:—இதோ பார்த்தாயா! நான் அம் மாவென்று என்னை அழைக்காம லிருக்க உனக்குச் சொல்லியிருந்தேனே?

சின்னையன்:—ஆமா! ஆமா! வாய்ப்பிசகாய் வந்து விட்டது. இனிமேல் நான்உங்களை அப்படிக் கூப்பிட வில்லை. மறுபடிநான் எப்படிக் கூப்பிடுகிறது?

இராக்குமுத்து:—நன்றாய் ராக்குமுத்தா என்று வாய்நிறையக் கூப்பிடேன்? நீஅப்படிக் கூப்பிட்டால் எனக்கு உடம்பு பரவசமாகி விடுமே? சில பெண்க ளுக்கு அம்மாளு என்றும் தாயாருஎன்றும் பேர்வைத் திருக்கிறார்கள். விவாகமானபின், அப்பெண்களை அவர்

கள் கணவர் அம்மாளு தாயாரு என்று கூப்பிடுகிறது உசிதமாயில்லை என்பதாக அவர்களுக்கு வேறேபேர் வைத்து அழைத்து வருகிறார்கள்.

சின்னையன்:—தாங்கள் சொல்லுகிற சூட்சுமம் தெரிந்துகொண்டேன். ஆனால்தங்கள்பேரைத் தலையில் அடித்ததுபோல சொல்லக்கூடாதென்று நினைத் திருந் தேன். இனி அப்படியே கூப்பிடுகிறேன்.

இராக்குமுத்து:—நான் உன்னுடைய பிரியாவிடை அல்லவா? நீயும் என்னுடைய பிரியவிடனாகி விட்டாய். நம் இருவருக்குள் என்ன வித்தியாசம்? வள்ளியின் பேரிலுள்ள தணியாத காமத்தினாலே சுப்பிரமணிய சுவாமிகூட அவளைநோக்கி "நீஎன்னவேலை எனக்குக் கட்டளையிடுகிறாய்? நான்அதைச்செய்யக் காத்திருக்கி றேன்" என்றுசொல்லுவார். "பணியாவென வள்ளி பதம் பணியும் தணியாவதிமோக தயாபரனே" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதுபோல நீயும் நான்சொல் லுகிறவேலைகளைச்செய்து வருவாய். நானும் உன்காலிற் பட்டது என்கண்ணிற் பட்டதுபோலிருப்பேன்.

சின்னையன்:—சுப்பிரமணியசுவாமி எனக்கு உரித் தானவர். அவரைப்போலவே நானும் உன்னிடத்தில் நடந்துகொள்ள அவரே எனக்குக்கிருபைசெய்திருக்கி றார். உனக்குமட்டும் நான்எந்தவேலை செய்வதென்றா லும் அதற்காக வெட்கப்பட்டு ஒதுங்கமாட்டேன்.

இராக்குமுத்து:— சுப்பிரமணியர் உன்னுடைய சுவாமியா? அதினால்தான் உனக்கு, இப்படி நல்லபுத்தி வந்திருக்கிறது. அந்தச் சுவாமி, தான் இச்சித்த பெண்ணுக்குக் குற்றேவல் செய்தமட்டும் இல்லாமல் அவளுடைய பாதத்தில் நமஸ்கரித்தும் இருக்கிறார். "பாளைக்குழல் வள்ளிபதம்பணியும்வேள்" என்றும் ஏற் பட்டிருக்கிறது.

சின்னையன்:—நான் மனம் வேறு செயல் வேறு உடையவனன்று. நானும் தங்களுடைய பாதங்களில் இதோ நமஸ்கரிக்கிறேன் (என்றுவிழுந்து அவளுடைய பாதங்களைப் பிடித்துக் கண்களில் ஒற்றிக்கொண்டான்). எனக்கு எல்லாம் வெகு பிரமானந்தங்க ளாகவேதா னிருக்கின்றன.

இராக்குமுத்து:—இதுவெகு ஆச்சரியமாகவேதா னிருக்கிறது. நீஉத்தமஜாதிப்புருஷன். அப்படிப்பட்ட வர்களுக்கன்றி இந்தவிதநட்பு வரமாட்டாது. பிராமண ஜாதியாகஇருந்தாலும் பிரயோஜனமில்லை. உத்தமமான நீஎனக்கு கண்ணுளனுகக்கிடைத்தது எனது அதிர்ஷ்டமே. சுப்பிரமணிய சுவாமி எத்தனை பெண்களின்பேரில் ஆசைப்பட்டுப் பிடித்துக்கொண்டுபோ யிருக்கிறது தெரியுமா?

சின்னையன்:—தாங்கள் முடியப் படித்தவர்கள். எனக்கு அதிகம் சொல்லவேண்டுமா? ஒன்றை ஒன்பதாப் பெருக்கிக்கொள்வேன். தங்களிடத்தில் வந்த பிற்பாடு எனக்குப் புத்தி வெகு தீட்சண்ணிய மாகி விட்டதென்பது நன்றாய்த்தெரிகிறது.

இராக்குமுத்து:—இனி நாம் இங்கேயே இருந்து கொண்டிருக்கக்கூடாது. வெளியேபோ யிருப்போம்வா (வென்றுஇருவரும் வெளியே வந்தபின், அவள் அங்கு தூங்கிக்கொண்டிருந்த முத்தண்ணுவிடம்கிட்டி நின்று) அடே முத்தண்ணு! அடேமுத்தண்ணு! என்னேரம் தான் தூங்கித்தொலைகிறது? எழுந்திரி! உஸ்கிப்பாட்டில் டஜன்வாங்கித் தருகிறேனென்று பசப்பினையே? இப்போதே அவைகள் எனக்குத் தேவையாக இருக்கின்றன. கறுப்பணன் பூசைக்கு முன்னமே எல்லாம் தாயாராகிவிடவேணும். அப்பால் அவசரத்திற் குண்டு சட்டியிலும் கைநுழையாது.

முத்தண்ணு:—அடி என்னடிவிளா! சும்மாபோட்டுப் பசப்பினுயே நாயேஎன்றுஅலட்டுகிறே? குலேக்கிற நாயே! நீயொருபேயே! சீச்சி! சும்மாகிட! என்று நேளிந்துபுறண்டு திரும்பவும் கால்களைச்சேர மடக்கிக் குன்னிக்கொண்டு வேட்டியை இழுத்துத் தேகாதிங்க மும்மூடி அசைவற்றுத் தபால் மூட்டையைப்போற் கிடந்தான்.

இராக்குமுத்து:—ஆத்தே - அடிருத்தே - விளக்குமாத்தே - வண்ணுவிட்டுமாத்தே சும்மாபோட்டு லாத்தே. "எச்சுக்குல்லாப் போட்டாரடி" என்றகதையாகவல்லவா இருக்கிறது? அய்யருக்குவந்த கெடும்பைப் பாரு - அடேஎழுந்திரி என்றுல் இல்லாத தெல்லாம் புலம்புகிறுயா? இந்தச்செல்லம் இப்போதாகொஞ்சுகிறது? அடேமுத்தண்ணு! அடெமுத்தண்ணு!

முத்தண்ணு:—தனது போர்வைக்குள் கருப்பையின்பிண்டம்போலப் பின் அசைவற்றிருந்து திரும்பவும் மூச்சுவிக்கும் தாஸனைக் "குர்ர்" என்று குறட்டைவிட்டான்.

இராக்குமுத்து:—அடேஅடே முத்தண்ணு! இதென்ன உன்னேடு பெரும் சீரழிவா யிருக்கிறது? வீடு இடிந்து தலையில் விழுந்தாலும் எழுந்திருக்கமாட்டாய் போலிருக்கிறதே! பகல்இரவு இரவுபகலா? இதுஎன்ன அநியாயம்? ஏதோ கூப்பிடுகிருளேஎன்று கொஞ்சம் கூடத்தோணவில்லேயே? எருமைமாட்டுமுதுவில் மழை பெய்ததுபோலல்லவா இருக்கிறது? என்ன அசமந்தமும் சண்டித்தனமும்? அடேடே முத்தண்ணு!

முத்தண்ணு:-(தூக்கம்கலைந்து, ஒற்றைக்கையால் தன்போர்வையை நீக்கிக்கொண்டுதூக்கக்கண்ணைப் பலவந்தமாகத் திறந்துதிறந்துமூடி, வாய்க்குள்) என்ன இவளுக்குஇருக்கிற கொழுப்பு. இவள் வாய்கொழுப்புச் சிலையால்வடியமட்டாதா? சூலம்போட்ட காளைமாதிரியாகத் தின்னப் பஞ்சமில்லாமல் இப்படி உன்மதம் ஏறிப்போய்விட்டது. அப்பாடீ! அப்பாடீ! மூட்டைப் பூச்சியாகமுப்பு. வாய்ப்பூச்சியாகடிப்பு. சிறிக்கி பொல்லாதவள். திமர்த்தண்டமாரி. இருக்கட்டும் சொல்லுகிறேன். இந்தவிருப்பும் அகம்பாவமும் இவளுக்கு ஆகாது (என்று மொண மொணவென்று பேசிப் பின் தனதுபோர்வையை வெடுக்கெனத்தள்ளிவிட்டுவிஸுக்கென எழுந்துநின்று படுக்க விரித்துக்கொண்டிருந்த சவுக்கத்தைஎடுத்துப் படால்எனஉதறித் தன் தோளில் அரைகுறையாகப் போட்டுக்கொண்டு இரைவேண்டும் குருவிக்குஞ்சு போல் வாயைத்திறந்து திறந்துதெடர்பாய் ஊளைக் கொட்டாவிகளையிட்டுச் சூம்பிப்போட்ட பனங்கொட்டையைப்போல்நாலுபக்கங்களிலும்விரிந்து நீட்டிக் குலைந்துகிடந்த தலைமயிர்களோடு பிரகாசித்து குதிகளைத் தூக்கி நீளமாகநின்று கைகளையும் வேறே மேலே எட்டமட்டும் கிளப்பித் தன் உடம்பைப்பாம்பு போல நெளித்துநெளித்து நெட்டிவாங்கிச் சோம்பலைத் தீர்த்துக்கொண்டு நின்றனன்).

இராக்குமுத்து:-அடே முத்தண்ணு! இதென்ன இதென்ன வெகுநேர்த்தி - வெகுஅழகு - வெகுகளை. திவ்யம்திவ்யம். நல்லதுபாண்டியா-நீநெளித்து நெளித்து நன்றாய்ச் சதிர்ஆடுகிறாய். எனக்குநீயே நட்டுவனாக இருந்து ஆட்டம்சொல்லித் தாலாம்போ லிருக்கிறதே.

முத்தண்ணு:—அம்மே! இனிஉனக்கு நான் நட்டுவப் பயலும்கூடத்தான். நீஎன்னை இப்போது நட்டுவக் காலியாய்க்கொட்டிக் கிளப்பிவிட்டாயே. கொஞ்சநேரம் தூங்கவிடமட்டேனென்று இந்தக்கொட்டமும் ஆட்டமும் என்னைத் திண்டாடவிட்ட நீ தான் இப்போது திவ்யமாகஆடினாயே? உனக்கு நான்சொல்லிக்கொடுக்கவாவது? உனக்குவிருதாக இரும்புக்கொலுஸை (விலங்கு) போட யோக்கியதை வந்துவிட்டதே?

இராக்குமுத்து:—(விகடாலங்காரமாய்) சுவாமியவாள்! நான் தங்கள் தூக்கத்தைக் கெடுத்துவிட்டதற்காக என்னை மன்னிக்கவேணும். மகா சந்நிதானத்தில் இப்படிக் கோவித்து முறுக்கித் தோளிற் போட்டுக்கொண்டால் அடியாளாகியநான் தாங்குவேனோ? தேவரீர்என்ன சாமானியமானவர்களா? கும்பகர்னனோடே சேர்ந்து அந்தச்சிருஷ்டி கர்த்தனையே நேராகத்தெரிசித்து நித்ரத்துவம்பெற்ற மகானல்லவோ? தாங்கள் தூங்காமல் தூங்கிச் சுகம் அநுபவிக்கும் மகத்துக்க ளன்றோ? தாங்கள் இனி எழும்பாமலே ஒரேதூக்கமாய்த் தூங்கிவிட்டால் தங்கள்பேரிற் சமாதிகட்டி எல்லாரும் பூமாலை போட்டுத்தொழுது இஷ்டசித்திக ளெல்லாம் பெறுவார்களே? ஏன்விழித்துக்கொண்டு இப்படி நடமாடி மாயவுலகை வஞ்சித்துத் திரியவேண்டும்?

முத்தண்ணு:—அப்பா! இவள் இந்திரஜாலக்காரி நீலி-படித்துக்கெட்ட முழுப்பாவி-என்னென்ன பகட்டெல்லாம் தான் பண்ணுகிறாள்? இவ்விதமானவளையும் பிரமனுக்குப் படைக்கத் தெரிந்திருக்கிறதே? நான் நன்றாயிருந்தேன். பெத்தப்பெருமாள் புத்தியைக்கேட்டு உன்னோடு வந்துசேர்ந்து கெட்டேன் - என்னுடைய

குலமும் ஒழுக்கமும் படிப்பும் தொலைந்ததே. நீஎல்லாம் வெள்ளையடிக்கப்பட்ட கல்லறையே.உள்ளுக்குப் பார்த்தா லன்றோ தெரியும் அந்தநாற்றம்? உன்னிடத்தி லிந்த மினுக்கெல்லாம் இல்லாவிட்டால் எந்தப்பயல் உன்னைத் தேடப்போகிறான்? ஒருச்சாண் முகத்துக்குள்ளே எத்தனை பாவங்கள்தான் காட்டுகிறாய்? வலிக்கிறாய் மெலிக்கிறாய் சொலிக்கிறாய் இளிக்கிறாய் சுளிக்கிறாய் நீட்டுகிறாய் வாட்டுகிறாய் உருட்டுகிறாய் அரட்டுகிறாய் கொணட்டுகிறாய் கண்வலைவீசுகிறாய்......................ஆஹா ஹா ஹா லேடீ பேடி.

இராக்குமுத்து:—மிஞ்சுகிறதெனக் கெஞ்சி வஞ்சிக்க எண்ணி ஓடிவந்து முத்தண்ணாவைச் சிக்கெனக் கட்டித்தழுவி அவன்வாயைத் தன்கைகளால் மூடிக்கொண்டு, அய்யரே சற்று தயவுசெய்யும்! நெடுங்கதை புலம்பவேண்டாம். வாய்பெருகத் தூக்கத்தை இப்போது விட்டிருக்கிறீரே! நான்பேசியது நிந்தாஸ்துதி என்று நீர் நினைக்கவேண்டாமா? தெய்வங்களுக்கும் அதுபிரீதியன்றோ? நீர்பலவிதத்திலும் என்னாற் சுகமடையவேண்டாமோ? விபரீதமான வாக்குத்தத்தத்தை எனக்குநீர் சரமாரியாய் ஆரம்பித்துவிட்டீரே? குருவியின்பேரில் ராமபாணமா? எனக்குமுன்வாக்குத்தத்தம்செய்திருந்த டஜன் பாட்டில்களுக்கு டஜன் தீர்த்துவிரட்டிவிட்டீரே? உடனே பாட்டில்களைக் குறைவில்லாமல் தருவித்துக் கொடும்?

முத்தண்ணா:—(மாயைதிரும்பவும் வந்துபிடித்தது பெண்ணென்றாற் பேயுமேஇரங்கும் "மையலார் மயலிற்பட்டோர் தமக்கொரு மதியுண்டாமோ") ஆகட்டுமடீ ! நான்வீட்டுக்குப்போய்ச் சாப்பிட்டு வருகிறேன்;

மணிமூன்றுஆகிறது. நீஎன்னைக்கட்டிய கட்டை இப்போது சற்றுநீக்கிவிடு. "ஞானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை-தானந் தவமுயற்சி தாளாண்மை-தேனின் கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்-பசிவந் திடப்பறந்துபோம்" அல்லவா? (சின்னையனைப் பார்த்து) ஓஹோ! இவனும் இதுவரை இங்கேதானா இருக்கிறான்? இன்னம் சாப்பிடப் போகவில்லையோ என்றான்.

சின்னையன்:—முத்தண்ணாவை நோக்கி, "என்ன தாங்கள் எல்லாம் தெரிந்தவர்களாயிற்றே? என்னத்தைச் சொல்லுகிறது? இராக்குமுத்துவை இப்படியெல்லாம் அவமரியாதையாகப் பேசலாமா? என்றான்.

முத்தண்ணா:—அடே! நல்லது! எனக்கு இல்லாத சுறுத்து (உரிமை) உனக்கு இப்போது மூணேமுக்கால் நாழிகையில் வந்துவிட்டதோ? கெட்டதா காரியம்?

சின்னையன்:-(விநயசுபாவமில்லாதவனாகையால் முகத்தைச் சுளித்துக்கொண்டு) சுருத்துஎன்று அது என்ன வார்த்தை சொல்லுகிறீர்கள்? பெண்களுக்கு யாரும்இரங்கத்தான்செய்வார்கள். பேய்கூடஇரங்குமே?

முத்தண்ணா:-(அவனுடைய அசட்டு வசனத்தைச்சகிக்க மாட்டாதவனாய்க் கோபங்கொண்டு உருட்டி விழித்து) "அடி டியாம்பூள்! டர்ட்டி பீஸ்ட்! உனக்கு அவ்வளவுவந்துஎறிப்போச்சுதா!" (என்று கீழேகிடந்த விளக்குமாற்றை யெடுத்து அவன்புத்தியை விளக்குமாற்றில் அடிக்க ஓங்கிக்கொண்டு அநுமார்போற் பாய்ந்தான்.

சின்னையன்:-(உடனே உள்ளம் நிலைகலங்கி) "கொல்லுகிறான் கொல்லுகிறான்! பழியோ பழி! பழி விழுக்கப்போகிறது! போகிறது! பிரம்மஹத்தி! பெரிய

பிரம்மஹத்தி! ஐயோ! தட்டிக்கேட்பாரில்லையோ! இல்லையோ!" (என்று தன்னைமறந்து பெரியகூச்சற்போட்டுத் தடபுடலாய் அவசரப்பட்டுப் பின்வாங்கி ஓடிஆங்கு முன்னமே அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்த பெத்தப்பெருமாள்பிள்ளைமேல் மிதித்து இடரிக் கீழேபொதி போற்சாய்ந்து விழ்ந்தான்).

பெத்தப்பெருமாள்:— (அங்கே நடந்துகொண்டிருந்த சங்கதிகளெல்லாம் தெரியாமலயர்ந்துதூக்கமே கெதியாக இருந்தவன், மிதியினால் திடீரென்று துடித்துப் பதறியெழுந்து அய்யன்செயலைத் தெரிந்து) அடிமட்டிக்கிடாப்பயலே! சோற்றுப்பானைப்பிணமே! அசட்டுச்சவமே! பூசுணிக்காய்த் தடிப்பயலே! ஹைறயெருத்தைதக்கத்திரீ! பருப்புச்சாம்பார்! என்னை மிதிக்கலாச்சுதோ!" என்று தன்கைகொண்டமட்டும் ஓங்கி ஒரு மொத்துமொத்தி அவன் கதறக்கதற விடாமற் பிடரியைநெரித்துப்பிடித்துப் பூனைவாய் எலிபோலும் அலக்கழித்து அவனைப்பின் தூரப்போய்விழ விசைகொண்டு தள்ளினன்.

சின்னையன்:—(சாயுமரம்போல் திடீரெனவிழுந்து) "உயிர் போயேவிட்டது!" அம்மாடீ இ! எத்தப்பெரிய ஆபத்து! ஐயோ! ஐயோ! செத்தேனே! செத்தேனே! கேள்விமுறை யில்லையோ? அடியோ! ரூக்குமுத்தோ! தோ! ஓ ஓராக்குமுத்தோ ஓ! என்றுவெருள விழித்துப் பதறி அலறிப்பின் இரண்டுகைகளாலும் தனதுஇரண்டு கண்களையும் கசக்கி ஊஉ ஹூஉ ஹூஉ என்றுகடைச் சங்கூத்தாய் அழுதுகொண்டு, உதட்டைக் குலைபோல் நீளத் தொங்கவிட்டு, உச்சிச் சிறுகுடுமிச் சுருக்கும் அவிழ்ந்திட, ஆடையும் குலைந்து விழுந்திட ஆபாசத் தோற்றங்களைக்காட்டி நின்றனன்).

இராக்குமுத்து:—வெகு இரக்கங் கொண்டவள் போல் அவனிடம் போய்நின்று, "இது என்னபாவம்! சுமங்கலி வரங்கேட்கப்போய்ப் புருஷனை இழந்தது போல் உனக்கும் இந்தவிதிவருமோ! கிடக்கட்டும்! நீ அழாதே! நான் அவர்களுக்கு வழி சொல்லுகிறேன்! பயப்படவேண்டாம்!கவலைகொள்ளாதே!" என்றுதனது அழகிய கையினால் அவனைத் தடவிக்கொடுத்து முன் தானையாற் கண்ணீரைத்துடைத்துச் சினிவாசகப்பேச் சூட்டினாள்.

சின்னையன்:—(பாவத்தைப் போக்கிவைக்குங்கங்கா தேவியாக அவளைப்பாவித்தான். அவளுடையகை தன் தேகத்திற் பட்டமாத்திரத்தில் எல்லாத் துன்பங்களும் அவமானங்களும்எங்கேயோபறந்தோடிவிட்டன) இஹீ! இஹீ! இஹீ! (இதுசிரிப்பின்அழகு) நான் என்அழப் போகிறேன்? பாவமென்று இரங்குவதேன்? எனக்குப் பாவம் எது? எல்லாம் புண்ணியமாக வல்லவா வந்து சேர்ந்திருக்கின்றன? எல்லாப்பயமும் கவலையும்தக்ஷணமே என்னைவிட்டுப் போக்குவதற்கு நீங்கள் ஒருவர்மலை போலிருக்க எனக்கு என்னகுறை வந்துவிட்டது?

இராக்குமுத்து:—என்ன முத்தண்ணு! இவ்வளவு கோபம் காட்டிவிட்டீரே?

முத்தண்ணு:—நீசின்னப் பயல்களுடன் அற்பச் சாவகாசங்களையெல்லாம் தோணினபடிவைத்துக் கொண்டால் இன்னம் எல்லா விபரீதங்களும் கூடத் தான் உண்டாகும். பிணம் காசுக்கல்லாமற் சும்மாவும் வாயைத்திறக்கிறதுண்டு. அந்தக் கதைதான் உன்பாடு. இவன்ஒரு மனுஷனா? கோழிகூவி விடிகிறதா நாய்குரைத்து விடிகிறதா? அப்படிஎன்ன உனக்கு அடங்காத மதம்? எதற்கும் இதம்பதம் இல்லையா?

பெத்தப்பெருமாள்:—(சின்னையனை உருத்துப்பார்த்து) அடேசர்வசண்டாளப்பலே! பெண்டாளப்பலே! எனக்குஈரற்குலை தெரித்துப்போயிற்றே! அடேகாமாட்டி டாம்கூஸ்! உனக்குப் புறாமுட்டைபோல் இரண்டு கண்களிருந்தும் பிரயோசனமென்ன? இப்படித்தட்டுக் கெட்டுப்போய் என்னைமிதிக்கவா சொல்லியிருக்கிறது? என்காற்செருப்பால் உன்னைஉதைத்தால் என்ன? அறிவு கெட்ட மூடப்பலே! முளிகண் குருட்டுப்பலே! முளிக்கிறதைப்பார்! பொங் தாங்தையைப்போல்! குழந்தைதான் என்ன அழகு! போட்டாளே உனையொருத்தி வேலையற்றுப்போய். உன்னை உயிரோடுமா போகவிடுகிறது? இருஉன்னைச் சொல்லுகிறேன். மேல்உலகத்துக்கு வழிகாட்டிவிடுகிறேன்! (என்று நாக்கை நீட்டிக்கடித்துப் பயமுறுத்தியகாலையில், சின்னையன், தாசிமுகத்தையும் பெத்தப்பெருமாள் முகத்தையும் மாற்றிமாற்றிப் பார்த்துப் பரக்கப்பரக்க விழித்துக்கொண் டிருந்தவித விநோதங்களை நாம்இங்கு என்ன சொல்வோம்)!

முத்தண்ணு:—(எல்லாரும் சற்றுநேரம் பேசாமல் அமர்ந்த காலையில்) அடீ இராக்குமுத்து! நான் போகிறேன். ஓய்பிள்ளே! நீர்என்காணும் வரவில்லையா?

பெத்தப்பெருமாள்:—சரிவாரும்போய்வருவோம்.

இராக்குமுத்து:—(முத்தண்ணுவை நோக்கி அய்யரவாள் நீர்என்ன போறேன்என்றீர்? போய்வருகிறேன் என்றுசொல்லப் பிரியமில்லையோ? நீர் உஸ்கிப் பாட்டில்களுக்கு வருதி செய்துவிடவேணுமே?

முத்தண்ணு:—அடிநீ என்னடிஸதா உஸ்கிபிஸ்கி என்று சொல்லி உறுவேற்றுகிறுயே ஒழிய அது பிரசன்னமாகும் வழியைக்காணேம். என்கையில் இப்

போது ஒருகாசே யில்லாதபோது இனிப் பாட்டில் களுக்கு ரூபாய் வேறேஎங்கிருந்து வரும்? காசும்தான் என்ன லேசாவா யிருக்கிறது? பாட்டில் ஒன்று விலை ரூபாய் இரண்டரையாகவும் இருக்கிறது, இவ்வளவில் நீபிடிவாத நோக்காடாய் ஒன்றல்ல இரண்டல்ல பாட்டில்கள் பன்னிரண்டு வேணுமென்கிருய்? இந்த அழக் கொடுப்பை ஆருகொடுப்பா? நீபிடித்தால் ஒரேபிசாசு தானே?மூலைக்குத்தறியாத சவலைப்பிள்ளையா யிருக்கிருய்! ஸகாயமான நாட்டுச்சரக்கை வாங்கி எவ்வளவோ கொண்டாட்டம் அடிக்கலாம்.

இராக்குமுத்து:—சாராயம்தான் பூராயமாய் உபயோகித்து வருகிறோமே?நேர்த்திக்கடனுக்குப்போகிற போது உடனொத்தவர்கள் பார்ப்பதற்கு உஸ்கி என்றால் கௌரவமாயிருக்கும். நீங்கள் கடைக்குச் சீட்டுக் கொடுத்துவிடுங்களேன்? நான் அதைத் தங்கள் பற்று வழிக்கடைக்குக் கொடுத்தனுப்பிப் பாடில்களை வாங்கிக் கொள்ளுகிறேன்? நீங்கள்தான் கடைக்குச் செல்லாப் பணமானீர்கள், நான் எங்கும் செல்லும்காசு. கடைக்காரன் உங்களுக்காகவும் உங்கள்சீட்டுக்காகவுமா கொடுத்துவருகிறுன் என்று நினைக்கிறீர்கள் ? நீங்கள் சிரமமில்லாமற் சீட்டைமட்டும் என்கையில் தாருங்கள் பணம் நீங்கள் இப்போது கொடுக்கவேணு மென்று நான் தொந்தரவுசெய்கிறேன் ? பாம்பும் நோகாமல் பாம்படித்தகம்பும் நோகாம லன்றோ நான்நெடுகிலும் தங்களிடம் வேலைசெய்து வருகிறேன். பசுவின் மடியைக்கொய்து பால்கொள்வார் எங்காவதுஉண்டோ?

முத்தண்ணு:—அடி!நான் வைத்துக்கொண் டுனக்கில்லையென்று சொல்லவில்லை. சதை கண்டல்லவோ கத்தியாடவேணும்? கோவணத்தை அவிழ்த்து மேல்

வேட்டிகட்டிக்கொள்ளவாசொல்லுகிருய்? இல்லாதவன் பொல்லாதவன் கதையாத்தான் வந்திருக்கிறது! ஊரு க்கு ஒருபுறம்இடி மத்தளத்துக்கு இருபுறம்இடி.

இராக்குமுத்து:—தாங்கள் பேசுகிறது வெகு ஆச்சரியமாயிருக்கிறது. பார்ப்பானில் ஏழை யுண்டோ? தாங்கள் இப்போது மூடப்பட்ட தங்கச் சுராங்கமாயிருக்கிறீர்கள் கடுகுசிறுத்தாலும் காரம்போய்விடுமோ? தங்களுடையசாமர்த்தியமே அட்சயபாத்திரமாயிருக்கக்குறை உங்களுக்கு எக்காலத்திலும் உண்டா யிருப்பதில்லை. யானைக்குத் தன்பலம் தெரியாமல் ஒருமனிதனிடம் அகப்பட்டுவிழிக்கிறதே. ஜெயவீர அநுமாருக்கும் தன்பலம் தெரிவதில்லை. பிறர் அதனையெடுத்துச் சொன்னால் உடனே அவருக்கு அண்டங்களையும் பிண்டமாக்கும் பலம்வந்து கூடிக்கொள்ளுகிறது.

முத்தண்ணு:—நீபேசுவதெல்லாம் குருடனைச்செந்தாமரைக்கண்ணனென்றபடியே இருக்கிறது. பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்லவேணும். ஆத்திரக்காரருக்குப் புத்தி மட்டுத்தான். சுயகாரியப் புலியாயிருக்கிருய்!

இராக்குமுத்து:—பார்த்தீர்களா! பார்த்தீர்களா! நான் சத்தியமாகவே உங்களுடைய பராக்கிரமங்களைப் பேசினேன். நான் தப்புஸ்தோத்திரம் பண்ணவில்லை என்று உங்கள் தலையில் இதோஅடிக்கிறேன் (அடித்தாள்) என்ன? இப்படி என்னைச் சொல்லலாமா!

முத்தண்ணு:—அதுசரிதாண்டீ! பலமிழந்த பஞ்சபாண்டவர்கள் போலிப்போது இருக்கின்றேன். இருக்கட்டும் (என்றுகனைத்து) ஆனைபடுத்தாலும் குதிரை உயரமாகமாட்டாதா? எனக்குத் தாழ்வொன்றும் இல்லைத்தான்.

இராக்குமுத்து:—தாங்கள் பன்னிரண்டுபாட்டில்களை எனக்குப்பிற்பாடு வாங்கித் தந்துவிடுவதாக அப்போது இரண்டுதிராம் வாங்கிச்சாப்பிட்டுவிடவில்லையா? ஒன்றுக்கு ஒன்பதாக்கொடுக்கத் தயிரியம் இருந்துதானே அப்படிச்செய்தீர்கள்? இன்னமுமா உங்களுக்கு அந்தக் குடிமயக்கம் இருக்கிறது?

முத்தண்ணு:—எல்லா மயக்கமும் உன்மயக்கம் ஒன்றுக்குமேல் இருக்கமாட்டாது. இரண்டுதிராம் எங்கே-12-பாட்டில்கள் எங்கே? ஆனைக்கும் பானைக்கும் ஒப்பிட்ட கதைபோலிருக்கிறதே? நான்பேசிய அரிச்சந்திர வாக்குத்தப்பிப்போய் விட்டதில் எனக்குக் கவலையொன்றும் உண்டா யிருப்பதில்லை.

இராக்குமுத்து:—நீங்கள் சாப்பிடாமலும் வஸ்திரம் உடுக்காமலுமா இருக்கிறீர்கள்? ஆயிரம் இருந்தாலும் தங்கள்வீட்டுக்காரக் கண்ணுட்டிபோல் நான்புண்ணுட்டி ஆவேனோ?

முத்தண்ணு:—(பெருமூச்செறிந்து) என் குடித்தனம் குடித்தனமாகவே தெருவும் திண்ணையுமாய்ச் சீரழிந்து திரிகிறது-அந்த வெட்கக்கேட்டை வெளியிற் சொல்லவும் படுமோ? அதுஎப்படியும் போகட்டும். இப்போது நான் உனக்குக் கொடுக்கமாட்டே னென்று சொல்லுகிறேன்? சீட்டுச் சீட்டுஎன்றுதான் கடைவழிகளில் ஆயிரம் ரூபாய்க்குமேல் கடனாகிக் "குள்ள வண்ணானுக்கு அள்ளமுடியாமூட்டை" என்றபடி யாகி விட்டதே? என்பாடு ஆனையைக்கட்டித் தீனிபோட்ட கதையாய்த்தா னிருக்கிறது? என்னதான் செய்கிறது! பாலகிருஷ்ணஞ்செட்டி கடைக்குச் சீட்டுத் தருகிறேன். (என்று தன் கையெழுத்திட்ட சீட்டைக்கொடுத்தான்).

இராக்குமுத்து:-(கொங்கைகுலுங்கப்போய் அதை வாங்கிக்கொண்டு) முத்தண்ணு! நீங்கள் இராத்திரிக்கு வாருங்கள் (என்றுசாடைசெய்து அவனை அனுப்பினள்).

பெத்தப்பெருமாள்:—இராக்குமுத்து! நானும் போய் வருகிறேண்டீ!

இராக்குமுத்து:—இந்த வெள்ளிக்கிழமை கருப்பண்ணசாமி பிரார்த்தனைக்கு இரண்டு ஆடுகளும் எட்டுக் கோழிகளும் அரிசிகிரயங்களும் கொடுக்கவேண்டியது உம்முடையபங்கு. சுவாமிவிஷயம். அந்தப் புண்ணியமெல்லாம் உமக்குத்தான்.

பெத்தப்பெருமாள்:—(அதைக்கௌரவமாய் அங்கீகாரஞ்செய்து) துவாரபாலகாள்போல எனக்கு இரண்டு புயங்கள் இருக்கின்றன. இவைகளுடன் எனது இரண்டு கால்களும்சேர்ந்தது சதுரங்கசேனையாகும். உனக்கு வேண்டியவைகளெல்லாம் நான் ரெடிபண்ணி விடுகிறேன். அதைப்பற்றி நீஒன்றும் யோசிக்க வேண்டியதில்லை. முத்தண்ணுவுக்கு எவ்வளவோ செயல்கள் இருந்தும் பிராமணன் ஆகையால்மனத்தயிரியம் இல்லை. இருக்கட்டும் பார்த்துக்கொள்வோம். நீ நடத்தப் போகும் பிரார்த்தனையில் அமக்களம் அதிகமாகவே யிருக்கும். கறுப்பண்ணன் கறுப்பண்ணன் என்று எல்லாம் நமக்குத்தானே கொண்டாட்டம். நாம் ஒவ்வொருசாமியும் பெரியசாமியா யிருக்கிறோமே! தமாஷ் பண்ணி விடுவோம். கவலைவேண்டாம் நான் இப்போது போய் வருகிறேன்.

இராக்குமுத்து:—என் இனத்திகள் எல்லாரும் பிரார்த்தனைக்கு அவரவர்நாயகரின் உதவியைக்கொண்டு வெகு ஆடம்பரமாய் வருவார்கள். அவர்களெல்லாரும் என்னைப்பார்த்து மதிக்கும்படி செய்தால்தான் உங்களுக்கும் பெருமையா யிருக்கும்.

பெத்தப்பெருமாள்:—நல்லது அதிக ஸந்தோஷ மாச்சு (என்று முத்தண்ணுவுடன் போய்விட்டான்).

(4).

சின்னையன்:—அப்பாடீஇ! அந்த இரண்டு பூதங்க ளும் தொலைந்துபோயின. இராக்குமுத்தூஉ! என்னு டைய தெய்வத்துக்கு ஆடு வாகனம், கோழி கொடி- அப்படியிருக்கச் சண்டாளர்கள் அந்த ஜெந்துக்களை அக்கிரமமாய்க்கொன்று புசிக்கிறூர்களே? அவைகள் இந்தப் பாதகருக்கு ஒருதோஷம் செய்யவில்லையே! இராக்குமுத்து! எனக்குப் பசி பொறுக்கமுடியவில்லை. நீ வடவாக்கினியை அப்போது ஊற்றி எனக்குக்குடிக்கக் கொடுத்து விட்டாய்! அது சடாராக்கினியோடே கூடிக் கலந்துகொண்டது. இதுவரை உன்னுடைய திருவுரு வத்திலேயே புத்திசென்றுகொண் டிருந்தபடியினுலே எனக்குப் பசியினுடைய நினைவேதெரியாமற்போ யிருந் தது. அந்த எமனும் காலனும் இப்போது சாப்பிடப் போயிருப்பதினுல் எனக்கும் சாப்பாட்டுஞாபகம்மூண்டு விட்டது. நானும் சாப்பிட்டுவிட்டுச் சீக்கிரம் வெளிச் சத்தோடே உன்னிடம் வந்துசேருகிறேன்.

இராக்குமுத்து:—நன்றுயிருந்தது. நீஎன்ன, அந்த இரண்டு காலி மாடுகளுடனும் சேர்ந்தவனு? அந்தப் பய ல்களுக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் சுட்டமண்ணும் களிமண்ணும்போல் அல்லவா? என்னுடைய அருமைக் கண்ணுளன் நீ ஒருவன் அன்றே? சூரியனைப்போன்ற நீ ஒருவனன்றி என் இதய தாமரை மலருவதுண்டோ? உத்தமப்பெண்டீர்களின் சுபாவம் எப்படிப்பட்டதென் பதை நீஅறிந்ததில்லைப்போ லிருக்கிறதே? அவர்கள் அந்தரங்கவாஞ்சை யாவரிடத்திலும் வைப்பதே கிடை

யாது. "ஊரிலொருவனே தோழன்" என்றபடி அவர்களுக்கு மனம்பிடித்த ஒருநாயகனையே இன்பத்திலும் துன்பத்திலும் நம்பிப் பிராணனைக்கொடுத்து நிற்பார்கள். எனக்குக் காசுபணம் பெரிதல்ல - பறையனிடம் காசிருக்கிறது. அவனைக்கைகட்டிச் சேவிக்க மற்றவர்கள் விரும்புவார்களோ? மேலும் ஒருநாட் கப்பக்காரன் மறுநாட் பிச்சைக்காரன். நான் உத்தமஜாதிப் பெண் அல்லவா? அந்தஜாதிக்குத் தகுந்த குணம்தான் என்னிடத்தில் அமைந்திருக்கும். நான் உன்பேரில் வைத்திருக்கும் பிரியத்துக்கு உன்னைவிட்டு அரை நிமிஷம் கூடப்பிரிந்து உயிர்வைத் திருக்கமாட்டேனே! உனக்கு எப்பெரிய காரியத்திலும் நான்குறைவைக்க மாட்டாதவளா யிருக்க அற்பமாகிய சாப்பாட்டுவிஷயத்திலா உனக்குப் பஞ்சம்செய்வேன்? நீ சும்மா இங்கேயே சாப்பிடலாம். பின் சுகமாயிருக்கலாம்.

சின்னையன்:—நானும் பரஸ்பரம் அப்படியேயிருக்கத் தடையொன்று மில்லை. ஆனல் நான் பிராமணனுயிற்றே? சூத்திராள் வீட்டிற் சாப்பிட லாகுமா? நான் வீட்டிற்குப்போகவும் இப்போது மனம்வரவில்லை இப்படித்தானே கடைக்குப் போய்ப் பலகாரம் கிலகாரம் பழம் ஏதாவது வாங்கிப்பசியைத் தீர்த்துக்கொண்டு சீக்கிரம் இங்கேயே வந்துவிடுகிறேன்.

இராக்குமுத்து:—நீ என்னிடத்தில் எப்போது வந்து சேர்ந்து விட்டாயோ அப்போதே நீ உயர்ந்த ஞானவா னுகிவிட்டாயே? "கூடிப்பிரியேல்" என்று இதைத்தான் உனக்கு எடுத்துக்காட்டியிருந்தேன். இது சூத்திராள்வீடு என்ருயே? பிரமசூத்திரத்துக் குரியவர்கள் தானே சூத்திராளாவார்கள். இவர்களை உண்மை

தெரியாதவர்க ளல்லவா இழிவாகப் பேசுவார்கள்? பெரியவர்கள் குலவித்தியாசம் பாராட்டுவார்களோ? அஃதெல்லாம் வீண்கட்டுப்பாடாய் மனுவென்பவர் பிற்காலத்தில் ஏற்படுத்திவைத்ததென்று ஞானிகள் தள்ளிவிட்டார்கள்.

சின்னையன்:—(கடை வாய்களை நக்கிக்கொண்டு) பெரியவாள் எல்லாச் சாதியார் வீட்டிலும் சாப்பிடப் பார்த்திருக்கிறேன். அவர்கள், வீட்டுப் புறங்களில் எறியப்படும் எச்சிலிலைகளிலுள்ள உச்சிட்டபதார்த்தங்களை நாயுடன் சேர்ந்து அருவருப்புச் சிறிதும் இன்றிப் புசிக்கின்றார்கள். ஜாதிவித்தியாச மாகாதென்று அருளானந்த சாமியார் பிரசங்கம்செய்யக் கேட்டுமிருக்கின்றேன்.

இராக்குமுத்து:—பார்த்தாயா! நீ நல்லஞானவானாயிருக்கிறபடியினாலே எல்லாம் யோசித்துப்பார்த்துத் தெரிந்துகொள்ளும் சக்தி உனக்குண்டா யிருக்கிறது. நான் அப்படி நாயின்எச்சிலைச் சாப்பிடவேணுமென்று அவ்வளவு கேவலமாகச் சொல்லவில்லை. எச்சிற் கலவாமற் செய்துகொள்ள யாராலு முடியாது. உணவுப் பதார்த்தங்களில் அருமையான குழந்தைகளின்எச்சில் பிரத்தியட்சமாய்ச் சேரப்பார்த்தோர் அப்பதார்த்தங்களுக்குத்தீட்டில்லையென்று பேணிக்கொள்ளுகின்றார்கள். ஊருணியில் எத்தனைப்பேர் எச்சில் உமிழ்ந்து இன்னும் எத்தனையோ ஆபாசங்களெல்லாம் செய்வதாயிருந்தாலும் அதிலுள்ள நீரைச் சுத்தமாகவே பாவிக்கின்றார்கள். சிலர்பேசும்போது தங்கள்எச்சில் ததும்பித் தவறித் தங்கள்மேல் விழுந்து விடுகிறது. அதனை அமுதமென்றுசொல்லி அசுசிகொள்ளா திருப்பார்கள். சுசியாகவேஇருக்க உத்தேசித்த ஓர்பிராமணன், தூரஸ்திரீ

கடிக்கமாட்டாத பாக்கை மாடத்திருந்து எடுத்துக் கடித்ததும், குளத்தில் ஆசமனஞ்செய்யும்போது அதில் ஒருவனுல்உமிழப்பட்ட இலந்தைக்கொட்டையைவிழுங் கினதும், பின் இத்தீண்டல்களுக்காகக் கங்கையின்மூழ்கி யெழுந்த காலையிற் பஞ்சமர்களாற் கட்டி யழுகப்பெற் றதுமான ஓர் விநோதக்கதையுண்டு; இவ்வித அநுபவங் களன்றிச் சுருதிப் பிரமாணமாக இரண்டு கவிகள் சொல்லுகிறேன்:—"உண்ட கல்லை யெச்சிலென் றுள் ளெறிந்து போடுறீர் - கண்டவெச்சில் கையல்லோ பா மனுக்கும் வேறுமோ - கண்டவெச்சில்கேளடா கலந்த பாணியப்பிலே-கொண்டசுத்தமேதடா குறிப்பிலாதமூ டரே." "எச்சிலெச்சிலென்று"நீரிடைந்திருக்குமேழை கா - டுச்சி லெச்சிலல்லவோ தூயகாயமானதும்-வைத்த வெச்சி றேனலோ வண்டினெச்சில் பூவலோ - கைச்சு தாவில் வைத்துடன் கறந்தபாலுமெச்சிலே". இனிஜாதி என்பது ஆண்பெண் இரண்டுதான். ஒளவையார் எப் படிப்பட்டவள் தெரியுமா? அவள்கூட யாரும்கெட்டுப் போகாதபடி "சாதி யிரண்டொழிய வேறில்லை" என்று பாடி வைத்திருக்கிருள். பிராமணகுலத்திற்பிறந்தபகவ னென்பவன்,புலைக்குலப்பெண்ணுகிய ஆதியென்பவளைக் கல்யாணஞ்செய்து கபிலன்என்னும்பேருள்ள ஓர்புத்தி ரனைப்பெற்ருன். அப்பால் இந்தப்பிள்ளையைப் பிராம ணர்கள் தங்கள் ஜாதியிற்கூட்டமாட்டோமென்ருர்கள். கபிலரானவர், அந்த அந்தணர்க் கூட்டங்களை எல்லாம் எல்லாச்சாதியும் ஒன்று என்று நம்பும்படிக்கு வாதம் செய்துவென்று விட்டார். பின் கபிலருக்கு உபநயனச் சடங்கும் பிராமணர்களே நடத்திவிட்டார்கள். நந்தன் பறையனல்லவோ? அவனை யிப்போது கோவிலில்வைத் துத் தெய்வத்துக்கு மேலாகப் பிராமணர்கள் தலைக்கு மேற் கையெடுத்துக் கும்பிடவில்லையா? இந்தவிதங்களா கச் சொல்லவேண்டுமானுற் கணக்கு வழக்குண்டோ?

சின்னையன்:—ஆஹா! தங்கள் யுத்தி புத்திகளின் சித்தியை என்னசொல்லப்போகிறேன்? தாங்கள் சகல சாஸ்திரங்களையும் கரைகண்டிருக்கிறீர்கள். சரஸ்வதியே தான் நீங்கள். பிராமணப் பயல்களெல்லாம் ஏதோ "ககா புகா" என்றும் படிக்கிறான்களே? காணுப்பே ருக்குச் சூனு என்னவென்று கேட்டால் கூடைவிழி விழிக்கிறான்கள். படிப்பிற் சொல்லியிருக்கும் பிரகாரம் நடக்க மாட்டேனென்று மூணுகாசுப் பூரிக்கு நாணங்கெட்டு மூணுகாதம் நடக்கிறான்கள். தாலியறுந்த பிராமணார்த்தம் பிராணனைக் கொடுத்துச் சாப்பிட்டுத் தள்ளாடிக் கம்பூன்றிச் சீரழியும் அலங்கோலத்தைச் சொல்லிமுடியாது. காசுக்காக அவன்கள் வாங்கும் ஏசலும் பூசலும் (சண்டை) பூசை (அடி)யும் கொஞ்சச் சீரழிவா? மானங்கெட்ட பிழைப்பு. நீங்கள் இதோ பாருங்கள் சாஸ்திரம் படித்து அந்தப்படிக்கே நடக்கிறீர்கள். ஏதோ நான் ஒன்றுந் தெரியாதவன். சகலமும் உணர்ந்த தங்களையே கதியாகவந்தடைந்தேன். எனக்கு நல்ல புத்திமதிகளைச்சொல்லி முன்னுக்குக்கொண்டுவர வேண்டியது தங்களைப்பொறுத்த கடமைதான்.

இராக்குமுத்து:—"லோகாஸமஸ்தாசுகினோபவந்து"! என்றபடி, நான் யாரையும் நன்றாயிருக்கத்தான் செய்து கண்ணுக்கு அழகாய்ப் பார்க்கிறது வழக்கம். அது ஜனங்களுக்குத் தெரிகிறதில்லை. நல்லது சொல்லிக் கெட்ட பாவியாகவும் நான் இருக்கிறேன். எதார்த்தவாதி வெகுஜனவிரோதிதானே? எப்போதும் என்தருமத்துக்கு அழிவில்லை. தருமம் தலைகாக்கு மல்லவா? காமுகர்களுக்கும் சோரர்களுக்கும் சந்திரனைக் கண்டால் விஷத்தைக் காண்பதுபோலிருக்கும். விபசாரஸ்திரீகளுக்குத் தன்நாயகனைக் கண்டால் விஷத்தைக்

காண்பதுபோ லிருக்கும். பஞ்சபக்ஷ பரமான்னத்தைக் கண்டால் ரோகிகளுக்கு விஷமாகவிருக்கும். வித்பன்னரைக்கண்டால் கல்வியறிவில்லாத கயவருக்கு விஷத்தைக் காண்பதுபோ லிருக்கும். அற்பப்படிப் புள்ளவருக்குக் கல்விமான்கள் நிறைந்த சபையைக் கண்டால் விஷத்தைக் காண்பதுபோ லிருக்கும். மகா பாவங்களுக்குத் தருமமென்று சொல்வதே விஷமாகக் காணப்படும்

சின்னையன்:—உங்களை யார் என்னசொன்னால்தான் தங்களுக்கு என்னபாதகம்? தங்கள் அருமை பெருமை தெரியாத மூடப்பயல்கள்தான் உளறிவழி வான்கள். சூரியனைப்பார்த்து நாய்குரைத்ததினால் அதற்கு என்ன சாதகம். நாய் தொண்டை கிழிந்து சாகவேண்டியது தானே? ஆந்தை கூகைக்குத் திவ்யமான சூரியப்பிரகாசம் பிடிப்பதில்லை. அதுபோல் உங்கள்நடப்பு அஞ்ஞானிகளுக்கு எப்படி ஏற்கும்.

இராக்குமுத்து:—நீ புத்திசாலியாகையால் என் அருமை தெரிந்துகொண்டிருக்கிறாய். நீயும் உத்தமஜாதி யாகையால் என் குணத்தோடு பொருந்த இருக்கின்றாய். நீ தான் எனக்குச் சரியானநாயகன். நான் புத்தியறிந்து இவ்வளவு காலமாகியும் இப்போதுதான் எனக்குத் தகுந்த நாயகன் கிடைக்கப் பிராப்தமானது. இதனிலும் இனிவேண்டுவ தொன்றுளதோ? தெய்வ கிருபையால் எல்லாம் பொருந்த அமைந்தது. ஆனால் நீ ஜாதி வித்தியாசத்தைப் பாராட்டுவதாயிருந்தால் நாம்இருவரும் இப்போது நகமும் சதையும்போலே ஒற்றுமையாய்க்கூடிச் சுகித்திருப்பது முடியுமோ?

சின்னையன்:—தாங்கள் சொன்னவைக ளெல்லாம் வேதோக்தமாகவே இருந்துகொண்டிருக்கின்றனவென்

பதில் யாதொருஸந்தேகமே இல்லை. குட்டியச் சுவற்றில் முட்டிக்கொள்ளவெள்ளெழுத்தா? கைப்புண்ணுக்குக் கண்ணாடியும் வேண்டுமோ? எல்லாருக்கும் இரத்தம் ஒன்றுதானே? கன்னியம்மாள் என்னும் கோவில் தெருப் பாப்பாத்தி சக்கண்ணன் என்னும் பறையனைக் கூடி வாழ்ந்துகொண் டிருக்கிறளே? அவள் வாய்க்கு அந்த ஆண்பிள்ளைப் பயல்களெல்லாரும் உரைப்போடவும் காணுமோ? இதுஎல்லாருக்கும் தெரிந்தும் சும்மாதான் விட்டுப் பார்த்துக்கொண் டிருக்கிறார்கள். இப்போது வரவர நாகரீகத்தால் ஜாதிவித்தியாசம் யாரும் பாராட்டக்காணோம். மற்ற ஜாதியார்களுடைய வீடுகளுக்கு ஊடே பிராமணவீடுகளும் எதேஷ்டமாய் உண்டாகிவிட்டது. ஜாதியிலும் அந்தஸ்திலும் பிராமணன் எவ்வளவுக் கெவ்வளவு உயர்ந்தானே அவ்வளவுக் கவ்வளவு பாதாளம்வரை தாழ்ந்தநிலைமையை அடைந்தும் விட்டான்.

இராக்குமுத்து:—ஜாதியெல்லாம் பெரிய உபாதியென்பதிற் சந்தேகமேஇல்லை. நீயும்நானும் ரமிக்கிற காலத்தில் மார்மஸ்தான மார்க்கமாய் ஒருவருடைய இரத்தம் ஒருவருக்குச்சென்றுகொண் டிருக்கின்றதே? இப்படிப் பிரத்தியட்சமாய் இருவருக்கும் ஒன்றாகிப் போகும்போது பிற்பாடு உனக்கும் எனக்கும் ஜாதியில் வித்தியாசமென்பது பெரியபயித்திய வார்த்தையைத் தவிர வேறேஎன்ன ஆகும்? அடேபலே சொக்கூ உ! சீக்கிரமாக டிபனுக்குக் களிக்கொண்டுவாடா!

## (5.)

சொக்குஎன்னும் வேலைக்காரச் சிறுவன் களிக் கொண்டுவந்து அறைக்குள்வைத்து "இதோ எல்லாம் தயாரா யிருக்கிறது" என்றான்.

இராக்குமுத்து:— (சின்னையன் கரத்தைப் பிடித்துக்கொண்டு அறைக்குட் பிரவேசித்து) எனது பிரியமுள்ள சின்னையா! இப்போது இந்தக்களியினால் நீ மிகவும் களிப்படையப் போகிறாய்! நான் உன்கையிற் களியை உருட்டிப்போடுகிறேன். சாப்பிட்டுச் சீக்கிரம் பசியை ஆற்றிக்கொள். வெகுநேரமாய் நீபட்டினி யிருப்பதானதால் நான்பட்டினி மாயவேண்டியதாய் நேரும். எனக்குச் சகிக்கக்கூடவில்லையே! எனது பிராணேசன் நீயல்லையோ?

சின்னையன்:—இராக்குமுத்து! எனக்கு இப்போது என்னமோமாதிரியாக இருக்கிறது. தான் ஆடாவிட்டாலும் சதிரம் எனக்குஆடாமல் இருக்கவில்லை. தங்கள் வருதிப்படியேதான் எனக்கு நடக்கத் தீர்மானம். அதினால் எனக்கு எவ்வளவோ நன்மைகளும் க்ஷேமங்களும் கிடைக்கக்கூடியதாக நன்றாய்த் தெரியத்தான் செய்கிறது. என்றாலும் இந்தப் பாவிநெஞ்சு துணிகிறதில்லையே?

இராக்குமுத்து:—இதுஉனக்கு இப்போது புதுப்பழக்கம். ஆகையால் முதலில் அப்படித்தான் இருக்கும். புதுப்பெண் முதலிற் கோணல்தானே? ருசிகண்டாற்பின் கலவி அவளுக்கு கற்கண்டாகும். "கன்னிகையொருத்தி சிற்றின்பம் வேம்பென்னினுங் கைக்கொள்வள் பக்குவத்தில்". நல்லவாடிக்கை வருகிறதென்றால் யாருக்கும் கஷ்டந்தான். கெட்ட வாடிக்கைமட்டும் சர்க்கரைக் கஷாயம். அது எங்கும் உண்டானதுதானே? நீஇந்த நல்லபழக்கத்தில்மட்டும் முதலிற்கொஞ்சம் கஷ்டப்பட்டுப் பின்சுகமாக ஆக்கிக்கொள். உனக்கு இப்போது உண்டாயிருக்கும் கோழைத் தனமாகிய ஊக்கக்குறைவுக்குச்சாஸ்திரத்திற்சொல்லியிருக்கிறபடி

செய்யவேண்டும். "ஊக்கமது கைவிடேல்" என்றபடி ஊக்கம் தருமம் மதுபானத்தை அநுசரிக்கவேண்டும். அந்த மதுவானது உண்டவருக்கு அரிய குணங்களைத் தரக்கூடியதானபடியினால் "குணமது கைவிடேல்" என்றும் சொல்லப்பட் டிருக்கிறது. குடிக்கக் கற்றுக் கொண்டவர்களை யாவரும் வாருங்களென அழைத்து உபசரித்துக் கொண்டாடுவார்கள் என்றதைக் "குடியிற்கற்றாரை வருகவென்பர்" .என்று பெரியோர் விளக்கியிருக்கின்றார்கள். பொதுவாய் லாகிரி வஸதுக்கள் யோகாப்பியாசிகளுக்கும் வாலைபூசைக் காரருக்கும் இன்றியமையாததாக விருக்கின்றன. அலையுமனத்தை ஒருநிலைப்படுத்திவிடும். யாவற்றையும் வெறுத்த சன்னியாசிகளுக்கும் அன்னியோன்னியமா யிருக்கப்பட்டது லாகிரி வஸ்துவொன்றே. இந்தவஸ்துவைச் சாப்பிட்டவன் வஸ்து நிச்சயத்தைத் தெளிவன். ஊனக்கண்மூடி ஞானக்கண் திறக்கும். ஓதாமலே சகலமும் உணரலாம். "சாராயத்தைக் கொடுத்துப் பூராயத்தைக் கேளு" என்றதோர் பழமொழியும். தேவர்களும் இம்மதுவை உண்டு நோயற்றவாழ்வில் அமரர் (அழியாதவர்) என்னும் காரணப்பேரை உடையவர்களானார்கள். இதனைத் தேவாமிர்த மெனவும் சஞ்சீவி எனவும் அறிந்தோர் சொல்வார்கள். நமது முன்னோர்கள் இதனைக் கையாடிவந்தார்களெனப் புராணங்கள் முறை யிடுகின்றன. பிரபுக்களாவார் தொன்றுதொட்டு வழிபடுங் கடவுள் இதுதான். இதனைஉட்கொண்ட ஒருவன் ஆயிரம்பேர்களுக்குச் சமானமாவான். வேகமாய் ஓடும் குதிரைமேலேறியவனுக்கும் ஒப்பாவான். காதமும் நொடிக்குட் பாதவேதுவாற் செல்லும் சாதகம்பெறுவான். காலைத் தூக்கிவைக்கும் சிரமமே தேவையில்லை. தூப்பலனு

யிருந்தாலும் சரக்கின்வீரமே அவனைத்தள்ளிக்கொண்டு போய்விடும். முக்காலியாய்க் கூனிக்குறுக்கித் தள்ளாடும்கிழவனும் இதனைச்சாப்பிட்டவுடன் இருகாலியாய்க் குமரனைப்போல் துள்ளிவிளையாடுகிறான். பின்ஒருகாலியாய் அவன் நர்த்தன சபாபதியைப்போலும் ஆனந்தத் தாண்டவம்புரிகிறான். தடியடி பட்டாலும் ஜோட்டடி பட்டாலும் சண்டையில் மண்டை யுடைந்தாலும் கொஞ்சமேனும் வாதனை யிருக்கமாட்டாது. ஆனந்த லாகிரியான இன்பமான பாடல்களைப் பாடச்செய்யும். அந்தப் பாக்கிய சாலிகளுக்கு மனோற்சாகத்துக்கும் ஆனந்தத்திற்கும் அளவே கிடையாது. இந்தயோகம் எல்லாருக்கும் சாமானியமாய்க் கிடைக்கத்தக்கதன்று. "குடியாதவீடு விடியாது" இந்த உஸ்கி ஜின் பிராண்டி சாம்பேன் கிளாரெட்டினுடைய காரமும் சாரமும் வீரமும்சுவையும் குணமானமணமும் வேறேஎதற்குண்டு? வெள்ளைக்காரர்களே பானங்களைக் கொள்ளைவிதங்களாக்கி அவைகளின் பிரமானந்தங்களைக் கொள்ளைக் கொள்ளத்தெரிந்த புண்ணியவான்கள். அவர்கள்பெரியமேஜையைச்சூழக் குரிச்சிகளின்பேரில் உட்கார்ந்துகொண்டு நடுவிற் பாட்டிலும் கிளாஸும் வைத்துப் பலவித உல்லாச சம்பாஷணைகளைச் செய்துகொண்டு மனம்போன போக்குப்படி ஒருவர்மாற்றி யொருவர் குடித்துத் தினி மேயும்போது என்ன தமாஷ்! என்ன பிரம்மானந்தம்! பெரிய பெரிய துரை மார்களும் துரை சானிகளும் கூட இதனுடைய மணத்தையும் குணத்தையும் மேன்மையையும் தெரிந்தவர்களாய்த் தங்கள் தங்களுடைய வீடு தோட்டம் நகைநட்டு லொட்டு சாமான்கள் ரொக்கம் முதலியவற்றை ஒருதுரும்பாக மதித்துஇவைகளிலே தொலைத்து விடுவார்களேயானால் இதனுடைய

மகிமையைக் கூற யாராலாகும்?"மாமேகம் ஸரணம்வ்ர ஜா" என்கிறபடி பகவானுடைய திருவடியாகவே இருக்கும் இம்மதுவை நம்பி யாவற்றையும் கைவிட்டுவிட வேண்டியதவசியமே. இந்தத் தெய்வீகம்பொருந்திய சரக்கை விற்பனைசெய்பவர்கள் குபேரன்நாணும் சம்பத்தைப் பெறுகிறார்கள்.

சின்னையன்:—(எதையும் சுலபமாய் நம்பும் பேதமைச் சுபாவத்தாலும் இராக்குமுத்துவின்பேரி லுள்ள காமவிச்சையினாலும் உண்மைகள் அவன் புத்தியில் மறைக்கப்பட் டிருந்தன) ஆஹா! ஹா! தாங்கள் என்ன திவ்யகரமாய் விளக்கைப்போ விருந்து எனக்கு விளங்கப் போதிக்கிறீர்கள்? நீங்கள் சொல்லுகிறதைத் தட்டிப் பேசயாராலேயும் முடியாது. உங்களுடைய அமுதவாய் மடைப் பெருவெள்ளத்தைத் தடுத்து அணை போட வல்லவர்களும் இப்பூவுலகத்தில் இருப்பார்களோ? இனி எல்லாம் வல்லவராகிய தாங்கள் வகுத்த வழியிலேயே பிசகாமல் நடக்கின்றேன்.

இராக்குமுத்து:—ரெம்ப ஸந்தோஷம். என் அருயிர்க்குயிராகிய சின்னையா! உனக்குநான் முன்னம் வெள்ளைக்காரர் கண்டுபிடித்த "உஸ்கி" ருசிபார்க்கக் கொடுத்தேன். இப்போது நமதுநாட்டுச் சரக்காகிய "சாராயம்" கொடுக்க நினைக்கிறேன். "உஸ்கி" என்பதன் காரணப்பேரின் அர்த்தம் உனக்குச் சொல்லியிருக்கிறேன்; "சாராயம்" என்பதின் காரணத்தைக்கேள். அம்=அழகை, சாராய்=பொருந்துவாய். அஃதாவது, என்னைச் சாப்பிட்டு நீநல்ல அழகைப் பெறுவாயாக, என்பதாம்.

சின்னையன்:—ஆ! அப்படியா! முந்திச் சாப்பிட்டது வியாதிகளைப் போக்கக் கூடியதானது. இப்போது சாப்பிடப்போவதால்நான் மன்மதவடிவமாகிவிடுவேன். எல்லா விசித்திரங்களும் தங்களுடைய கையிற் சிக்கிப் பம்பரம்போலல்லவா ஆடுகின்றன? நான் அழகில்லையென்று சிலபேர்கள் சொல்லுகிறார்கள். அந்தக்கவலையை எனக்குச் சீக்கிரம்போக்கி வைக்கத் தயவுசெய்ய வேணும். உசிதம்தெரிந்து தாங்கள் கொடுக்கும் மருந்தை அருந்தச் சித்தமாய்க் காத்துக்கொண்டேயிருக்கிறேன்.

இராக்குமுத்து:—எனது இன்பத்துக்குரிய சின்னையா! நான் இப்போது உனக்குச் சொன்னசாராயம் இந்த உலகத்தில்கிடைக்கத்தக்கதானதல்ல. நான்சாமானியச் சாராயத்தைத்தான் வாங்கிக்கொள்ளுகிறதென்றாலும் என்அபூர்வமான கைக்கூட்டுச் சரக்கு அதிற் சேர்த்துக்கொள்வேன். அந்தரகசியம் யாருக்கும் தெரியாதாகையால் என்சாராயமே தேவாமுதமாயிருப்பது-(சாராயத்தில் இரண்டுதிராம் சின்னையனைக் குடிக்கும்படி செய்துவிட்டாள்).

சின்னையன்:—(குடிமதத்துடன்மனத்திடம்செய்து அவள்அருகே மண்டியிட்டபடிக்கு உட்கார்ந்து, ஒரு கையை முழங்காலின்பேரிற் போட்டு, அதைக் களிவாங்க விரைக்க நீட்டிக்கொண்டு) இராக்குமுத்தூஉ! எனக்கு இப்போது ஆனந்தம் ஆனந்தம் சொல்லிமுடியாது. எனக்கு நித்தியானந்தமும் கூடத்தான். நான் இந்தப்படிக்கெல்லாம் அநுபவிக்கிறதையும் சாப்பிடுகிறதையும்யார் அறிவார்கள்?பாப்பாரப்பயல்களுக்கென்ன? பார்ப்பான் பார்ப்பான் என்று எல்லாந்தான் ஒருகை பார்ப்பானு யிருக்கிறான். விண்குறும்புகளெல்லாம் அந்

தச் சாதியானிட மிருந்தேதான் முளைத்ததெல்லாம். நான் இப்படி உன்னிடத்தில் அந்நியோந்நியமாகவும் மேலத்தாகவும் இருக்கிறதை அந்தப்பயல்கள் தெரிந்தால் பொறுமைப்பட்டுப் பேசுவான்கள். மறுபடி அந்தப் பயல்களுக்கு இந்த வைபோகங்கள் கிடைக்கப் போகிறதே இல்லை. நாய்க்குத் தேங்காய் கிட்டுமா?

இராக்குமுத்து:—"மாற்றானுக் கிடங்கொடேல்" நீ அந்தப் பயல்களோடே சேர்ந்து கெட்டுப்போகக் கூடியவனல்ல. நீவரவரப் புடம்போட்ட தங்கம்போல் அதிகப்புத்திசாலியாகவே ஜொலிக்கிறாய். நான் கொஞ்சம் சொன்னால் நீஎனக்கு முந்தியே எல்லாம் தெரிந்து கொண்டு எதுவிஷயத்தையும் சம்பூரணமாய்ப் பேசிவிடுகிறாயே?

சின்னையன்:—(தன்னைப் புத்திசாலியென்று தாசி மதித்து விட்டதில்) அஹா! அஹா! அஹா! (என்று பற்களை முற்றிலும்வெளியே ஆபாசமாய்க் காட்டிச் சிரித்து) உன்னுடைய அழகுகளையெல்லாம் பார்த்தபடிக்கு உன்கையினால் வாங்கிச் சாப்பிடுகிறது அடங்காத ஸந்தோஷகரமா யிருக்கிறது (என்று குடிவெறியாற் பல பேசிக்கொண்டு களிஉருண்டைகளை ஒன்றின் மேல் ஒன்றாக வாங்கிவாங்கி, இராக்குமுத்து தனக்குக் காணுமோ ஏதோவென்று ஆலோசிக்கும்படிக்குக் எறிபூசை கொள்ளும் பேய்போல எல்லாவற்றையும் வாயை விரிவாகத் திறந்து திறந்து அதின்வழி ஆவாஹனம் செய்து கொள்வதானான்).

இராக்குமுத்து:—(அதைக் கண்டு "இட்டதெல்லாங்கொள்ளும் பட்டிமகன்கப்பரை" என்றதுபோல் இவன்பெரும் சாப்பாட்டுப் பூதமென்று திடுக்கிட்டு

மீதமாயிருந்த கொஞ்சம்களியைமட்டும் அவள் புசிப்ப தாய் உத்தேசித்து) எனது ஆருயிர்ச் சின்னையா! உனக்கு வயிற்றுக்குப் போதுமா? (என்றாள்).

சின்னையன்:—போதும் போதும்தான். ஆனால் இனி இருப்பது தங்களுக்குக் காணவேணு மல்லவா? தாங்கள் ஒருகாரியம்மட்டும் தயவுசெய்துவிடவேணும். அப்பாற் பட்டாபிஷேகம் செய்து நிறுத்தி விடலாம். தங்களுடையசிங்காரமுகத்தைத் திருப்பி என்னைப்பார்த் துக்கொண்டபடிக்கு உங்களுடைய திருக்கையினாலே யே என்வாயில் ஒருமொத்தக்கவளமட்டும்போடுங்கள். அப்போது என்வயிற்றுக்குச் சரியாய் நிறைந்துபோய் விடும்.

இராக்குமுத்து:—(அவனைத் தன்வசப்படுத்தி அவனுக்கு உண்டா யிருப்பதாய்ச் சொல்லியிருக்கும் பொருள்கள் முற்றிலும் கவர்ந்துகொள்ள நோக்கம் கொண்டவளாதலால், சனிஇதனோடு தொலைந்துபோ கட்டுமென்று) இதோ இந்த ஒருகவளத்தைப்பிடி (என அவன்வாயிற் போட்டாள்).

சின்னையன்:—(அதனை வாய்கொள்ளாமல் ஏற்று அவளைக் காம்ப் பார்வையாகச் சாய்த்துப் பார்த்துக் கொண்டு வாயை ஓங்கிஓங்கி வலித்து மென்றுவிழுங்கி னன்) இராக்குமுத்தாஊ! இதோடு எனக்குப் போது மென்று நிறுத்திவிடுகிறேன். பசிவாய்க்கு நல்லஉருண் டைவைத்து அடைத்தாய்! நீஎன்ன விடிந்து இதுவரை பட்டினியாகவா இருந்துகொண்டிருந்தாய்?

இராக்குமுத்து:—நான் காலையில் பலகாரமும் காபி யும் சாப்பிட்டேன். பன்னிரண்டு மணிக்குச் சாதம் சாப்பிட்டு வந்ததை நீஅறியவில்லையா? இப்போது "டிபன்". இனி இராத்திரிக்குப் போஜனம்.

சின்னையன்:—(அவள் "டிபன்" என்று சொன்ன வார்த்தையில் அவனுக்கு ஓர்விநோதம் உண்டாகி அடிக்கடி தானாகவே "டிபே" "டிபே" என்று உச்சரித்துக் கொண்டான்). நீ இராத்திரிக்கு என்ன என்ன கறி பதார்த்தங்கள் சாதத்தோடு சாப்பிடுவாய்?

இராக்குமுத்து:—ஆட்டுக்கறியும் விசேஷமாய் மீனும் சேர்த்துக்கொள்வேன்.

சின்னையன்:—(கைகள் இரண்டையும் உதறி) அய்யய்ய அஸிங்கம் அஸிங்கம், வீச்சம் வீச்சம். மீனைப் பார்க்கையிலேயே வாந்திஎடுக்கவருகிறதே (என்றான்).

இராக்குமுத்து:—என்ன அஸிங்கம்? எல்லாம் ஆரத்தீரவல்லவா யோசித்துப் பார்க்க வேண்டும்? ஆய்ந்து பாராதான் காரியம் மாய்ந்து போகுமே? மகா விஷ்ணுவே மச்சாவதாரம் எடுக்கவில்லையோ? சுப்பிரமணியர்தாமே மீனுருவெடுத்துக் கடலில் விளையாடினதும் தவிர மச்சக்கறி சமைத்துக் காவடியெடுத்து வருகின்றதனை வெகுபிரீதியுடன் அங்கிகாரம் செய்யவில்லையோ? இராமர், தமக்குக் குகாழ்வானல் தரப்பெற்ற வீச்சக்கருவாட்டு மீன்களைப் பிரீதியாக ஏற்றுக் கொள்ள வில்லையா? மதுரை சுந்தரேஸ்வரரும் மீன் பிடித்திருக்கிறார் அல்லவா? தெய்வங்களே மச்சங்களிற் பிரியப்படுகின்றனவே?

சின்னையன்:—(கூனல் முதுவோடு நிமிர்ந்து மூக்கின்பேரில் விரலைவைத்து ஆச்சரியப்படுகிறான்) அடா! டா டா டா! தாங்கள் சொல்லுகிறது சரியாகவல்லவா இருக்கிறது! ஆனல் எழுர்நாற்றம் எடுக்கிறதே!

இராக்குமுத்து:—ஏன்! மனிதர்களுடைய உடம்பு வீசுகிற தில்லையோ? அந்த ஆபாசங்களை யெல்லாம்

பார்க்கப்போனால் மீன் எவ்வளவோ சிலாக்கியமாகத் தோன்றுமே! ஜனங்கள் குளிர்த்துச் சுத்தமாய் மினுக்கிக்கொண் டிருக்கிறபடியால் அவர்களுடைய ஆபாசங்கள் மறைவாயிருக்கின்றன. மீனையும் அப்படியே சுத்தப்படுத்திச் சமயல் செய்துவிட்டால் பிரம்மானந்தமல்லவா? என்னுடைய உடல்மட்டும் நரை திரை மூப்புப் பிணி என்பன அணுகாமல் எப்போதும் இளமையா யிருக்கத் தேவியினுடைய அனுக்கிரஹம் பூரணமாய்ப் பெற்றிருக்கிறேன். தேவர்கள் அமுதத்தை உண்டு எப்போதும் மகளிர் இன்பத்தை அநுபவித்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த அமுத வலியால் அவர்களுக்கு நரை திரை மூப்புப் பிணி அணுகாது. நானும் என்னை நம்பினவர்களுடன் இன்பத்தைச் சதாகாலமும் அநுபவிக்க அந்த அமுதத்தின் தத்துவத்தை ஈஸ்வரி கிருபையாற் பெற்றிருக்கிறேன். பூலோகத்தில் தேவா மிசையால் அவதரித்தவர்கள்தான் சாமானிய அமிர்தத்தைப் பானம்செய்யும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறார்கள் என்றாலும் அதோடு ரகஸியமாய்ச்சேர்த்து நான் அநுசரித்து உனக்கும் உற்சாகப்படக்கொடுத்து வருகிற திவ்யாமிர்தத்துக்கு அதுஈடாகாது. இதோபிரத்தியட்சமாய்ப்பார்! நான் என்னஜோதிப்பிரகாசமாய்இருந்துகொண்டிருக்கிறேன்! என்மேனியில் ஒருமரு மாசுஉண்டா? என்னைப்போலவேறே ஒருசுந்தரத்தை எங்கும்நீ கண்டதுண்டா? சீக்கு எப்படியிருக்குமென்பதை நான் ஒருகணமேனு மநுபவத்தில் தெரிந்தவளல்ல. கல்லைத் தூக்கிப்போட்டாலும் சாகமாட்டேன். நமது தேகம் மாமிசமா யிருக்கிறபடியினாலே அதற்குமாமிசமேதான் பொருத்தமாய்ச்சேர்த்து வரவேண்டியது சிலாக்கியம். பரமசிவன், மண்டையோடுபன்றிக்கொம்புஆமையோடு

புலித்தோல் இவைகளைவிரும்பி அலங்காரமாய் அணிந்து கொள்ளவில்லையா? புலியானது மானையடித்துச் சாப்பிடவில்லையா? பல்லி, வண்டைப் பிடித்துப் பட்சிக்கவில்லையா? சிங்கம், யானை மத்தகத்தைப் பிளந்து அதன் மூளையாற் சீவிக்கவில்லையா? இந்தவிதங்களில் எத்தனையோ பிராணிகளெல்லாம் தங்கள் தங்கள் பலங்களுக்குக் குறைந்த பிராணிகளைப் புசித்து விருத்தியடையும்படிக்குப் பகவானே அமைத்துவைத் திருக்கின்றார். இப்படி ஊனைத் தின்ன இயற்கையிலேயே கடவுள்நியதியேற்பட்டிருக்க, அந்தநியத்தை ஆழ்ந்துபாராமல் புலால்உண்ணக் கூடாதென்று வீண்வார்த்தைகளைக் கசடர்கள் புலம்பித் திரிகிறார்கள். "மதுமாமிசந்தனைத் தின்பாளிவளென்று மாமறையோர் - அதுவே யுதாசினஞ் செய்திடுவந்த வற்பர்கடங்-கதிர்வாயடங்கிட வுள்ளங் கலங்கக் கதடித்து-விதிர்வாளில்வெட்டி வெறிவாள்வராகியென்மெய்த்தெய்வமே" என்றும், "புலால் புலால் புலாலதென்று பேதமைகள்பேசுகிறீர்-புலாலைவிட்டுமெம்பிரான்பிரிந்திருந்த தெங்ஙனே-புலானுமாய் பிதற்றுமாய் பருலாவுந் தானுமாய்-புலாலிலே முளைத்தெழுந்த பித்தனான மத்தனே" என்றும், "மீனிறைச்சி தின்றதில்லையன்றுமின்றும் வேதியர் - மீனிருக்கும் நீரலோ மூழ்குதுங் குடிப்பதும் - ஆட்டிறைச்சி தின்றதில்லையன்றுமின்றும் வேதியர்-ஆட்டிறைச்சி யல்லவோ யாகநீகளாற்றலே" என்றும், "மாட்டிறைச்சி தின்றதில்லையன்றுமின்றும் வேதியர்-மாட்டிறைச்சி யல்லவோ மரக்கறிக்கிடுவது - மானிறைச்சி தின்றதில்லை யன்றுமின்றும் வேதியர் - மானுதித்த தோலலோ மார்பினூலணிவதும்" என்றும் மகாஞானிகளின் ஸ்திர வாக்குகள் ஏற்பட்டிருக்கின்றன.

சின்னையன்:—ஆஹா! தாங்கள் சொல்லுவதைப் பற்றி நான் என்ன சொல்லப்போகிறேன்? ஒரு ஆச்சரியமா? இரண்டு ஆச்சரியமா? புற்றிலிருந்து வரும் ஈசற்கூட்டம்போலத் தங்கள் பவளவாயிலிருந்து வந்து கொண்டிருக்கும் உண்மைகளைக் கணக்கிட்டும் ஆச்சரியப்பட்டும் முடிவதோ? ஞானமேதங்களுடைய ரூபமாயிருக்கிறது. பரதேவதையாகிய வாகி தங்களுக்குப் பிரத்தியட்சமா யிருக்கிறாள். அதிலல் தங்களுடைய மேன்மையே மேன்மை. தேவதைகள் நரபலிகூட ஏற்றுத்தானே கொள்ளுகின்றன? பாரதத்தில் அரவானைப் பலிகொடுத்த கதையும் எனக்குத்தெரியும். காளிக்கு இலட்சணமுள்ள கருப்பஸ்திரீகளை வெட்டுகிறார்கள். இராமரும் பட்சியையெய்து சுட்டுத் தின்றிருக்கிறார். நாங்கள் அவைகளெல்லாம்சாப்பிடுகிறதில்லை சூத்தைக் கத்திரிக்காயும் இரசமும்தான் ஸதாச்சாப்பிடுகிறது.

இராக்குமுத்து:—(சிரித்தாள்). அவைகளெல்லாம் உடம்புக்குப் பலங்கிடையாது. தேகதத்துவ சாஸ்திரத்தை முற்றிலும் உணர்ந்து வெள்ளைக்கார மாமிசம் சாப்பிட்டுவந்தால்தான் தேகத்துக்குப்பலமாகவும் தயிரியமாகவும் இருக்கும் என்றுகண்டுபிடித்து அதப்படி அநுசரித்து வருகிறார்கள். சூத்தைக்கத்திரிகாயை ஊத்தையுடன்தின்று சூத்தைக் கழுவுவதிற்பயன் என்ன? அதில் என்னசத்து இருக்கிறது? சத்து சிதானந்தமும் அதில் உண்டோ? சத்திகொடுக்கத்தக்க மது மாமிசாதிகளாலேயே சர்வசத்தி யுடையவளாய்ட பரதேவதை, சத்தியென்னும்பேரையே தனக்கு உடையவளாய் விளங்குகிறாள்.

சின்னையன்:—ஆஹா! நான் இந்தவிதமானபாடம் இதுவரை படித்துக்கொள்ளாமற் பாடம்செய்த சடம் போற்போனேனே?

இராக்குமுத்து:—ஏன் பிராமணர்களில் அனேகர் இப்போது வரவர மதுமாமிசாதிகளின் அளவிறந்த விசேஷங்களைத் தெரிந்தவர்களாய் அவைகளை அநுசரித்தேவருகிறார்கள். அப்படிப்பட்டவர்களில் அனேகர் தம் இனத்தவருக்குத்தெரியாமல் களித்துண்டு வருகிறார்கள். பிராமணச் செல்வப் பிரபுக்கள் தங்களுக்கு யாருடைய தயவுதாட்சணியம் வேண்டியதென்பதாய்ப் பஹிரங்கமாயும் அதனை அநுசரித்து வருகின்றார்கள். எத்தனை பிராமணர்கள் தங்களுக்குக் கிறுக்கென்றும் சன்னியாசமென்றும் பொய்யாகத் தங்கள் பெண்டு பிள்ளை வீடுவாசல்களை வெறுத்துக் கறி சாராயத்தை விரும்பி வெளிப்பட்டுத் திரிகிறார்கள்? அப்படிப்பட்டவர்கள் கறிதின்னவும் சாராயம் குடிக்கவும் தெரிந்து கொண்டிருப்பதுபோல நமக்குத் தெரிய மாட்டாதே? "பருகப்பசி யில்லாதபோது பவாசம் - பசித்தாலொரு பானைப் பருக்கையுநாசம்" என்றது அவர்களுக்குப் பொருத்தம். வடதேசத்துப்பிராமணவகுப்பார்மாமிசம் சாப்பிடுவதைத் தங்களுக்குச் சுபாவமாகவே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். சிரார்த்தாதிகளில் மதுமாமிசம் உபோயகப்பட்டுவந்தது. அதற்குப்பதில் இப்போது தேன் உழுந்து வைத்துக்கொள்ளுகிறார்கள்.

சின்னையன்:—என்றாக்குமுத்தூஉ! உயிரைக்கொன்றால் பாவமும் இல்லைத்தானே?

இராக்குமுத்து:—கொன்றாற்பாவம் தின்றாற்போச்சே. அஸ்வமேதாதி யாகங்களெல்லாம் உயிரைக்கொல்

லாமல் எப்படிச் செய்கிறது? "படைத்தான் படைப்பெல்லாம்மனுவுக்காக" என்றுபெரியவர்வாக்கு ஆதாரமாயிருக்கிறதைக் கவனித்தால், நமது உபயோகத்துக்காகவே பிரம்மா சகலபிராணிகளேயும் சிருஷ்டித்திருக்கிறார் என்பது தெரிகிறது. அப்படியிருக்க நாம் ஏன் அவைகளைக்கொண்டு பிரயோசனம் அடையக் கூடாது. அரசர்கள் அயல் நாடுகளிற் படையெடுத்து ஜெயமடையவேண்டிய தர்மத்தில் எத்தனை மானிடாதி ஜீவன்கள்வதையுண்டு போகின்றன? பிராமணர்கள் உயிரைக்கொன்று மாமிசம் புசிக்கிறதில்லைஎன்று வீண்டம்பமாகப் பேசிக்கொள்ளுகிறதைத் தவிர்த்து, அவர்கள் ஒருநாளைக்கு, எவ்வளவோ உயிர்களைக் கொல்லுவதல்லாமல் எதேஷ்டமாய் மாமிசங்களைப் புசித்தும் வருகிறார்கள். அவர்கள் சாப்பிடும் தாபரவர்க்கங்களாகிய காய்கறிகளை முதலியவைகளோடும் அளவிறந்த பூச்சிபுழுக்களை யெல்லாம் சேர்த்து நகட்டி விடுகிறார்கள். அவர்கள் சாப்பிடும்பாலெல்லாம் மாட்டினிடத்தில்ஊறிவரும் ஊன்தானே? மாட்டைக் கொல்லா விட்டால் அவர்களுடைய சுவாமி கோவிலுக்குப் பேரிகையாதிவாத்திய உபசாரங்கள் எவ்விதம் நடைபெறும்? செத்தபின் உரிக்கும்தோல் சாரமற்றதாகிவிடும். ஒருசொட்டுத்தண்ணீரில் நமதுசாதாரணக் கண்ணுக்குப் புலப்படாதவிதமாய்ச் சங்கையற்ற பூச்சிகள் நிறைந்தமயமாயிருக்க அவர்கள்மிடாக்கணக்காப் பீப்பாக்கள்போன்ற தம் வயிறுகளில் தண்ணீர்வெள்ளத்தை ஊற்றிக் குண்டோதரனைப்போல ஏப்பமிடுகின்றார்களே? அதுவுமல்லாமல், அவர்கள் புசிப்பதாயிருக்கும் தாவரங்கள் தாமும் உயிருள்ளவைகள்தாமே? அவைகளை அவர்கள் வருத்த முறும்படிக்கு வாடவதங்கக் கொய்து கிள்ளி

நறுக்கி அக்கினியில் வேகவைத்துப் புசிக்கின்றது அவர்களுக்குப் பாவமில்லையோ? வயிற்றிலுள்ள பூச்சி புழுக்களைக்கொல்லுவதற்கு அவர்கள் பேதிக்குமருந்து சாப்பிடவில்லையா? நித்தியஸ்தானம் செய்யும்போது தங்கள் உடம்பைச் சொறிந்து தேய்த்து அதில்உண்டாயிருப்பதான எத்தனையோகோடிக்கணக்கான உயிர்களை மாய்ப்பதில்லையோ? தங்கள் பெண்மணிகளின் கூந்தல்களை அதிகாலைகள்தோறும் அநுஷ்டானத்தைப்போல் சிப்புக்கொண்டு வாரிவாரிப் பேன்கூட்டங்களை யெல்லாம் கொன்றுவர வில்லையோ? பேன் தப்பித்தரையில் ஊறினாலும் அதுதோஷமென்று உடனேகொன்று மறுவேலை பார்ப்பார்களே? மூட்டுப்பூச்சிகளை இவர்கள் அம்பாரம் அம்பாரமாய்க் கொல்லாமற் காப்பாற்றியா வளர்த்து வருகிறார்கள்? தண்ணீர்க்கரைகளில் உட்கார்ந்து ரூபலாவண்யமுள்ளபெண்களையேகவனிப்பாய்ப்பார்த்த படிக்கு ஜெபம்செய் திருக்கும்போது அவர்களுடைய மர்ம ஸ்தானங்களிற் புகுந்து வெடுக்கெனக் கடிக்கும் எறும்புகளை அவர்கள் மேனிகுலுக்கி விகாரமானகைச்சரசத்தில் நசுக்கி மாய்ப்பதில்லையோ! தும்பியொன்றைக் கொன்றால் கோபுரம் கட்டியபலன் என்று பேசும்வாயுடையவர்கள் அவர்களன்றோ? வீட்டு எலிகளுக்கு இடுக்கிவைத்துப் பதைக்கப் பதைக்கக் கொல்லுவார்களும் அவர்களே அன்றோ? பிராமணர்களின் இவ்விதச் செய்கைகளை யெல்லாம் கவனிக்கச் சுத்தப் பேய்க்கூத்தாகவேதான் வந்துமுடியும். பிரமதெரிசனை செய்தவனே பிராமணன்என்று சொல்லப்படுவன். அந்தப்படி செய்த ஒருவனை இப்போது கண்டுசொல்வது முற்றும் கூடாதவிஷயம். "ஓடியோடி யோடி யோடி யுட்கலந்த சோதியை - நாடி நாடி நாடி நாடி நாட்களுங் கழிந்து

போய் - வாடி வாடி வாடி வாடி மாண்டு போன மாந்தர்கள் கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே".

"கோடி கோடி கோடி கோடி குவலயத்தோ ராதியை, நாடி நாடி நாடி நாடி நாளகன்று வீணதாய்த், தேடி தேடி தேடி தேடி தேகமுங் கசங்கியே, கூடி கூடி கூடி கூடி நிற்பர் கோடிகோடியே". ஆகையினாலே இந்தக் காலத்தில் பிராமணனென்றுசொல்லி அழைக்கக் கூடிய தெல்லாம் உபசார வார்த்தையேதவிர வேறே ஒரு பிரயோசனமுமில்லை.

சின்னையன்:—(இவைகளைக் கேட்டுப் பேராச்சரியத்தால் திறந்துகொண்டிருந்த வாயிலிருந்தும் எச்சில் தாரையைவிட்டுக் கையைக்கொட்டிப் பேஷ்! பேஷ்! என மூக்கின்பேரில் விரலைவைத்துத் தலையை ஆட்டி) ஆஹா! தாங்கள் இப்போது சொல்லிக்கொண்டு வந்தவைகள் அற்புதம்! அற்புதம்! அவ்வளவும் யதார்த்தம். வராகிவேறே சரஸ்வதிவேறேயா? அவளுடைய கடாக்ஷத்தால் தங்களுக்குச் சகல கலைக்கியானங்களும் தெரிந்து எல்லாம் தலைகீழ்ப்பாடமாக வல்லவா இருக்கிறது! இது படிப்பினால்வரக்கூடிய ஞானமல்ல. ஆகையினாலே இனித் தாங்கள்சொல்லுகிற சாஸ்திரப்படிக்கே நான் நடக்கத்தீர்மானமா யிருக்கிறேன். என்னை மாமிசம் சாப்பிடும்படிக்குச் சொன்னாலும் தடை சிறிது மில்லாமல் நடத்திவிடுகிறேன். உடம்பையும் தேற்றிக்கொள்வேன் (என்று தனது மெலிந்த தேகத்தைத் தடவிப் பார்த்துக்கொண்டான்).

இராக்குமுத்து:—மூக்கரைமுத்தண்ணா வேதசாஸ்திரங்களைக் கரைக்கண்டவன். பிராமணர்களெல்லாம்

அவனுடைய நாக்கடிப்பால் அப்பிராணிகளாகிவிட்டார்கள். அவன் அவர்களுடைய மார்க்கங்களெல்லாம்மௌடீகமாயிருக்கின்றன வென்று பெருஞ்சண்டைபோடுவான். இப்போது அந்த அபாசக் கூட்டத்தார்களைவிட்டு விலகி யதார்த்த ஞானத்தைத்தெரிந்து சுகமாயிருக்கிருன். அவன் தெரிந்துகொண்ட உண்மைகளிற் சில சொல்லுகிறேன்; நீ கவனமாகக் கேட்டுத் தெரிந்துகொள். "அறவினையாதெனிற் கொல்லாமை கோறல் - பிறவினையெல்லாந்தரும்"; அஃதாவது, தருமமாகிய தொழில் எதுவென்ருல் ஆமையைக் கொன்று புசி என்பதாம். அப்படிக்கொல்லுதல் மற்றத் தருமங்களெல்லாவற்றின் பயனையும் தரும் என்பதாம். ஆமையைக் கொல்வதில் என்னவிசேஷமென்ருல், கொன்ற ஆமை யோடுகளை எல்லாம் காப்பாற்றி வைத்து அவைகளை எண்ணிப் பார்க்கையில் எவரொருவரிடம் அதிகத்தொகைகாணப்படுகிறதோ அவரே அதிகக்கொலை செய்ததானபுகழை அடைய ஏதுவா யிருக்கின்ற படியால்தான். மற்றப்படி இதரப்பிராணிகளை எவ்வளவோ கொலைசெய் திருந்தாலும் அவைகள் இத்தனையெனப் பிரத்தியட்ச ருஜுப்படுத்தமுடியாதல்லவா? தாங்கள்கொன்ற புலியின்தலை யானையின்கொம்புமுதலியவைகளையும் யெண்ணிவைத்துப் பெருந்தொகையிற் காட்டிச் சூரப்பட்டம் பெறுவதுமுண்டு. பெண் ஒருத்தி லெட்சம் ஆமைகளைக்கொன்ற அடையாளமாக லெட்சம் ஆமையோடுகளைத் தனக்குக் காணிக்கைகொடுத்தவனுக்கேமாலையிடுவேன் என்றிருந்தாளாம். அப்படியே லெட்சம் காணிக்கையின்பேரில் ஒருவன் கல்யாணம்செய்து கொண்டானும். "செயற்பாலதோறு மறனே யொருவர்க் - குயற்பாலதோரும் பழி"; அஃதாவது, செய்யக்கூடியது மறமாகியகொலைத்

தொழிலாதியாகும்; ஒருவருக்குப் பிழைக்கக்கூடியவழி மதிக்கத்தக்க தீவினைமார்க்கமே. " அறத்திற்கே யன்பு சார்பென்பவறியார்-மறத்திற்கு மஃதே துணை"; அஃதாவது, தெரியாதவர்கள் அறத்திற்குமட்டும் அன்புகாரணமென்பர்; ஆனால், கொலைத்தொழிலுக்கும் அந்த அன்பேதான் காரணமாகவிருக்கிறது. இதனால் புண்ணியமென்பதொன்றும் பாவமென்பதொன்றும் இல்லையெனவே ஏற்படுகிறது. புண்ணியமானாலும் பாவமானாலும் மனிதர் சுபாவமாகச்செய்ய அசக்தமுடையவர். "அவனன்றியோரணுவு மசையாது" என்றபடி எல்லாம் ஈஸ்வரச் செயலாம். "நன்றாரிற் பூட்டிய சூத்திரப்பாவை நன்னார் தப்பினாற் றன்னாலு மாடிச் சலித்திடுமோ" என்றபடி எல்லாம் ஈஸ்வரனே நம்மை எந்தவிதமோ அந்தவிதமெல்லாம் ஆட்டிவைக்கிறான். நாம் ரெட்டிய வீட்டு மாப்பிள்ளையைப்போல் உண்டு உடுத்து அநுபவித்து இருக்கவேண்டியதைத் தவிர்த்து வேறென்னபுலையாட்டை நம்பிக்கெடுக்கிறது? காந்தத்துக்குமுன் இரும்பைப்போலவும் ஈஸ்வரன் சந்நிதானத்தில் இந்த உலகமானது பல்வேறு விதங்களாகச் சலனமடைகின்றது. அது அவனுக்கு ஒருதிருவிளையாட்டே. அவனுக்கு எப்போது இஷ்டமோ அப்போது திருவிளையாட்டை நிறுத்திவிடுவான். ஆகையினாலே நம்மாலாகிய செயல் ஓர் அணுவுமில்லை. ஈஸ்வரன்தான் ஒருவன் உண்டோ இல்லையோ அதைப்பற்றித்தான் நமக்கு என்னகவலை? உலகத்தில் நடக்கும் தாறுமாறுகளை உத்தேசித்தால் ஈஸ்வரன் ஒருவன்இருப்பதாக நினைக்கச் சிறிதும் இடமில்லை. அவன் இருந்துதான் கர்மங்களுக்குத் தக்கபடி உயிர்களுக்குப் பலன்தருகிறான் என்றால் அவன் எதற்காக அப்படிப்பட்ட வேலையைச் செய்யவேணும்? கரு

மங்களை உயிர்களுக்குப் போக்கி வைத்து விட்டால் என்ன? கருமத்தைத் தொலைக்க மாட்டாத ஈஸ்வரன் ஒருவனைப்பற்றி நமக் காகவேண்டிய காரியம்தான் என்ன? "வடகோடுயர்ந்தென்ன தென்கோடு சாய்ந் தென்ன வான்பிறைக்கே" என்றபடி நாம் "கண்டதே காட்சி கொண்டதே கோலம்"என விண்மனச் சிக்கல் களைநீக்கிச் சுகமாயிருக்கவேண்டியதேதகைகண்டபலன். "பிறன்பொருளாட் பெட்டொழுகு பேதமைஞாலத் - தறம்பொருள் கண்டார்கணில்"; அஃதாவதுபிறனுக்குச் சொந்தமா யிருக்கப்பட்ட ஒருத்தியைக் கூடியிருக்கும் ஒருவனுக்கு அறமும் பொருளும் மட்டும்கிடையாது. இதனால், அறத்துக்கும் பொருளுக்கும் மேலாக இருக் கப்பட்ட இன்பமும் வீடும்கிடைக்கும் என்பது பெறப் படுகிறதல்லவா? "அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல் - பொருளல்ல தவ்வூன் றினல்"; அஃதாவது, அருளல்லாத காரியம் எதுவென்றால் உயிர்களைக்கொல் லாதிருத்தலாம்; கொல்லுதலும் அந்தமாமிசத்தைச்சாப் பிடுதலும் ஒருலெட்சியப்படுத்தப் படுவனவல்ல. இது "கொன்றாற்பாவம் தின்றாற்போச்சு"என்ற பெரியவாக் குக்குச் சரியாக இருக்கிறது. "உண்ணாமை யுள்ள துயிர் நிலையூனுண்ண-வண்ணாத்தல் செய்யாதளறு"; அஃதா வது, நாம் உண்ணாமல் விட்டிருக்கும்படிக்கான ஜீவப் பிராணிகளின் மாமிசங்களை விரும்பிச் சாப்பிட்டால் நரகமானது நம்மைவிழுங்கவாயைத் திறக்கமாட்டாது. "கொல்லான்புலாலை மறுத்தானைக் கைக்கூப்பி-யெல்லா வுயிருந் தொழும்"; அஃதாவது,கொல்லு பசுவை, அந்த மாமிசத்தைத்தின்ன மறுத்தவனை எல்லாப் பிராணிக ளும் தொழுமா? தொழமாட்டாதென்றபடி.நான்கு புரு ஷார்த்தங்கள்:—அறம் பொருள் இன்பம் வீடு. இவற்

தில் அறத்தை (அடித்துவிட்டால்) செய்யா தொழிந்தால் மற்றைய மூன்றும் தாமே ஒருவருக்குப் பிராப்தமாகின்றனவே? பொருளைவிட்டால் இன்பம் உண்டு. இன்பத்தை விட்டால் வீடு உண்டு. அறத்தைப் பேணவேணு மென்றே எதிர்பார்த்தால் பொருளைத் திரட்டிக் கொள்வது எப்படி? கெட்டவழியாலும் பொருளைத் தேடிக்கொள்ளவேணும் என்றபடி. அப்படித்தேடிய பொருளை லெட்சியம்செய்யாமல் பரத்தையருக்கு வாரி இறைத்தால் இன்பம் அனுபவிக்கலாம். இப்படிப்பட்ட இன்பத்தைக் கடைசிக்காலத்தில்விட்டு உயிர் துறந்தால் அவர்களுக்கு மோக்ஷானந்தம்தான் சித்தியாகும் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை. இந்தப்படிக்கு எத்தனையோவிதங்களெல்லாம் மூக்கரை முத்தண்ணு கேள்விகள் கேட்டுப் பிரசங்கம்செய்து எல்லாரையும் மூக்கறுத்து அவமானப்படுத்தி வாயடக்கி ஓட்டிவிடுவான்- இதுவிஷயத்தில் முத்தண்ணு பெத்தண்ணுதான். இதுவன்றிப் பரமசிவன் பெண்ணாசையை விட்டவருக்கே மோக்ஷம் தருவேமென்று முதலிற்சொல்லி யிருந்து அப்பால் அதற்கு மாறாகச் சுந்தரமூர்த்திக்கு அந்தக் கடவுள் தாமே தூதுநடந்த காரணமென்ன? என்று கேள்வி கேட்பான். கேட்டாயா? சின்னையா! என்ன ஒரு மாதிரி விழிக்கிறாய்? எல்லாம் உனக்கு நன்றாய்த் தெரிகிறதா?

சின்னையன்:—என்னஎன்னமோ "கஷபுஷ" என்று இப்போது சொல்லுகிறீர்கள். அதெல்லாம் எனக்குச் செவிடன்காதில் "பூஉ!" என்று சங்கூதினதாகத்தான் இருக்கிறது. ஆனால் நான்செவிடனாகவும் இல்லை. தங்களுடைய கிளியைப்போன்ற வசனமிர்தங்களை மட்டும்

எனது செவியானது கேட்டு எனக்குப் புளகாங்கிதம் தந்துவிட்டது. மறுபடி உங்களுடைய கல்விச் சாமர்த்தியமெல்லாம் தற்குறியாகிய என்னிடத்திற்காட்டினால் நான் என்னத்தை உற்றுப் பார்த்தறிவேன்? மூடப் பயலைப்பிடித்து ஆட்டுகிறீர்கள். குருடனை இராஜவிழி விழிக்கச் சொன்னால் அவன் என்னசெய்வான்? கடைசியில் நீங்கள் சுந்தரமூர்த்திசுவாமிகளைப்பற்றிச்சொன்னீர்கள்; அது சற்று தெரிகிறது. மற்றதெல்லாம் வாயுபகவான் வாரிப் பட்சணஞ் செய்துவிட்டார். என்னமோ தங்கள் அபார சாமார்த்தியத்தில் கோடியில் ஒருஅம்சமாவது எனக்குக் கிருபைசெய்து முன்னுக்கு வைத்துப்பார்க்க வேண்டியதுதான்.

இராக்குமுத்து:—சின்னையா! நீவடிகட்டின புத்திசாலி என்பது எனக்கு நன்றாய்த்தெரியும், அப்படிப் பட்ட உன்னாலேதானே எனக்குக் காரியமாகவேண்டியிருக்கிறதென்பதாய் உன்னைக் காதலித்து வைத்துக் கொண்டிருக்கிறேன். சாப்பாட்டிற் கடைசி வாய்ச் சாதம்தான்பலம். அதுபோல், நான்பேசியதில் கடைசியிலுள்ள சாரமான பாகத்தைமட்டும் கவனித்துக் கொண்டாயே? அது உத்தமர்களுடைய லெட்சணமல்லவா? சாரமில்லாதவைகளைத் தள்ளவேண்டியது நியாயம் தான். பாலையும் தண்ணீரையும் கலந்துவைத்தால் அன்னப்பட்சியானது சாரமாகிய பாலைமட்டும் கிரஹித்துக் கொண்டு தண்ணீரை விட்டுவிடுகிறது. அதுபோலவே உன்செய்கை மேலானதாயிருக்கிறது.

சின்னையன்:—(சின்னப் புத்திகாரணைகையால்) அஹஹா அ! (எனச்சிரித்து) நான் புத்திசாலிதான். மகம் மேருவையடுத்த காகமும் பொன்னிறமாகிவிடுமல்லவா?

உங்கள் சந்நிதி விசேஷமே எனக்குப் போதாதா? அது நபும்சகனைப் புருஷ சிம்ஹமாகவும் ஊமையைக் கவிசொல்லவும் செய்துவிடுமே?

இராக்குமுத்து:—இன்று இராத்திரிக்குக் கள்ளப் பயல்களாகிய அந்த முத்தனும் பெத்தனும் வருவார்கள். போக்கடியற்ற வெங்கம்பயல்கள். "கள்ளனுக்குள்ளே குள்ளன்பாஞ்சான்" என்றபடி நான் அவர்கள் விஷயத்தில் இருந்துகொண் டிருக்கிறேன். செக்கிலே பூட்டப்பட்ட காளைகளைப்போல அவர்கள் என்னைச் சுற்றிக்கொண்டே வேறே விதியில்லாமல் திரிகிறார்கள். சூரியனைச்சுற்றி எத்தனை கிரகங்கள் வருகின்றன? அதைப்போல என்னுடைய தேஜஸுக்காக மயங்காதவர்க ளெல்லாரும்மயங்கி என்னைச்சுற்றித் திரிகிறார்கள். நான்யாரையும் லெட்சியம்பண்ணுகிறது கிடையாது. தீபாவலியில் அமாவாசி தலையிட்டதுபோல் முத்தனும் பெத்தனும்வந்தால் நான் அவர்களுக்குச் சற்றே வாய்ப் பாயசம்கொடுத்து எய்த்து அனுப்பிவிட்டுப் பின் நேசமுள்ள நாம்இருவரும்சேர்ந்து மாமிச போஜனுதிகளைத் திருப்திப்படச் சாப்பிட்டு உல்லாசமா யிருக்கலாம். நான் உன்பேரில்தான் மனதாரப் பிரியம்வைத்திருக்கிறேன்என்பது உனக்குத் தெரியுமல்லவா? "நிலையிற் பிரியேல்" என்ற ஔவைப் பழமொழிப்படிக்கு நீ மட்டும் என்னுடைய வருதியில்லாமல் இந்த வீட்டுத் தலைவாசல் நிலையைக்கடந்து போகக்கூடாது.

சின்னையன்:—நிழலைவிட்டு நான்என் வெய்யிலுக்குப்போகிறேன்? எனக்குச்சோற்றுக்கில்லையா? அரைக்கில்லையா? பெண்டுக் கில்லையா? "பெண்பாக்கியம் புண்ணியவானுக்கு". ஒவ்வொருசுகமும் எனக்கு இந்த ஒரு இடத்திலேயேசேர்ந்து வாய்த்ததுபோல உலகைஆளும்

அரசனுக்குக்கூட கிடையாதே? நாயானது சுசியானதை யும் அசுசியானதையும் சாப்பிடுகிறது. அதற்கு அவை களின் உயர்வுதாழ்வு தெரிகிறதில்லை. நான் தங்களு டைய அருமை பெருமைகள் மற்றவைகளி லெல்லாம் சிலாக்கியமா யிருக்கிற தென்பதைத் தெரிந் திருக்கி றேன். கீழானமார்க்கங்களில் இனிப்பிரவேசிப்பேனோ? கனியைவிட்டுக் காயையா கவர்வேன்? என்னைப் போ போவென்று பிடரியைப் பிடித்துத்தள்ளினாலும் போக வே மாட்டேனே?யானை தன் தலையில் தானே மண்ணை வாரிப் போட்டுக்கொள்ளுகிறதே? அப்படியா நான்?

இராக்குமுத்து:—அடேபலே! சொக்கு! இங்கே வா! என்னுடைய தாயார் (வீராயி) இடம் சொல்லி இன்று இராத்திரிக்கு மாமிசாதிகளைக்கூட ஒருவருக்கு ம் காணும்படிக்கு விசேஷமாக தயாரித்து வைக்கும் படி சொல்.

சொக்கு:—(கீச்சுக் குரலாய்) ஆகட்டும் அம்மா அந்தப்படியே தயாரித்துவிடும்படி சொல்லுகிறேன்! (எனச் சென்றான்).

(6.)

(கௌரிஎன்பவள் தன் புருஷன் கட்டளையிட்டுப் போனபடிக்கு அன்றுகாலை ஒன்பது மணிக்கு எல்லாப் பணிவிடைகளையும் முடித்துத் தனது நாயகன் வரவை வெகுநேரமட்டும் எதிர்பார்த் திருந்தும் வராதபடியி னால் அடங்காத் துயரத்துடன் அன்றுபகல்முழுதும் சாப்பாடுமின்றிக் களைத்தவளாய்ச்சாயந்திரத்தில்தனது வீட்டுவாசலில் இருந்துகொண்டு கடையிலிருந்து அந்த மார்க்கமாய்த் திரும்பிவரும் ஸ்திரீகளை விசாரிப்பதா னாள்).

கௌரி:—அடிநாகம்மா! என்னடீ அவசரமாய்ப் போகிருய்? இங்கே கொஞ்சம் வந்துபோடி! ஒருசங்கதி கேட்கவேணும்?

நாகம்மாள்:—உனக்கென்னடி செல்லமகள். ஆம்படியான் திரட்டிஉருட்டிக்கொண்டு வருகிறன். செல்லப்பிள்ளையோடு கூடிக் கொல்லப்பிள்ளை கெட்டதாம். எனக்குத் தலைக்குமேலே வேலை வேலையாய்க் குவிந்து ஆலையாய் அரைக்கிறது. இப்போது உன்னோடு கதை கதைக்கச் சரிப்படாது (என்று சொல்லிக்கொண்டே போய்விட்டாள்).

கௌரி:—(தனக்குச் சமீபமாய்வந்த மற்றொருத்தியைச் சந்தித்து) அடி லெட்சுமி! என் ஆத்துக்காரரைக் கடையிற் கண்டாயா?

லெட்சுமி:—(முகத்தை நீட்டி வலித்துக் காட்டி) ஆத்துக்காரனாவது சீத்துக்காரனாவது? அவனை நான் ஏன்போய்ப் பார்க்கப்போகிறேன்? பட்சிக்கு ஆகாயமெல்லாம்பாதை. போடிபோ! பைத்தியக்காரி! அறுக்க மாட்டாதவனுக்கு அன்பத்திரண்டு அரிவாளாம். என் வேலையைப் பார்க்க மாட்டாமல்தான் இருக்கிறது? (என்று விரைத்துக்கொண்டு போய்விட்டாள்).

கௌரி:—புண்ணிற் கோலிட்டதுபோல் மனவருத்தப்பட்டு ஷண்முக நாதரைப் பிரார்த்தித்து இதற்கென்ன செய்வதென்று, (மேகத்தைக்குறித்துத் திறந்த வாயுடன் காத்திருக்கும் சாதகபட்சியைப்போல இருக்கும்போது) வேறொருத்தியைக்கண்டு அடி சுப்பம்மா! என் ஆம்படியானைக் காலைமுதற் காணேம்! கடைக்குப் போகிறேனென்று போனார்! நீ அவரை அங்கே கண்டதுண்டா!

சுப்பம்மாள்:—நான் கடையில் அவரைப் பார்க்க வில்லையே! காலையிற்போனவர் என்கிறுயே? இந்நேரம் வரைக்கும் அங்கேயே எப்படியிருப்பார்? அவர்வேறே எங்கேயாவது போயிருப்பார். நீ ஏண்டி இப்படி ஒரு வகையாய் வாடிப்போயிருக்கிறே?

கௌரி:—இன்றுகார்த்திகைக்கு என்னையெல்லாம் தயார்செய்து வைக்கும்படிக்குச் சொல்லிவிட்டு அவர் கடைக்குக் காலை ஏழுமணிக்குப்போனுர்; அந்திநோ மாகுது; இன்னமும் வரக்காணோம். நான் என்ன செய் கிறது? வேறேமனிதர் உதவியும் இல்லை. பூசையும் இன்று நடக்காமற் போயிற்று. சாப்பாடும் கிடையாது. இப்படி தனியாகவே ஏங்காய் உட்கார்ந் திருக்கிறேன். அடி சுப்பம்மா! ஒருபூட்டுக் கொடுக்கிறையா? நான் என் வீட்டைப் பூட்டிவிட்டு அவரைக் கடையிற் போய்த் தேடிப்பார்த்து விசாரித்துக் கூட்டிவருகிறேன். நான் சும்மா யிருக்கப்படுமோ? "சங்கடம் பிடித்தவள் சந் தைக்குப் போனுலும் அகமுடையான் கிடையான்" என்ற பழமொழியைநினைக்கக் கவலையாகவும் இருக்கிற தே! நீ அவ்வளவு பெரியமனது பண்ணுவே?

சுப்பம்மாள்:—(இரக்கமாகி) என்ன அநியாயமா யிருக்கிறது? நீபெண்ணுயிற்றே? அகாலமாகுமுன் தே டிப் பார்த்துவிட்டுச் சீக்கிரம் வீட்டுக்குத் திரும்பிவிடு; நான் பூட்டுத்தருகிறேன் (என்று வேகமாய்த் தன் வீட் டுக்குச் சென்று அதனை எடுத்துவந்து கொடுத்துச் சென்றுள்).

கௌரி:—(பூட்டைவாங்கிச் சீக்கிரம் தன்வீட்டுத் தலைவாசலைப்பூட்டிப் பெருமூச்செறிந்து தன்புருஷனைத் தேடிக் கடைக்குப் புறப்பட்டு வரும்போது) "பிள்ளை

யார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததே" ஐயோ! தெய்வமே! வரவர இருட்டும் அதிகமாகின்றதே! நான் இவரை எந்தவிடமென்று கண்டு தேடப்போகிறேன்! கண்டவர்களை யெல்லாம் நான் எப்படி நாணமற்று விசாரிப்பேன்! நான்பெண்பிள்ளை என்செய்வேன்! பெண்ஜென்மம் பாவஜென்மமே! இவர் இன்று காலையிலேயே அவசரமாகத் திரும்பி வருகிறேனென்று என்னையும் துரிதப்படுத்தி வெகுவாய்ச் சொல்லிப்போனாரே! போகும்போதே சகுனத் தடையாக ஏன்சும்மா கூப்பிடுகிறாய் என்று என்னைக் கேட்டாரே! என்னமோ போனவிடத்தில் அவருக்கு வாயுவுக்குத்தோ! அல்லது என்ன சம்பவித்ததோ! யார் அவரை லெட்சியம் செய்து அவருக்கு உதவப்போகிறார்கள்! பேதையாகிய எனக்கு ஒன்றும் தெரியவில்லையே! நான் வறண்ட பயிர்போலானேனே! மழைபோல் அவர் என்கண்முன் தோன்றி விடமாட்டாரா? (என்று தானே தனியாய்ப் பலவிதங்களில் துக்கித்துப் புலம்பிக்கொண்டு கடையைச்சேர்ந்து தெருக்கள் முற்றும் சுற்றிச் சுற்றித் தேடிப் பார்த்தும் சின்னையனை அவள் கண்டுகொள்ளக் கூடவில்லை. விசாரித்தும் பயனில்லை. என்செய்வாள்? பாவம். இரவு மணி பத்தும் ஆகிவிட்டது. கௌரியானவள் பசியால் மிகக் களைத்துத் தன் நாயகனைக் காணாததால் துக்கம் மேலிட்டு அங்குள்ள ஒருசாவடியின் முகப்பிலுள்ள படிக்கட்டில் தனிமையாக உட்கார்ந்து போக் கென்ன வென்று பலவிதங்களாய் எண்ணமிட்டுச்சோர்ந்திருந்தனள்).

அப்போது ஷோக்குள்ள திவ்ய புருஷவடிவையுடைய ஓர்வாலிபன் சிட்டியிற் பாட்டுஊதிக் கையினிடத்திலுள்ள கம்பை உல்லாசமாகச் சுழற்றி அந்த

வழி தனியே போய்க்கொண்டிருந்தவன், கௌரிஎன்பவளைக் கம்பலாந்தல் வெளிச்சத்திற் பார்த்தான். அவளுடைய இளமையையு மழகையும் கவனித்து நோக்கி அவள்பேரில் அடங்காத மையல்கொண்டு அசையாமல் நின்று விட்டனன். பின் அவளைச் சமீபித்து வந்து

வாலிபன்:—நீயார்? இங்கே தனிமையாக இந்த நேரத்தில் இருந்துகொண் டிருக்கிறாய்!

கௌரி:—என்வீட்டுக்காரர் இன்றுகாலையிலேயே கடைக்குவருவதாக வந்தவர் சாயந்திரம்வரை வீட்டுக்குத் திரும்பிவரக் காணோம். நானும் இங்குவந்து அவரை இவ்விடங்க ளெங்கும் கால்சலிக்கத் தேடிப்பார்த்தும் இந்நேரம்வரைகண்டுபிடிக்கக் கூடவில்லை. எனக்கு இனிச்செய்வது இன்னதென்று ஒன்றும்தெரியவில்லை. இன்றுமுழுக்கப் பட்டினியால் பேசக்கூடத் திடமில்லை; காதடைக்கிறது. என்கவலையைத் தீர்த்து வைப்பார் யாருமில்லை. தாங்கள் யாரோபுண்ணிய புருஷர்?

வாலிபன்:—பூனைக்கு நாரைமீன் கிட்டுமோ? உடன்கூடி வாழ்ந்தாலும் தவளைக்குத் தாமரையின் தேன் ருசிக்கத்தெரியுமோ? அந்தப்பயலுக்கு உன்னைப்பேணி அநுபவிக்கக் கொடுத்துவைக்க வில்லை. இப்படிப்பட்ட மோகனசுந்தரவதியாகிய உன்னையெப்போதும் அருமையாய் அருகில்வைத்துக் கொஞ்சிக்கொண்டே யிருக்கும் படியான பாக்கியத்தைத் தெரியாமல் உன்னை யிந்த நேரத்தில் தவிக்கத் தனிமையாக விட்டுப்போய்விட்டானே? இப்படிப்பட்ட துரோகிப்பயலை நீ புருஷனாக நம்பி இருக்கிறதில் என்னபிரயோசனம்? காக்கைக்குப் பிணத்தின்பேரில் ஆசை யென்றபடி அவன் எந்தத் தேவடியாள்வீட்டில் போய்ப்படுத்திருக்கிறானோ! நீயோ

இளஞ் சூரியனைப் போலும் தேஜஸ் உடையவளா யிருக்கிறாய். இந்த வாலிபத்தில் நீ நல்ல புருஷருடன் ரமித்து ஸந்தோஷமாயிருப்பதைவிட்டுஇப்படிப்போன பயலுக்காக நலமெல்லாம் போகவிட்டுத் துக்கப்பட்டு இந்தவிடத்தில் அகாலத்தில் கதியற்றவள்போல் உட்கார்ந்துகொண்டிருப்பதில் என்னபிரயோசனம்? எதற்காகப் பசியினால் இப்படிச் சுந்தரமேனியைக் களைத்துப்போகச் செய்யவேணும்?

கௌரி:—என்ன அய்யா நீங்கள் என்புருஷனை என் எதிரிலேயே இப்படித்தூஷித்துப் பேசுகிறீர்கள்? எனக்கு அது சகிக்கக்கூடவில்லையே? எனக்கு ஆயிரம் இருந்தாலும் அக்கினி சாட்சியாகக் கல்யாணம்செய்து கொண்ட அந்தப் புருஷனுக்குச்சரியாக மற்றவர்கள் தேவர்களானாலும் ஆவார்களா? "கல்லானாலும்கணவன் புல்லானாலும் புருஷன்" என்ற பழமொழி நீங்கள் கேட்டதில்லையோ? அவரவர்களுடைய பிராரப்தங்களின்படிதானே புருஷர்கள் கிடைக்கிறார்கள்? வேண்டாமென்றாலும் அந்தப்பிராரப்தங்கள் அவரவர்களைவிட்டு நீங்குமோ? நாம்செய்த நல்வினை தீவினைகளை ஸந்தோஷமாகவும் பொறுமையாகவும் அநுபவிக்கத் தயாராயிருக்க வேண்டும். புருஷர்கள் எப்படி யிருந்தாலும் ஸ்திரீகள் அவர்களுக்கு அடங்கி எவ்விதத்தினாலாவது தங்களாற் கூடியமட்டில் அவர்களுக்கு திருப்தி கொடுத்து அவர்களுக்கு உதவியாகவும் இருக்கவேண்டுவது தானே. உத்தமிகளுக்கு அஃதன்றோ அழகு? ஸ்திரீகள் சுதந்தரத்தைப் பாராட்டுவார்களானால் உலகத்தாரால் தூற்றப் படுவார்கள். அன்றியும் நற்கதி கிடைக்கமாட்டாது. அப்படிப்பட்டவளை மணஞ் சூட்டியவனுக்கும் இகத்திலும் பரத்திலும் சுகமிருக்கமாட்டாது. இவைகளைத் தாங்களென்ன அறியாதவர்களா?

வாலிபன்:—சரி சரி, இந்தவழியிலா இறங்கி இருக்கின்றாய்? இந்தப்படிக்குக் கோணவழியிற் பிரவேசித்துக் கெட்டுப்போன கோணப்பெண்கள் எத்தனையோ எனக்குப்பாடம். சமயத்துக்குத் தகுந்த புத்தியும் யோசனையு மல்லவா வேணும்? இப்போது உன்புருஷன் உன்னை இப்படித் திண்டாட நடுத்தெருவில்விட்டு வேறே பெண்டாட்டி கொண்டாடப் போய் விட்டானே? நீ நிர்க்கதியாகத்தானே பசியாலும் தீராத கிலேசத்தாலும் சங்கடப்பட்டுச்சாகிறாய்? உன்புருஷன் உன்னோடுகூடிச் சரியாயிருந்தாற் பாதகமில்லை. ஆனால் அவன் நீ யிருக்க வேறொருத்தியை மோப்பம்பிடித்துக் கொண்டு உன்னைத்தேடாமலும் பாதுகாவாமலும் திரிந்தால் நீயும் அப்படியே அவனைப்போலச் சுகித்திருக்கும்படிக்கான வேறே வகையைத்தான் தேடவேண்டுவது நியாயம். இந்த நியாயப்படிக்கு அநேகம் ஸ்திரீகள் இப்போதும் உல்லாசமாக இருந்துகொண் டிருப்பதற்கு எத்தனையோ திருஷ்டாந்தங்கள் இருந்துகொண் டிருக்காமலா இருக்கிறது?

கௌரி:—என்புருஷன் அப்படி ஒழுங்குத் தப்பானவரல்ல. அப்படி இருந்தாலும் அவர் ஆயுசோடே மட்டும் நான் திருமங்கல்யம் தரித்துக்கொள்ளும்படிக்கு இருந்தால்கண்ணுக்கு அழகாகவேனும் பார்த்துக்கொள்வேன். அஃதொன்றே எனக்குப் பெரும்பாக்கியம். ஒரு நாயகன் ஏககாலத்தில் பலஸ்திரீகளுக்குப் புத்திரோற்பத்தி கொடுக்கத்தக்கவன். ஒரு நாயகி அதுபோற் பல புருஷர்களுக்குப் புத்திரோற்பத்தி கொடுக்கத்தக்கவள் ஆவாளா? இந்த நியாயமெல்லாம் போகட்டும். நீ ஏனப்பா இப்போது என்னிடத்தில் வந்து இப்படிப் பேசத்தகாத வார்த்தைகளெல்லாம் பேசுகின்றாய்? இவ்

வித வார்த்தைகளுக்கு என்போன்றவர்கள் ஒருகாலும் ஒத்துக்கொள்ள மாட்டார்கள். நான் ஏழையாகிய பிராமண ஸ்திரீ. எனக்கு அவ்விதப் பொல்லாங்குக ளெல்லாம் வெகுதூரம். நீ பேதையாகிய என்னிடம் எதுக்கு வார்த்தையாடவேணும்? உனது காரியம் ஏதோ அதைப் பார்த்துப்போகலாம்.

வாலிபன்:—நன்றா யிருந்தது! நீ ஒன்றும் அறியாத வள் அறியாதவள் என்று முன்னேச்சொல்லஏதுவில்லை. நான் உன்னைவிட்டுப்போய் வேறே இதைக் காட்டிலும் என்ன சிலாக்கியமான காரியத்தைச் செய்யப்போகி றேன்? நடக்கவென்றாலும் கால் வழங்கவில்லை, கண் ணுக்கும் வழிதெரியவில்லை. வேறொரு காரியத்திலும் என்புத்தி பிரவேசிக்கவில்லை. உன்னுடைய சுந்தர வடி வைக் கண்செய்த பாக்கியமாய்க் கண்டதுமுதல் எனது மனம் இங்கேயே லயித்துவிட்டது. நான் இனி உன்னை விட்டு எடுத்தடிவைக்கமாட்டேன். ஸ்திரீகள் முதலில் இப்படித்தான் பிகுவாய்ப்பேசுவார்கள். ஆனால் நீ என் னிடத்தில் அப்படிக்கான பிகுச்சுவாபவங்களை அதிக மாய் வைத்துக்கொண்டிருக்காதபடிக்குத் தயவுசெய்ய வேணும். உன்பேரில் எனக்கு இருக்கும் ஆசை தணி யும்படிக்கானல் ஒழிய எனக்குக் கிறுக்குப் பிடித்துப் போகும். அப்பால் இறந்துபோய் விடுவேன்; அந்தப் பழி உனக்குத்தான்.

கௌரி:—(அவனுடைய சொற்கள் காய்ச்சிவிட்ட ஈயம்போல் அவளுடைய செவியிற் பிரவேசித்தபடியி னலே புழுங்கித்துடித்துக் காதைப்பொத்தி) சிவசிவா! சிவகுமரா! ஆ இஃதென்ன அநியாயம்? பெரும்விபத்தாக வன்றோ வந்துவிட்டது! இப்படி வருமென்று எனக்கு

ஆதியிலேயே தெரியாமற் போய்விட்டதே! அந்தியிற் குவியாநின்ற தாமரையுள் அகப்பட்ட வண்டானது விடிந்து சூரியனால் மலர்மலர்ந்தபின் வெளியேறித் தேனுண்டு களிக்கலாமென் றிருக்கக் காட்டானையானது மலரைப்பிடுங்கிக் காலால் நசுக்கியதைப்போ லிருக்கிறதே! "உபாயம் வெகுஸகாயம் செய்யும்" என்றபடிக்கு எனக் கிப்போது ஒருயோசனையும் தோன்றவில்லையே! வெளுத்ததெல்லாம் பாலென்று நினைத்து வந்தேனே! பெண்கள் தனிவழிபோகக் கூடாதென்று தெரிந்தும் விளக்கைப்பிடித்துக்கொண்டு கிணற்றில்விழுந்தேனே! வேறு இடம் போகவென்றாலும் இந்தப்பாவி கோட்டானைப்போல் வழிமறித்திருக்கிறானே! வகைத்தப்பாய் வலையிலகப்பட்ட மானைப்போ லானேனே! பாவத்துக்கு அஞ்சாப் பழிக்காரனா யிருக்கிறானே! என்று சிந்தித்து நொந்து கையை நெறித்து) நான் இங்கு தனிமையாய்த் துக்கப்பட்டுக்கொண் டிருக்கும் சமயத்தில் இவனொருவன் யாரோகரடிபோல் பெரும்போராட்டமாய்ப் பழிக்கான விஷயங்களைக் கூசாமற் பேசுகிறான்! ஐயோ! நான் இந்தப்பாவத்தை எங்கேகொண்டு தொலைப்பேன்! உக்கிரவேலா! உனக்குச் சம்மதமா யிருந்தாற் சரி!

வாலிபன்:—அடி என்னடீ? வீண் தலைக்குப் பண்ணுகிறாய்! நான் இப்படிப் பகட்டுக்காரிகளை யெல்லாம் வெகுவாய் அறிந்தவன்தான். என்னையரோ ஒருவன் என்றாய். நான் உனக்கு அவ்வித அந்நியன் ஆகமாட்டேன். பூர்வஜென்ம சம்பந்தமில்லாமல் இப்போது உன்னைக் கூடிரமிக்க வந்துவிட்டேனோ? எனக்கோ காமநோய் மிகவும் வருத்துகின்றது. நீ கட்டாயமாய்த் தயவுசெய்யத்தான்வேணும். வீண்காலதாமதம்செய்து கொண்டிருப்பதில் என்னபிரயோஜனம்? "சுகம் சீக்கி

ரம்'' என்றதனை நீ கேள்விப்பட்டதில்லையோ? எந்தெந்தச் சமயங்களில் எவ்வித எவ்விதச் சுகானுபோகங்கள் தாமேவந் தடைகின்றவோ அவைகளையெல்லாம் வீண் நம்பிக்கைகளையே ஸ்திரமாய் புத்தியீனத்தால் மேற்கொண்டவர்களாய் அப்படிக்கு வலியவந்த சுகங்களைச் சௌகரியம்போல் அந்தச் சமயங்களிலே அனுபவித்துக் கிருதார்த்த ராவதைவிட்டு அவைகளை மறுத்துத் தள்ளி எப்போதும் அபாக்கிய முள்ளவர்களாய்ச் சீரழிந்து தம்வாழ்நாளைவீணாளாய்க் கழிக்கின்றமூடர்களைப்போல் நாம் இருவரும் இருக்கலாகுமோ? நான் இன்று யார்முகத்தில் விழித்தேனோ? நீஎனக்கு இந்தச் சமயத்தில் தனிப்படவந்து கிடைத்தாய். தானாக வந்த சீதேவியைக் காலாலுதைத்துத்தள்ளுவேனோ? "குமரியும் குமரனும் தனிப்பட்டாற் கூடுவர்தாமே குருவின்றி'' என்ற பழமொழியும் பொய்யோ? நீ என்னை உடனே அங்கீகரித்துக் குளிர்ந்த வசனங்களினால் என் கவலையைப் போக்கிவிடுவாய்! நான்இந்த க்ஷணத்திலேயே உன்னுடைய பசியைப் பறக்கடித்துப் பெரிய உற்சாகத்துடன் உன்னை எப்போதும் இருக்கும்படி செய்வேன்.

கௌரி:—(தாளமாட்டாமல் பலமாய்த் தலையிலும் முகத்திலும் அடித்துக்கொண்டு) ஐயையோ! ஓ தெய்வமே! தெய்வமே! என்னை நீ இப்படியும் சோதனைசெய்யலாமா! ஒன்றைநினைக்க ஒன்றாய் விடிந்ததே! அடே சண்டாளா! நான் பிராமணஸ்திரீ அல்லவா! என்னிடத்தில் நீ இவ்வித அற்பஇச்சையை வைக்கலாமா! நெருப்பிற் புழுப்பற்றுமா! பெண்ணாசையால் மாண்டவர்களுடைய கதைகள்கேட்டதில்லையா?இந்தக் கெடுமதி விடு உனக்கு வேண்டாம்! நீயும் க்ஷேமமாயிருக்கமாட்டாய்!

தப்பிப்போய் வாழ்ந்திரு! பெண்பாவம் பொல்லாதது! இங்கு ஒருநிமிஷம் நில்லாதே!

வாலிபன்:—அடி பெண்ணே! உன்னுடைய பாவத்தை (அழகிய பாவனைத் தோற்றத்தை)ப் பார்த்தபின் இனி எனக்கு ஒரு பாவமா வரப்போகிறது? உன்னைப் பார்க்கப்பார்க்க எனக்குவெகுபரிதாபமாக இருக்கிறது. நீ தலையில் அடித்துக்கொண்டது ஒருவிதத்தில் நியாயமாகத் தோற்றுகிறது. உனக்குயாதொரு ஊன மில்லாமற் படைத்த பிரமன் உன்தலையில் என்போன்றநாயகனைக் கூடியிருக்க எழுதவில்லை. உன்னுடைய பருவத்துக்கும் சௌந்தரியத்துக்கும் தக்கபடியான மதனைச் சேர்ந்து சுகித்திருப்பதைவிட்டு யாரோ பெரும்பாமர ஏழைப் பார்ப்பானைக் கட்டிக்கொண்டு சதா அழுதவண்ணமாய்க் கஷ்டப்பட்டுக் கொண்டும் இருக்கின்றாயே? உன்சுந்தர மெல்லாம் அந்தரமாய்ப் பாழுக்கிறைத்தநீர் போலும் போகிறதே? அடி பயித்தியக்காரீ! அதை நினைக்க நினைக்க என்வயிறு பற்றி எரிகிறதே? உன்னைப் போன்றவளுக்குத் தகுந்த நாயகன் நானே என்பதை நீ இன்னம், நான் என்ன எடுத்து உரைத்தும் உன்னுடைய துர்அதிர்ஷ்டத்தால் தெரிந்துகொள்வதா யில்லையே? சகடத்திற் பூட்டும் காளையா யிருந்தாலும் ஒன்று போல் ஒன்றுஜோடியா யிருக்கப் பார்ப்பார்களே? என் மதிக்கு இணங்காத உன்மதிக்கு என்ன செய்கிறது? "நான் பிடித்த முயலுக்கு மூன்றேகால்" என்று நீ இப்படி ஒரே சாதனையாகச் சாதித்துக் கெட்டுப் போகின்றாயே? தான்சாக மருந்து குடிக்கிறாய்! இந்தச் சங்கடத்துக்கு என்ன செய்கிறது? இதோ நான் போட்டிருக்கும் ஆபரணங்களையும் என்னுடைய புரையற்ற சொரூபத்தையும் பார்! என்மாளிகையை நீவந்து

பார்த்தால் அந்தச் சம்பத்துக்களை விட்டு நீ ஒருகா லும் திரும்பிவர மனங்கொள்ளமாட்டாய். சகலமும் இந்த நிமிஷம் உனக்கே தத்தம் செய்துவிடுகிறேன். என்னுடைய பெண்ஜாதியையும் மற்று முள்ளோரை யும் உனக்கு ஏவற் பணிவிடைக்காரர்க ளாக்கி வைக்கி, ன்றேன். நானும் உனக்கு அடிமையாகவே இருப்பேன் என்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. அநியாயமாய் நீ என் வார்த்தைகளை இதுசமயத்திற் கேட்காமற் கெட்டுப் போய்விடாதே! சொன்னேன்! சொன்னேன்! முக்கா லும் சொன்னேன்! இந்தச்சமயம் அலட்சியமாய்த் தப்பவிட்டால் பின் இருவரும்கெட்டு அழுகிப் போ வோம். முன்புத்திகொண்டு பிழைக்கவேண்டும். சீக்கி ரம் என்னைப்பின் தொடர்ந்துவா! அடிகண்மணி! சுந்த ராங்கி! என்னை மோசம்செய்துவிடாதே! நான் காம வேதனையாற் படும்துயரங்களைக் கணக்கிட்டு முடிவ தில்லை (என்று அவளை நெருங்கிநின்று வேண்டிக் கொள்வ தாயினன்).

கௌரி:—(அஞ்சி ஒடுங்கி யோசிக்கின்றாள்) நாம் தனிமையாக அகப்பட்டுக்கொண்டோம். இவனைவிரோ திக்கப்பேசினால் நமக்குயாதும் பொல்லாங்குசெய்வான். பின், புலியின்கையிற்பட்ட மானைப்போலாகிவிடுவோம். நமக்கு வாழ்வும் தாழ்வும் இப்போது இவன் இட்ட பிச்சை. மானத்தைக்காட்டிலும் எனக்கு உயிர் பெரி தல்ல. ஆனால் நம்மை நம்பியிருக்கும் புருஷன் நிர்க் கதியாய்ப் போய்விடுவாரே. பாம்பாவது மணிமந்திரங்க ளால் வசமாகும். இவன் துர்ச்சனன்;எந்தவிதத்தாலும் சரியாகமாட்டான்போ லிருக்கிறதே. (ஏதோகொஞ்சம் சொல்வோம் என்று) அடே பயித்தியக்காரனே! நான் ஒருபெண்பிள்ளை. எனக்கு இருக்கிற அறிவுகூட உனக்கு

இல்லையே? நீ எனக்கு இந்திரபதவியைக் கொடுப்பதாயிருந்தாலும் நான் என்னுடைய சொந்தப் புருஷனை அல்லாமல் மற்ற அந்நியபுருஷரை இச்சிக்கவேமாட்டேன். இவ்விதத் தீர்மானத்தி லிருக்கும் என்னுடைய கற்பை நீ அழிக்கவிரும்புவது மஹாகொடிய பாதகம். கற்புடைய ஸ்திரீகளைப்பற்றி நீ தெரிந்துகொண்டிருக்க வில்லையோ? பிறர் மனைவியை இச்சிப்பதில் சகலவிதமான நலங்களும் ஒருங்கேபோய்விடும். அரைகாசுக்கு அழிந்த மானம் பின் ஆயிரம்கொடுத்தாலும் வருமா? உனது காமம் தணிய ரமிப்பதற்குத் தக்க ஸ்திரீகளும் எத்தனையோபேர்கள் கிடைக்காம லிருக்கமாட்டார்கள். நீ வீணே இப்படிக்கு இச்சைகொள்வது பெரும்பழியைத்தவிர உனக்கு யாதொரு புகழும் நற்கதியும் கிடைப்பதில்லை. நான் இந்தச்சமயத்தில் இப்படித் தனிமையாகப்பரதவிக்கலானேனே! உனக்கு இரக்கம்இல்லையா? இரக்கமில்லாத ஜென்மம் பாழல்லவா? நீ எனக்கு வேண்டிய சகாயம் இந்தவேளையிற் செய்வதைவிட்டு என்னென்னமோ பேசுகிறது எனக்குச் செவிகளில் நாராசம் விட்டதுபோல் வெகு துயரமா யிருக்கின்றது. என்பேரில் நீதயவுசெய்து என்னைக்காப்பாற்றிப்பெரும் புண்ணியம் கொள்ளவேண்டும். நீவெகுநாளைக்குக்ஷேமமா யிருப்பாய். நீதான் எனக்குத் தகப்பன். எனக்கு மானத்தைக்கொடுத்து இரட்சிக்கவேண்டும் (என்று பணிவாய்க் கேட்டுக்கொண்டனள்).

வாலிபன்:—("பொல்லாத மூர்க்கருக்கெத்தனைதான் புத்திபோதிக்கினு நல்லார்க்குண்டானகுணம் வருமோ" என்றும், "கன்மமே பூரித்தகாயத்தோர் தம்செவியில் தன்மநூல் புக்காலுந் தக்காதே" என்றும் ஏற்பட்ட முதுமொழிகளுக் கிணங்க அவன் அவளுடைய இரக்க

வேண்டுகோளுக் கிணங்காதவனுய், இவளைப் பய முறுத்தி னல்லது வழிக்கு வரமாட்டாளென்று) அடிசீ நாயே! நான் எவ்வளவோ நல்ல குணமாகச் சொல்லி வருகிறேன்! நீ கொஞ்சமாவது மனிதருடைய தாரதம்மி யங்களை எண்ணிப் பாராதவளாய் என்னைத் துரும்பாக அலட்சியஞ்செய்து அவமானப் படுத்துகிறுய்! வெள் ளைக் காக்கையையும் மீன்காலையும் கண்டாலும் ஸ்திரீ களுடைய மனதைத் தேவர்களாலும் காணக்கூடாதே! எமனைக்காட்டிலும் பொல்லாதவர்கள் மாதர்கள் என்றது சரியாகவல்லவா இருக்கிறது! "ஜாதிக் குதிரைக்குச் சமிக்கை சண்டிமாட்டுக்குத் தடியடி" என்றபடிக்கு நீ கெட்டவளாகையால் உனக்குத் தகுந்த மரியாதை தான் இனி நான்கொடுப்பேன்! மயிலே மயிலே இறகு போடென்றுற் போடுமா? கழுதையைப்பிடித்துக் கீழே அமுக்கி மிதித்துக்கொண்டு கதறக்கதறப் பலவந்தமாய் இறகை வெடுக்கெனப் பறித்துக் கொள்ள வல்லவா வேணும்? குரங்கின் குறியை மருந்துக்குக் கேட்டால் அது உன்னதக் கொம்பேறிப் போய் நின்று கோணக் கூத்தாடி வாயைச்சப்பிப் பல்லையிளித்துக் கேலிசெய்யு மல்லவா? இவ்வித நடத்தைகள் உன்னிடத்தில்சரியான படி கண்டேன். நாயை நடுவீட்டுக்குள் அழைத்தது போலும் நான்உன்னை மரியாதையாக விரும்பிக்கொண் டிருக்கிறேன் என்பதனை உணர்ந்தாயில்லை. சுத்தப்புத்தி யில்லாதவளே! என்னைக்காட்டிலும் சகலவிதத்திலும் சிறந்தவனுகிய புருஷோத்தமன் உனக்குளத்தனைகோடி காலம் தவம்செய்தாலும் கிடைக்கப்போவதில்லை. வீண் பயில் பண்ணுகிறுயே? மட்டிசம்மட்டி! இந்தப் பயில் உன்னைக் காப்பாற்றிவிடுமோ? உன்னுடைய சம்மதத் தை நான் கேட்டுக்கொண்டிருந்தது என்பேரிற் பெரும்

பிசகு. இதோ உன்னை என் ஆசைதீரக் கட்டி அணைந்து விடுகிறேன் (என்று அவள் கையைப் பற்றி இழுத்துப் பலவந்தம் செய்யவதானன்).

கௌரி:—(செய்வதொன்றும் அறியாமல் பதறித் தேகாதிங்கமும் நடுக்குற்று வியர்த்து) ஐயோ! ஐயோ! தெய்வமே! இந்தப்படுபாவி என்னைத்துணிவாய்ப்பலாத்காரம்செய்து எனதுகற்பை யழிக்கத் துணிந்தனனே! என்மானம் போய்விட்டதே! நாக்கைப்பிடுங்கிப் பிராணனை மாய்த்துக் கொள்ளவும் தூர்த்தன் விடுகிறானில்லையே! திக்கற்ற எனக்கு இந்தச்சமயத்தில்சகாயம் செய்ய ஒருபுண்ணியவானும் இல்லையே! அனாதைக்கு ஆண்டவன் துணைஉண்டாகாதோ? ஐயையோ! சூரஸம்ஹாரமூர்த்தி! ஏழை பங்காளனே! ஆபத் பாந்தவனே! அநாதரட்சகனே! இந்தத் தூர்த்தன் இப்படி உன் பிள்ளையை வலிமைசெய்ய உனக்குச் சம்மதமோ! உனக்குப் பன்னிரண்டு காதுகளிருந்தும் என் கூப்பாடு கேட்கவில்லையோ! பன்னிரண்டு கண்களிருந்தும் அடியாளாகிய என் துன்பம் தெரியவில்லையோ! உலகமெல்லாம் கரமும் கண்ணும் உனக்கல்லவோ! நீ பராமுகமாயிருந்தாலும் எனது அன்னையர் வள்ளிநாய்ச்சியாரும் தெய்வகுஞ்சரியாரும் எனக்காக உன்னிடத்திற் பரிந்து பேசவில்லையோ! வேகமுள்ள மயிலும் உன்னை என்முன் தூக்கிவர வில்லையோ! தீனர்களைக் காத்து வீணர்களின் வம்பை அடக்கி நாசஞ்செய்யும் உக்கிர வேல் எங்குஒளித்ததோ! ஏ வள்ளிமணாளனே! கிருபா சமுத்திரமே! திரௌபதியின் மானங்காத்த மால்மருகனே! சேவற்கொடிவீரனே! குற்றம் குறை செய்திருந்தவளானாலும் உன்னையேநம்பின அடியாளாகிய எனக்கு இதுசமயத்தி லுன்னுடைய ஒருகதியைத்தவிர வேறே

புகல் இல்லை அப்பா! மன்றாடினேன்! மன்றாடி மைந்தனே! வானவர்க்கு மேலானதேவனே! வானவர்க்குத்தான மளித்தோனே! தானவர்க்குத் தான மழித்தோனே! மெய்ஞ்ஞான போதனே! மெய்யானநாதனே! தண்டையம் பாதனே! சேருமிருமாதனே! நான்உன் அடைக்கலம்! அய்யனே! மெய்யனே! துய்யனே! சரணம்! சரணம்! சரவணபவனே"! உன்னுடைய கியாதிக்குக் குறைவு வாராமற் பாதுகாக்க இன்னமில்லையோ! நான் பதிவிரதை யாயிருந்தால் இதுசமயம் என்னைக் காப்பாற்ற உதையமாகவேண்டும்! (என்று சோர்வினால் மன தொருமித்துப் பிரார்த்தித்து முறையமிட் டழுதாள்).

உடனே பாம்பொன்று வாலிபன்காலில் தீண்டிவிட்டது. பின்சிக்கிரத்திலேயே விஷத்தினுடைய கொடுமை ஏறியகாரணத்தால் உபாதியின் பலம் தனக்கு உண்டானதை அவன் உணர்ந்தான். தெய்வப்பாம்பு ஒன்றையும் கண்ணினாற் கண்டான் "ஆ! ஐயோ! நல்ல பாம்பு என்னைத் திண்டிவிட்டதே! நான்சாகின்றேனே! என்று கதறிக்கொண்டு பொட்டென கீழே விழுந்து அவதிப்பட்டுச் சற்றுநேரத்திற் பிராணனை எமகிங்கரர் கைகளில் ஒப்புக்கொடுத்தனன்.

கௌரி என்பவள் முறையிட்ட சப்தங்கள் ஒன்றும் பக்கத்தில் உள்ளவர்கள் யாருடைய செவிகளிலும் விழவேயில்லை. வாலிபன் தனக்குப்பாம்பு கடித்ததாய்க் கூவியசப்தத்தைக்கேட்டுப்பக்கத்துக்கட்டிடத்திலுள்ள ஊர்க்காவற் காரர்கள் ஓடிவந்து இறந்து கிடப்பவனை மட்டும் கண்டு அவனைத்தங்கள் இருப்பிடத்துக்குக் கொண்டுபோய் மறுநாள் அதைப்பற்றிக் கவனிப்பதாய்ப்

பிரேதத்தைப் பந்தோபஸ்துச் செய்துவைத் திருந்தார்கள். கௌரிஎன்பவள் அங்கு நின்றுகொண் டிருந்தும் காவலர் கண்களுக்கு அவள் தோற்றப்படாதபடிக்குப் பாலவேலர் கிருபை உண்டாயிருந்தது.

கௌரி என்பவள் சம்பவித்த அற்புதத்தை நினைத்து "ஆ! எங்கள்குடிசையிற் குடிகொண்டு எங்களைப் பாதுகாத்து இரட்சிக்க வல்ல ஆறுமுகத் தெய்வமே! இக்கலியிலும் நீ செய்யும் அற்புதத் திரு விளையாடல்களைப் பேதையாகிய நான் என்ன சொல்லப் போகிறேன்! அரி பிரமாதியருக்கும் அறியவொண்ணு மகத்துவ முடைய நீ பஞ்சையாகிய என்னையும் ஒரு பொருளாக எண்ணி இப்படி ஆபத்துச் சமயத்திற் பாந்தவனுக வந்து உயிருக்கும் மேலென்று சொல்லும் விசேஷம் பெற்ற எனது மானத்தைக் காத்தாயே! அப்பனே! தீனதயாபரமூர்த்தி! எனக்கு என்றும் உன்னுடைய துணையன்றி மற்றொருகதி யொன்றுமில்லை அய்யனே! கண்கண்ட மெய்யான தெய்வமே! நான் சரியானபடி உன்னை வழிபட்டு வந்தேனில்லை! அந்த அபராதத்தினை க்ஷமித்தருளல் வேண்டும்! உன்னுடை பெருமைகளை வெகுவாய்க் கேள்விப்பட் டிருந்தேன்! இன்று அநுபவத்திற் கண்டேன்! அற்பப்புத்தியுடைய என்னிடத்திலும் சமயசஞ்சீவியாய் வந்து காப்பாற்றிய உனது கருணையே கருணை! இப்படிப்பட்ட தெய்வமாகிய உன்னை இனிநான் எப்போதும் மறவாமல் நன்றாய்க் கும்பிட்டு வருவேன். ஆனால் நான் கும்பிடுவதில் உனக்கென்ன கூடிவருவதாகும்? எனக்குத்தான் சகல நன்மைகளும் நீ செய்வாய்! கேவலமாகிய நான் இவ்விதக் கருணைக்கும் பாத்திரமாகும்படிக்கான மாதவம் செய்திருந்தேனே! கருணையுள்ள தெய்வமே தெய்வ

மே! எனக்குஉன்னைத் தகுந்தபடிக்குத் துதிக்கும்படிக்கான சொற்கள் தெரியவில்லை. லோகநாயகனே! என்னுடைய புருஷனையும் நீ எனக்குக் காட்டிக் கொடுக்க வேணும்!" என்று இவ்வாறு ஆறாத பரவசத்துடன் நாத் தழுதழுக்க மனங்கசிந்துருகி மெதுவாய்ப் பேசி, இனி நாம் தாமதித்து இங்கே இருக்கலாகாதென்று மனதைத் திடப்படுத்திக்கொண்டு தனியே வழிநடந்து தன்வீட்டைச்சேர்ந்து அங்குபூசைவீட்டில் விளங்கும் குமார சொரூபத்தைக் கண்டு வீழ்ந்து பணிந்து பலவாறு போற்றிப்பின் புருஷனைக்காணக்கூடாத விசனத்தைக் கொண்டவளாய்த் தனிமையில் அமர்ந் தயர்ந்திருந்தனள்.

(7.)

இராக்குமுத்து:—சின்னையா! என்ன செய்து கொண் டிருக்கிறாய்?

சின்னையன்:—ஒன்றுமில்லை. வீராயிக்குத் திவ்யமாய்ப் பாத்திரங்கள்தேய்த்துக் கழுவிக்கொடுத்து விட்டுச் சமயல்வீட்டு வாசற்படியில் அவளுக்குப் பாக்குத் தட்டிக்கொண்டிருக்கிறேன். பக்குவங்கள்வெகுநேர்த்தியாய் நடந்துகொண் டிருக்கின்றன. என்ன? வாசனை என்னைத் தூக்கிக்கொண்டுதான் போகிறது.

இராக்குமுத்து:—சற்று நீ பொறுத்துக் கொண்டிரு. கிணற்றுத் தண்ணீரை வெள்ளங் கொண்டுபோய் விடுமா? நீ வீட்டுக்குவந்த புதுமாப்பிள்ளை யல்லவா? நான் இன்றைக்கு உனக்கு வெகு ஸந்தோஷப்படுத்தி வைக்கிறேன். நீ குரங்கு தின்னும் காயும் கிழங்கும்விதியற்றவன்போலச் சாப்பிட்டிருந்தாயே? இப்போ திருக்கும் சாப்பாடு என்னமுழுக்காய் ஜோர் கொடுக்கிறது

பார்! நீ உன்வீட்டில் இந்தநேரத்திலெல்லாம் சாப்பிட்டிருப்பாயோ?

சின்னையன்:—நான் இராக் காலத்தில் ஒன்பது அல்லது பத்துமணிக்குத்தான் சாப்பிடுகிறது. இப்போது என்னமணி? உன்னுடைய ரூம்பில் இருக்கிற கடிகாரம் மணிஅடிக்கவே காணோமே? ஊமைச் சாமியார்போலல்லவா இருக்கிறது?

இராக்குமுத்து:—அந்தக் கடிகாரம் கெட்டுப்போயிருக்கிறது. அந்தக் கேப்மாறிப்பயல்கள் இருவரும் ஒருஆண்டு மூய்ந்த கிழட்டுச் சவத்தைக் கூட்டிவந்தார்கள். அந்தச்சவம் என்னைப் பார்த்தும் மனம்இறங்கவில்லை. அவர்களிடம் ஏதோ பணத்தை முன்னதாக வாங்கி அப்பிணம் வாய்க்கரிசி போட்டுக்கொண்டது. கடிகாரத்தைக் கிட்டவைத்துக் கோளாறு பார்க்கிறேனென்று மூக்குக்கண்ணாடி மூலமாய் உருளப் பார்த்து ஏதோஒன்றைத் தட்டிவிட்டுவிட்டது. உடனே "கிஸ—புஸ—" பாணம்போல் ஆரம்பித்துவிட்டது. என் வயிற்றுக்குள்தான் சுகவீனம் ஏற்பட்டு அப்படி "கடபுடடஸ் டொப்"நடக்கிறதோவென்று ஸ்ந்தேகமுண்டாகிவிட்டது. பிற்பாடு கிழடு எங்களைஎல்லாம் விழிகண்குருடாகவைத்துக்கொண்டு என்ன மாயமோ தெரியவில்லை. கடிகாரத்தின் சிலசாமான்களைலவடிக்கொண்டு சரிப்படுத்தி விட்டேனென்று ஒரேபோக்காய்ப் போய்விட்டது. பின் கடிகாரம் சரியானதுபோல் சிலமணி நேரங்கள் போய்க்கொண்டிருந்து விசைகெட்ட கிழட்டைப்போலவே ஆகிவிட்டது. நீ எனக்கு ஒருகடிகாரம் வாங்கிக்கொடுவேன்? இங்கே அது இல்லாதகுறைதான் பெரிய சிரமமாயிருக்கிறது. என் கண்ணிறைந்த நீவந்தபின் எல்லாகுறையும் நிவர்த்தியானது போல்தான்.

சின்னையன்:—ஆஹா! உனக்கு வாங்கிக்கொடுக்க என்னதடை? என்னுடைய உடல் பொருள் ஆவி மூன்றும் உன்னுடையதுதானே? நீ பேசாமல்இரு! தன்னைப் போலவே கடிகாரம் திவ்யமானதொன்று கொண்டு வந்து சேர்த்துவிடுகிறேன்.

இராக்குமுத்து:—அதிகஸந்தோஷம். நீ எப்போது வாயினுற் சொல்லிவிட்டாயோ அப்பவே எனக்குக் கடிகாரம் ஒன்றுமட்டும்தானு? இன்னம் எல்லாம் வந்து சேர்ந்ததற்குச் சமானம்தான். இப்படிக் கனகாபிஷேகம் செய்ததுபோல் யார் சொல்லப்போகிறுர்கள்? உன்னுடைய பேச்சொன்று போதுமடா துரையே! நான் சும்மா உன்னை விளையாட்டுக்குக் கேட்டேன். இந்த வீடே உன்வீடுதானே? வித்தியாசம் என்ன? என்று அவன் நாடியைத்தாங்கி முத்தமிட்டாள்.

சின்னையன்:—எனக்கு ஒன்றும் வேண்டாமே! உன்னைப் பார்த்துக்கொண்டே இந்த வீட்டில் நான் இருந்தால் அதுவே கயிலாசம் வைகுண்டம் சத்தியலோகம். என்னிடத்தில் அதிகமான திரவியம் இருந்தாலும் அதை எப்படிவைத்து அனுபவிக்கிறது என்பதெல்லாம் என்க்கு என்ன தெரியும்? என்னிடத்தில் இருப்பதோ சொற்பம். உன்னிடம் உள்ளதைச் சொல்லியுமிருக்கிறேன்! இனிஉன்னுடைய கடாக்ஷத்தினுலே நான் பூவோடு சேர்ந்தநாருய் மணம்பெற வேண்டியது தான். உன்னிடத்தில் தான் அஷ்ட லட்சுமியும் குடிகொண் டிருக்கிறுளே? என்னுடைய அஷ்டமத்துச் சனி உன்முன் எதிர்நிற்குமோ?

இராக்குமுத்து:—நீதான் மகாசாமர்த்தியவானுய் ஆகிவிட்டாயே? உனக்குக் கஷ்டமாவது? கஷ்டம் உன்

பேர் சொல்லவும் குஷ்டரோய் பிடித்துத் தொலைந்து போய்விடுமே? கஷ்டம் என்பது பலம் என்னவிலை யென்று நீ கேட்பாயே?

சின்னையன்:—(உற்சாகமாய் நிமிர்ந்து நெஞ்சில் தட்டிக்கொண்டு) ஷபாஷ்! ஷபாஷ்! பஹதர்! நான் பஹதர் ஆகிவிட்டேனல்லவா?

இராக்குமுத்து:—(புன்னகையுடன்) மறுபடி நீ என்ன? பதராகவா ஆகிவிட்டாய்? அதற்கென்ன சந்தேகம்? அதோபார் மணிகேட்கிறது. ஒன்பது அடிக்கும் சப்தம். நீ சமயல் வீட்டிற்குப்போய் என் தாயாரிடம் கேட்டு அவள்கொடுக்கும் சாதம் கறிவகை முதலானவைகளை எல்லாம் சொக்குவும் நீயுமாகக்கொண்டு வந்து இவ்விடம் சேருங்கள்.

சின்னையன்:—(தலையை இருபுறமும்ஆட்டி உடம்பைச்சாய்த்து எற்றி நடந்து பாட்டொன்று பாடிக்கொண்டு சமயல்வீட்டிற்குப்போய் வீராயியை நோக்கி) அடி அம்மா! இராக்குமுத்து சமயல்கேட்கிருள். நீ கட்டிக் கொடுப்பியாம். நானும் சொக்குப்பயலும் எடுத்துக்கொண்டு வரவாம். ஏண்டி அம்மா! அது என்ன இப்ப ஒருவாசனை நன்ருய் வருகிறதே.

வீராயி:—(கிழவியர் கையால் நடுங்கியபேச்சுடன்) ஓய் அய்யா சாமி! இந்தாரும் இதையெல்லாம் தூக்கிப் போரும். சொக்கு மற்றப் பதார்த்தங்களைக்கொண்டு வருவான்.

சின்னையன்:—அடபலே சொக்கு! இந்தா இங்கே வா! அம்மா இதையெல்லாம் கொடுப்பா நீ தூக்கிக் கொண்டு உள்ளுக் கட்டுக்குச் சீக்கிரமாக வாடா. நான் இதை எல்லாம் முந்திக்கொண்டு போகிறேன் (என்று

தூக்கிவரும்போது) அடி இராக்குமுத்தூஉ! அடியோ! அடியோ! இராக்குமுத்தூஉ! ஆய்! ஆயி! சுடுறதடீ! சீக்கிரமாக இதை இறக்கிவைவாடீ! ஓடிவாடீ!

இராக்குமுத்து:—அடாடா! இந்தக்கோரணிக்கம் உண்டா? என்னஉனக்குத்தன்னை அறியாதபோயாட்டா? இங்கேவா! இப்படிவா! நான் சீக்கிரமாக இறக்கிவிடுகிறேன் (என்று சட்டி அடுக்கை இறக்கிவைத்து) இனிச் சாப்பிடவேண்டியதுதான். இன்னம் மற்றதெல்லாம் வரக்காணோமே.

சின்னையன்:—(கைகளை உதறி) என்னத்தைப் பண்ணுகிறது? அந்தப்பயல் சட்டுனு எடுத்துக்கொண்டு வரானில்லே. விளையாட்டுப் பயலா யிருக்கிறான் (என்று கால்களை உதறிச்சுழற்றி நடந்துபோய்) என்னடா பலே பண்றே! இங்கே கூப்பிடுறாங்கல்லவா? இந்தா வந்தூட்டான் (என்று அவன்கூடவே வந்து) நான் இறக்கி வைக்கிறேன் (என்று அவன்கொண்டுவந்ததை இறக்கி வைத்து) இராக்குமுத்தூ! இந்தப்பையன் நிற்கிறான்; சங்கதியைச் சொல்லிப் போகச் சொல்லுங்கோ (என்றான்).

இராக்குமுத்து:—எல்லாம் நல்லகதிதானே? இனி என்னசங்கதி?

சின்னையன்:—தெரியாதாக்கும்? கொட்டாப்புளிச் சங்கதிதான். அறைக்குள் கொட்டப்புளியாய் வரிசையாக வைத்திருக்கிறதல்லவா! அதென்னபேரு? சாப்பிட்டெல்லாம் முடிந்தபிற்பாடுவேணுமானல் அதைக்குடிக்கலாம்? இப்போதுதான் என்ன அவசரம்?

இராக்குமுத்து:—நீ சாராயப்புட்டிகளுக்குக்கொட்டாப்புளி என்று வெகுபொருத்தமாகப் பேர்வைத்தாய்!

சாப்பாட்டுக்கு முன்னதாகவேதான் அதைக் குடித்து விடவேண்டியது. சாராயப்புட்டியைச் சீக்கிரமெடுத்துக்கொண்டுவா? சின்னையா! இப்போதும் இதனைச் சாப்பிட்டுப்பார். வெகுஜோராகவே இருக்கும்.

சின்னையன்:—(சொக்கு கொண்டுவந்த பாட்டிலை வாங்கித் தனக்கு எதிரேவைத்துக் காரக்கைத்திறந்து) இராக்குமுத்தூ! இதுஎன்ன பெருநாற்றமாய் அடிக்கிறதே? உனக்குநான்முந்தி இந்த கிளாஸில் ஊற்றித் தரட்டுமா!

இராக்குமுத்து:—நாற்றமா அடிக்கிறது? சகல வியாதிகளையும் அல்லவா ஓட்டி அடிக்கிறது? அடாடா? காரியம் கெட்டுப்போயிற்றே? சீசாவை அப்படித்திறந்த படிக்கே வைக்கலாமா? அரைநாழிகை கைகால்களைச் சும்மா வைத்துக்கொண் டிருக்கிறு யில்லையே? என்னிடம் சீசாவைக்கொடுத்துவிடு. நான்கணக்காய் ஊற்றி உனக்குத் தருகிறேன்.

சின்னையன்:-அடி அம்மாடீ! (என்று கையைச்சீசா வாயில்வைத்து அடைத்து) காரக்கு எங்கே! அடை! அடை! இந்தா நீதானே அந்தவேலையைப்பாரு! இதைத் தண்ணீர்போலத் தாகம் அடங்கக் குடிக்கக்கூடாதா· எனக்கு முந்திக் கொடுத்தீயே! அதுக்கு இப்போது கொஞ்சம் கூட்டிக் கொடுக்கவேணும்? அது எனக்கு உடம்புக்கு ரொம்ப நல்லதாயிருக்கிறது.

இராக்குமுத்து:—மடிமேல் வந்து உராசாதே! கொஞ்சம் தள்ளிக்கோ! நான் உனக்குக் கணக்காய்க் கூடவே ஊற்றித்தருகிறேன். அளவுக்கு மிஞ்சினுல் அமிர்தமும் நஞ்சல்லவா? அதிகமாய்ச் சாப்பிட்டால் உன்னுலே தாங்கமுடியுமோ? மயங்கி ஸ்மரணை தப்பிக்

கீழே விழுந்துவிடுவாய் (என்று இரண்டு திராம் ஊற்றிக்கொடுத்தாள்).

சின்னையன்:—(அதைக் கிளாஸோடு வாங்கித் தன் முகத்துக்கு நேரேபிடித்துக் கூர்மையாகப் பார்த்துக் கழுத்தை நீட்டிக்கொண்டபடிக்குக் கண்களை இறுக மூடி இருந்தவிடத்திலிருந்தும் சற்று கிளம்பி ஒருகையால் மூக்கைச் சுவாசம் பறியாமற் பிடித்துக்கொண்டு "படக் படக்" என மண்டியபின் "அஹஹ" என்று செறுமிச் செறுமி முகத்தைச் சுளித்துக் கோணல் செய்து) இராக்குமுத்து! இது முந்திக்கொடுத்ததைக் காட்டிலும் காரசாரமாயிருக்கிறது. இதுவெகுநேர்த்தி தான். ரெம்பப்பேஷாய்ப் போய்விட்டது. இனி நீ ஒரு கை பார்.

இராக்குமுத்து:—(நாலு திராம் குடித்துவிட்டு) அடே! நீ சட்டிகளைஒன்றும்தொடாதே! என்னஉனக்கு அப்படி அவசரம்? நான் எடுத்துவைக்கிறேன். நீ தேவையானமட்டும் சாப்பிடலாம்.

சின்னையன்:—இல்லை! இல்லை! ராக்குமுத்தூஉ! சட்டிமேலே போட்டதுணியில் கரிஒட்டியிருக்கிறதே என்று தொட்டுப்பார்த்தேன் அப்படிவேறே ஒன்றுமில்லை. சமயல் "கமகம என்று" வாசிக்கிறது.

இராக்குமுத்து:-(அய்யனுக்கு மாமிச வர்க்கங்களைச் சோற்றோடு படைப்புப் போட்டுவைத்து)சின்னையா! நீ எனக்குப் பொன்னையா வல்லவா? நன்றாய் உன்னால் முடிந்தமட்டிலும் சாப்பிடு.

சின்னையன்:—கைகூடக் கழுவவில்லை. இருக்கட்டும் இப்போது என்ன பாதகம்? மனம்மட்டும் சுத்தமா யிருக்கவேண்டியதுதானே? ராக்குமுத்தூஉ! இதெ

ன்ன மண்டையும் கண்ணுமாய் என்னை "திரு திரு" என்று பார்க்கிறதே? பயமாக இருக்கிறதே?

இராக்குமுத்து:—அது மீன் மண்டை அப்படி இருக்கிறது. உன் வயிற்றுக்குள்ளே இருக்கும் பிராணிகளை நீ பார்த்தால் இதைக் காட்டிலும் அதிகமாய்ப் பயப்படுவாயே? நீ இதற் கெல்லாமா பயப்படுகிறது? "மனந் தடுமாறேல்" என்ற ஔவையார் வாக்கியப்படி செய்! தயிரியசாலிகள் சண்டையில் துடிக்கத் துடிக்க மனிதர்களைக்கூடத் தலைவேறு கால்வேறு கைவேறாக வெல்லாம் வெட்டி வருவார்களே? அவைகளை யெல்லாம் பார்த்தா வீரர்களா யிருக்கப்பட்ட வர்கள் பயப்படுகிறார்கள்? செத்து அவித்துவிட்ட மீன் தலையைப் பார்த்து நீ பயப்படுகிறாயே? சூரத்தனம் இல்லாதவன் ஒரு புருஷனா? அப்படிப்பட்ட பேடியை ஒருத்தி விரும்புவாளா? சும்மா தயிரியமாய் எல்லாம் எடுத்து நகட்டிவிடு! பூசை கொள்பவன் உனக்குள் வேறே இருக்கிறான். நீ கவலைப்பட வேண்டியதில்லை. இப்படிச் சாப்பாட்டினால் தானே இனி உனக்குப்பலமும் தயிரியமும் அமோகமாய் உண்டாகி மோகத்துக்குத் தக்க புருஷத்துவம் ஏற்படக்கூடியதா யிருக்கிறது? மற்றச் சூத்தைக் கத்திரிக்காய்ப் பார்ப்பானுக்கும் உனக்கும்தான் இனிவித்தியாசம் சிலாக்கியமாய்எப்படி ஏற்படுகிறது? நீஇதெல்லாம் இனி நன்றாய்ச் சாப்பிட்டால் இப்போது நீ இருக்கிற அழகைக் காட்டிலும் நூறுபங்கு அழகுள்ள மன்மதனாகிவிடுவாயே? நானும் உன்னைக் கட்டிக் கரும்பாய்க் கட்டிப் பரவச மடைவேனே?

சின்னையன்:—அப்போதுதான் முதலாவதாக மாமிசம் சாப்பிடத் தொடங்குபவனாய் இருந்தபடியினாலே

இருமனதாய்க் கொஞ்சம் அருவருப்புடன் சாப்பிடத் தொடங்கி, அப்பால் அவளுடைய போதனையையும் தெவிட்டாப் போகத்தையும் நிலையெனநம்பும் பேதைச் சுபாவத்தைக் கொண்டவனுனதாலும் குடிமதத்தாலும் தான்இன்னது செய்கிறோம் என்கிற எண்ணமும் இல்லாமல் வரவர முழுமூச்சாய் வாரிவாரிப் புசிப்பதாகிவிட்டான்).

இராக்குமுத்து:—(அவன் தன்வழிக்குவந்து விட்டான், போடு குட்டிக்கரணம் என்றால் எண்ணிக்கோ சீமாட்டி என்பான், சந்தேகமில்லை என்று நினைத்து அவனை ஸ்தோத்திர வாக்கியங்களால் உற்சாகப்படுத்தி எதேஷ்டமாய் அவன் மனம்போலச் சாப்பிடும்படி செய்துகொண்டு) சின்னையா! நேரமாகிவிட்டது. அந்தக் குடிக்காரப்பயல்கள் இப்போது வந்துவிடுவான்கள். கொஞ்சம் கைவேகம்செய்து சாப்பிடு (என்று இருவரும் பெரும்வெறியோடுஉல்லாச வார்த்தைகளாடி உண்டுகொண்டிருந்தார்கள். சின்னையன் எல்லாவற்றையும் சாப்பிட்டு அறுவாக்குவதால் அவள் தான்சாப்பிடுவதிலிருந்தும் அவனுக்கு உண்ண எடுத்துவைப்பதாகவும் இருந்தாள். சின்னையன் விதரணையான சல்லாபத்துக்கு ஒத்துவரவில்லை என்பதை அவள் உணர்ந்தாள். சீக்கிரம் அதனால் தனக்கு ஆகவேண்டிய காரியத்தை முடித்துக்கொள்ளக் கருதினாள்).

வீராயி:—கிழத்தால் அவயவங்கள் ஆட ஒருலோட்டாவைக் கையில் ஏந்திக்கொண்டு அடி மகளே எ! இந்தா அ! இதிலே கொஞ்சம் வாரு உ!

இராக்குமுத்து:—அடியே! உனக்கு இந்தவயசுகாலத்திலே என்னத்திற்கு? நீ தாங்கமாட்டாமற்செத்துப்

போனால் என்னசெய்கிறது? இந்த எளவு உண்டா பாரெளவு! கிளட்டுமுறிவே! இந்தாடி தொலைஞ்சு போ! (என்று ஒருதிராமை அவள் கொண்டுவந்த லோடாவில் ஊற்றினாள்).

விராயி:—அதை உடனே அடக்கமாக முன்றானையாற் சீக்கிரமாக மூடிக்கொண்டுக் கூனியபடிக்கு நிலை கதவு சுவர்களைத் தட்டித் தடவி ஆதாரமாகக்கொண்டு வழிநடந்து தன் இருப்பிடம்போய்க் குடித்து உண்டு முடங்கி இருந்தாள்.

இராக்குழுத்து:—(வெறிஉற்சாகத்தால்பாடுகிறாள்)

பல்லவி.

ஒருநாள்மருவிய சரசலீலையை நினைந்
துருகுதையோ நெஞ்சமே (ஒரு)

அநுபல்லவி.

மருவார்கடம்பணி முருகனென்றனைச் சேர்ந்த
மகாராசனுடனே மிக ராசியுடன் கூடி (ஒரு)

சரணங்கள்.

மலரணையி லடுத்து மகிழ்ந்துகவி படித்து
இலகுஞ் சுருள்மடித்து இதமாகவே கொடுத்துக்
கலவைக ளணிந்து கடிமலர் புனைந்து
முலைமிசை யழுந்த முகமது பொருந்த
முத்தமிட்டு நகம் வைத்தழுத்தியசு
கத்தின்மெய்ப் பரவ சத்துடனே யதி
மோகமதாய் மத னாகம லீலைய
நேகவிதங்கள் வை போகம தாகவே(ஒரு)

கோதிக்குழல் வகிர்ந்து கொஞ்சிக் கொஞ்சிமொழிந்து
சோதித்துயில் களைந்து தொடையிற் றொடைபிணைந்து

வாதுகள் திருத்தி மதகரி காத்தி
லேதமி வருத்தி யிதமொடு பொருத்தி
எக்கு நிதம்பமி டுக்கி மகிழ்ந்தவன்
புட்குரல் கூவிமு ழுக்கி யெழுந்திடு
போதடடா வெகு வாகநீ போகம்வி
டாதடடா கொட டாசம போகமென்(ஒரு)
கொங்கைகள் தாளம்போடக்குழல்வண் டிசைகள்பாடக்
கங்கணங்கணின் றூடக் கந்தனென்றுங் கொண்டாடச்
சங்கொலி முழங்க வங்கண மிலங்க
மின்கொடி துலங்க அங்கச தலங்கள்
மிஞ்சி வளம்பெறு செஞ் சொலுறுங்கவி
குஞ்சர மின்சொலி னுஞ் சுகமாகவே
குமு குமென்றுவரு சுமுக வாரிநிறை
குமிழி கொண்டுமல ரமளிகள் பெருகவே(ஒரு)
(என்று திவ்யமாய்ப் பாடினாள்).

சின்னையன்:—இவனுக்கு ஸங்கீத ஞானம் பூச்சியமே யெனினும் அவள்பாடியபதத்தின் வெள்ளைச்சொற்களாலும் நயமுறச்சொற்களைப் பிரித்துப் பாவத்துடனும்சொன்னமையாலும் தனது நோக்கத்துக்குப் பொருத்தமா யிருந்ததாலும் அவன் ஸந்தோஷத்திற்செய்த அபினயங்களையும் பேசிய வார்த்தைகளையும் தெரிவித்து முடிவதன்று. அவள்சுகமாய் ஒவ்வொருசரணத்தையும் பாடும்படி விடாமல் பொறுமையற்று ஊடே ஊடே பெரியஆர்ப்பாடங்கள் தொடங்கிவிட்டான். இதனால் அவள் மனதிற்குள் பெரிய வெறுப்படைந் திருந்தாள். சிவபூசைவேளையிற் கரடியைவிட் டோட்டினால் என்னமாயிருக்கும்? இடையன் ஸங்கீதம்கேட்ட கதையும் இங்குபொருத்தமே. அவன் அதிக லாகிரி உற்சா

கத்தில் (அவள் முகத்துக்குநேரே கையை நீட்டிநீட்டி) "அடிகட்டிக்கரும்பே கட்டாணி ஆணிமுத்தே, ஒட்டி உறவாடி ஒத்திருப்பதெக்காலம், நானுனே சிணுங்கிதில்லாலே லேலோநானுனே" "அடி உருண்டை மூளிகாரீ ஒலகம்அளிஞ்சாலும் - ஒருக்காலும் உன்னுறவே உண்மையோ நாமறவே நானுனே..............................."

இராக்குமுத்து:—இவளுக்கு அந்தப் பாட்டுகள் அருவருப்பா யிருந்தது. "இழுக்குடைய பாட்டிற்கிசை நன்று" அன்றோ?' "கழுதைக் குபதேசங் காதிலுரைத்தாலும் அவயக்குரலன்றி அங்கொன்று மில்லை" என்றபடியேஇருந்தது. அடேநீஊமைபோவிருந்தாயே?சிறிது மழைவிழுந்துவிட்டால் வாய்திறவாதிருந்த தவளைகள் வாய்திறந்துபாட ஆரம்பித்துவிடும். அதுபோல உனக்குச் சிறிது காரத்தீர்த்தம் வாயில்விழுந்தவுடன் சரஸ்வதி கடாட்சம் அபாரமாய்உண்டாகிவிட்டது. நேர்த்தியாய்ப்பாடுகிறுயே? இதெல்லாம் நீ எங்கேகற்றுக்கொண்டாயோ? ஷபாஷ்! இன்னம் எவ்வளவு சாமர்த்தியங்களெல்லாம் உன்குடுக்கைக்குள் அடக்கிவைத் திருக்கின்றுயோ? சரக்கு அதிகமாகத்தான் ஏறியிருக்கிறது. சாராயம் பூராய பாராயணமன்றோ?

சின்னையன்:—இனம் எத்தனை விதம்விதமான பாட்டுகள் அடி உனக்குநான் பாடவேணும். நீமட்டும் கேட்டால் அதுஎனக்குப்போதும். அடிகண்ணே! என் முத்தே! பவளமே! (என்று அவள் கன்னங்களை இருகையாலும் தடவி உருவித் தன்பொட்டில் விரல்நெரித்துத் திருஷ்டிகழித்துப் பின் கை நீட்டி நீட்டி அவளை நெருங்கி நெருங்கி மேலும் பாடுவதானுன்).

இராக்குமுத்து:—அடே! என்மேலே எச்சிற்கை யை நீட்டாதே! பாடியதுபோதும். பாடையிலே உன்னை இவ்வளவு நேரம் அழகாகப் பார்த்தேனே? நீதான்ரெம் பக் கெட்டிக்காரன். சட்டிப்பவ்வீ கவ்வி விழுங்குவாய் என்று சொல்லுகிறேனே? இனிச் சும்மா சத்தம்போ டாமலிருந்து சீக்கிரமாகச் சாப்பிட்டுமுடி! அந்தக் குடிக்காரப் பயல்கள் வருகிறநேரமாகிறது.

சின்னையன்:—அவள்சொல்லைச் சிறிதும் லெட்சி யம் செய்யாமல் பேத்தனமாகத் திரும்பவும் "அடிஉந் தனைப்பாத்துவிட்டேஉ உருகுதேஎம்மனசூஉ-பந்துமுலை யாளேபடுக்கைக்கு நீவாடியோஎ" என்று ஒன்றின் மேல் ஒன்றாய்த் தன்னைமறந்து பலபல ஆபாசப் பாடல் களை வரவரப் பெரியகூச்சற்குலையும் வேறேகிளப்பிப் பாடிக் கொண்டேஇருந்தான்.

இராக்குமுத்து:—பாடாதே! பாடாதே! என்று என்ன விதங்களெல்லாம் சொல்லச்சொல்ல அவைக ளெல்லாம் எரியுந்தீயில் நெய்வார்த்ததுபோல விருத்தி யாகி விருத்தமாகிவிட்டது. ஓயாத பெரு மழைபோ லாய்விட்டது. அவன்கேட்டபடே இல்லை



(8)

பெத்தப்பெருமாள்:—(இருட்டுநேரத்தில் பேட்டை யில் தனிமையாயிருந்து இவவாறுயோசிக்கிறான்) ஆஹா ஆட்பாஞ்சான் கள்ளாடு தூக்கப்போய் வெகுநேர மா யிற்றே! முத்தண்ணு சாராயப்புட்டியும் வாங்கிச் சீக்கி ரம் வருவதாகப்போனவன் இந்நேரமாகியும் வந்து சேர்ந்ததா யில்லையே! கொண்டாட்டமா யிருக்கவேண் டிய நேரமெல்லாம் திண்டாட்டமாய்ப் போகிறதே;

இந்த நேரத்தில் நமக்குப் பெருமூச்சாய்ப் பறிந்தும் அதில் சாராயமணத்தினுடைய ஆனந்தம் பூராயில்லாம லிருக்கிறதே! ஆடு தூக்கப் போனவனையே யாரும் தூக்கிப் போய்ச் சாடி அடைத்துவிட்டார்களோ! முத்தண்ணுவும் எங்கும் அகப்பட்டுக் கத்தண்ணுவாய்த் தவிக்கிறுனே! கள்ளன் தலை யென்றும் இரவல்தலைதானே! நமதுகதி கோவணத்தையவிழ்த்து மேல்வேட்டி போட்டுக் கொண்டவனைப்போலவே ஆகிவிட்டது! பணமில்லாதவன் பிணம்! வெள்ளையப்பன் உருண்டோடிவந்து நம்மை அப்பிக்கொண்டிருந்த காலமெல்லாம்போய் இப்போது சள்ளையப்பன் கொள்ளையாய் வந்தடைந்து இக் கோலமாக்கி வைத்துவிட்டான்! என்னசெய்கிறது! இராக்குமுத்து வீட்டுக்குப் போகவேண்டிய நேரமாகிறதே.

ஆட்பாஞ்சான்:—(அந்த நேரத்தில் கொடும்புலி போல் ஒரு கொழுத்த ஆட்டைப் "பறபற" வென்று இழுத்துக்கொண்டு பேட்டை வாசலில் நுழைந்து "அய்யா! அய்யா!" (எனக்கூவினன்).

பெத்தப்பெருமாள்:—(உற்றுப்பார்த்து) அது ஆர்டா. ஆட்பாஞ்சாணு? வந்துவிட்டாயா? பலே கெட்டி அநுகூலம்போலத்தான் இருக்கிறது. நீநினைத்தா லெந்தக் காரியந்தான் முடியாது?

ஆட்பாஞ்சான்:—அய்யா! நான் இந்த ஆட்டைக் கொண்டு வரப்பட்டபாடு என்னத்தைச் சொல்லுவேன்! நான் தாய்வயிற்றிலிருந்து இப்போது பிறந்தவிதமாய் ஆகிவிட்டது. தங்களுக்குத்தான் எனக்கு ஒருவேட்டி எடுத்துக் கொடுக்கத் தயவுவரவில்லை. கட்டிய பெண்டாட்டியாய்த் தாங்கள் காலாலேவிய வேலைகளை யெல்லாம் எவ்வளவோ தலையாலேசெய்து வருகிறேன். நீங்

கள்! கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும் உங்கள் கொடுக்கை விடுவதில்லை. ஆதிகாலத்துப் பாந்தம் ஒன்று கிடந்து என்னில் வாதிக்கிறது.

பெத்தப்பெருமாள்:—என்ன செய்கிறது? எனக்குச் சருகரிக்க நேரமிருக்கிறதேயொழியக் குளிர்காய நேரமில்லை. மறுபடி நெஞ்சையொழித்தொரு வஞ்சகம் உனக்கு நான்செய்யவில்லை. உனக்கு இனிச் சீக்கிரம் மனம் குளிரும்படிசெய்து மறுகாரியம் பார்க்கிறேன். வேட்டைகள் எனக்கு எதேஷ்டம். அவைகளுக் கெல்லாம் கண்ணிவைத்துத்தான் குறிபார்த்த வண்ணமிருக்கிறேன். நீ கவலைக்கிடம் வைத்துக்கொள்ளத் தேவையில்லை. நீயும் எங்களோடு வாடிக்கைபோல் இப்போது வெறிக்கக் குடித்து உண்டு கருப்பண்ண சாமியாய்க் களிக்கலாமல்லவா? சீக்கிரம் ஆட்டை உரித்துக் கறிப்பக்குவம் அவசரமாய்த் தயாரித்து நீ கொடுத்து விடவேணும். மற்றக் காரியங்களுக்கெல்லாம் இனி எங்களுக்கு அதிகநேரம் செல்லக் கூடிய தாகிவிடும். ஜரூர் ஜரூர் செய்யடா!

ஆட்பாஞ்சான்:—ஆஹா! எஜமான்கள் உத்தரவுப்படிக்கே நிமிஷம் தயார்செய்து அமக்களப் படுத்திவிடுகிறேன். அய்யருச்சாமி போனவங்க இன்னம் வரலேயோ?

பெத்தப்பெருமாள்:—அந்த அய்யனும் லேவிட்டவனு என்ன? யார்தர்லீயை அறுத்தாவது பார்! இப்பச் சற்றுநேரத்தில் குத்திசகிதமேவந்துகுதித்துவிடுவான். நீ அதற்குள் கொஞ்சம்பக்குவம் ஜாக்கிரதை பண்ணு! நேரமாகிறது.

ஆட்பாஞ்சான்:—நான் பொழுது விழுந்ததானே மந்தையில் ஆடுதூக்கவேண்டியதா யிருக்கிறது? வெள்

ளாட்டுக்கிடையிற் புகுந்தால் அது கள்ளாடு. சிறு அசைவு கண்டாலும் பெருவாய்கொண்டு அலறிவிடும். கத்தி என்னையே கத்திக்கிரையாக்கிவிடும் என்றாலும் உங்கள் அடியான் தந்திர வுபாயத்தால் அதின் சங்கை ஒதுக்கி விட்டுச் சங்கையில்லாமற் பக்குவத்துக்குப்பக்குவமாய்த் தூக்கி வந்து விடுவான். ஆனால் அந்த ஆட்டுக்கறி உங்கள் கொண்டாட்டுக்குச் சிலாக்கியமா யிருக்கமாட்டா தல்லவா? அதினால்தான் செம்மறியாட்டுக் கிடையாச் செம்மையாய்ப்பார்த்து நுழையவேண்டியதாயிருந்தது. ஆட்டுக்காரன் என்மேல் கண்நாட்டிவிடுவானே? அவன் கண்ணுக்குப் பூட்டுப்போட்டு செய்வதென்றால் லேஸா? இந்த ஆடு நெய்மயமான ஆடு; இப்படியே பச்சையாய்க் கொய்தும் புசிப்பது இன்பமாயிருக்கும். நேரமானதாய் நினைக்கவேண்டாம். வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் அரை வேக்காடாய் அரை நிமிஷத்தில் கறிதருகிறேன்.

பெத்தப்பெருமாள்:—(காரிருளில் மயானத்துப் பிசாசைப்போல் அலங்கோலமாய் எட்டவரும் உருவத்தைப் பார்த்து) அதார்! முத்தண்ணுவா? முத்தண்ணு!

முத்தண்ணு:—ஓஹோய்! வந்தேன்! வந்தேன்? நான்தான்! இதோ வந்துஉட்டேன்!

பெத்தப்பெருமாள்:—என்னகாணூஊம்! காயா? பழமா?

முத்தண்ணு:—(கிட்டவந்து) என்ன? நான் பிரவேசித்தகாரியத்தில் என்றைக்காவது அனுகூலம்பெறுமல் வந்ததுண்டோ? மறுபடி இன்றைக்கென்ன உமக்குச் சந்தேகம்? நான்பிராமணச்சாமி பெரியஆசாமியல்லவா? ஆத்திரம் தீர்த்துக் கொள்ளும் காத்திர

முடைய கிண்டாப்பிள்ளை யல்லவா? பருமனுடையவர்களுக்கு எப்போதும் புத்தி உலக்கைக்கொழுந்து. எனக்கோ புத்தி தூண்டா விளக்குக்கொழுந்து. என்மார்பிற் கிடக்கிறது பூணூலென்று நினைத்தீரா? மாட்டு வடமென்று நினைத்தீரா?

பெத்தப்பெருமாள்:–(உற்சாகம்கொண்டு) ஷபாஷ்ரா பாதர்! ஆணும் பெண்ணுமாக ஜோடிப் பாட்டில் கொண்டுவந்து விட்டாயா? அதற்குள் சாமியேறிவிட்டதே? நமது ஆட்பாஞ்சானும் கொழுப்பாடு கொண்டு வந்து இதோ ஜரூராய் வேலை நடக்கிறது. இன்றைக்கு வெகுஷோக் ஷோக் (என்று கொண்டாடியிருந்தான்).

முத்தண்ணு:—(பெத்தப்பெருமாள்பேரில் குஷாலாய்த் தன்கையைப்போட்டு ஒய்யாரமாய் அவனைத் தட்டிக்கொடுத்து) நான் ஆணும் பெண்ணுமாய் இரண்டுபாட்டில் கொண்டுவந்ததாகச் சொன்னாயே?இதோ மாமன் மாமி சகலபந்துக்களையும் கொண்டுவந் திருக்கிறேன் என்று தன்கையிலுள்ள அரைகுறைப் பாட்டிலன்றிக் கம்புக் கூட்டிலிருந்தும் இரண்டு பாட்டில்களை எடுத்துவைத்தான்). நமக்கு எப்போதும் ஒரு குறைவு இருந்ததில்லை; நம்மைப்போல இந்த உலகத்தில் சுகித் திருக்கப்பட்டவர்கள் யார்? யார் கெட்டாலென்ன யார் வாழ்ந்தாலென்ன? நல்லது நான்போய் ஆட்பாஞ்சானுக்கு உதவியாயிருந்து சீக்கிரம்வேலையை முடிக்கிறேன். பக்குவங்கள் சரியாய் முடியவேணும். நான் புட்டியிற் கொஞ்சம் உஷார்பண்ணிக்கொள்ளுகிறேன்.

பெத்தப்பெருமாள்:—சரியப்பா லகாய்! சாமியை எப்போதும் மலைமேல் ஏறிக்கொண்டே யிருக்கிறாய். பாக்கியசாலி!

முத்தண்ணு:—(குடித்துவிட்டு ஒருபெரும் கனைப்புக் கனைத்து) டீ! மொத்தப் பெருமாளே! "பெருமாளும் நல்லபெருமாள் அவர்தந் திருநாளும் நல்லதிருநாள்". ஆகையினலே நீரும் திருநாளுக்குச் சிறிது ஆசமனம் தொடங்கிக்கொள்ளும்.

பெத்தப்பெருமாள்:—(குடித்துவிட்டு) இந்தச் சாராயப் பாட்டில்கள் செய்த டண்ணியம் யாரும் செய்ததில்லே. எப்போதும் அவைகள் தம்மிடத்திற் சாராயத்தைக் கொண்டபடிக்கே இருக்கின்றனவே? நமக்கு அப்படி எப்போதும் கிடைக்கிறதா?

முத்தண்ணு:—நன்ருய்ச் சொன்னய்! முத்தண்ணுவென்ருல் மூன்றுலகத்துள்ள பொருள்களும் மயங்கிக் கிறுகிறுத்துவந்து விழவேண்டாமோ? சமுத்திரத்தையே சாராயமாகச்செய்துவிட மன்னன் நினைத்துவிட்டால் மட்டும் போதாதா? பெய்யும் மழையும்கூடச் சாராயமாய்ப் பொழியும்படி செய்துவிடுவேனே? முத்தண்ணு! முத்தண்ணு! என்றும் என்னுடைய நாமத்தைச் சொல்லி எத்தனையோ பேர்கள் ஜெபம் செய்தல்லவோ வருகிருர்கள்.

பெத்தப்பெருமாள்:—ஆஹா! ஹா! ஹா! அதிலொரு ஆச்சரியமா! பல் ரெடிப்ரதர்! இந்தச்சாக்கு முதல்தரமா யிருக்கிறது.

முத்தண்ணு:—அச்சு! பலே! அப்படிச்சொல்லடா! நான் முதல்தர மனிதஞ யிருக்கும்போது எனக்கு எல்லாம் முதல்தரமாத்தான் கிடைக்கும். அலோ! மைடியர் ருக்குமுத்து உ!

பெத்தப்பெருமாள்:—ருக்குமுத்து இந்நேரம்என்ன செய்துகொண் டிருக்கிருளோ? ஒருநோஞ்சற் பாமரப்

பார்ப்பாரப்பயலை இப்போது சேர்த்துவைத்துக்கொண் டிருக்கிறளே?

முத்தண்ணு:—வேசைக்குக் காசுமேலாசை, அந் தப் பயல் கையாலாகாத வெங்கம் பயலென்று சீக்கிரம் அவள் கண்டுபிடித்து விரட்டிவிடுவாள். நாம் கற்பக விருட்சமா யிருப்பதால் அவளுக்கு வேறொருவரிடம் பிரியம் கொடுக்கமாட்டாது. மேலும் அந்தப்பயல் என் னுடைய அறை ஒன்றுக்குங் காணமாட்டான். நீ அதைப் பற்றிக் கவலை கொள்ளவேண்டாம். நான் இந்தப் பாட் டில்களை வாங்குவதற்கு என்ன செய்தேன் தெரியுமா?

பெத்தப்பெருமாள்:—என்னசெய்தாய்? சொல்லு சொல்லு!

முத்தண்ணு:—என்னிடத்தில்ஒருபைசாவும்கிடை யாது. என் பெண்ஜாதி கழுத்திலும் காதிலும் ஒன்றும் கிடையாது. அவள்கூடப்பிறந்தவள் ஊரிலிருந்து என் வீட்டுக்கு வந்திருந்தாள். அவள் புல்லாக்கு வாங்க வேணுமென்ருள். அதற்கு அச்சாரம் ரூபாய் இரண்டு கேட்கிறர்கள் நாளைக் காலையில் நகைவருமென்று சார மாய் ஆசாரத்துடன் டால் அடித்து அவளை எய்த்து வாங்கிவிட்டேன். பின் இந்தரூபாய் எந்த மூலையென்று வீதிமார்க்கமாய் அவசரமாய்ச் சுற்றி வரும்போதுஒரு வீட்டில் புதிதாய்வந்து ஜாகை செய்திருக்கும் தென் தேசத்துப் பெரியமனிதன் ஒருவன் தன்கைப் பெட்டி யைப் பக்கத்தில்வைத்துக்கொண்டுரூபாய்களையெடுத்து வேண்டுங் காரியங்களுக்குக் கொடுத்துக்கொண் டிருந் தான். நான்முந்தியே அவனிடம் துப்புப்பார்க்க ரகசிய மாய் உபாயப் போக்குவாத்து உண்டு. அந்தவாடிக்கை யின்பேரில் நான் அவனுடைய சமயத்தைக் கவனித்

துப் பெரிய அந்தஸ்துடன் டம்பமாய் அவனிடம்போய் இரண்டுவாய் ஜாலங்கள் பேசிப்பின் ஸார்! தாங்கள் கை மாற்ருக அஞ்சுரூபாய்தாத் தயவுசெய்யவேணும் நான் இதோஎனது கடைக்குப்போனதும் தங்களுக்குக் கொடுத் தனுப்பி விடுகிறே னென்றேன். ஏமாளிப் பயல் பெரிய நாணயக்காரனுக என் ஐம்பத்தைப் பார்த்து மதித்து உதாரத்துவமாய் அப்படியேஎனக்குக்கொடுத் தான். அகப்பட்டது பொறுத்த வேட்டை என்று அதைப் பற்றிக்கொண்டு கள்ளப்பிராந்தாய்ப் பறந்து எடுத்தேனையா ஓட்டம். சாராயக்கடையிலும் லவட்டி விடலாமென்று ஆராய்ந்துபார்த்தேன். பொட்டிமகன் அங்கே கெட்டியாய் உட்கார்ந்திருந்தான். என்ருலும் என்கை வரிசைகாட்டநேரம்பிடிக்குமென்று உண்டான ஜாடிகளை நிறைத்துக்கொண்டு குதித்தோடி வந்துவிட்டேன். அந்தக்கடையிலுள்ள சரக்கையெல்லாம் குடைந்து வடித்துவிடுவேன். நமக்கு அந்த யோகம் இனிவைபோகமாய் வாய்க்கும் சமயம் வருகிறது. இதோ கூடப் பிறந்தவர்களைப்போல் பாட்டில் வரிசைகளைப் பார்! இன்னம் நமக்கு ஆனந்தபானம் வேண்டுமாலும் இதோ பார் மீதம் ரூபாயு மிருக்கிறது. பிள்ளையவாள்! எப்படியிருக்கிறது என்னுடைய சாராய மாராயம்? என் வேலைப்பெருமை அருமைதெரிந்த உனக்கே வெளிச்சம்.

பெத்தப்பெருமாள்:—ஷபாஷ்! ஷபாஷ்! ஷபாஷ்! என்ன சாமர்த்தியம்! என்னயுக்தி புத்தி! இன்னம் சொற்பநாளையில் இந்த உலக முழுமையும் அற்பமாய் ஜெயித்து அதின் சூத்திரக் கயிற்றைப்பிடித்து ஆட்டி அரசாளப் போகிருய் பார் நான் சொன்னேன் ஜோஸி

யம், உனக்குச் சமானம் நீயேதான். மறுபடி இந்தக் கெட்டிக்காரத்தனம் வேறேயாருக்குவரும்? எமனையும் ஏய்த்துவிட்டு நாம் உயிரோடிருந்துவிடலா மல்லவா முத்தண்ணு! நான்சொலுகிறேன் கேளு! நம்மதிட்டம் வேறேயாரும் இருக்கமாட்டார்கள். உண்டா இல்லையா?

முத்தண்ணு:—(அடங்காத லகிரி ஆனந்தத்தில் ஏஹே ஹே ஹே! (எனச்சிரித்து) அதிலொரு ஆட்சேபனையா? மன்னன் நான் முத்தண்ணு (என்று தொடை தட்டி மீசைமேற் கைபோட்டு) நான் க்ஷத்திரியசிம்ம மல்லவா? இருக்கட்டும். இந்தப் பெருமைகளைப் பேச எத்தனையுகமும் காணுது. நான் பக்குவத்தை ஆட்பாஞ்சானுட னிருந்து தக்கபடி ரெடி செய்கிறேன். நமது சுந்தர ஒய்யாரியிடம் போகவேண்டிய டயம் ஆகிறது (என்று சென்று ஆட்பாஞ்சான் தனக்கென ஒரு சட்டியிற் பிடித்துவைத்திருந்த பச்சை இரத்தத்தைக் கண்டு அதில் உப்பைப்போட்டுக்கொண்டு ஒரேஇழுப்பில் மண்டிவிட்டுப் பெரும் ஏப்பம்போட்டான்).

பெத்தப்பெருமாள்:—(வேகும்சட்டி ஓரம் குந்திக் கறிபதார்த்தங்களை வெந்தும் வேகாமலும் எடுத்து ஆற்றி ஆற்றி வாயிற்போடுமுன் அவன் வயிற்றுள்முன் போயிருந்தசாமி அவைகளை இழுத்துக் கொள்வதாயிருந்தது).

மாமிசப் பக்குவங்கள் செய்துமுடிந்தபின் ஆட்பாஞ்சானுடன் இருவரும் குடித்து மாமிசத்தை அருந்தித் தங்கள் ஆசை நாயகிக்கும் போதுமான மட்டும் காணிக்கை எடுத்துக்கொண்டதுபோக மீதத்தை ஆட்பாஞ்சானுக்குக் கொடுத்துச் சுமார் இரவு பத்துமணி நேரத்தில் துர்ப்பிடைகளைப்போல் புறப்பட்டு வருவதானார்கள்.

(9)

பெத்தப்பெருமாள்:—அடே முத்தண்ணு! இது என்ன? வழி ஒன்ருயிருக்க நீ ஒன்பதுவழி பாய்கிருய்?

முத்தண்ணு:—எனக்கு நினைத்ததெல்லாம் வழிதான். என்கால்படாத இடம் பூமண்டலத்திலுண்டோ? எல்லா உலகத்தினுடைய வழிகளெல்லாம் இப்போது எனக்கு வெட்டவெளிச்சமாய்த் தெரிகிறதே?

பெத்தப்பெருமாள்:—நீ தள்ளாடிமல்லாடிஇராக்குமுத்துவினுடைய கறிச்சட்டியைக் கீழே போட்டுவிடுவாய் என்று எனக்கு நன்ருய்த் தெரிகிறது.

முத்தண்ணு:—அவள் சட்டியைப்போட நானென்ன மட்டிப்பயலா? அட்டி இல்லை இதோ நீ அதைக் கெட்டியாய்க் கொண்டுவரலாம் (எனக்கொடுத்தான்).

பெத்தப்பெருமாள்:—(சட்டியைவாங்கி அவனைச் சரியான பாதையில்நடத்தி) இந்த இருள்நமது எந்தப் பொருளையும் சொந்தமாக்கிக்கொள்ள வெகு உதவியாயிருக்கிறது.

முத்தண்ணு:—நாம் இப்போது தேடிக்கொள்ள வேண்டிய பொருள் நம்முடைய ஆசைக் கண்ணுட்டியாகிய ராக்குமுத்து என்பவளுடைய திருவடி அருள் ஒன்றேதான்.

பெத்தப்பெருமாள்:—அவள் வீட்டுக்கும் இதோ சமீபத்தில்தான் வந்துவிட்டோம். இதோபாதை இப்படிவா! தேவி அருள் உனக்கு அமோகமாய் வந்து தாவிஏறிவிட்டதே?

முத்தண்ணு:—தேவி தேவிஎன்று என்ஆவி எல்லாம் அந்தச்சண்டாளி ருக்குமுத்துமேலேதான்.

பெத்தப்பெருமாள்:—அவளுடைய தேகம் வச்சிர தேகம்தான். என்னவேளையில் அவளைப்பிண்டம் பிடித்துப் போட்டானோ? இவ்வளவுகாலமாகியும் அவள் கோலம் சற்றும் சரியவில்லையே? இவள் காந்தியைப் பார்த்துவிட்டால் மற்றதெல்லாம் வாந்தி. பணமுள்ளவன் பிணமாக இருந்தாலும் அவளுக்கு அவனிடத்திலேயேபிராந்தி. "இட்டதெல்லாம் கொள்ளும் பட்டிமகன் கப்பரை" என்றபடி அவளுக்கு நாம் பாடுபட்டுத்தேடித் தேடிக் கனகாபிஷேகம் கோடிகோடியாகப் பண்ணியும் அவள் வாடிவாடிப் போனதுபோற் பாசாங்குசெய்து நம்மைத் தோலிருக்கச் சுளைவிழுங்கிவிடுகிறாள்; நம்மை விளக்குமாற்றினாலும் விளக்கிவிட்டாளே? அந்த வெட்கக்கேட்டை வெளிக்குச்சொல்லலாகாது. நாம் அவளை நாடிநாடி அவளுடைய நாடியைத் தாங்கிக் கூட வகை பார்த்துத் திரிந்தும் இப்போது சிலகாலமாய் "முக தெரிசனம் பாதிமைதுனம்" என்றதாத்தில் நம்மை வைத்துவிட்டாள். தக்க பணக்காரப் பயல்கள் அவளுளுடைய சுகநயத்தைக் கொள்ளைகொண்டு போவதாய்க் கேள்வியானேன். நீ கள்ளமில்லா உள்ள முடையவன். நான் மெள்ள உள்ளதை உசாவிவிட்டேன். அந்த நீலி அரைப் பணத்தைக்கொண்டு இப்போது வெகு பணம் திரட்டி விட்டாள். காசுப்பிசாசு பிடித்தல்லவோ அவள் நமதுநேசத்தைச் சின்னபின்னப்படுத்துகிறாள்? மமதையும் மோடியும் அவள் வேல்விழியை குருடாக்கி விட்டது.

முத்தண்ணா:—அடேபிள்ளாய்! எனக்குச் சகலமும் தெரிந்தேதா னிருக்கிறது. விளக்கைக் கிட்டிய விட்டிலைப் போல் நாம் கருகியேபோகின்றோம். தெரிந்

தே தான் படுகுழியில் விழவேண்டியதா யிருக்கிறது. அவளுடைய மந்திர தந்திர மயக்கத்தை நினைக்கப் பேராச்சரியமாகவே இருக்கிறது. எப்படியும் போகட்டும் அவள் ஒருநிமிஷம்தரும் கலவி இன்பத்துக்கு ஈடொன்றிருப்பதாய் நான்நினைக்கவில்லை. நாம்இந்தமகா லெட்சுமியை விட்டு இனி எந்தச் சொறிபற்றிய கழுதையைக் கட்டி அழுகிறது? மத்தகத்திற்போட்ட கையைப் புட்டத்திற் போடலாமா? அவள் நமது பக்கம் இனிப்பக்கமாய் (பக்ஷமாய்) அக்கம் (கண்) வைக்கும் உபாயத்தை நான் தேடிவிடுகிறேன்.

பெத்தப்பெருமாள்:—அடே முத்தண்ணு! கேட்டாயா? ருக்குமுத்து வீட்டில் ஏதோ பாட்டுக்கச்சேரி நடக்கிறாப்போ லிருக்கிறதே?

இருவரும் கையிற்கொண்டுவரும் சட்டிமாமிசத்திற் கைபோட்டுச் சிறிது சிறிதாக எடுத்துப் புசித்துக்கொண்டு ஊடே ஊடே சிறிது சிறிது டிராமை வாயில் விட்டுக்கொண்டு சாப்பிடும்போது வாயில் தட்டுப்படும் எலும்பு சவ்வுகளை வரும் மார்க்கம் நெடுகிலும் துப்பிக்கொண்டு வந்தபடியால் ஒருநாய் துப்பப்படு மவைகளைத் தின்றுகொண்டு அவர்களைப் பின்பற்றி வருவதானது.

முத்தண்ணு:-பாட்டாவது கீட்டாவது? நாம் இல்லாமல் அவளுக்கு அஃதெல்லாம்போட்டு வச்சா கிடக்கிறது?

பெத்தப்பெருமாள்:—பாட்டுத்தான்காணும் கேட்கிறது. எல்லாம் இப்பச் சற்று நேரத்தில் தெரிகிறது! நீ கொஞ்சம் வேகமாய் நடந்துவா? எல்லாம் அங்கே போய்ச் சவகாசமாய்ச் சாப்பிட்டுக்கொள்ளலாம். கையிலுள்ளதைக் காக்கைகொண்டு போகிறதென்ன?

இருவரும் ஏறியவெறியில் தள்ளாடி வேகமாய்க் காலெடுத்து வைத்துவந்த அவகோலங்களைச் சொல்லி முடியாது.

முத்தண்ணு:—(துள்ளித்துள்ளி நடந்துகொண்டு) நான்ஏதோ சாப்பிடுகிறதாகச் சொல்லுகிறாய்! எனக்குள்ளே ஏறியிருக்கும் பெரும் சாமியல்லவா இந்தப் பூசையெல்லாம் ஆனந்தமாய் ஏற்றுக்கொள்ளுகிறது?

இருவரும் அடைபட்டிருக்கும் இராக்குமுத்துவின் தலைவாசற் கதவண்டை வந்து,

முத்தண்ணு:—ஒப்பிள்ளே! பாட்டுத்தான்காணும் உள்ளே கேட்கிறதூஉ! பார்த்திரா காணுஉம்! இந்தச் சிறிக்கி நாம் இல்லாமல் இதெல்லாம் நடத்திக்கொண்டிருக்கிருள்?

பெத்தப்பெருமாள்:—(கோபமாய்க் கதவைஇடித்திரைந்து) அடிருக்குமுத்தூஉ! அடி ருக்குமுத்தூஉ அடியே!

இராக்குமுத்து:—(உள்ளே அந்தச் சத்தத்தைக் கேட்டுச் சின்னையனைப் பாடாமலிருக்கும்படி கையமர்த்திச் சைகைசெய்து, மெதுவாய்) நான் பாடாதே! பாடாதே! என்று என்ன சொல்லியும் கேட்கமாட்டேனென்றாயே! இப்போது அந்தப் போக்கிரிக் குடிகாரப்பயல்கள் வந்துவிட்டான்களே! அவன்கள் என்ன நினைப்பான்கள்! இதுபெரிய சங்கடமாகவல்லவா வந்திருக்கிறது! இதற்கு என்னசெய்கிறது! தலைக்குமேல் ஓடுகிற வெள்ளம் சாண்ஓடினால் என்ன முழம்ஓடினால் என்ன? வருகிறதெல்லாம் வரட்டும்! அவன்கள் வெங்கம் பயல்கள். சும்மா வெளியேதானே கத்திக்கொண்டு

கிடக்கட்டும். அவன்கள் திருடிக் குடித்து ஆடிப்பாடி நீட்டி இப்படி அகாலங்களில் வந்தால் என்ன செய்கிறது? நீ இனி ஒருமூச்சும்விடாமல் தயவுசெய்து பேசாமல் இரு (என்று இருவரும் சாப்பிட்டுமுடித்து விட்டார்கள்).

முத்தண்ணு:—(வெளியில் கதவைத் "திடீர் திடீர்" என்று பெரிய பீரங்கிகள் அதிர் வெடிகள் தீர்ப்பதைப் போல முன்பின் பாராமல் பெருமூச்சாகத்தட்டி இடித்துப் பெருத்த குடியேற்றத்தால் இன்ன வார்த்தையென்று புலப்படாதபடிக்கு "அழ புழ வழ வழ கழ கழ என்று தோன்றியபடிக்கெல்லாம் குழறிச் சந்தடி செய்துகொண்டிருந்தான்).

வீராயி:—(உட்பக்கம் தலைவாசற் கதவோரத்திற் படுத்திருப்பவள் இந்த அமளிகளைச் சகிக்கமாட்டாதவளாய் எழுந்து மெதுவாக இராக்குமுத்துவிடம் வந்து' அடிமகளே! அந்தப்பசங்க வந்து கதவெ ஒடக்கிறுங்கலே! தொறந்துவிடட்டா அ?

இராக்குமுத்து:—வேண்டாமடீ! நீசும்மா அங்கே குரலைக் காட்டாமற் படுத்திருபோ! அவன்களுக்கென்ன காசு பெறுத கோசாப்பயல்களுக்கு? ஜின் பிராந்தி உஸ்கீ இவைகள் வாங்கிவருதைவிட்டு இப்போதுசாராயப் புட்டிகளாய்க் கொண்டுவந்து தரித்திரத்தனமாய் அடைகிறுன்கள். ஏதோ அவன்கள் கொண்டுவந்திருப்பவைகளை நாளைக்காலையிற்பறித்துக்கொள்ளலாம் (என்று அவளைப்போகவிட்டுப் பின் சின்னையனைக் காமவெறியாலும் குடிவெறியாலும் மார்போடிறுகக்கட்டிப்பிடித்து முத்தங்கள்வைத்து) வாபடுத்துக்கொள்வோம் (என்று அறைக்குள் இழுத்துக்கொண்டுபோய்ச் சுகித் திருந்தாள்).

"ஒட்டக்கூத்தருக்கு இரட்டைத் தாழ்ப்பாள்" என்றபடியாகிவிட, வெளியே இருவரும் பெரிய கூத்தாய் ஒருவர்மாற்றி ஒருவராகக் கதவு உடையும்படி மோதியும் பலவிதங்கள் ஓதியும் தொண்டைகள் கிழியும்படிக்கு ருக்குமுத்தூஉ! ருக்குமுத்தூஉ! என்று எத்தனையோ தரம் உறுச் செபித்தும் அவள் பிரசன்னமாகவில்லை. எவரும் சுவரைப்போற் பதிற் பேசுவதாகவுமில்லை. பின் இருவரும் தாமாகவே சலித்துப் போனார்கள். முத்தண்ணா வெறியாற் கீழேபடுத்துத் தனது இரண்டு கால்களையும் கதவின்பேரில் உதைந்துகொண்டிருந்தபடிக்குத் திரும்பவாங்கித் தன் கையில் வைத்துக்கொண்டிருந்த மாமிசச் சட்டியைக் கீழேநழுகவிட்டுப் பெரிய குறட்டைவாத்தியம் பயங்கரமாய்க் கிளப்பிக்கொண்டு அயர்ந்து கிடந்தான். பிள்ளையவாளும் குத்தியைக் கையிற் பிடித்தவாறிற் சிலையடித்துவைத்த கறுப்பண்ணசாமியைப் போலச் சுவற்றிற் சாய்ந்தபடிக்கு அசைவற்று முத்தண்ணாவின் பக்கத்திலேயே யோகாப்பியாசமாய்க்குந்தி, ஆனந்த லாகிரி மயக்கத்தில் ஆழ்ந்திருந்துவிட்டனன்.

## (10)

இந்த அவவேட சமயத்திற் சிவவேடப் பொலிவுடன் சாமியார் ஒருவர் அவ்விடம்வருவதானார். வரும்போதே தூரத்திற் சாடையாகத்தெரிந்துகொண்டிருந்த பிள்ளையவாளின் உருவத்தை அவர்பார்க்க நேரிட்டு, யாரோ ஒருவன் உட்கார்ந் திருக்கிறதா யிருக்கிறதே என்றுநினைந்து "அதுயார் யார்!" என்று பலதரங்கேட்டார். உருவம் பேசாமலிருந்தது. சாமியார் எவனோ திருடன்வந்து குந்திஇருக்கிறானோ? திடீரென்றுவந்து நமது மொட்டைமண்டையில் தேங்காய் உடைத்துவிட்

டால் என்னசெய்கிறது ஐயோ! பெருமோச மல்லவா வந்துவிடும்? என்று கிட்டப்போகாமல் எட்ட நின்ற படிக்குச் "சம்போ! மஹாதேவா! சாம்ப சிவ சிவ சிவ சிவ!" என்றுசொல்லித் தன்னைத் தயிரியப் படுத்திக் கொண்டிருந்தார். அப்போது முன்தொடர்ந்து வந்திருந்த நாயானது முத்தண்ணு கைவிட்ட பாத்திரத்திலிருந்த மாமிசங்களைத் தனக்கு நல்ல யோகம் வந்ததென்பதாகப் பலவித அரவங்களோடும் புசித்துக்கொண்டிருந்தது. அந்தச்சப்தத்தைச் சாமியார்கேட்டு, இருட்டில் விபரம்தெரிந்துக்கொள்ளக் கூடாதவராய், ஓஹோ! காளி கூளிப்பேய்களல்லவா இங்கே கூட்டம்போட்டு அடைந்திருக்கின்றன வென்று தன்னுடைய விபூதியை யெடுத்துச் சில சிவநாமங்களைப் பலமாகச்சொல்லி வீசி யெறிந்தார். அப்போது தின்றிருந்த நாயானது பயந்து வெளியே ஓடியது. அதைச் சந்நியாசிகண்டு பேயே நாய்வடிவு கொண்டு போகிறதோவென்று சந்தேகித்துப் பின்சிவநாமமகிமை நம்பிக்கையால் திடங்கொண்டு அதை உச்சரித்து அவ்வீட்டின் கதவண்டை வந்து நின்று உற்றுப்பார்த்து மனிதர் அலங்கோலமாய்ப் படுத்திருப்பதனை அறிந்து "கட்டையிற் கள்ளன்" என்ற ஆரோபிதத்தை அநுபவித்தோ மெனத் தெளிந்து, "அது யாரப்பா படுத்திருக்கிறது!" என்று பலதரங் கேட்டனர். அவர்களுடைய சுழுத்திப்பலம் அவர்களைப் பதிற்பேசும்படிக்கு இடம் கொடுக்கவில்லை. சாமியார் முத்தண்ணுவைத் தட்டித் தட்டி யெழுப்பினர். அவன் தனது இரண்டு கால்களால் கதவில் மாறிமாறிப்பலமாய் உதைந்து சிறிது பேரிகைவாசித்துப்பின் உடனேமுன் போல் அயர்ந்து விட்டான். சாமியார், இதுவதோ விபரீதமென்று அதைக் கவனியாமல் தான்வந்த காரியத்

தைப் பிரயத்தனிக்க மனங்கொண்டு கதவைத்தட்டி அதுயார் வீட்டிலே! அதுயார்வீட்டிலே! எனக் கூப் பிட்டார்.

வீராயி:—(கதவோரம் காரியச்செவிடாய்ப் படுத் திருந்தவள் புதிய வேற்றுக்குரலா யிருக்கிறதைச்செவி சாய்த்துக்கேட்டுத் தொண்டையை நன்ருய்ச் செறுமிக் கொண்டு) அதூஉ ஆரையா அ?

சாமியார்:—கதவைச் சற்றுத் திறக்க வேணும்?

வீராயி:—(சொல்வது அவளுக்குச் சரியானபடி கேட்கவில்லையாகையால் திரும்பவும் கொஞ்சம் பலத்த குரலுடன்) அதூஉ யாரையா அ! இன்ரூஉ எண்டேஉ வேஷாள்ளுஉங்கோ எ!

சாமியார்:—(உரத்தகுரலாய்) இங்கே மனுஷாள் வந்திருக்கிருர்கள்! கதவைத்திற!

வீராயி:—சும்மா தொற தொற எண்டா அ எண்டா அக்கா அ? (என்று முணுமுணுத்துக்கொண்டு) செத் தே எ நிள்ளுஉங்கோ ஓ? இந்தா அ வந்துட்டேஎன்! (என்று வேகமாய் இராக்குமுத்துவிடம் போய் அறைக் கதவைத்தட்டினுள்).

இராக்குமுத்து:—அடி என்னடி கிளட்டுமுறிவே! (என்று கோபமாய் வெடுக்கெனக் கதவைத் திறந்து நின்றனள்).

வீராயி:—ஆரோஒ மனுஷா வந்து இருக்கூஉ ரா அங்கலா அங் கதவேஎத் தொரேூஒ தொரேூஎங்கூஉ ரா அங்கோ ஒ அதெண்ணெண்டேஉ நீ போஒயீ இப் பாரடீஇ! பணம்வரும்படியாத்தான் இருக்கூஉம்.

இராக்குமுத்து:—(அறைக்குட்சென்று விரைவா கச் சின்னேயனே எழுப்பினுள். அவன்வாய் பெருக்கிச்

கொண்டு புறண்டு புறண்டு நெளித்து வாணிக்காட்டைத் தேகத்தில் அபிஷேகம்செய்துகொண்டு எழாமற் கனத்த நித்திரைகொண் டிருந்தபடியால் தாயும் தானுமாக அய்யனைப் பிணத்தைப்போலத் தூக்கி அறைக்கு வெளியில் ஒரு ஒதுக்கிடத்திற் கிடத்தினர்கள். பின் இராக்குமுத்து வீட்டின் தீபங்களைத் துலக்கி) அடி அம்மா கதவைத்திறந்து ஆளைவரச்சொல்லு.

வீராயி:—குனிந்துகொண் டிருந்தபடிக்கே தலைவாசற் கதவுவரை குறிப்பாய் "விர்ர்" என்று நேரே வேகமாக வந்து கீச்சென்றுகதவு ஓசைபெழத் திறந்தாள்.

சாமியார்:—உள்ளே நுழைந்து வரும்போது) சிவ சிவ சிவ சிவ (என்று சொல்லிக்கொண்டு இராக்குமுத்து இருக்கும் இடம்தேடி வருவதானார்).

வீராயி:—உடனே கதவு அடைத்துவிட்டாள்.

இராக்குமுத்து:-(சிவவொலியோடும் பொலிவோடும் வந்த சந்நியாசியைப் பார்த்துப் புன்னகையுடன் கோணிக்கொண்டு) ஸ்வாமீ! நமஸ்காரம்.

சாமியார்:—(அவளை யேறயிறங்கப் பார்த்துக்கொண்டு (உனக்குச் சகல மங்களங்களும் உண்டாகட்டும் பரமசிவம் (என நின்றார்).

இராக்குமுத்து:—எது அடியாள்பேரில்இவ்வளவு தூரம் கிருபைசெய்தது? அடி அம்மா! சாமிக்கு விரிப்பு எடுத்துப்போடு! உட்காரட்டும்.

வீராயி:—விரிப்பெடுத்துப் போட்டுப் பக்கத்திற் கவனிப்போடு நின்றாள்.

சாமியார்:—(விரிப்பிலுட்கார்ந்து இராக்குமுத்துவின் முகத்தை விரிந்த கண்களாற் பார்த்துச் சிறுநகை

யுடன் தொடையை ஆட்டிக்கொண்டு) உனக்கு ஒரு அதிர்ஷ்டம் வந்திருக்கிறது.

இராக்குமுத்து:—(தலையைக் கீழேபோட்டுக்கொண்டு நாணமுடையவள்போலக் குறுநகையுடன்) பெரியவாள் வந்தபோதே நான் அதிர்ஷ்டசாலிதான்.

வீராயி:—பரமசிவம்போலவே தாங்கள் என்னேக்கு இந்தவிட்டில் கால்எடுத்து வச்சயலோ அன்னேக்கே அவ அதிட்டக்காரிதானே.

சாமியார்:—(முழங்கால்கள்மேல் விரைக்கக் கைகளைநீட்டிப்) பரமசிவம்! பரமசிவம்! (என்று ஊடே ஊடே அயர்த்திச் சொல்லிக்கொண்டு) நான்வந்த காரியத்தைச் சொல்லுகிறேன். இன்று சாயந்திரம் எங்கள் ஜமீந்தார் இந்தவீதிப்பக்கம் குதிரைவண்டியிற் போய்க்கொண்டிருக்கும்போது நீ தலைவாசலில் நின்றுகொண்டிருந்ததுண்டோ!

இராக்குமுத்து:—(ஒன்றும் அறியாப்புதுப் பெண்ணைப் மான்போல்விழித்து ஜாலக்குகள்செய்து) ஆமா! யாரோ ஒருபெரியமனிதர் சாரட்டுவண்டியிற் போய்க்கொண்டிருந்தார். நான் என்பாட்டிற்குச் சும்மா வல்லவா நின்றுகொண்டிருந்தேன்?

சாமியார்:--உன்னுடைய தளுக்குமினுக்குக் குலுக்கில் எங்கள் எஜமான் மிகவும் மயங்கியிருக்கிறார். நீ யாரென்று விசாரித்துக்கொண்டு வரும்படிக்கு அவர் என்னை உன்னிடம் அனுப்பினார். உன்னுடைய சம்மதம் என்ன?

இராக்குமுத்து:—(இதைக்கேட்டவுடன் முன்னிலும் அதிக நாணப்பட்டவள்போல மறுவுத்தரம் ஒன்

றும் சொல்லாமல் பக்கத்துச் சுவற்றைக் கிள்ளிக் கொண்டு அழகுஜொலிக்க நின்றனள்).

வீராயி:—சாமீஇ! ரெம்ப ஸந்தோஷம்தான். அவளுக்குச் சரியான மாப்பிள்ளை கிடையாமல்தான் அவள் புத்தியறிந்த மூன்றுமாத காலமாய்த் தனிப் படுக்கையாகக் காலம் தள்ளிவருகிறாள். இந்தவூரில் இந்தப் பெண்ணினுடைய சௌந்தரியத்துக்குத் தகுந்தபடி பொருள்கொடுத்து யார் கன்னியழிக்க வரப்போகிறார்கள்? நானும் இவளை அப்படிக் கேவலமான சாவகாசங்களில் விடக்கூடாதென்றே கட்டுப்பாட்டில்வைத்துக் காத்துக்கொண்டே யிருக்கிறேன். குட்டுப் பட்டாலும் மோதிரக்கையா லல்லவா குட்டுப்படவேண்டும்?

சாமியார்:—ஓ ஹோ! அப்படியாசங்கதி? இந்தப் பெண்ணுக்கு இன்னம் சாந்தியே ஆகவில்லை போலல்லவா இருக்கிறது? நல்லது! நல்லது! அதிக விசேஷந்தான். கடைசியில் தங்களுடைய அபிப்பிராயம் என்ன? தெரிவித்தால் நான் எங்கள் துரையினிடம் சீக்கிரம் போய்த் தெரிவிப்பேன். அவருக்கு இவள்பேரில் இருக்கும் பிரியம் கணக்கு வழக்கு இல்லை என்று நன்றாய்த் தெரிகிறது (என இராக்குமுத்துவை ப்ரீதியாகப் பார்த்து) ஏன்பெண்ணே நின்றுகொண்டே யிருக்கிறாய்? சும்மா உட்காரு!

வீராயி:—ஏண்டி அம்மா! சாமி உத்தரவு செய்யுராங்கோ? அப்படி அவுகளுக்கு நேரே திரும்பி யிரூஉ!

இராக்குமுத்து:—(உடம்பை நின்றவாக்கில் ஒரு குலுக்குக்குலுக்கி மைக்கண்களை புரட்டி மிரட்டி ஆடவரைப் பிடிக்கும் ஒருவலை வீசிப் பேசாமடந்தையைப் போலக் கோணிக்கொண்டு உட்கார்ந்து முட்டுவாயை

நீட்டி) அம்மா நீயும்உட்காரு (என்று வாய்க்குட்சொல்லிக் கையைநீட்டிக் கீழேபோட்டாள்).

சாமியார்:—(இந்தக் கோலத்தைக் கண்டவுடன் சில்லென்று இரத்தம் உச்சிக்கேறி உடம்பு சிலிர்த்து அவளைப்பார்த்தகண் வாங்காமல்) நீயும் உட்காரு ஆயி! நானெல்லாம் இந்த விடங்களுக்கு வரப்பட்டவனல்ல. சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்காகப் பரமசிவமே பரவை நாச்சியார் வீட்டுக்குத் தூதுபோக வில்லையா? பொன்னனையாள் வீட்டுக்கு என்னப்பன் போக வில்லையா? அரசனுக்கு நான் அதிக ஆப்தமா யிருக்கப்பட்டவன். இராஜாக்கள் மோகப்பட்ட ஸ்திரீகளை மந்திரி புரோகிதர்கள்தான் பேசித் தீர்மானித்துக் கூட்டிவைக்கக் கடமைப்பட்டவர்களாய் நெடுகிலும் வழக்கம் ஏற்பட்டிருக்கின்றது. அதுபோலவே நானும் இந்தக் காரியத்துக்கு உடன்பட்டு இவ்விடம் வரும்படிக்கானது. தேசமன்னர் தெய்வத்துக்குச் சமானம். நாங்களெல்லாம் அதிக மரியாதையானவர்கள். எப்போதும் அந்த சாக்ஷாத்து பரமசிவத்தையே பஜித்துக்கொண்டு யாவராலும் பூசிக்கப்பெற் றிருக்கத்தக்கவர்கள். என்னதெரிகிறதா ஆயி! உன்னைத்தானே.

வீராயி:—(சாமியார் உட்காரச் சொன்னபடி உட்கார்ந்தவள் இந்தப் பெருந்தன்மையான வார்த்தைகளைக் கேட்டுக் கீழே உட்கார்ந்தும் உட்காராமலும் இரண்டு கைகளாலும் வாயைப் பொத்திக்கொண்டு சாமீ இ! நாயனே! அப்படிநாங்க மதிக்காமலா யிருப்போம்? மற்றத் தாசி வேசிகளைப்போல நாங்கள் குடித்தனம் பண்ணப் பட்டவர்களல்ல. அவர்கள்தான் குச்சுகாரிகள். எங்கள் பரம்பரைநெடுகிலும் யாராவதுஒருத்தனையே எளியவனானாலும் சரி ஒரே பத்தியாகப்பிடித்துக் கடைதலை

செலுத்திவிடுகிற சுபாவம். தாங்கள் அக்கம்பக்கம் விசாரித்துப்பார்த்தால் இந்த வீட்டினுடைய யோக்கியதை தெரியும். எப்போதும் பெரிய மனுஷாள்களுடைய புழக்கமே இருக்கும். அப்படி "ஞஞ்ஞு புஞ்ஞு" என்று கீழானவர்களுடைய சங்காத்தங்கள் எங்கள் அடியை மிதித்தவர்களுக்கும் வராது. சாமீஇ! ஆண்டவனேஎ! தெய்வமேஎ!

சாமியார்:—நல்லது! நல்லது! சரிஆயீ! உட்காரு! உட்காரு! உட்காரு! (என்று கையை ஆட்டி ஆட்டி அவளை இருக்கும்படிக்குச் செய்தனர்).

வீராயி:—இந்தப்பெண்ணுக்கு நல்ல அதிட்டம் இப்பத்தான் பிறந்திருக்கிறது. அவள் சடங்கானது நல்ல நச்சேத்திரம். இராணியாவா ளென்றும் ஜோஸியத்திற் சொல்லி யிருக்கிறது. இராஜலெட்சணமும் சரியா யிவளுக்குப் பொருந்தியிருக்கிறது. இவளுக்கு அப்படி உங்கள் ராசா அதிகமாகப் பொருள் கொடுக்க வேண்டியதில்லை: பெரியமனுஷாள் இஷ்ட மிருந்தாலே போதும். நாலுபேருக்குக் கண்யமாயு மாகிவிடும். அரமனையில் நாய் பிடிப்பவனுக்கே இருக்கும் கவுரவம் அதிகமல்லவா? எங்களுக்கு மானமான காலட்சேபமே தான் வேண்டியது. கீழ்ச்சாதிப்பயல்களிடம் கோடி கோடியாகப் பணம் இருக்கிறது. அதற்காக நாங்கள் வாயைச்சப்பிப்போய் நிற்போமா? இவர் மகராஜன் பிள்ளை மகராஜன். அவர் என்பொண்ணைத்தொட நாங்கள் என்னபாக்கியம் பண்ணினோமோ. இவளுக்குச் சடங்கு சுற்றியதில் ரூபாய் முன்னூறுபோற் கடன் ஏற்பட்டுவிட்டது; அதைமட்டும் உங்க சக்கரவர்த்தி பெரிய மனது பண்ணித் தீர்த்து வைத்துவிட்டால் இந்தச் சோலைக்கிளி அவுகளுக்குச் சொந்தம்தான். மறுபடி நீங்

கள் ஸந்தோஷத்தின்பேரிற் கொடுத்தாலும் சரி கொடுக்காம லிருந்தாலும் சரி. சக்கிரவர்த்திக்கு இந்தத்தொகை அவர் கால்தூசி விலைபெறுது. நாங்கள்மற்றத் தாசிவேசிகளைப்போலப் பிடுங்கித் தின்னும் கழுகுகளல்ல. பொண்ணு ரொம்ப மரியாதைப்பட்ட பொண்ணு. தாங்கள் இப்போது பார்க்கையிலேயே நிறக்குத் தெரியவில்லையா? கிளிப்போலே பொண்ணே வச்சிருக்கேன். அவளை இனிச்சேர்ந்து பார்த்தவர்களுக்கு அந்த அருமை தெரியும். அனேகம்பேர் இந்தப் பொண்ணு பரம்பரைக்கும் ஸங்கிதத்துக்கும் ரூபலாவண்ணிய சௌந்தரியங்களுக்கும் ஆசைப்பட்டுக் கருப்புட்டியிலே ஈ மொச்சது போல ஓடி ஓடி வந்து வுளுந்தாங்கா. நான் எச்சித்தனமாய்ப் பொண்ணெ அப்படி யெல்லாம் விட்டுக் கெடுத்து விடப்படாதெண்டு வச்சிருக்கேன். இப்போது நான் கும்பிட்ட எந்தத்தெய்வமோ உங்கள் ரூபமாகவந்து என் மனம்போலவாழ இப்படிப் பெரிய விடத்தைக்கொண்டு வந்து விட்டிருக்கிறது. இது சித்திக்கவல்லவா வேணும்?

சாமியார்:—எனக்கும் பெண்ணினுடைய வசீகரத்தைப் பார்க்கும்போதே எல்லாம் நன்றாய்த் தெரிய வருகிறது. இந்தமாதிரி லெட்சணமும் அமைப்பும் இவ்விடங்களிற் கிடையாது. தங்கப்பூவுக்கு வாஸனை ஏற்பட்டதுபோல இவள் ஸங்கீதத்திலும் கெட்டிக்காரியா! ஆயீ! நீ மிகவும் நல்லமனுஷி. நல்லது நீங்கள் இருங்கள். நான் இப்போதே சீக்கிரமாக எங்கள்எஜமானிடம் போய்ச் சங்கதிகளை விபரமாய்த் தெரியப்படுத்துகிறேன் (என்று எழுந்து நின்றார்).

விராயி:—(எழுந்து பின்னுற் கொஸ—வம்தொங்கியாடச் சாமியார் முன்வந்து குனிந்து வாய் பொத்தி

என் அய்யா சாமீ! உங்கள் எஜமான் ஆரு? எந்த ஊரு? வருஸத்துக்கு என்ன வரும்?

சாமியார்:—அவர் ஜமீந்தார். இருப்பது மாயாபுரிக் கோட்டை. வருஷத்துக்கு இருபதினுயிரம் ரூபாய்வரும்.

வீராயி:—(அதிசயமாய் விழித்துத் திறந்த வாயி னின்றும் வாணிக்கம்பி வடிய) ஆ! அப்படியா! இஞ் சேவு என்னகா அரி யமா வந்தா அங்கா?

சாமியார்:—இங்கே அவர்களுடைய இஷ்டர் ஒரு பெரிய முதலாளியினுடைய குமாரன் கல்யாணத்துக் காக வந்தார்கள்.

வீராயி:—ஏஞ் சா அ மீ இ! ஈ! ஈ! எத்தென நாளு இருப்பாங்கோ ஓ.

சாமியார்:—ஏதோ இன்னம் நிச்சயம் தெரிய வில்லே. ராஜநோக்கம்.

வீராயி:—என்னமோ ஓ சா அமீ, நான் இந்தப் பொண்ணு எண்ணெவச்சு முன்னுக்கு வரவேணும்; முந்தி ரெம்ப நல்லாயிருந்த பெரியகுடும்பம். இப்படி எல்லாம் போயி ஏலயா யிருக்கிரோம். இந்தச்சமயத்தி லே அந்தப் பரமசிவம் (கும்பிடுகிருள்) நடராஜமூர்த்தி போலே நீங்கதாந் தயவுவச்சுப் பெரியமனஸு பண்ண வேணும்.

சாமியார்:—எல்லாவற்றிற்கும் பரமசிவம் இருக் கிறது, நான் சீக்கிரமாய்ப் போய்வருகிறேன். எஜமான் எனக்காகத் தூங்காமற் காத்துக்கொண்டே யிருப்பார். இந்தச் சுந்தரவதியின் பேரென்ன?

வீராயி:—இவளுக்குருக்குமுத்தூஉ ண்டுபேருஉ.

சாமியார்:—அவளுடைய அமைப்புக்குத் தகுந்த பேராக வைக்கவில்லையே?

வீராயி:—அது சாக்ஷாது அந்தப் பரமேஸ்வரியி னுடைய பேரல்லவா?

சாமியார்:—சரி ஆயி! இருக்கிருயா? இருக்குமுத்து! இரு நான்போய் வருகிறேன் (என்று தாம்பூலம் வாங் கித் திரும்பினுர்).

வீராயி:—அடிராக்குமுத்தா உ!சாமிஎக் கும் புடுடீ. அவுகொ ஆஜீர்வாதத் தாளே தானே நாம நள்ளா யிருக்கணுஉம்.

இராக்குமுத்து:—(நாணிக் கோணிக்கொண்டு) சாமி சேவிக்கிறேன்.

சாமியார்:—(அடடா! இவள் மொழி குயில்மொழி யே என்று எண்ணி அவளை ஏற இறங்க மகிழ்ந்து பார்த்து) பரமசிவம்! பரமசிவம்! (என்று பிரதி ஆசீர் வாதம்செய்து புறப்பட்டார்).

வீராயி:—(பின்தாளை (கொசுவம்) போல் அவய வங்களும் ஆடக் குனிந்தபடி கையைக் கூப்பிக்கொண் டே சாமியாரை ஒட்டித் தொடர்ந்து போய்) பரிபூரண மாய்த் தயவு இருக்கவேணும். அய்யாவைக் கட்டாய மாய் இப்பவே அழைத்து வரவேணும். விஸுவாஸம் மறக்கவே மாட்டேன். நான்வாசலிலே காத்துக்கொண் டே யிருக்கிறேன்.

சாமியார்:—அவர்களெல்லாம் சாமானியமானவர்க ளன்று. இராஜாங்கத்திஷுடைய மாதிரியேவேறு. அவர் கள் உன்னுடைய வீட்டுக்கு வருவார்களோ?

வீராயி:—ஆ! அப்படியா! இராக்குமுத்துவை அழைத்துக்கொண்டு நான் எங்கே வேணுமானுலும் செட்டை (இறகு) கட்டிப்பறந்து வந்து விடுகிறேன். பேசிய தொகைமட்டும் உபகாரஞ்செய்து விடவேணும்.

அய்யா! சாமீ! கடன்காரர் இம்சை பொறுக்க முடிய வில்லை.

சாமியார்:—(அவளுக்குச் சமாதானஞ் சொல்லி வெளியேறிக் கொஞ்சத்தூரம் வழிநடந்து நீண்ட பெருமூச்சுவிட்டு இவ்வாறு யோசிக்கிறார்) அடடா! இந்தப் பெண்ணுக்கு அமைந்திருக்கிற அழகு என்ன அழகு! வெகு ரூபவதியாக வல்லவா இருக்கிறாள்! கந்தருவப் பெண்தானோ! சிப்பியில் முத்துப்பிறந்தது போல் இந்தச் சுந்தராங்கி இந்தக் கிழவியினிடம் பிறந்தாள். தாயைத் தண்ணீர்த்துறையிற்பார்த்தால் மகளைவீட்டிற் போய்ப் பார்க்க வேண்டுவதில்லை யென்பார்களே? இந்த மோகனாங்கியை அந்தக் கிழவி பெற்றதா யிருக்கமாட்டாது. ஆஹா! இவளுடைய முகத்தைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தாலே போதும்போ லிருக்கிறதே! நாம் அவள் வீட்டில் இருக்கும்போது உண்டாயிருந்த ஆனந்தம் கயிலாசத்தில் இருந்தாலும் கிடைக்கத்தக்கதில்லை; திரும்பி ஒருகால் அவளிடம் முன்போற் போயிருந்து அநுபவிக்கக்கிடைக்குமோ ? இவளுடைய கலவியானந்தம் எப்படித்தானிருக்கும்? இவளைக் கட்டிக்கலந்து சுகிக்க என் மனது நாடிக்கலங்குதே! அவள் எனக்கு வசப்படுவாளோ! இவளுக்குத் தகுந்த பெருந்தொகை கொடுத்து நாம் எப்படி அனுபவிக்கப்போகிறோம்? போக வேண்டியதுதான் பாழுங்குழிக்கு. லேசிலே இருக்கிறதா சோணாசலன் பாதம் ? நீரோட்டத்தில் ஓடி விளையாண்டு திரியும் மீனினங்களைக் கரையிலிருந்து இச்சித்துப் பூனை பார்த்ததினலென்ன பிரயோசனம்? நினைக்க நினைக்க என்மனம் கிடந்து தள்ளாடித் தவிக்கிறதே! "கிட்டாதாயின் வெட்டெனமற" வென்று அதற்கு என்ன சமாதானம் சொல்லியும் கேட்பதா யில்லையே! அந்தச்

சண்டாளிபேரில் மனதில்வைத்த தொலையாத ஆசைக்கு என்ன பசைபோட்டு ஒட்டியதோ! மரத்தின்கனியைப் பறித்துண்ண முடியாதவர் சீ அது புளிக்கு மென்று வீணே கூறியவாறுபோல நாம் யாதொரு பொல்லாங் கிலாத இன்பரசச் சீமாட்டியைச் சண்டாளி என்றோ மே? எனக்கு அவள் கிடைக்காததால் அப்படித்தான் சொல்லவேண்டியதா யிருக்கிறது. கிடைத்து விட்டா லோ அவளெனக்குச் சாகாத தேவாமிர்தம்தான். நெய் யைப் பெய்யப்பெற்ற ஓமத்தீபோல் இந்த ஆசை வர வர அதிகமுமல்லவா பெருகித் தேகத்தைத் தகிக்கின் றது! அவளைநான் அடையாவிட்டால் சீக்கிரமாகஎன்னை இந்த அக்கினியே உயிருடன் தகித்து விடுவது சிலாக் கிய மாயிருக்கும். இதற்கு நான் என்ன செய்யப் போகிறேனே! விசுவாமித்திரரைப்போற் சும்மா இருந்த எனக்கு அவருக்குச் சம்பவித்ததுபோல் வந்து விட்ட தே! ஆனால் அவர் விரும்பிய பெண்ணைக் கூடிக் கலந் தார். நான் இந்தப் பெருந்துன்பத்தை அவ்வாறு நீக்கிக் கொள்ளலாகுமோ? அறியாமலா இதற்குக் காமநோ யென்று சொல்லுகிறார்கள்? இந்த நோய்க்கு, மற்ற நோய்க்கு உண்டாயிருக்கும் மருந்து விதங்களைப்போல என்ன மருந்து வயித்திய சாஸ்திரத்திற் கூறப்பட் டுள்ளதோ? நமது அரசன் ஒரு விநாடி நேரத்தில் அவளைக்கண்டு மயங்கியது பெரியகாரியமோ? தமயந்தி யைக்கண்டு இச்சித்த தேவர்களுக்கு இவளொருவள் இருப்பது தெரிந்திராது போலுமே யிருக்கிறது. யா தொருவகையும் தோன்றாமல் என்சித்தம் கலங்கி வழி பார்த்து நடக்கவும் முற்றிலும் அசக்தனாகிவிட்டேன். ஆனால் அந்தப் பெண்மணியினது வீட்டுக்குத் திரும்ப வென்றால் எனது கால்வழங்கும்போ லிருக்கிறது. என்

துன்பத்துக்குப் பரிகாரம் அந்தச் சொர்ண வர்ணக் குயிலைக்கட்டி யணைந்தா லல்லது முடியாது. கிட்டாவிட்டால் என் பிராணன் பட்டென என்னைவிட்டு அவளிடமே தஞ்சமெனப்போய் அடையு மென்பது நிச்சயம். அடபாபமே! இது என்ன கஷ்டகாலம்! எனக் கிவ்வாறுண்டான கொடிய துன்பத்தை அந்தப் பொற்கொடிஉணர்வாளானால் என்பேரில் தரும மனதுங்கொண்டு இரக்கத்தால் உயிர்ப்பிச்சை கொடுத்தாலுங் கொடுப்பாள். பாக்கி யில்லாமல் எல்லாக் குணங்களும் பொருந்திய அப்பூலோக சுந்தரிக்குக் கருணை யொன்று மட்டுமா இல்லாம லிருக்கும்? ஆனால் நான் காமத்தை வெறுத்த சந்நியாசி வேஷம் அவளிடம் காட்டிக் கௌரவமாக வந்தேனே! இந்தக் கேவலமான சங்கதியை நான் அவளிடம் எப்படிப் பேசுவேன்! ஆனாலுமென்ன. திரிமூர்த்திகளும் பெண்பேய் பிடித் தலைந்து திரியவில்லையா? அதுவு மல்லாமல், நாம் இந்த உலகத்தில் என்ன தவம் பண்ணினாலும் சீரழிந்த பிழைப்பேதவிர இனிமேல் நமக்குக் கிடைக்கக்கூடிய சுகத்தை யார்கண்டது? கண்ட ஒருவரும் இதுகாறும் விண்டிலரே! இவ்வுலகிற் செய்யும் நலங்களுக்காகத் தேவலோக மங்கையரின் நலங்களை மானிடர் மறுபிறப்பில் அனுபவிக்க ஏற்பட்டிருக்கவுமில்லையோ? நாம் அதனை இந்த ஜென்மத்தில் இப்போதே தேடிக்கொள்வதால், "பருத்திபுடவையாக் காய்த்தது" என்றபடி அதிக விசேஷ மல்லவா? நமது கையில் திரவியமட்டு மிருக்குமானால் இப்போதே அதை முற்றிலுங் கூடத் தத்தஞ்செய்து அந்தப் பூங்கொடியி னுடைய கலவிப் பேரின்பப் பதவியை அடைந்து வாழ்ந்திடுவேனே! ஆஹா! பொருளுடையவனே தான் பாக்கியவான். அவனே இவ்வுலகத்திலேயே

இந்திர பதவியி லிருப்பவன். நாம் அரு ளுடையேம் என்று மருளடைந்து போகவேண்டியதுதான். நாமும் பொருளில்லை என்ற காரணத்தால்தானே இந்தப்பிச்சுத் தின்னும்பிச்சாண்டி வேஷம் தரித்திருக்கிறேம்.பொரு ளிருந்தால் இந்தச்சொரூபங் குலைந்த வேஷமோ? கன விலும் கருதேன். இந்திரன் பிந்த முந்தியிருந்திடுவேன். நல்லது இருக்கட்டும். இப்போது சீக்கிரம் தேவ வடி வாள் வீட்டுக்குத் திரும்பவும்போய் அழகுள்ள அவளைச் சும்மாவாவது ஒருமுத்தம் கொடுத்துவிட்டுத் திரும்பிப் போகவேணும். அப்போதாவது கூடியவரை உபாதி நீங்கிப் பாதை தெரிந்து நமதுஜமீந்தாரிடம் போகலாம். கிழவி நல்லவளாகவும் இருக்கிருள். அவள் நம் முடைய தயவைத்தானே பிரதானமாய் விரும்பிக் கொண்டாள். ஆனல் அந்தப்பெண் பழகாதவளாய் ஒரு மாதிரி மோடியா யிருக்கிறளே! அனுபோகப்படாத அவளுக்கு என்முத்தம் பொருத்தமா யிருக்குமோ? நமது மொட்டைச் சட்டிமண்டைக் கோலம் முதலிய வைகள் அவள் நீலக் கண்களுக்கு எப்படியிருக்குமோ? இதில் நாம் எப்படி அவளை முத்தமிடுகிறது? பரமசிவம் பிட்சாடனராய் வந்த வேஷத்தைக்கண்டு மங்கையர்க ளெல்லாரும் தம்நிலைகலங்கித் தளரவில்லையா? ஆகையின லே, அவ்விதமான நமது இக்கோலத்தையும் பெண்கள் கண்டால் பிரியப்படாமலா இருப்பார்கள்? இருக்கட்டும். சகலத்துக்கும் இன்னெரு வழிபோய் முடிந்தமட்டிற் பார்த்து வருவோம். தீராததற்கு அவளுடைய திரு மேனியின் எந்த ஓரிடத்தையாவது கையாற் சிறிதே னும் பரிசித்துவிடவேண்டும். வெள்ளைக்காரர் மாதிரி அவளுடைய வளையல்களணிந்த தாமரைபோன்ற கை யைப் பிடித்து மரியாதையாய்க் குலுக்கியாவது வா

வேணும். அல்லது கண்ணில் ஒற்றிக்கொண்டாவது திரும்பிவிடவேணும் (என்று வயிறாதப் பெருமூச்சு விட்டுத் திரும்பவும் வந்து கதவைத்தட்டினர்).

வீராயி:—அது ஆரு உ! கொஞ்சம்இருங்க அய்யா இந்தா வந்தாட்டேன் (என்று இராக்குமுத்துவிடம் வந்து) அடி அம்மா! இன்னேக்கு நமக்கு யோகத்தின் மேற் போகமாத்தான் வந்து குவிகிறது. இப்ப ஒரு புது ஆளாச் சத்தங்கேட்கிறது உ!

இராக்குமுத்து:—இப்போது பெரியவரும்படிக்கு அடிப் போட்டுச்சாமியாரும் வேகமாய்ப்போயிருக்கிறரே! ஜமீந்தார் என்பேரில் அதிக ஆசையா யிருப்பதாகவும் தெரிகிறபடியால்அவர், சாமியார்சகிதம் திடீரென வந்துவிட்டால் என்ன செய்கிறது? பெரிய மனிதர் வரவுக்குத் தகுந்தபடி நான் முன்னே கூடுமானவைகளைச் சித்தம்செய்து கொள்ளச் சாவகாசம் வேண்டாமோ? இப்போது வந்த புதுமனிதன் யாரென்பது தெரியவில்லை. சற்றுநேரம் இருந்துவிட்டுப் போய்விடுவானு? பணம் என்னகொடுப்பான் என்று சீக்கிரம் கேட்டுச்சொல்லு! அகப்படுவதாயிருப்பதையும் விடுவானே? கொஞ்சம் வேகம்பண்ணி விடு. ஆனுல் ஆதித்தவாரம், ஆகாவிட்டாற் சோமவாரம்.

வீராயி:—(வேகமாகவந்து கதவைத் திறந்து நின்றுள்).

சாமியார்:—நான்தானே, ஆயி! தெரியவில்லையா? இப்போது வந்திருந்த சாமியார் அல்லவா?

வீராயி:—ஆ! ஆ! ஆண்டவனு? அதற்குள்போய்த் திரும்பிவந்துவிட்டீர்களா? சாமிஉள்ளே வாரதுதானே?

சாமியார்:—(வாசற்படி யண்டைதானே நின்று) அங்கே இப்போது என்னத்திற்கு? நீ இப்படித்தானே வந்து ஒருசங்கதி கேட்டுப்போ! தனித்துப் பேசிக் கொள்ளவேணும். அடி ஆயீ! நான் உன்னிடம் ஒரு சங்கதி சொல்லுகிறதற்கு யோசிக்கிறேன். அதற்கு உன்னுடைய சம்மதம் எப்படி யிருக்குமோ வென்றும் அஞ்சுகிறேன். நீதயிரியமாய் வாக்குகொடுத்தால்நம்பி உண்மையைச் சொல்லுகிறேன்.

விராயி:—என்ன அய்யா அ சாமி இ! என்ன அப்படி வித்தெஸமா நினக்கிரீங்கோ. எல்லா மனஸோடே இருக்கூம். நான் ஒங்களுக்கு அ்டிக்கட்டையா யிருக்கிறேன். நீங்க ஒண்ணுக்கும் யோசிக்க வேண்டா அம். சும்மா சொள்ளலாம்.

சாமியார்:—தேவேந்திராதியரும் பெண்ணாசை யால் வெகுபாடுபட் டிருக்கின்றார்கள். இந்திரன் எப் போதும் இந்திராணியினுடைய தனத்திற் கைவைத் துக்கொண் டிருக்கிறான். சிவனார் தலையில் ஒருத்தியைச் சுமந்து இடையில் ஒருத்தியைத் தூக்கி இருத்திக்கொண் டார். மாதவர் இலட்சுமியை மார்பினிடம் வைத்துக் கொண்டிருப்பது மாதவமென்று நினைத்தார். பிரமன் நாவினிடம் சரஸ்வதியை வைத்திருப்பது பரம சிலாக்கி கிய மெனப்பாராட்டினார். தவசிரேஷ்டராகிய விஸ்வா மித்திரரும் மேனையைக்கூடிப் பரவசமானார். எனக்கு இந்தப்பெண்ணைப் பார்த்ததுமுதல் மன்மத வேதனை சகிக்கக் கூடவில்லை. "முளையாத வித்தும் மழைபெய் தாற் றுளிர்க்கும்" என்றபடி எனக்கு உண்டாகிவிட்டது. நீ கேட்டபடிக்கே ரூபாய் முன்னூறும் குறையாமற் கொடுக்கும்படிக்குச் செய்து விடுகிறேன். ஜமீந்தார் என் வார்த்தையைத் தட்டமாட்டார். வெளிக்குத்தெரியாமல்

என்னை உன் மகளோடு ஒருநாளைக்குக் கூட்டிவைக்க வேணும். அவள் தேவடியாள் நான் தேவடியான். ஆகையினாலே தீட்டொன்றும் ஆகிவிட மாட்டாது. முப்பத்திரண்டு தருமங்களில் இது ஒருதருமம்.

வீராயி:—சாமீஇ! எம்மகளை ஆருபாத்தாலூஉம் இச்சைப்படாமெ யிருக்கமாட்டாங்கோ. ஆம்பிளேக்கு ஒரு உமி தூக்கும் பலமுள்ளமட்டும் பொண்ணுசே போவாதே! அதுக்கென்ன தடே! தாங்கமட்டு ரூபா முன்னூறுக்குக் கொறயாமே ஸெஸ்ஸாவிடக் கேட்டுக் கொள்கிறே. மறுபடி மகலுங்க மகதான்.

சாமியார்:—(ஸந்தோஷம் சொல்லிமுடியாது). அடி ஆயீ! இந்தச்சங்கதி வெளிக்குத் தெரியக்கூடாது. குடி கெட்டுப் போகும். நீ உன்மகளை எனக்குச் சேர்த்து வைக்க வேணும். நான் முன்னூறை உனக்குச்சேர்த்து வைக்கவேணும். இவ்வளவுதான் சங்கதி. நேரமாகிறது. நான் இப்போது ரூபாய் ஒரு கொடிக்குள் சரிபண்ணி அவரைச் சீக்கிரம் கூட்டி வந்துவிடுகிறேன். நீ தயாராயிரு.

வீராயி:—அய்யா அ சாமீ இ! ஆகட்டேம்! ஆகட்டேம்! ஒங்க நாய் வாசல்லேகாத்து வளிபாத்துக் கொண்டேயிருக்கூம். எல்லா ஒங்கோ தயவுதயவுதான்.

சாமியார்:—பெரியமனுஷாள் வரும் வழியில் இங்கே யார் குறுக்கே ஆபாஸமாகப் படுத்துக்கொண்டிருக்கிறது?

வீராயி:—அய்யா அ சாமீ இ! அவுக என்தங்கச்சி மக்க. அவுகளே எப் போகச் சொள்ளி விடுகிறேன்.

சாமியார்:—(மறுநிமிஷமே பறந்து விட்டார்).

இராக்குமுத்து:— அடி அம்மா! அந்தச் சாமியார் என்ன ரகஸியம் சொன்னார்?

வீராயி:—ஒம்மேலே அவரு ஆசெப் பட்டாரு. முண்ணூரும் கொடுக்கும்படி செஸ்ஸூவிட்டா ஒரு நாளெக்குப் படுத்திரும்போம் எண்டு ஷொள்ளி அனுப்பி விட்டேஎன்.

இராக்குமுத்து:—(கிழவியை மெச்சிக் கொண்டு) அந்த முடிச்சவுக்கி வெட்டிப் பயல்கள் வாசலிற் கோட்டான் சகுனம் போலே படுத் திருக்கிறுன்களே? மனுஷாள் வாரபாதையல்லவா? இந்தக் கிடாப் பயல்களைத் தூக்கி ஒதுங்கப்போட்டு விடுவோம் (என்று தாயும் மகளும் பிணங்களைப்போலே அவர்களைச் சிரமப்பட்டுத் தூக்கி அகலக் கொண்டுபோய் டிரேயின்ஸி (கால்வாயி) ற் போட்டு விட்டார்கள். இராக்குமுத்து அவ்விருவர்களுடைய நிலைமையைப் பார்த்துச் சிரித்துத் திரும்பிப்பின் அவள் கல்லறைக்கு வெளிப் பகட்டாய் வெள்ளையடிப்பது போலச் சீக்கிரம் குளிர்த்து ஆடவரை மயக்கும் விதங்களில் ஆடை யாபரணலங்கிருதஞ் செய்து காதம் வீசும் வாஸனைகளைப் பூசிக் கொண்டு இன்பமாய்த் தம்பூர் ஸ்ருதிசெய்து இன்னும் வேண்டிய சித்தங்களைப் படுக்கைவீட்டிற் செய்து ஸந்தோஷமா யிருந்துகொண்டிருந்தாள்).

## (11).

ஜமீந்தார்:—(தனது ஜாகையில், இராத் தூக்கம் சிறிது மின்றித் தன்திருஷ்டிக்குப் பட்டிருந்த வடிவழகியை நினைந்து நினைந்து மனம் புண்ணுகிக் காமாக்கினியால் வெம்பித்தன் சப்ரகூட மஞ்சத்தில் ஏகாங்கியாய்ப் படுத்துப் பாம்பைப்போலப் புரண்டு புரண்டு அடிக்கடி கொல் லுலைத் துருத்திபோற் காமத் தீப் பெருமூச் செறிந்து போன சாமியாரின் வரவை ஒவ்

வொரு நிமிஷமும் யுகமாகக் கழித்து எதிர்பார்த்த வண்ணம் இவ்வாறு நினைப்பதானான்). சாமியார் போன வர் அறியா ஊரில் அதிலும் இந்த இருட்டு வேளையில் நாம் சொன்னபடிக்கு அந்தச் சுந்தரியினுடைய வீட்டு அடையாளத்தைக் கண்டு கொண்டனரோ! யாதோ தெரியவில்லையே! எங்குதான் பேயோடுபேயாய் அலைந்து திரிகின்றாரோ? அல்லது கண்டுதான் சங்கதியையும் பேசினரோ! அவள் சம்மதப்பட்டனளோ! புருஷனை யுடைய மங்கையா யிருப்பளோ! அடிதடிகளில் இவர் ஒருவாறு அகப்பட்டு விட்டாரோ! அறியாவூரிற்கொன் றாலும் இந்நேரத்திற்கேட்பாரார்! ஆத்திரமன்றோநமக்கு இப்படி விஷப் பரீட்சை செய்யச் சொல்லுகிறது! நமக்கு எவ்விதாமகவேனும் ஒருபதிலைச்சொல்ல ஆள் வந்து சேர்ந்தாலும்போதும் போலும் இருக்கிறதே! அனுகூலமானால்தான்சரி. ஒருவேளை அசௌகரியமாகி விட்டால் நான் அந்தப்பெண்பேரில் வைத்துவிட்ட தீராத காமத்தை எவ்வாறு சகித்திருக்கப்போகிறேன்! இதற்கு நான் மாண்டுபோனாலும் மிகவும் நன்மையா யிருக்கும். ஐயோ! ஐயோ! நான் இதுவரை யிவ்வாறு காமவலையிற் சிக்கித் துன்பப்பட்டதில்லை. காமம் இவ் வளவும் செய்யவல்லதோ! எனது அரமனையில் எனக்கு ஒரு அற்ப நோவுண்டானாலும் எத்தனைபேர் வந்து சூழ்ந்து உபசரித்து வயித்தியமும் புரிவர்! என்பேரில் ஒரு துரும்புபடச் சகிக்க மாட்டார்களே! எனக்கு இப்போது உண்டாகிவிட்ட இந்தப்பெரும் நோக்காட் டை யாரிடம் வெளிப்படுத்திச் சொல்வேன்! துன்பம் சகிக்கத் தாளாத எனது சுகசரீரத்தைவிட்டு இனித் தானாகவே உயிர் போய்விடும்போலும் இருக்கிறதே! இதற்கு வேறொரு உபாயமும் காண்கிலேனே! ஊர்

வேண்டேன்! உறவு வேண்டேன்! உணவு வேண்டேன்! ஒப்பற்ற மனைவியும் அவள் தந்த ஓர் காதலனையும் வேண்டேன்! இந்திரலோகமுதல் மற்றெதுவும் வேண்டேன்! அந்த மோகன சுந்தரியினுடைய மந்தஹாஸமும் முகவுல்லாசமும் என்கண்ணை விட்டுச் சிறிதும் நீங்கவில்லையே! அவளுடைய பரிஸுத்தமாகிய சொரூபமே சொரூபம், அவளுடைய கருங்கண்ணையும் பவளவுதட்டையும் மற்ற ஒவ்வொரு அவயவங்களையும் நான் என்னவென்று புகழ்வேன்! விசித்திர கவிகளும் அவளை வருணிக்கக் கவிழ்ந்து விடுவார்கள்! இரவிக்கை போடும் அழகு அவளுக்கே பொருந்தி யிருக்கிறது; சேலையுந் தாவணியும் என்னபணிவாய் அவள் மேனியில்அமைந்து ஜொலிக்கின்றன! அவள் வசிக்கும்வீடு என்னதவம் செய்ததோ! அவள் நின்றவாசற்படி செய்தபாக்கியம் கூட நான்செய்யவில்லை! பூங்கொடியில் அன்றுமலர்ந்த செந்தாமரை மலர்போலும் முகத்தையுடையஅந்த ரதியை நான் என் ஆசையெல்லாந்தீர அணைத்து இறுக்கிக் கட்டி முத்தமிட்டுக் கலவித்தொழில் வித்தைகள் செய்து சுகித்தாலன்றி நான் எடுத்த இந்த ஜென்மத்தாலாகும் பயன் ஒன்றுமில்லை. எனக்கு மற்றச் சம்பத்துக்கள் எவ்வளவோதாமிருந்தும் அவைகளெல்லாம் இந்த ஒருபெண்கொடியினது பாததூளிக்குஈடாக எனக்குத் தோன்றவில்லை. அந்த லெட்சுமியைமட்டும் நான் அடைந்தேனானால் என்னைப்போற் பாக்கியசாலி முக்காலத்தும் எவருமில்லை. ஒருகோட் டிருசெவி மும்மத நால்வாயா! எனக்கு இந்தக்காரியம் அனுகூலம் செய்து வைப்பையானால் காயொன்று ஆயிரம் சுக்கலாக உனக்கு ஆயிரம் சிதறுகாய்கள் உடைக்கிறேன். சாமியார் காயாய்வருகிறாரோ தின்னப் பழமாய்வருகி

ரே! அனுகூலத்துடன் வந்துவிட்டால் நான் அவருக்கு நல்ல சன்மானமாகச் செய்வேன். என் மனதை அவர் குளிரவைத்ததுபோல நானும் அவருடைய மனதைக் குளிரச்செய்வேன். (இந்த விதமாக அவன் கழுத்தரிந்து போட்ட கோழியைப்போல் துடிதுடித்துச் சோகப்பட்டிருக்கும் போது கீச்சென்ற கதவுச்சத்தம் கேட்டு அவன்) அதார்! சாமியாரா? வாரும்! வாரும்! போனகாரியம் சுந்தர காண்டமா? அந்தர காண்டமா? இதோ இந்தப்பக்கத்துக் குருச்சியில் உட்காரும்!

சாமியார்:—(இருந்துகொண்டு) நான் தாங்கள் சொன்ன அடையாளப்படிக்குப் போய் இப்போது அந்தப் பெண்ணையும் கண்டுபிடித்துத் தங்கள் அபிப்பிராயத்தையும் தெரிவித்து அவள் சம்மதமும் கேட்டுக் கொண்டு வந்துவிட்டேன்.

ஜமீந்தார்:—அதுமட்டிலும் சந்தோஷந்தான் சுவாமிகளே! ஆனல் அதில் அனுகூலமா? பிரதிகூலமா?

சாமியார்:—அனுகூலத்தில் ஒருதடையா? அந்தப் பெண்ணும் தங்களைமார்க்கத்திற் போகும்போது கண்டு தங்கள்பேரில் அடங்காத ஆசைகொண்டல்லவா இருக்கிருள்? இரண்டுபேருக்கும் உண்டாயிருக்கும் அந்தரங்கங்களை நான் குறுக்கே பிழைக்கவந்த சந்நியாசிப்பயல் எப்படி அறிவேன்? அதுஎன்னமோ முன்னமே ஏதாவது இரகசியங்கள் இருவருக்கும் நடந்துதானிருக்கும். அவளுக்கு என்ன மைப் போட்டீர்களோ? அந்தப் பெண்ணும் தங்கள்பேரில் கணக்கில்லாத காதலை உள்ளுக்குப் போட்டு அமுக்கி வைத்துக்கொண் டிருக்கிருள். வெளிக்குக்காட்டுகிருளில்லை. கதவுப்பலகை மழைகாலத்தில் உப்பலெடுக்கின்றதை கண் நிதானமாகப் பார்த்தறியக் கூடுமோ? அடைக்கும்போது கதவோடு

கதவு சரியாய்ச் சேராமல் பிகுவுபண்ணுகின்றது. அந்தப் பிகுவால் நாம் பலகை உப்பலெடுத் திருக்கின்றதெனத் திண்ணமாத் தெரிந்து கொள்ளுகிறே மல்லவா? அதுபோல்தான் அவள் தங்கள்பேரிலுள்ள மட்டற்ற ஆசையைக் காட்டா திருந்தாலும் நான் சாடைகளின் அனுபவத்தால் நன்றாகக் கண்டறிந்துகொண்டேன்.

ஜமீந்தார்:—(இவ்வித வசனத்தைக் கேட்டுப் பரபரப்புடன் நெய்கொண்ட தழல்போலெழுந்து படுக்கைமேல் உட்கார்ந்து) என்ன சாமியாரே? கேலி பண்ணுகிறீர்! அப்படிக்கு நான் அவளை முன்பின் அறிந்ததே கிடையாதே? நெஞ்சையொழித் தொரு வஞ்சகமா?

சாமியார்:—என்னமோ ஏதாவது இருக்கும். பரதேசிப் பயலுக்கு அதெல்லாம் தெரியுமோ? கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பந் தெரிவ தெப்படி? முன் அவளை அறிந்ததில்லை என்றாற் பின்தாங்கள் அவளைச் சர்வாங்கமுங் கண்டறிந்து கொள்ளலா மல்லவா? ஆனல், அநுபவிக்கத்தக்க மகா லெட்சணவதி அவளே தான் என்பதிற் சந்தேக மில்லை. அவளுக்குத் தக்க மாதவராகிய மாப்பிள்ளையும் தாங்களேதான்.

ஜமீந்தார்:—சாமியாரே நீர்இப்போது சோடிகட்டுகிறது சாவலைப்போலல்ல. இது சரியாகவேயிருக்கிறது. ஏனென்றால், இருவரும் அப்படியே ஒருவர் பேரிலொருவர் ஊசிக்காந்தம்போல் இழுப்புண்டு அந்தரங்கங்களில் ஆசைகொண்டவர்களாய் ஏற்பட்டிருக்கிறது.

சாமியார்:—"ஒத் திருப்பது சொத் திருப்பது" அதில் ஒரு ஆட்சேபனையா! அந்தப் பெண் இப்போது தாங்கள் வந்தால்மட்டும் போதுமென்று அவ்வளவு ஆசைகொண்டிருக்கிறாள். ஆஹா! அவள் பூலோகத்தில் இருக்கக்கூடிய பெண்ணல்ல.

ஜமீந்தார்:—என்சாமியாரே! நாம்இப்படிப் பேசிக் கொண்டே இருப்பதனால் என்ன பிரயோசனம்? நேரமும் ஆகின்றதே?

சாமியார்:—ஆஹா! நான் தயார்தான். உங்கள் இருவருடைய ஆசைக் கடல்களாகிய மனோகததியும் இரத்தினகாமும் சங்கமமானாலன்றிக் கோடி புண்ணியம் ஜெனிக்குமோ? இந்த நிமிஷம்கூடவேவருகிறேன். போவோம் வாருங்கள். பலனை வாருங்கள். இன்னம் ஒருசங்கதி இருக்கின்றதே!

ஜமீந்தார்:—அது என்னகாணும் இன்னமொரு சங்கதி? என்சங்கதி வெங்கதியாப் பண்ணிவிடப் போகிறீரோ! தெரியவில்லையே! புரியவில்லையே! அவள் கல்யாண மானவளா? ஆகாதவளா? புருஷனுடைய எமவாதையில் வேறே என்னை இழுத்துவிட்டுக் கம்பிநீட்டிவிடாதேயும்! காரியம்பயனென்று இவ்வளவுதூரமெல்லாம் சொல்லிவிட்டுப் பின் பய முறுத்துகிறீரே?

சாமியார்:—ஐயோ! அந்தத் தொல்லைக்கு நான் ஒருபோதும் ஆளில்லை. கூடுவாரைப் பிரித்தபாவம் எனக்கு நல்ல கதிகூட்டுமோ? இல்லை அப்படிக்கெல்லாம் ஒன்றுமில்லை. அவ்வளவுவேணும் இவ்வளவு வேணும் என்று அந்தப்பெண் வாயைத் திறக்கவேஇல்லை. ஆனால் சாரம் வற்றிய கிழங்களுக்கு எப்போதும் பெண்ணும் மாப்பிள்ளையும் சற்று இஷ்டமாய்க் கூடியிருக்கப் பார்க்கச் சகிக்கிறதில்லை. காஷ்டத்தில் வைத்த கஷ்டமாய் அவர்களுக்கு ஆகிவிடுகிறது. அந்த வடிவழகியைப் பெற்றதாய்க் கிழவிஒருத்தி நல்ல மாத்திற் கரையான் விழுந்தது போ லிருக்கிறாள். சாமிவரங் கொடுத்தும் ஊடு கட்டையாய்ப் பூசாரி கொடுக்க விடுகிறா னில்லை என்ற கதையா யிருக்கிறது. மீன் முள்

தொண்டையிற் சிக்குப்பட்டு நின்றதுபோல் அக்கிழம் அப்பெண்ணின் வீட்டுக்கும் வாசலுக்கும் ஊடே கடி நாயாய்க் காத்துக்கிடக்கிறது.

ஜமீந்தார்:—(சாமியார் சொல்லி வரும்போது நடு வில் முறித்து) ஏன் காணும் அவளென்ன தாசியோ?

சாமியார்:—ஆம்! எல்லாம் தாசிக்கான சின்னங்க ளாகத்தா னிருந்துகொண்டிருக்கின்றன. நான்சொல்லு கிறதை முற்றிலும் கேட்டுக்கொண்டால் பின் தங்க ளுக்கு எல்லாம் நன்றாய்த் தெரியவரும். அவசரப் படுகிறீர்களே?

ஜமீந்தார்:—அம்மாடி! எனக்குக் கிட்ட வந்தாலும் அவள் சங்காத்தம் வேண்டாம்! வேண்டாம்! போதும்! போதும்! திக்குநோக்கி நமஸ்காரம்! சாமியாரே! வந்த னம்! நான் இந்தத்தாசிமுண்டை யொருத்தியாலே ஒரு சமயம் அந்தங்கெட்டுப்பட்டு மாய்ந்தது என்ஜென்மத் துக்கும் போதும் போதுமையா! என்குறி ஓயாத (Fountain Pen) பவுண்டென் பேனுவாய் அழுதுதீர்த் ததே! குற்றலாத்துத் தீர்த்தமாய்க் குமுறி வழிந்ததே அய்யா! நான் சூடுகண்ட பூனையல்லவா! வெள்ளைகண்ட ஞானியல்லவா! கொஞ்சப் பாடா! கொஞ்ச மருந்தா! கொஞ்சப் பணமா! அப்பா! அப்பா! என்னத்தைச் சொல்லுகிறது! என் அரமனையும் ஊரும் முழுக்க அழுகையில் முழுகியதே! வெளியேறப் பெரிய வெட் கக் கேடாப் போச்சுதே? சாமியாரே! சாமியாரே!

சாமியார்:—(கையமர்த்தி) சற்றே பொறுங்கள்! பொறுங்கள்! "குறைவேலையைக் குருக்களுக்குங் காட் டாதே" என்றபடிக்கு என் வாக்கு மூலத்தைப் பூரண மாகக் கேட்டுப் பின் தங்கள் இஷ்டம்போற் செய்யத்

தடை யொன்றுமில்லை. இப்போது அதற்குள் வந்து தங்களைக் கொட்டிவிட்டதென்ன?

ஜமீந்தார்:—சரி சொல்லித்தொலையு மையா! கூட்டிக் கொடுக்கும் தொழில் உமக்குப் பரம்பரையாய் ஏற்பட்டிருந்தால் தெரியும்? இது என்ன கஷ்டகாலம்.

சாமியார்:—தங்களுக்குக் கஷ்டகாலமு மல்ல! நஷ்டகாலமுமல்ல. அதிர்ஷ்டகாலமாகத்தான் வந்திருக்கிறது. "பொறுமை கடலிற்பெரிது" கேளுங்கள் பதறவேண்டாம்! "பதறுதகாரியம் சிதறுது". அந்தப்பெண் தாசி என்றமட்டில் இப்படிக் கூசிக் கூச்சற் கிளப்பினீர்களே? தாசியென்றாலே எல்லாரையும் ஏசிவிடலாமோ? எல்லாரும் சாமியார் நானும் சாமியாரா? தாசிஎன்ற சொற்பொருளுக்குப் பொருந்த இருக்கின்றவள் அவளே! காராட்டை வெள்ளாடு என்றும் சுடுகாட்டை நன்காடென்றும் சொல்வதுபோ லன்று. பெருக்காமற் சுருக்கமாய்ச் சொல்லிவிடுகிறேன். அந்தத் தாய்க்கிழவி முந்நூறு ரூபாய் கொடுக்கவேணு மென்கிறாள். அது கன்னியழியாத கெண்ணிய முடையபெண். தெரிகிறதா? நான் நேரே கூராய்ப் பார்த்துவந்த சங்கதி. சாமானிய மல்ல. திரண்டிருண்டு மூன்றுமாத காலம்தான் ஆகிறது அவள் சடங்கிற்கு அவ்வளவு ரூபாய் செலவாகிக் கடன் காரர் உபாதி ஜாஸ்தியா யிருக்கிறதைத் தீர்த்துவைக்கவேணுமாம். அப்பால் தாங்களாகப் பிரியப்பட்டு அவளுக்கு வேறே கொடுத்தாலும் சரிகொடுக்காவிட்டாலும் சரி; பெண் அவர்கள் பெண்தான். நான் அவர்கள் புறமாக விட்டுவிடுகிறேன். எப்படியாவது பெரிய இடத்தைச் சேர்ந்திருக்கிறதென்று ஒரு மதிப்பாயிருந்தால் அதுவே கோடி ரூபாய் என்கிற உயர்ந்த எண்ணமுடையவளாக அல்லவா இருக்கிறாள்

தங்களுக்கு இவ்வளவு அனுகூலங்களோடெல்லாமா தானேவந்து கிடைக்கும்? நான் சமயஉசிதங்கள் தெரியாத பயித்தியக்காரனா? உண்டவீட்டுக்கு இரண்டகம் செய்கிறவனா? தாங்கள் அந்தப்பெண்ணைப் பார்த்தும் இருக்கிறீர்களே? அவளுக்கு ஒரு ராத்திரிக்கே முன்னூறு பவுனும் கொடுக்கலாமே? நான்வந்த காரியத்தை அனுகூலம் செய்யாமல் தோசிக்கொக்காய்த் திரும்பி வரக் கூடாதென்பதாகத் தாங்கள் அப் பெண்பேரிற் கொண்டிருந்த மையலைத் தெரிந்தவனாகவும் இருந்தபடியால் இதுவிஷயத்திற் பொருளைப் பெரிதாகப் பாராமல் தங்களையே பெரிய பொருளாக மதித்து அந்தத் தொகைக்கே கிழவியிடம்சம்மதப்பட்டுப் பேசிமுடித்து வந்துவிட்டேன்.

ஜமீந்தார்:—ஷபாஷ்! இப்போது எனக்குச் சம்மதம்தான். கன்னியழியாத பெண்ணென்று சொல்லுகிறீரே? பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல் அப்படியானல் அதுவெகு சிலாக்கியம்தான். ஆனாற் பொருட்செலவுதான் அசாத்தியமாக இருந்துகொண்டிருக்கிறது.

சாமியார்:—தாங்கள் கோடீஸ்வரராயிருந்தும் என்னைப்போற் கஞ்சிக்கு வாடீஸ்வரரைப்போலப் பேசுகிறீர்களே? தங்களுடைய கௌரவத்துக்குத் தக்கபடி அப்படிப் பட்டவளையன்றோ அணையவேணும்? விளக்குமாற்றுக்குப் பட்டுக்குஞ்சம் கட்டியதுபோலக் கஞ்சிக்குச் செத்தவர்களுக்கு அவ்வஞ்சி பொருந்துவாளோ? "தங்கத்துக்குப் பங்கமேது"? அவளை எத்தனையோ லெட்சாதிபதிகள் தெரிந்தால் தாங்கி வாங்கிக் கொள்வார்கள். புஷ்பம் இப்போதுதானே மலர்ந்திருக்கிறது. நான் நீயென்று சூடிக்கொள்ள இனி வெகு

காலமா செல்லும்? தாங்கள் பார்த்தபெண்ணை யின்னொருவன் பார்க்க விடலாமா? இராஜாக்களுக்குமோக ஸ்திரீகள் வேண்டியதே முக்கியம். கொக்குக்கு ஒரே மதிபோல இந்தமதிமுக நிதியைக்கொள்ளுங்கள். தெய்வங்களும் ஜோடி ஜோடியாகப் பெண்கொண் டிருக்கின்றனவே? தங்களுடைய அந்தஸ்துக்கு உபய நாய்ச்சியாரே, வள்ளிதெய்வானைபோலும் ஸ்ரீதேவி பூதேவிபோலும் உமை கங்கைபோலும் சித்தி புத்திபோலும் அமைந்து விளங்கத்தக்கவர். "உண்ட உறுதியை உடம்பிலே காண்" என்றபடி இராஜபோசனம் உண்டவர்களுக்கு அபரிமதமான தாதுவிர்த்தி உண்டாயிருக்கும். கண்மாயில் மிதமிஞ்சிய நீருக்குத் போக்கு விடுவார்கள், அதுபோல் தங்கள் மதம் சுமாராய் அடங்கித் தேகாரோக்கியம் ஆகும்படிக்கானவிதம் தாராளமாய் ஏற்படவேண்டியதே நியாயம். "இரண்டு பெண்டாட்டிக்காரனுக்குக் கொண்டாட்டம்" என்றபழமொழியும் உண்டு. ஒற்றைக் குதிரைகட்டிய வண்டிக்குப் பெருமையில்லை. வண்டியில் எத்தனை குதிரை சேருகிறதோ அத்தனைக்குத் தகுந்தமதிப்பு ஏறுகிறது. அதுபோல் ஒவ்வொரு பெண்டாட்டிக்கும் ஒவ்வொரு அந்தஸ்தாய் ஏறி மகா சத்தி யுடையவன் மகா புருஷன் என்றபட்டம் பறக்கிறது. பிரயோசனம் இல்லாமலுங் கூடத்தாங்கள் எவ்வளவோ செலவு செய்து விடுகிறீர்களே? அந்த முன்னூறு ரூபாயும் தங்களுக்கு ஒருவரவுமில்லை செலவுமில்லை. எத்தனை முன்னூறானாலும் அத்தனை அழகு கொண்ட திருமகள் வாய்க்கப்போவதில்லை. ஒரு சலிப்புமின்றி வலியவந் திருக்கின்றது. தங்கள்பேரில் அந்தரங்கப் பிரியம் வேறேவைத்தவளா யிருக்கிறாள். நான் என்னவேளையிற் காலெடுத்துவைத்தேனோ. எல்

லாம் பாலும் பழமுமாய் ஒழுகிப் பழுத்து விட்டன. இப்படிப்பட்ட பெண்ணை யனுபவிக்கத்தக்க புண்ணிய வான் கண்ணியவானாகிய தங்களைத்தவிர என்னைப் போன்ற கோமணாண்டிக்கா கிடைக்கும்? நான் உங்கள் இருவரையும் கூட்டிவைத்துக் கண்ணாரப் பார்த்தாவது ஒருதிருப்தியை அடையலாமென்று ஆத்திரப்பட்டால் அதற்குக்கூட எனக்குஅதிர்ஷடமில்லைப் போலல்லவா இருக்கிறது? நீங்கள் அனுபவிக்கும் சுகம் முழுக்க எனக்கே தத்தம்பண்ணி விடுவீர்களல்லவா?

ஜமீந்தார்:—எனக்கு ஆத்மார்த்தமான சாமியாரே! "நல்லார் குணங்க ளுரைப்பதுவு நன்றே" என்றபடி அந்தப் பெண்மணியாகிய நல்லாரைப்பற்றி இவ்வளவு சொன்னதே எனக்குக் கர்ணாமிர்தமாய்ப் பரவசம் தந்துவிட்டதே! மற்றவைகளைப்பற்றிநான்என்ன சொல் லக்கூடியதா யிருக்கிறது? எனக்கு இப்போது அதிக ஸந்தோஷம் உமது பேரில் உண்டாகிவிட்டது. இப் படிப்பட்டதொரு குற்றமற்ற பேருதவியைச் செய்த தற்குப் பதவியாய் நான் உமக்கு என்ன பிரதி செய்யப் போகிறேன்? முதலில் மொட்டையில்லாதபடி சுக்லாம் பரதாமாக ஒரு நன்மையை உமக்குத்தொடங்கிவிடத் தீர்மானித்தேன். நீர் என்னிடம் பிரியமாய்க் கேட்டுக் கொண்டிருந்தபெரிய பூந்தோட்டத்தை உமது தரும கயிங்கரியத்துக்காக இந்நிமிஷமே கொடுத்துவிட்டேன்.

சாமியார்:—(ஸந்தோஷக் கொந்தளிப்புடன்) மஹா ப்ரபோ! தாங்கள் க்ஷேமமாயிருக்க வேணும். அடிமை செய்கிற தருமமெல்லாம் சமுகத்தைச் சேர்ந்ததே தான். பிரஜை செய்கிற தருமம் அரசைச் சேர்ந்ததே. இன்னம் இவளைப்போன்ற வன்னப்பெண்களை எல்லாம் தாங்கள் நன்னயமாய்ச் சுகிக்கக்கூடிய போக யோகங்

கள் வரும்படிக்குப் பரமசிவத்தைப்பிரார்த்திக்கிறேன். நல்ல சிவபூசைப் பலன்தான் இப்படிப்பட்ட ரூபலாவண்யமாகிய பெண்களை யனுபவிக்கும்படிக்குச் செய்யும் (என்று தனது பையிலிருந்த விபூதியை யெடுத்துச்) சிரஞ்சீவியா யிருக்கவேண்டும், சகலமங்களங்களும் உண்டாகவேண்டும் (என்று தன் கையினாலே ஜமீந்தாருடைய நெற்றியில் வெற்றியாகப் பூசினார்).

ஜமீந்தார்:—அப்பால் நாம் செய்யவேண்டிய காரியம் என்ன என்பது தெரியவில்லையே?

சாமியார்:—சீக்கிரம் நாம் தொகைக்கு ஏற்பாடு செய்து புறப்படவேண்டியதுதான். "ஒரு துரும்பும் பல்லுக் குத்த உதவும்" என்றது போல் நான் கையாலாகாதவனாக இருந்தாலும் ஏழையாகிய நான் என்னாலானமட்டும் இந்தச் சரீரத்தைத் தங்களுக்கு உழைத்துக் கொடுக்கச் சித்தமாயிருந்துகொண்டேதானிருக்கிறேன்.

ஜமீந்தார்:—"மன்னனுக்குத் தன்தேச மல்லாற் சிறப்பில்லை" இருக்கும்ஸ்தானத்தில் இருந்தால் நமக்கு ஒன்றும் குறைவில்லைத் தான். வந்தயிடத்தில் திடீரென்று அவ்வளவு தொகைக்கு அதிலும் இந்த அகால நேரத்தில் என்ன மார்க்கம் இருக்கிறது? "காசிக்குப் போயும் சனியன் தொலையவில்லை" என்றபடியாக வல்லவா இருக்கிறது? யோசனைபாயும் உமது யோசனை என்ன?

சாமியார்:—என்ன பெரியகாரியம்? தங்களுடைய விலையுயர்ந்த மோதிரத்தைக் கழற்றித்தாருங்கள்! நான் ஒரு நிமிஷத்திற் பணம்சகிதம் வருகிறேன். பின் வட்டியும் சேர்த்துக்கொடுத்துச் சீக்கிரம் திருப்பிக்கொள்ள

லாம். ஆனை ஆள் விழுங்கிவிடுகிறதென? இதற்காக இப்போது தற்செயலாய் வந்திருக்கும் பிரமானந்த சுகத்தை யிழந்தாவிடுகிறது? அதுஒருபோதும்கூடாது. சமயத்துக்கு உதவாதநகை நகைப்புக் கிடமல்லவா? "தாம் வீழ்வாள் மென்றோட் டியிலினி னிதுகொல்-தாமரைக் கண்ணு னுலகு" தானுகவே அந்த அப்சர ஸ்திரீயானவள் தங்கள்பேரிற்காமங்கொண்டுதலைசுற்றி மயங்கிஇருக்கிற போது அப்படிப்பட்டவளைக் கூடிச் சுகிப்பதல்லவோ இன்பத்திலும்இன்பம்? பிரியப்படாதவளைத் துன்பமாய்ப் போய்க் கட்டிப்பிடித்துப் பிணத்தோடு போராடுவதுபோற் சுகிக்கநினைப்பதில் என்னபிரயோசனம்? வலிய வந்தவளைப் புணராவிட்டாற் பெரியபாவமென்று சாஸ்திரமிருக்கிறது. தங்களுக்கு இன்று வைகுண்ட பதவி கிடைக்கப்போகிறது. அப்பதவியால் உண்டாகக் கூடிய பேரின்பத்திற்கும் மேலான வைபவம் வலிய வந்து காத்துக்கொண் டல்லவா கிடக்கிறது? வருங் காலத்தில் வேண்டா மென்றாலும் வருவன வந்தே தீரும்.

ஜமீந்தார்:—ஆஹா! நீர் சொன்னது சரியான திருவாசகமாகவே தான் இருக்கிறது. மோதிரவிஷயமான சங்கதியும் நூற்றிலொரு கூற்றுதான். சமயத்தில் நல்ல யுக்திக்கு நீர் மந்திரியும் எல்லாமுமாய்த்தான் இருக்கிறீர். அந்தப்படிக்கு ரூபாய் முன்னூறு அதிவிரைவில் வந்து சேரும்படிக்குச் செய்வது உமது கடமைதான். [என்று தனது வெள்ளி (சுக்கிரநட்சத்திரம்) போன்ற மோதிரத்தைக் கழற்றிக்கொடுத்தான்].

சாமியார்:—(அதை வாங்கி)க் கண்ணுக்கு ஒளி கொடுப்பவன் நீயேயென்று கண்ணில் ஒற்றி வெகு

விரைவில் வெளியேறிப் பக்கத்து செட்டிகள் தெருவிற் புகுந்து தனக்கு நேர்ந்த ஒரு வீட்டின் கதவைத் தட்டி அய்யா செட்டியாரே! கதவைச் சற்று தயை செய்து திறக்கவேணும்!..ஒருவியாபாரம் வந்திருக்கிறது.

ஓர் குள்ளச்செட்டி:—(கதவைத்திறந்து வெளியே வந்து) நீயார் அய்யா! என்ன காரியம்?

சாமியார்:—ஒருதகுந்த நகையின்பேரில் இப்போது முன்னூற்றன்பதுரூபாய் வேண்டியதாயிருக்கிறது?

செட்டி:—இரும், இதோ உள்ளேபோய்த் தெரிந்து வருகிறேன் (என்றுமஞ்சத்தில் அப்போதுதான்படுத்து அரைத் தூக்கமாயிருந்த தன்னுடைய பெண்சாதியின் காலை வருடி உபசரித்தான்).

பெண்ஜாதி:—(கண்ணைத் திறவாமல்) அடே! உனக்காக நான் எவ்வளவு நேரம் எதிர்பார்த்துக் கொண்டே தூங்காம விருக்கிறது? (என்று கழுதையைப்போலக் காலை வெடுக்கென உதறி ஒரு உதை விட்டாள்).

செட்டி:—(முகத்தில் அந்த உதையைப்பெற்று, ஐயோ! நானல்லவா!

பெண்ஜாதி:—(படக்கென விழித்துநோக்கி) அடே சீ! நீயா? நான் சக்கண்ணன் என்றல்லவா நினைத்து விட்டேன். இன்றைக்கென்ன உனக்கு ஒருநாளும் இல்லாத திருநாளாய் என்னிடத்தில் ஷோக்கு வந்து விட்டது? கோஷாப் பலே! நல்லது, நீ எல்லா வேலைகளையும் பார்த்துப் பர்க்காஸ்த்துச் செய்து விடுகளைப்பூட்டி விட்டாயா?

செட்டி:—ஆம் (என்று துன்பத்துடன் அவளுக்குப் பதிற் சொல்லித்தன் முகத்தைத் தடவிக்கொண்டு) கண்கெட்டுப் போயிட்டது (என்றான்).

பெண்ஜாதி:—னக்குக் கண்கெட்டுப் போனால் என்ன? புருஷனுக்கு இருக்க வேண்டிய அங்கமே அடியோடு தொலைந்து போயிருக்கிறதே? கண் புண்ணுப் போய்விட்ட மட்டில் தான் உனக்குக் குறைவு வந்து விட்டதே? கண்போனால் என் கண்ணாளர்களுடன் நான்இருப்பதை நீ பார்க்காம லிருக்கும் விசேஷம் ஏற்பட்டு விடுமே? எதற்காக நீ இப்போது வந்து என் துயிலைக் கலைத்தாய்?

செட்டி:—ங்களுக்கு இந்தச் சங்கதியைச் சொன்னால் என்பேரில் ஸந்தோஷப் படுவீர்கள் என்று வந்தேன். தோஷமுண்டாகிவிட்டது. யாரோஒருவர் தலைவாசலில் நகையுடகுவைத்து ரூபாய் முன்னூற்றன்பது வாங்கிப்போகவந்திருக்கிறார்.

பெண்ஜதி:—அவரார்? உள்ளே வரச்சொல்லு!

செட்டி:—(தெம்மாத் தெம்மா என்று சிரமப்பட்டு விழித்துக்கொண்டு திரும்பிப்போய்) அய்யா! உம்மை உள்ளே கூப்பிடுகிறார்கள். வந்துநேரே கலந்து கொள்ளும்.

சாமியார்:—(உள்ளே சரேலென்று சென்று, படுக்கையினின்றும் எழுந்திருப்பவளை நோக்கி) இந்த மோதிரத்தை வைத்துக்கொண்டு ரூபாய் முன்னூற்றன்பது கொடுக்கவேணும் (என்று அதை நீட்டினார்).

பெண்ஜாதி:—(அந்த மோதிரத்தை ஒய்யாரமாகக் கைநீட்டி வாங்கி, அது அதிக விலை யுள்ளதென்று தெரிந்துகொண்டு) சரி, இதன்பேரில் ரூபாய் முன்னூற்

றன்பது கொடுக்கத் தடையில்லை. நூற்றுக்கு வட்டி ரூபாய் ஒன்றறை தரவேண்டும் (என்றுள்).

சாமியார்:—அப்பா! ஒன்றரை ரூபாயா! இதுஎன்ன ஆள்விழுங்கி வியாபாரமா யிருக்கிறது?

பெண்ஜாதி:-(சாமியாரைக் கவனிப்பாய்ப்பார்த்து) ஆள்விழுங்கி வியாபாரமும் இங்கு உண்டுதான். வட்டி சங்கதிக்கென்ன? அகாலமாகி விட்டபடியால் தாங்கள் இன்றிரவு இங்கே இருப்பதாகமட்டும் ஆனால் நாளைக் காலையில் பணத்தைப் பெற்றுப்போகலாம்.

சாமியார்:-(குரூபியாகிய அவளைப்பார்த்து) நான் இப்போது ஒரு அவசர காரியமாய்ப் பணம் சகிதம் போகவேண்டியவனு யிருக்கிறேன்.

பெண்ஜாதி:—(அடக்கமாய்ச் சிரித்து அபிநயங் காட்டி) அப்படிஎன்ன உமக்கு இந்தநேரத்தில் அவசர காரியம்? இந்த நேரத்திற் பார்க்கக்கூடிய காரியம் வேறே யல்லவா யிருக்கிறது? அந்தக் காரியத்தை நீர் இங்கேயே வீண் அலைச்சலில்லாமல் வைத்துக்கொள் ளத் தடை இல்லை; ஸந்தோஷமாய் இப்போது இங்கே இருந்துபோகலாம். வட்டிவேண்டிய தில்லை.

சாமியார்:—(எண்ணுகிறார்) என்ன இவள் பேசுகி றது ஒருவித அர்த்தமாக வல்லவா இருக்கிறது? விகார ரூபியாகிய இவளையும் ஒரு புருஷன் இச்சிப்பானு? இவ ளுடைய குலதர்மப்படி பணத்தைக்கூட லெட்சியம் செய்பவளாகத்தோன்றவில்லையே? அரைப்பணத்தைக் கூடவே ஆள்தேடுகிறாளே? இவள் முழுப் பணக்காரி யுடன் அரைப் பணக்காரியாகவும் இருக்கிறாளே! முன் பார்த்தவளுக்கு இவள் திருஷ்டி பரிகாரம். கிளம்பிய உற்சாகமும் இப்போது இவளைக்காணப் படுத்துவிட்ட

தே? அரசனுக்கு வலியவந்த யோகமென்ன நமக்கு வலிக்கவந்த ரோகமென்ன? இவளைப் பார்க்க நேர்ந்ததும் நாம் செய்த பாவமன்றோ? இந்த லெட்சணத்தில் இவள் கொண்டைட்டு நீட்டுப் பயில்வேறே செய்கிறாள். அவைகளுக்கு ஏற்றஅங்கம் அமைந்திருந்தா லன்றோ அழகாயிருக்கும்? இதுஎன்ன சர்வ ஆபாஸமாய் வாந்தியெடுக்க வருகிறதே! கர்ம சண்டாளமாக வல்லவாயிருக்கிறது? இதில் இந்தச் சொரூபம் என்னைக்கூடச் சொல்லி அழைக்கிறதே? ஐயோ! விதியே! நமது பாக்கியம் வெகு யோக்கியம்! வாக்கியம் பேச வாய்மூடவேண்டும்? இந்த வெட்கத்துகுக் கட்கத்துக்கு இரையாகி விடலாம். "நல்ல காரியத்துக்கு நாலாயிர விக்கினம்" என்றபடி நமது முயற்சிக்கு இடையூறாய் இந்தச் சனிரூபம் இப்படி வந்து சனித்ததே? கோடிபொன் கொடுப்பதா யிருந்தாலும் நான் இந்தக் குரூபியின் கோடியிற் கூட மிதிக்கமாட்டேன் (என்று துரிதப்பட்டு) ஐயோ! பெரியகாரியம் கெட்டு வீரியம்போய்க் குடி முழுகிவிடுமே! இரண்டிலொன்று சொல்லி அனுப்பி விடுங்கள்! (என்றார்).

பெண்ஜாதி:—(தன்னுடைய அபிப்பிராயத்துக்கு அவர் இணங்காதசுபாவத்தரென்று நன்றாய்த்தெரிந்து கொண்டு) நூற்றுக்கு வட்டி ரூபாய் ஒன்றரைக்குக் குறையாது (என்றாள்).

சாமியார்:—(இனி அலைச்சல் குலைச்சல் எனக் கருதி) சரி அந்தப்படிக்கே வேணுமானால் வைத்துக் கொண்டு தாருங்கள் (என்று வேண்டிய ஏற்பாடுகளுடன் தொகையைப் பெற்று விரைந்து ஜமீந்தார் முன் வந்து குதித்து) இதோபணம் இந்தட்சணம்!

ஜமீந்தார்:—சாமியாரே! வந்து விட்டீரே! வாயு வேகமாயிருக்கிறதே? பெரியவாள் வாயிற் குளிகை போட்டு ஆகாயகமனம் செய்கிறவர்களல்லவா?

சாமியார்:—சரி, புறப்படுங்கள்! நூற்றுக்கு இரண்டு ரூபாய் வட்டியாகத் தீர்ந்தது. என்ன செய்கிறது? இந்த அகாலத்திற் கிடைக்கிறது மகா வருத்த மாகிவிட்டது. இதில் நமக்கு அவசர தடபுடல் வேறே - நாம் வெகு சீக்கிரமாய் வட்டி யேறவிடாமல் திருப்பிக்கொள்ளலாம். பெரியகாரியம் இப்போது புறப்படவேண்டியது தான்.

ஜமீந்தார்:—தேவடியாள் வீட்டுக்கு நான் வருகிறது சங்கூசமா யிருக்கிறது. காரியத்துக்குக் கழுதைக் காலையும் பிடிக்க வேண்டியதாய்த்தானே இருக்கிறது.

சாமியார்:—இங்கே அவளைத் தருவித்து விடலாம். ஆனல் நமது பேர்வழிகள் கூட்டமாக இருக்கிறது. மேலும் இந்த விடத்தில் மனம்போல் உல்லாசமா யிருக்கச் சரிப்படாது. இதை நான் முன்னமே யோசித்து அங்கேயே எல்லாம் ரெடிசெய்து விட்டேன். (இருவரும் இராக்குமுத்து வீட்டுக்கு வழிநடப்பதானார் கள்).

## (12).

சாமியார், ஜமீந்தாருடன், வேகமாய் நடந்து இராக்குமுத்துவின் தலைவாசலைச் சேர்ந்து கதவைத் தட்டி, அடீ ஆயீ! என்று கூப்பிட்டார். அவள் காரியத்துக்கு மட்டும் செவிடு அல்லாமல் தயாரா யிருந்து ஒரே சத்தத்தில் இதோ காத்துக்கொண்டே தான் இருக்கிறேன் என்று சிக்கிரம் கதவைத் திறந்தனள். இருவரும் சொர்க்க வாசலாக நினைத்துப் பிரவேசித்தார்கள்.

கிழவியானவள் அவர்களை நன்ருய் உற்றுப் பார்த்துக் கொண்டே கும்பிட்டு அவர்கள் உள்ளே வந்தவுடன் கதவைப் பஸக்கென்று கெட்டியாய் அடைத்துவிட்டு உபசாரத்துடன் உட்கட்டுக்கு அவர்களை அழைத்து வந்து உயர்ந்த ஆசனத்தில் ஜமீந்தாரை இருக்கச் செய்தவுடன், அக்கிழவி அவசரத்தில் அவயவங்கள் முன்னேக்காட்டிலும் அதிகமாய் அலைந் தாடும்படிக்குச் சேலையும் ஒருபக்கம் குலைய இராக்குமுத்து இருக்கும் இடம் கூனி ஓடி "அடி மகளேள! அந்தா அ ரா அஷா அ வந்தூஉ உட்டாங்கா அ வந்து அவரே கும்பூடீடீ" என்ருள். இராக்கு முத்து, மேகத்தை விட்டு வெளி வந்த பூரணமதி போலும் "ஜல்" என வெளிவந்து ஜமீந்தார் முன் பூங்கொடிபோல் நாணத்தால் வளைந்து அவர் பாதப் போதிற் புஷ்பங்களைத் தூவிக் கீழே விழுந்துகும்பிட்டு எழுந்து ஒதுங்கி நின்ருள். ஜமீந்தார், அவளைக் குளிரவாழ்த்தி முன்சற்றுநேரம் அவளுடைய அழகைப்பார்த்துப் போனபடிக் கல்லாமல் இப்போது சாவகாசமாக நன்ருய் ஊன்றிப்பார்த்து அதிற் சலிப்பு உண்டாகாமல் அகன்ற கண்ணுய் மேலும் கண்களை வேண்டியவனைப் போலிருந்து கொண் டிருந்தனன். சாமியார் இவைகளைக் கண்டு மனம் பொருமல் "ஹர ஹர மகாதேவா" என்று உச்சரித்துப் பெருமூச் செறிந்து விபூதியை எடுத்துத் தாறு மாறுமாகத் தம் நெற்றி நிறையத் தேய்த்துக்கொண்டு நின்றனர். ஜமீந்தார், அவரைத் திரும்பிப் பார்த்து "நீர் நின்று கொண் டிருக்கலாமா? உட்காரும்! உட்காரும்!" என்ன, அவர் பாதகமில்லை, தாங்கள் சும்மா வந்த காரியத்தை யே பாருங்கள். இவ்விடத்திலெல்லாம் என்ன எனக்கு மரியாதை? வெண்ணெய் நல்லூர்ச் சடையரைக் கவிச்

சக்கிரவர்த்தியாகிய கம்பர் இந்த விதமாகவா உபசரித்தார்? "நான் அவரை வைக்கிற இடத்திலல்லவா வைப்பேன்" என்று சடையர் புகழ் என்றும் அழியாதிருக்கும்படிக்குத்தாம் வியக்கப்பாடியுள்ள புண்ணிய இராமாயண விருத்தங்களுக்கு ஊடே ஊடே அன்றோ அவருடைய பெயரை நாட்டித் தளிர்க்க வைத் திருக்கின்றனர்?

விராயி:—ஏண்டி மவளே! (மகளே) எஷமாங்க முன்னே வருவாங்கலா? அது உ என்ன அ கூஉச்சம்? இப்படிவா அ! இராக்குமுத்து, "இந்தா தான் நிற்கிறேன் அல்லவா?" என்று முன்னேவந்து வாழைக்குலை போல் தலையைக் கீழே போட்டபடிக்கு நாணிப் பகட்டாய் ஜொலித்துக்கொண்டு கெலிப்புடன் நின்றாள். தீப வெளிச்சத்தில் அவள் வடிவழகு ஜமீந்தாருக்கு மிகவும் நேத்திரோற்சவமா யிருந்தபடியால், அவர் தீபத்தைக் கண்ட விட்டில் ஆபத்தை உணராது மயங்கியது போல் அவளைப் பிரமிப்பாய்ப் பார்த்துமனதில் அடங்காத ஆனந்தங்கொண்டு சிரித்த முகமா யிருந்தனர். சாமியார், இவைகளை எல்லாம் குறிப்பாகப் பார்த்துப் பெருகும் பெருமூச்சுகளை எல்லாம் யோகதம்பனம் செய்து "அந்தப் பெண் பருவமடைந்தபடிக்கே யாதொரு அனுபோகமும் தெரியாத தெரிவையாயிருக்கிறாள். புதுப்பெண்ணெல்லாம் முதலில் அப்படித்தான் இருக்கிற சுபாவம். சாதகத்தைத்தவிர அதினாலென்ன பாதகம்? இனிப்பழகப் பழக அவளுக்கு இனிச்சபழமாய் எல்லாம்தானே வந்துவிடும். குச்சுக்காரிகள் தான் குப்பைமேட்டுக் கழுதைகள்போற் கனைத்துப் பல்லை இளிப்பார்கள். இவள் பைகோ மட்ட மல்லவா? யோக்கிய முள்ள பாக்கியவதி· ஆயீ! நீ அதை யெல்லாம்

அவளிடத்தில் ஒருகுற்றமாகச்சொல்லலாமா?உத்தமப் பெண்களுக்கு உள்ள லெட்சண மல்லவா அது?" என்ருர். வீராயி, "இல்லே எ அய்யா அ சாமீ இ! அவளுஉக் கூகூ உச்சம் ஆகுமா அ?

ஜமீந்தார்:—கூச்சம் பெண்களுக்குச் சுவாபமாய் ஏற்பட்டதுதானே? அதுஇல்லாவிட்டால் நன்ருயிருக்குமா? சும்மா திமிறிய தண்டமாரிபோல் வந்து நின்ருல் அது கோரமல்லவா? இவள் திருநாமம் என்ன?

வீராயி:—(செறுமிக்கொண்டு விநோத நடுக்கக் குரலுடன் விரலைநீட்டி) இவளுக்குஅந்த ஜெகதீஸ்வரியினுடைய பேர்தான், ராக்குமுத்து என்று வைத்திருக்கிறது.

ஜமீந்தார்:—" இவளுக்கு மதன ஜெகன்மோகன வல்லி" என்று பொருந்தப் பேர்வைக்க வல்லவாவேண்டும்? நான்இவளை அவ்வாருகவே அழைத்து வருவேன்.

வீராயி:—துரைசித்தம் கனசித்தம். துரைகண்ணுக்கு அவள் அந்தப் பேருக்குத் தக்கபடி தோன்றிக்கொண்டிருந்தால் எங்கள் அதிர்ஷ்டம்தான். அவள் தெரியாத சிறுகுட்டி. அவள் என்ன பண்ணினலும் மகாராசாக்க பொறுத்துக் கொள்ளத்தான் வேணும். தங்களுக்கு நடக்கவேண்டிய விதங்களை அவள் சீக்கிரம் பழகிக்கொள்வாள். அந்தப்புள்ளே ஸங்கேதம் நல்லாப் பாடுவாள். ராசாக்க கேக்கவேணும். (மகளைப் பார்த்து) எங்குட்டி! தம்பூரேவெச்சு ரெண்டுபாடுவே?

ஜமீந்தார்:—ஓஹோ! இவளுக்குப் பாட்டு வேறே வருமோ? சற்றுபேசுவதே பஞ்சவர்ணக்கிளிபோலும் பஞ்சாமிர்தம் போலும் இருக்கிறதே!

சாமியார்:—அதிலெல்லாம் ஒச்சம் சொல்ல முடியாது. வாசமுள்ள தங்கப்பூ அவள் (என்று சொல்லிக் கொண்டே ஜமீந்தாருக்குத் தெரியாமல் கிழவியிடம் சைகைசெய்து ரூபாய் முன்னூறும் தயாராய்த் தன்னிடம் இருப்பதாகப் பணமுடிப்பையும் காட்டிவிட்டார் கிழவிக்கு வெகு ஸந்தோஷமாகிவிட்டது).

இராக்குமுத்து:—(கிழவியை நோக்கி) நீ தம்பூர் எடுத்துக்கொடுவேன்?

வீராயி:—இந்தாடி அம்மா! நான் எடுத்துத் தருகிறேன் (என்று தம்பூரை யெடுத்து வந்து அவளிடம் கொடுத்து) சொதெபெ (ஸ்ருதியை) நல்லாப்பாத்துக் கூட்டிக்க. எஜமாங்க ஜந்தோஜப்படும்படி நல்ல ராகத்தில் எடுத்துப் பாடு!

இராக்குமுத்து:—(தம்பூரைக் கையில்வாங்கி அதினுடைய உருக்குத் தந்திகளுக்கு நெய்ப்பதம் போடுவது போலக் கொஞ்சம் ஒருபக்கம் மறைந்து நின்றுகொண்டிருந்தாள்).

வீராயி:—(அந்தச் சமயத்தைத் தெரிந்துகொண்டு அவளிடம்ஓடிப்போய் ரகசியமாக) ரூபாய் முன்னூறும் சாமியார் கொண்டுவந்து விட்டார். நீ ஒன்றும் கவலைப் படாதே. சமயல் அரைக்குள் வந்தகப்பட்ட முயல் தப்பப்போகிறதா? நான் அதைக் கைப்பற்றி விடுகிறேன் (என்று சொல்லித் திரும்பிவந்துவிட்டாள்).

இராக்குமுத்து:—(திரும்பிப் பொலியவந்து ஜமீந்தார் இருக்கும்படி வருதிசெய்தபின் அவருக்குநேரே உட்கார்ந்து ரீங்காரத் தொனி கிளம்பத் தம்பூரை மீட்டிக் காம்போதிராகம் ஆலாபனம் செய்தாள்.

சாமியார்:—இதல்லவோ காம்போதிராகம். மற்ற தெல்லாம் கழுதைக் காம்போதி.

இராக்குமுத்து:—(ஸந்தோஷமாகி) அந்த இரா கத்திலேயே) "அழகுள்ள துரையிவ ராரடீ" என்று பல்லவியாக அதை நிரவிப்பாடினுள். தென்றலுக்குச் சாகைகள் அலேந்தவாறில் கேட்டிருந்த மூவரும் அப் பாடலுக்குச் சிரம் கரம் உரமாதிகளை ஆட்டியிருந்தனர்.

ஜமீந்தார்:—அந்தப்பல்லவியின் சாஹித்தியத்தைக் கேட்டுத் தன்னைப்பற்றி அவள் அப்படிப் பாடுவதாக நினைத்துப் பிரம்மானந்த ஸந்தோஷத்தில் மூழ்கி பேஷ்! பேஷ்! அச்சா! பலே! குயில்கூவுகிறது போலல்லவா இருக்கிறது! ஆஹா! இவளுடைய சரீரத்தின் நயப்பை நான் என்ன சொல்வேன்! ஏன் சாமியாரே! எப்படி யிருக்கிறது?

சாமியார்:—அதென்ன கேட்பானேன்? சொல்லவா வேணும்? எல்லாம் தங்களுக்கு அர்ப்பணம்தான். நான் பிணம். எல்லாமணத்தையும் வெறுத்த சாமியார்ப்பயல் தானே? ஆனல் அவள் ராகத்தில் எனக்குராகம் (ஆசை) தான். மற்றப்பாகத்தில் தங்களுக்கும் மோகம்தான்.

ஜமீந்தார்:—நமது குடும்பங்களி லுள்ள பெண்க ளைக் கட்டி அழுகிறோமே? அதில் இவ்வளவு ஆனந்த அனுபவங்களுக்கு ஏது உண்டாயிருக்கின்றதா? சட் நான்சென்ஸ்! இதுவல்லவோ பேரானந்தம்? அதுதெரி யாமலா குடும்பங்களை அறைவீடுகளில் நாலும்படிக்கும் விட்டு அந்தஸ்துள்ளவர்கள் தங்களுக்கேற்ற இவ்வித மாகிய உல்லாச சுந்தரவதிகளைச் சல்லாபமாய் அடைய விரும்பிக்கொண்டிருக்கின்றனர். மேலும் வீட்டு ஸ்திரீ

கள் குளிர்க்கிறதில்லை, நல்லஆடை தரிக்கிறதில்லை, சரச மாய்ப் பேசுகிறதில்லை; ஆனால் நகை நகை நகை என்று மட்டும் புருஷரை வாட்டி யெடுத்து விடுகின்றார்கள்; ஏழைகள் சுமை சுமப்பதுபோல் இவர்கள் நகைகளைச் சுமந்து திரிகிறார்கள். அதிகநகை அழகையும் குறைத்து விடுகிறது. இதோ இப்பெண்ரத்தினம் எவ்வளவு சுத்த மாய் எவ்வளவு நாகரீகமுடையவளாய்ப் பிரகாசிக்கின் றாள்?

சாமியார்:—பரதேசிப்பயல் வார்த்தையைத் தாங் கள் முந்திக் கேட்கமாட்டேன் என்றீர்களே? நான் துற வறம் பூண்டிருந்தாலும் "களவும் கற்றுமற" என்றபடி இவைகளெல்லாம் எனக்குப் பாடம். விட்டவர்களே துறவிகள். அவர்கள் எதைவிட்டோம் என்றுநினையாம லிருக்க முடியாது. மண்ணாசை பொன்னாசையைக் காட் டிலும் இந்தப் பெண்ணாசையைத் துறவிகள் விட் டிருக்கமாட்டார்கள். குரங்கை நினையாமல் மருந்து சாப்பிடவேணு மென்ற கதையைப் போலவே துறவிக ளுக்குப் பெண்ணை நினையாமல் தவம் செய்யவேணு மென்று ஏற்பட்டிருக்கிறது. கையில் மருந்தை எடுத்த நிமிஷம் குரங்கின் ரூபம்வந் துதித்துவிடும். தவத் தைத் தொடங்கும்போது பெண்ரூபம்வந் துதித்து விடும். நான் சொல்வதெல்லாம் ஆயிரத்தில் ஒரு வார்த் தையாகத்தா னிருக்கும். இப்போதெல்லாம் அநுபவிக் கிறது தாங்கள் தானே? நான் எப்போதும் கோம ணாண்டி கோமணாண்டிதான்.

வீராயி:—தன்மகள் பாடிக்கொண் டிருக்கும்போது பொறுமையாய்ச் சும்மா இராமல் தானும் அவள்கூடச் சேர்ந்துபாடுவது சிலாக்கியமாயிருக்குமென்று நினைத்து

நடுக்குவாதக் கிழட்டுச் சாரீரத்தோடு பாடத்தொடங்கி விட்டாள். அவளுடைய சாரீரம் தம்பூர் சுருதியுடன் சேரக் கஷ்டமாயிருந்தது. மேலும் பாடமுடியவில்லை கீழும் பாடமுடியவில்லை. ஊடே ஊடே அவள் இறுமிக் கொண்டாலும் தான் திவ்யமாய்ப் பாடக்கூடியவள்போல இராக்குமுத்துவின் பாட்டை வெகுபாடுபடுத்தி முற்றிலும் கெடுப்பதாயினள்.

சாமியார்—(ஸங்கீதத்தில் நல்லஞானஸ்தராயிருந்தபடியினுலே கிழவியின் செய்கையைச் சகியாதவராய்) ஆயி! நீ அதிகச் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டாம்! உனக்கு இருமல் பெரிய மல்லுப் போடுகின்றது. நீ சௌக்கியமாய்ச் சும்மாயிரு! அவள் மட்டும் பாடினுற் போதும் (என்ருர்).

விராயி:—நான் கிழப் புலி அல்லவா? பல்லுப் போனுலும் சொல்லுமா போய்விடும்? கடுகு சிறுத்தாலும் காரம்போய்விடுமா? நான் பாடாத பாட்டா இந்தப் பயமகள் பாடிவிடப்போருள்? என்பாட்டு சபையெல்லாம் மெச்சப்பாட்டு. என்ன பண்ணுகிறது? இப்ப வயஸாகிப் போச்சு (என்று இராக்குமுத்து பாடுகிறதற்குச் சூட்சப் பொம்மையைப் போல் தலையை ஆட்டித் தாளம் தட்டிக்கொண்டு சகலமும் தனக்குத் தெரிந்த பாவனையாக அபிநயங்கள் காட்டிக்கொண் டிருந்தாள். அந்த வேடிக்கை எப்படி யிருந்திருக்கும் என்பதை இதனைப் படிப்போரே யூகித்தறிந்து கொள்ளவேண்டியதுதான். பின் கிழவி தன்மகளை நோக்கிச்) சுரம் பாடடீ! (என்ருள்).

ஜமீந்தார்:—ஓஹோ! சுரமும் இவளுக்கு வருமோ? வித்வான்களுக்குக்கூட அது பாட வராதே!

சாமியார்:—மற்றவர்கள் பாடுகிறதெல்லாம் சுர மும் காய்ச்சலும்தான். நான்தான் இவளுக்குஒரு ஒச்ச மும் சொல்லமுடியாதென்று நெடுகிலும் பாடம்படித்து வருகிறேனே? மற்றத் தேவடியா மக்களை எல்லாம் இவள்காலிற் கட்டி அல்லவா அடிக்கவேணும்? இவ ளென்ன லேஸானகையா? ஆனால்இவளுக்கு இப்போது தங்களைப் பார்க்கப் பார்க்கக் காமச்சுரம் உண்டாகிறது.

இராக்குமுத்து:—ம க ப த ச - ரி க ம க - ச நி த ம அழகுள்ள துரையிவராரடீ (என்று இவ்வாறு பல பல விதங்களாகச் சுரங்களைப் பல்லவியிற் சேர்த்துப் பாடினாள்).

ஜமீந்தார்:—அதைக்கேட்டு, ஆஹா! ஆஹா! அச் சா! பலே! பேஷ்! என்ன சுரக்கியானம்! என்ன சுத்தம்! என்ன பேச்சுப் பேசுகிறது! (என்று ஸந்தோஷத்தில் உடனே அவளுக்கு வெகுமானமாகத் தன்பேரிற்போட் டுக்கொண்டிருந்த விலைபெற்ற சரிகை நிறைந்த உத்தரீ யத்தை அவள்பேரிற் போட்டுவிட்டார்).

சாமியார்:—துடித்து ஆஹா! இது அவளுக்குத் தகும்! தகும்! நான் வெங்கம்பயல் கேட்டுஎன்ன பிர யோசனம்? மகாராஜாக்கள்தான் அந்த அருமையை அறிந்து சன்மானிக்கவேண்டும். தங்கக் கலசத்தோ டே சேர்ந்த காணுமிர்தம் (கிருஷ்ண) தேவருக்கு உகந்த பானமாகிவிட்டது ஆச்சரியமோ? பானமானபின் மூடிவைக்கவேண்டியதும் உசிதம்தான்.

வீராயி:—(ஓடிவந்து அதனைக் கூனிப்பார்த்து) அடி அம்மா! எசமாங்க நல்லவேளையிலே கொடுத்ததை நீ எடுத்துப் போட்டுக்கொள்ளடீ (என்று அவள் அதை இராக்குமுத்துவின் அமுதக்கிண்ணங்களுக்குத்தாவணி

யா வணிந்தாள். அது யானைமத்தகமேற் படாம் போ லும் விளங்கியது.

இராக்குமுத்து:—எழுந்து ஜமீந்தாரை வீழ்ந்து நமஸ்கரித்தாள்.

ஜமீந்தார்:—அதிக ஸந்தோஷம். இப்போது இவ் வளவு பாடியது போதும். உனக்கும் அதிக சிரமமா யிருக்கும்.

சாமியார்:—நான் ஒன்று சுருக்கமாய்ப்பாடி நிறுத்தி விடுகிறேன் (என்று இராக்குமுத்துவைப் பழயபடி தம் பூரை மீட்டும்படி செய்து "ஓயாதோ வென்கவலை" என்ற ஸ்ரீதாயுமானசுவாமிகளின் திருவாக்கைச் சும்மா ஓயாமல் இராகத்தில் எடுத்துக்கொண்டு பாக்கிப் பாட் டைச் சொல்லிமுடியாத பாடாய்த் திரும்பத் திரும்ப "ஓயாதோ ஓயாதோ" என்று பற்பல சங்கதிகளை ஓயா மற் போட்டு போட்டு "வீட்டில் தீப்பிடித்த சங்கதியை ஓர் ஸங்கீத மாணவன் தன் ஆசிரியனிடம் சென்று பாடிய வண்ணம்" வெகுநேரம் கடத்திப் பாடிக்கொண் டே யிருப்பதானன்.

ஜமீந்தார்:—(இராக்குமுத்துவும் வீராயியும் சாமி யாருடைய பாட்டுக்கு ஓயாமல் தலையை ஆட்டிக்கொண் டே இருந்த சமயத்தில்) சாமியாரே இதென்ன பிடித்த மழை லேலவிலே விடாதுபோலே யிருக்கிறதே? இளம் பசிக்காரனும் புளிச்ச ஏப்பக்காரனும் சேர்ந்தகதையா யிருக்கிறதே? உமது பாட்டுக்கும் என் பாட்டுக்கும் பொருந்துமா? உமது பாட்டுக்குப் பதில் எதிரொலி யாகக் கோழியும் கூப்பிட்டு விட்டதே? சீக்கிரம் பாக் கிப் பாட்டைச்சொல்லி முடித்துவிடும் என்றார்.

சாமியார்:—என்பாட்டையும் கவலையையும் சொல்லி முடிக்கயாராலும்ஆகுமோ (என்றுநினைத்துக்கொண்டு) இப்போது நான் எடுத்துக்கொண்டபாட்டின் அடியை மட்டும் சரியானபடி நான் பாடி முடிக்கிறதென்றால் விடிந்தும் போய்விடும், அப்படி எத்தனைதரம் விடிந்தாலும் என்பாட்டுக்கு விடியுங்காலம் வராதுபோலிருக்கிறது. அப்படியானால் நான் பாக்கிச் சாஹித்யத்தையும் பாடிச் சம்பூரணம் செய்கிறதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும் என்கிறதைத் தாங்களே கணக்கிட்டுக் கொள்ளுங்கள். இராக்குமுத்துவும் என்பாட்டைக் கேட்டதில்லையே என்று நினைத்தேன். தாங்கள் உத்தரவுசெய்தபடிக்கு இப்போது பாட்டை நிறுத்திவிடுகிறேன்.

வீராயி:—(ஜமீந்தார்முன்நின்று வாய் புதைத்துக் கொண்டு) தாங்களெல்லாம் ரொம்பப் பெரியமனுஷாள். எங்க வீட்டுக்கு வரப்பட்டவுகளா? நான் அப்பவே சாமியாரிடம் ராசாக்க இந்தக் குடிசேக்கு வரவேண்டாம். என்மவளை நான் அங்கேயே கூட்டி வாரேன் எண்டு சொண்ணேன். அதற்கு அவர், வந்தவிடத்தில் மகாராசாவுக்குச் சாகை சௌகரியப்பட மாட்டாது அதைப்பத்தி நீகவலெப்படவேண்டாம் என்றுசொல்லி விட்டார் (என்றாள்).

ஜமீந்தார்:—அதினால் என்னபாதகம்? நீ அதைப் பற்றி ஒன்றும் கவலைப்படாதே!

சாமியார்:—ஆயீ! நீஒன்றுக்கும் விசாரப்படாதே! ஸந்தோஷமாயிரு! சக்கிரவர்த்தி பாதம் எப்போது இந்த வீட்டிற் பட்டதோ அன்று முதல் உனக்கு அதிர்ஷ்ட காலமென்று நினைத்துக்கொள். ஈஸ்வரன் தேவடியாள் வீட்டுக்கு போகவில்லையோ? தேவ - அடி

யாள் அல்லவா ? சக்கிரவாத்தி பாதம் பட்டுவிட்ட படியால் இன்றோடு இந்தவீட்டுச் சனியும் பீடையும் தொலைந்து இனிப் பால் பொங்கப் போகிறது பார்!

வீராயி:—அய்யா சாமீ! நீங்க அந்தப் பரமசிவம். ஒங்க வாக்குப்படியே எல்லாச் சம்பத்தும் உண்டாக, மகாராசாக்க கிருபையும் இருக்கச்செ தடையென்ன? மகாராசாக்க இங்கேவந்த சமயத்தில் அவாளை மரியாதையாக் கண்டுகொல்ல இந்த அகாலநேரத்தில் பழங்கள் கற்கண்டு மிட்டாய் ஒன்றும் கிடைக்கவில்லை. எல்லாம் மன்னிக்கவேணும்.

ஜமீந்தார்:—ஓஹோ! அதினு லெல்லாம் பாதகமில்லை. உன்மகள்தான் பழமாகவும் கற்கண்டாகவும் பூச்செண்டாகவும் பூங்கொடியாகவும் இன்னம் எல்லாமாகவும் இருக்கின்றாளே? இப்படிப்பட்டவளைக் கொடுத்து நீ என்னைக்கண்டு கொண்டிருக்கிறதைக்காட்டிலுமா உயர்ந்தது ஒன்று இருக்கிறது?

இராக்குமுத்து:—(அந்தச் சமயத்தில் வெற்றிலை பாக்கு சீவல் ஏலம் கிராம்பு ஜாதிக்காய் ஜாதிப்பத்திரி வால்மிளகு இவைகளை ஒருதாம்பாளத்திற் பரப்பிக் கொண்டுவந்து ஜமீந்தார் முன்புவைத்துச் சந்தனம் அவருக்குக்கொடுத்துப் புஷ்பஆரம் போட்டுப் பன்னீர் தெளித்துப் பரிமளவாசம் கிளம்பநின்று உபசரித்தாள்.

வீராயி:—அடி பெண்ணே! (என்று அவளுக்கு நேரே கையைநீட்டி) இனி நாங்கள் பொகிறோம் சக்கிரவர்த்திக்கு மனம்போல்நடந்துகொள்ள வேணும். அவர்கள் தயவைச் சம்பாரித்துக் கொள்ளவேணும். ஆ ஊ என்று வம்பு முறண்டுபண்ணாதே! தெரிகிறதா? நான் போகிறேன். (பின் அவள் சாமியாரைப் பார்த்துத்

திரும்பி)சாமியாரு அய்யா! நாம் இருவரும் துண்டாய்ப் போய்ப் படுத்திருப்போம். விடிகிறநேரமாகிவிட்டது. இனிமேல் நாம் இங்கே இருக்கப்படுமா?

சாமியார்:—(போக மன மில்லாமற் பெருமூச்சு விட்டு எழுந்து) கிழவிதான் நம்மைப்பிடித்து இழுக் கும்படியான பாக்கியத்தைப் பெற்றேம். முன்னும் ஒரு குருபிஇழுத்தாள் (என்று நினைத்து அவளைப் பின் பற்றிப் போய்விட்டனர்).

வீராயி:—(ஒதுங்கப்போய்ச் சாமியாரிடம் உள்ள முன்னூறு ரூபாயையும் கொடுக்கும்படி கேட்டு வாங்கி அவைகளைத் தீபவெளிச்சத்திற் கண்தெரியாமலிருந்தா லும் விரலால் நிதானம் தப்பிப்போய் விடாதபடிக்கு நன்றாய்த் தடவித் தடவிப்பார்த்துக் கணக்காய் எண் ணித் தன்வசப்படுத்திக்கொண்டாள். பின் கிழவி ஒட் டுத் திண்ணையிற் படுத்துக்கொண்டு) சாமீ! இப்படி வாரும், கிட்டப் படுத்துக்கொள்ளும் (என்று கூப்பிட் டாள்).

சாமியார்:—இது என்ன கிரஹசாரம் (என்று நினைத்து) ஆகட்டும் வருகிறேன்! (என்று கிழவியின் கிட்டப்போய்ப் படுத்து) ஆயீ! நீஎனக்கு வாக்குத்தத் தம் செய்திருந்ததை மறந்துவிடக்கூடாது. நான் உனக் குச் சொல்லி யிருந்த வாக்குத்தத்தத்தை இப்போது நிறைவேற்றிவிட்டேன். இது சங்கதி வெளிக்குத் தெரிந்து விடக்கூடாது. (என்று கிழவி வாய்வீச்சத் தைச் சகித்துக்கொண்டு ரகசியமாய்ப்பேசினர்).

வீராயி:—அதுக்கென்ன நீர் சுகமே இந்த வீட் டுக்கு வந்து போயிருக்கவேண்டியது தானே!

சாமியார்:—இப்போது என்ன கிழவி வரப்போக இருக்கவேண்டியதுதானே என்று ஒருவிதமாய்ச் சிரத்தை யில்லாமற் பேசுகிருள். இவளுக்கு வாக்குத்தத்த மெல்லாம் இவளுடைய வாயிலிருந்து நமக்கு வந்து வீசும் துர்நாற்றம்தான்போ லிருக்கிறதே? வரவும் போகவும் இருந்தால் ரகசிய சக்கர பூசை நடந்தாலல்லவோ காரியம். சக்கரவர்த்திக்குத்தான் சக்கரபூசையோ என்று உத்தேசித்து) என்னமோ எனக்கு உன் தயவு பூரணமாக இருக்கவேண்டியது தான். உன்விஷயத்தில் ரொம்பப் பாடுகளெல்லாம் பட்டிருக்கிறேன் (என்று கதைகளை ஒன்று பத்தாய்ச் சொன்னர்).

வீராயி:—என்னசாமீ "நீரு! தொண தொண" என்று விடாமல்தூக்கவேளையிற் பேசுகிறீரே! "பாப்பானுக்கு வாய்ப்போக்காதே - தாதனுக்குத் தலை அசையாதே - ஆண்டிக்கு அதானும்சொல்லாதே" என்றபடியல்லவா இருக்கிறது? சற்று நீரும் கண் அசரும்! நான் அப்படிச் சாமியார் விஷயத்தில் மோசத்தைச் செய்து சாகிறநாளையில் பாவத்தையா சம்பாரிச்சுக்கொள்வேன்?

சாமியார்:—சரி தூங்குகிறேன் (என்று தூக்கமே வாராமல் இராக்குமுத்துவினுடைய நினைவே அதிகமாகக் கொண்டு அதேகவலையாகக் கண்ணைமட்டும் மூடியபடிக்குத் தியான யோகத்திலிருந்து) என்ன, இவள் நம்மை வாரும் போரும் என்று மரியாதைக் குறைவாய்ப் பேசுகிருள். முன் இவள் நம்மை அப்படிப் பேசவில்லையே. என்னத்தையும் இவள் பேசிவசியும் கொள்ளட்டும். காரியத்தைமட்டும் இவள் கெடுத்துவிடாமலிருந்தால் நமக்கு அது கோடியாந்தரம். (இவ்வாறு பல விதங்களை நினைநினைந்து நீளப் படுத்திருந்தனர்).

ஏகாந்த இடத்திலிருந்த ஜமீந்தார் அதிக ஆவலுடன் இராக்குமுத்துவை ஆலிங்கனம் செய்து புளகாங்கிதம் கொண்டார். பின்பு அவளும் சிறிது சிறிதாகக் கைதேர்ந்த சுகாநுபவங்கள்வரை கொடுத்து அவரைத் தன்வசமாக்கிக்கொண்டாள். புருஷாநுபவமே இலாத பெண்களுக்கு முதலிற் காமக் கலவியைப் பற்றிய தேர்ச்சி எப்படி உண்டாயிருக்கின்றது என்று ஜமீந்தார் சந்தேகிப்பார். நாம் அதற்கான சூழ்ச்சியைச் செய்ய வேண்டுமென்று இராக்குமுத்து ஓ என உயிருக்குயிரான சக்கிரவர்த்தி! நான் காமசாஸ்திரப்பிரகாணங்களில் முற்றும் தேர்ந்திருக்கிறேன். நாணப் என்பதை முற்றிலும் அகற்றி நாயகனிடத்தில் சம்போகத்துக்கு இணங்கி இருக்கவேணு மென்பது நூலின் துணிபு. எட்டுச்சுரைக்காய் இதுவரை எனக்குக்கறிக்காகாம லிருந்தது. இப்போது பல விதங்களில் நான் படித்துக்கொண் டிருந்தவைகளை அநுபவித்துச் சரியாயிருப்பதாகத் தெளிந்தேன். ஒரு உத்தம ஸ்திரீயானவள் தான் மணந்துகொண்ட நாயகனிடம் முதலாவதாகக் கலவியின்பத்திற்கான பள்ளியறையிற் பண்டு பழகித் தேர்ந்தவளைப்போல் நடபடிகளை அநுசரித்திருந்தாள். நாயகன், அவள் பலகலவிகளிற் பழகியவளெனச் சந்தேகம்கொண்டான். நுட்பபுத்தியையுடைய அவள் அவனது குறிப்பை உணர்ந்து பள்ளியறைச் சுவற்றில் பிரசவிக்கும் பெண்சிம்மம் ஒன்றையும் பசுவொன்றையும் சித்திரித்தாள். சிம்மத்தினுடைய யோனித் துவாரத்திலிருந்து குட்டியானது பாதிவெளியே வந்திருந்த சமயத்தில் அது பக்கத்தில் நிற்கும் பசுவைத் தன்கையை ஓங்கி அறைய முயற்சிக்கும் பாவனையாக எழுதினாள். "நாயகன், ஓபெண்ணே! உன்னுடைய

சித்ரம் மிகவும் அற்புதமாயிருக்கின்றது. கருப்பத்தி லிருந்து சிம்மக்குட்டி பாதிதானே வெளிவந்திருக்கிறது அந்த நிலையிற் பசுவைஅறையும் அதின்ஜாதிச் சுவாபம் போகவில்லையே" என்றான். நாயகி "அது போலேதான் நாதா! உத்தமஜாதிப் பெண்களுடைய சுபாவமும் கணவர் கலவியிலும்ஒத்து அநுபவமுடையதாயிருப்பது இயற்கை" என்றாள். உடனே நாயகன் ஆஹா! நாம மனதில் நினைத்ததை இந்தப்பெண் தனது புத்தி நுட்பத்தால் அறிந்து இவ்விதம் செய்திருக்கிறாள் என்று நியாயத்தைத்தெரிந்து பின் தன்மனைவியை மிகவும் நேசித்து வாழ்ந்திருந்தான். இவ்வாறு இராக்குமுத்துசொன்னதை ஜமீந்தார்கேட்டு "நான் அப்படிக்கு உன் விஷயத்தில் யாதொன்றும் நினைக்கவில்லை" என்பிரான சகி! என்று அவளைக்கட்டி முத்தமிட்டுச் சுகித்திருந்தாள்.

இவையிற்க, முன் பஞ்சுமெத்தையில் சுகமாகத் தூங்கிக்கொண்டிருந்த சின்னையனைச் சின்னமுற அப்புறப்படுத்திப்போய் மறைவாகப்போட்டுவைத்திருந்தார்களல்லவா? அந்த இடம் அடுப்பங்கரை. அங்கு அவன படுத்திருந்த தரையானது மேடுதாவுகள் உள்ளதாயிருந்தது. அதினால் அவன் சுகமான நித்திரை கொள்வதற்குச் சரிப்படாமல் அடிக்கடி புறண்டுகொண்டிருந்த சமயத்தில் ஒருதேளானது அவன் அடித்தொடையிற் புகுந்து மீட்டிவிட்டது. "குரங் கனவின் வீழ்ந்து வெறிகொண்டு தேள்கொட்ட..............." என்ற கவி (குரங்கு) ச் சேட்டையைப்பற்றிய கவியைப போலக் கேட்கவும் வேண்டுமா? சற்று நேரம் அவன் தூக்கவலியால் வலிதெரியா திருந்தானேனும் பின் திடீரென்று துடித்துக் கதறித் தாவிஎழுந்து இது

என்ன நாம்சமயல் வீட்டு அடுப்பண்டை படுத்துக் கொண் டிருக்கின்றோம் என்று தெரிந்து, அடீ ருக்குமுத்தா உ! என்னை அடுப்பாங்கடைத் தீச்சுட்டுவிட்டதடியோ ஓ! அடியே எ! ருக்குமுத்தாஉ! இங்கே ஓடியாடீ இ! அக்கினி கொளுத்துதடீ இ! எனக்குப் பொறுக்க முடியுதில்லேஎ! நீ எங்கேடீ இ போனேஎ! வேகமா ஓடிவாடீ இ! நான் செத்துப் போவேன்போ லிருக்குதாஉ! என்று பலவாறு வரவரப் பெருங்கூப்பாடு போட்டு மீறியவேதனை சகிக்கமாட்டாதவனாய் அலறிநின்று குதித்துக்கொண்டு, இராக்குமுத்தும் ஜமீன்தாரும் நன்றாய் அப்போதுதான் அயர்ந்து தூங்கிக்கொண் டிருந்த சமயத்திற் கரங்களைத் தனக்குமுன் தூதுவர்போல் நீட்டி உதறிக்கொண்டு தட்டித்தடுமாறிப்போய் அலங்கோலமாய் ஓடிவந்தான். சாமியாருக்கு அன்று சிவராத்திரித் தூக்க விழிப்பா யிருந்தபடியால் தன் பக்கத்திற் பிணம் போல் திறந்த வாய்வழி எச்சில் தாரையை வடியவிட்டுத் தூங்கியிருந்த வீராயியை அவர்பதஷ்டமாய்க்கூவி யெழுப்பி அவளை அழைத்துக்கொண்டு கதறிப் புலம்பிக் குதிகொண்டு நிற்கும் சின்னையனிடம் வந்து நம்மைக் காட்டிலும பெரிய உபாதியாயிவனுக்கு என்று நினைத்து அவனைக் கையமர்த்தி உனக்குச் சம்பவித்துவிட்டது என்ன என்ன என்று கேட்டார். இராக்குமுத்துவும் ஜமீந்தாரும் நீண்டகலவிப்போராற் களைத்ததினால் ஏற்பட்ட பெருந்தூக்கமும் கலைந்து திடுக்கிட்டவர்களாய்த் தங்கள் அறைக்கதவைத் திறந்து வெளியே வந்து சின்னையன் கோலத்தைப் பார்க்கலானார்கள். சீரழிந்த சின்னையன், அவர்கள் ஒவ்வொருவருக்கு முன் ஓயாமல் தனது அடித்தொடையைத் திறந்து திறந்து காட்டி அடுப்புத் தீச்சுட்டுவிட்டதென்று பேரிரைச்ச

னுடன் பலவிகார விகற்பங்களாய் அழுது குறைத்தலை முண்டம்போல் பதைத்துக் காலை மாற்றி மாற்றி உதைந்து துள்ளித்துள்ளி விழுந்தான். தேள் கொட்டி விட்டதென்று அவர்கள் தெரிந்து கொண்டார்கள். வெகு சிரிப்புக்கிடம் உண்டாயிருந்தது, சிவப் புத் தேளாகிய சாமியார் உடனே அதை நிறுத்திவிடுகிறேனென்று மந்திரித்துக்கொண் டிருந்தனர். நன்றாய் விடிந்துவிட்டது. சாமர்த்தியமுள்ள இராக்குமுத்து மந்திரத்தில் மாங்காய் விழாதென்பதாகப் பழக்கமாகிய ஒருபக்கத்து வீட்டிற்கு வீராயியை அனுப்பித் தேள் விஷப்பரியாய மருந்தைச்சீக்கிரம்வரவழைத்து அதைச் சாமியாரிடம் கொடுத்துச் சின்னையனுக்குத் தேள் கொட்டிய விடத்திற் பூசச்செய்தனள். தன் மந்திரமே பலிக்குமென்ற பிடிவாதக் குணமுடையவரா யிருந்தாலும் இராக்குமுத்துவினது அமுதவாக்கு மயக்கத்தால் அவ்வாறே செய்தனர். சற்றுநேரம் சென்றபின் சின்னையன், அடீ ராக்குமுத்து! எனக்கு வலி நின்று வருகிறதடீ என்றான். ஜமீந்தார், இராக்குமுத்துவை நோக்கி, இந்த அய்யன் யார் என்று கேட்டார்.

இராக்குமுத்து:—எனக்கு யாராவது பிரபுக்கள் திரட்டிக்கல்யாணம் நடத்துவதாக ஏற்பட்டு வரவில்லையா என்று பக்கத்துக் கிராமத்திலுள்ள எங்கள்புரோகிதர் இவரையனுப்பி எங்களைக் கேட்டுக்கொண்டு வரும்படிக்கு அனுப்பியிருந்தார். பிராமணர்களுக்கு எப்போதும் தங்கள் வரும்படிக் காரியங்களில் மாறாத திருஷ்டியிருக்கிறது சகஜந்தானே? வந்த இவர் நேற்றே போவதற்கு இருட்டாகிவிட்டதென்று இங்கேயே படுத்துக் கொண் டிருந் திருக்கிறார்.

ஜமீந்தார்:—சரி விடிந்து போய்விட்டது. மார்க்கத்திற் பிறர் அறியாவண்ணம் நான் சீக்கிரம் ஜாகை போய்ச் சேரவேணும். என்னை இந்த ஊரார் அனேகமாய் நேரே பார்த்தறிந்திருக்க மாட்டார்கள். என்றாலும் நான் முக்காடிட்டு எவ்விதத் தந்திரத்திலாவது போய்விடவேண்டியதா யிருக்கிறது.

இராக்குமுத்து:—நான் தங்களைப் பிரிந்து ஒரு க்ஷணமும் இருக்கமாட்டேனே. உயிரைப் பிரிந்திருக்கும் உடல்உண்டோ? நான் சும்மா இருந்தவளுக்கும் மன்மத வடிவாய்வந்து அளவிறந்த சுகபோக விதங்களையெல்லாம் நவநவநவமாய் ருசிகாட்டிவிட்டுப் பின் தாங்கள் இப்போது பிரிந்து போகிறதென்றால் நான்அதை எப்படிச் சகிப்பேன்? என் அழகுள்ள துரையே! தங்கள் திருமுகமண்டலத்தை இனிநான் திரும்ப எப்போது தெரிசிப்பேனோ? (என்று பலகூற்றுவர் ஓர் உருக்கொண்டவள் கூற்றுகளாடிச் சலிப்புடன் தோற்றஞ் செய்து நின்றனள்).

ஜமீந்தார்:—(அவளுடைய செயலுடன் அவள் உள்ளே இருக்கும் பலநோக்கங்களையும் காணக் குருடனாய் அறைக்குள் அவளை அழைத்துவந்து இறுகக் கட்டித் தழுவி முத்தமிட்டுக் குழலைக்கோதி அடீ என் அருமையுள்ள பிராணநாயகி!நான்உன்னை அரைக்ஷணம் பிரிந்திருப்பேனோ? உன்னை எத்தனைதரம் சேர்ந்தாலும் இன்பம் தெவிட்டாமலே இருக்கிறதே! இன்று இராத்திரிக்குக் கால மிருக்கவே வந்தணைகிறேன். உலகத்துக்குப் பயந்து நடக்கவேண்டியதா யல்லவா இருக்கிறது? நின்றவாக்கிற் படுக்கமுடியுமா? கூடியசீக்கிரம் உன்னைக் கணமும் பிரியாமலிருக்கும் மார்க்கத்தைத் தேடிவிடுகி

றேன். உனக்கு அதிகம் சொல்லவா வேணும்? நீ நல்ல புத்தியுள்ளவளாகவே தோற்றப்படுகிறாய்! நீ ஒன்றுக்கும் கவலைப்படாமலிரு (என்று அவள் திருமேனியைத் தடவி முத்தமிட்டான்).

இராக்குமுத்து:—அசுர குலத்துதித்தும் மகா பதிவிரதை யாயிருந்த பதுமகோமளை என்பவள் தன் நாயகனாகிய சூரபதுமன் இறந்தானென்று கேள்விப்பட்ட நிமிஷமே உத்தம லெட்சணப்படிக்குப் பிராணனை விட்டொழிந்தாள். ஆனால் எனக்கோ தாங்கள் என்னிடம் வரவில்லை என்ற நிமிஷமே பிராணன் போய்விடும். இந்த உண்மையைத் தாங்கள் உணர்ந்து பொல்லாத பெண்பழிக்கு ஆளாகாமல் இருக்கவேணும். ஆனால், ஆண்பிள்ளைகளுக்கென்ன? "சின்னி போனாற் பொன்னி வாராள்" எத்தனையோ ஸ்திரீகள் வருவார்கள். நான் பெண்பிள்ளை காத்திருந்து தங்கள் கரம் பிடித்தேன். முருங்கையா யிராமல் அது புளியம் விளாறு யிருக்க வேணும். என்னைத்தொட்டுக் கன்னி யழித்தும் விட்டீர்கள். இனி எனக்குத் தாங்கள்தான் தெய்வமாகவும் பிராண காந்தராகவும் ஆய்விட்டீர்கள். உலகத்துக்கு மழைபோல் எனக்குத் தங்களைவிட வேறுகதி கிடையாது. சாமானியமாய் இவள் தாசிமுண்டைதானே என்று கேவலமாய் நினைத்துவிடாதீர்கள். "அறிவாரியார் நல்லார் பிறக்குங் குடி". எனக்குக் கனவிலும் எங்கள் குலாசார நடபடிகள் பிடிக்கவேமாட்டாது. அந்த மானக் கேட்டுக்குப் பிராணன் போய்விட்டால்தான் என்ன? எங்கள் வம்சமும் பரம்பரையாய் அப்படிப்பட்டதல்ல. நாங்கள் பிடித்தால் ஒரே விசுவாசமாக இன்பமோ துன்பமோ கடைதலை ஒப்பித்துவிடக்கூடியவர்கள். இது ஈஸ்வரசாக்ஷியாகச் சொல்லுகிறேன்.

ஜமீந்தார்:—இப்படிப்பட்ட ஒருமையுள்ள பெருமை வாய்ந்தவள் அருமையினும் அருமையே! தேடினும் கோடி கொடுத்தாலும் எவ்வுலகத்து மில்லை. நான் செய்த பாக்கியம் வீண்போமோ? நானும் அந்தப்படியே உனக்கு அந்தமுள்ள சொந்தனு யிருப்பேன். இப்போது பலவாய்ப் பேசுவதில் வாய்ப்ப தொன்று மில்லை. அடி பிரியாவிடையே விடைகொடு! (என்று அவளுக்கு வேண்டும் உறுதிகூறிப் பின் அவளைப் பிரிமாமல்பிரிந்து வெளியேறிச் சாமியாருடன் புறப்பட்டுத் தன் ஜாகை வந்து இராக்குமுத்துவினுடைய கலவி விதங்களையே நினையாமல் நினைந்து பிரமநிஷ்டையையும் ஓர்வாறில் ஒத்திருந்தனன்.

எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலு
முத்தர் மனமிருக்கு மோனத்தே—வித்தகமாய்க்
காதி விளையாடி யிருகைவீசி வந்தாலுந்
தாதிமன நீர்குடத்தே தான்.

என்றபடி இவன் தான் நேசித்த வேசியினது அமுதத் துணைக்குடத்தையே துணையெனச் சிந்தித்திருந்தான். அன்று பகலைப் பகைத்து இரவில் அவள் அரவபடத்தேமாலாத் துயில்கொள்ள உகந்திருந்தனன். போதுபோனவுடன் சிங்காரியினுடைய இன்பத்தைப் போதுமெனச் சாந்தியடையாது போதினுறு கள்ளின் வீழ்ந்துழலும் வண்டே போலும் ஆழ்ந்திருப்பதாயினன். சூதைவென்ற முலையாளைப் பகலிலும் இரவிலும் சூதில் வெல்லமுடியா திருந்தனன். பின் வரவர அவளுடைய போகத்தையும் உண்டியையும் அவள் வீட்டகத்தே பலகாலும் நச்சி மெச்சிக்கொண் டிருப்பதுமாகிவிட்டான்.

## (13).

விடியற்காலம் எட்டுமணிவரை ஊரார் சிரிக்கத் திருட்டு மணிகளாகிய முத்தண்ணாவும் பெத்தப்பெருமாளும் தூங்கிக்கொண்டிருந்து பின்புஎழுந்து இராக்குமுத்து வீட்டுக்குள் நுழைந்து அவளிடம் வந்து என்னடீ நாங்கள் இராத்திரி வந்து எங்கள் மண்டைகளைத் தேங்காயாய் உடைத்துக்கொண்டோம். நீஎன்ன செத்த சவம்போலக் காதையும் கதவையும் அடைத்துக் கொண்டுவிட்டாய்.

இராக்குமுத்து:—உங்களுக்கென்ன? தலைபிடியும் காய்ச்சலும் தனக்கு வந்தால்தானேதெரியும்? எனக்கு உடம்புக்கு ஒன்றும் சுமாராயிருக்கவில்லை நீங்கள் சீக்கிரம் வருகிறோம் என்று போனீர்களே? என்னேரம் உங்களுக்காக நான் விழித்துக்கொண்டே குரங்காய்க் குந்தியிருக்கிறது? உடம்பெல்லாம் வலியும் அஜாட்டியமுமா யிருந்தபடியாற் பின்புறக் கொல்லைக் கொட்டகைத் தளத்திலேயே விழுந்தபடி உணர்ச்சியின்றி நன்றாய்த் தூங்கிவிட்டேன். மற்றவர்களும் என்னைக் கவனித்துக் கொண்டே சாப்பாடுமின்றி அங்கேயே உறங்கிவிட்டார்கள்.

முத்தண்ணா:—பார்த்தீராகாணும் பிள்ளே! இவள் நெடுகிலும் இப்படியே ஏய்த்து நம்மள்வாயில்மண்ணைப் போட்டுத் தலையிற் கூழை வார்க்கிறவளல்லவா? இராத்திரி இந்தக்கூத்தாடிச் சிறிக்கிக்காக ஆடாததெல்லாம் ஆடிப் பாடாததெல்லாம் பாடி ஏதேஷ்டமாய்க் கறிபதார்த்தங்களும் பாட்டில்களும் கொண்டுவந் திருந்தோம்?

பெத்தப்பெருமாள்:—இவள் கிடக்கிறாள் காணும் எப்ப இவளுக்குச் சின்னப் பயல்களின் சாவகாசங்

கள் ஏற்பட் டிருக்கிறதோ பிற்பாடு நமக்கு என்ன யோக்கியதை இங்கே ஏற்பட்டிருக்கிறது? இனிநாம் நமக்குத் தகுந்த வேறே ஏற்பாடு பார்த்துப் போக வேண்டியதுதான். "அப்பன் வருவான் அதன்பின் மகன் வருவான்" என்ற கதைதான்; சந்தேகம் வேறே யா?

இராக்குமுத்து:—ஆமா நீங்கள் கொடுக்கிற விலாக் கொடைக்கு உங்களுக்கு இவ்வளவு மரியாதை இங்கே போதாமலிருக்கிறதோ? உங்கள்கண்களிற் குச்சி குத்தி விட்டதால் நான் குச்சுக் காரியாகத் தோணிவிட்டது. நான் ஒரு பெரும் பயித்தியக்காரி யென்றுதான் நீங்கள் நினைத்தபடிக்கெல்லாம் என்னை எய்த்து மொட்டை யடித்து எல்லாக் காரியங்களையும் குறை வில்லாமற் கொள்ளை யடித்துப் போகிறீர்களே? இன்னொருத்தி யிடம் நீங்கள் போனால் உங்களுடையஇந்தமாதிரி ஏகத் தாளங்களுக்கு அவள் துடைப்புக்கட்டை மேளவாத்தி யம் செய்து அனுப்பிவிடுவாள். மகாராஜராய்ப் போய் வரலாம். எல்லாருக்கும் ஒருசனி பிடிப்ப துண்டு எனக்கு இரண்டு சனியா? இரண்டு சனி தொலைந்த தென்று ஒரு தலைமுழுக்காய் முழுகுவேன்.

பெத்தப்பெருமாள்:—(அதிகக் கோபமாய்) கேட்டீரா காணும் 'இவள் வாய்ப்பூச்சி கடிக்கிறதை? இவள் கொள்ளி வாய்ப் பிசாசு. அந்தக் கொள்ளியைப் பிடுங்கியே இவளுக்குக் கொள்ளிவைக்கவேணும். இந்த லெட்சணங்கெட்ட முண்டையாலே நாம் சகல சொத் துக்களையும் இழந்து பெண்டாட்டி இல்லை பிள்ளை இல்லை வீடு இல்லை வாசலில்லை என்று பங்கமில்லாத் தங்க மேனியை உப்பிட்ட காலமாய் உள்ளுடைய வீட்டு இக் கோலமாகி வெங்கந்தன மானோமே! ஆற்றிலேகரைத்த

புளிமா திரியாக எல்லாம்வெட்டியாக இவளுக்கு அழித்தழுதுவிட்டோம். கொஞ்சமாவது இவளுக்கு விஸ்வாஸமே இல்லை காணும்! நினைக்க என் வயிறு பற்றி எரிகிறது! அந்தத்தீ லேஸாய்ப் போய்விடாது! இவளைப்பற்றி பஸ்பமாக்கி விடும் பாரும்!

இராக்குமுத்து:—நான் பிசாசானால் நீங்கள் பிசாசைக் கூடவந்த பிசாசர்கள்தானே? முண்டை என்று என்னை என் சண்டைக்கு இடுப்புக் கட்டுகிறீர்கள்? உங்களைப் பேயாய் அலைந்து பிடுங்கவிட்டுக் கதியற்றுப் போயிருக்கும் உங்கள் பெண்டாட்டி மாறுகள்தான் ஒரு முண்டைக்கு இரண்டு முண்டை-எனக்கென்ன? நித்திய கல்யாணிக்கு! பட்டிமக்கள் உங்களாலே தான் என் அங்கமெல்லாம் குலைந்து பங்கமானேனே! நீங்கள் என்னதனத்தை வாரி விட்டுவிட்டீர்கள்? சின்னத்தனம் தானே? நான் இரண்டு மலையாக ஒருவிநாடி தனங் கொடுத்ததை மதிக்க முடியுமோ? உன்னுடையதீ என்னைப் பஸ்பமாக்கி விட்டாலும் அந்தப் பஸ்பத்தை நீங்கள் இருவரும் குடும்பத்தை வெறுத்த சந்நியாசிகள் ஆகையினாலே பூசிக்கொண்டு திரிபவர்களே யாவீர்கள் என்பதிற் சிறிதும் சந்தேகமில்லை.

முத்தண்ணா:—ஓ பிள்ளே! நீர் ஏன் காணும் நாய் வாயிற் கோலைக் கொடுக்கிறீர்? குச்சுக் காரிகளை நம்பி எவன் காணும் முன்னுக்கு வந்தவன்? குச்சுக்காரி மச்சுக்காரி யாவாளோ? இராத்திரி நாம்வரும்போது இந்த வீட்டில் கொஞ்சம் கஸபுஸலாகத்தான்இருந்தது. பாட்டுக் கச்சேரிகூட வெளியே கேட்டது. நாம் அந்தச் சமயத்தில் நினைத்தால் இவள் வீட்டுக்குள் தாவி வந்துவிட மாட்டோமா? "வெளுப்பானுக்கே வெளுப்பான் சாதி வண்ணான்."

பெத்தப்பெருமாள்:—(கண்கள் இரண்டும் சிவந்து விட்டன. உதடுகளும் மீசைகளும் படபடவெனத் துடித்தன).

இராக்குமுத்து:—நாம் இனி இங்கே இவர்கள் முன் இருந்தால் ஏதும் அதிகப் பேச்சும் சல்லியமும் வளரும் பொல்லாதவர்கள். வாய்ச்சண்டை கைச்சண்டை யாகிவிடும். (என்பதாக எண்ணி, விஸுக்கெனக் கோபமாய் எழுந்து அறைக்குட் போய்க் கதவை அடைத்துக்கொண்டு இருந்து விட்டாள்).

முத்தண்ணு:—(மெதுவாகப் பேசுகிறுன்) வேசையர்களின் வியாபாரமெல்லாம் இப்படித்தான். எவனுனும் காசைக்கொடுப்பவனுக மட்டும் இருந்தால் அவன் ஆசையை அவளிடம் தீர்த்துக்கொண்டு போகவேண்டியது தானே? "எத்தனைபேர் நட்டகுழி யெத்தனை பேர் தொட்ட முலை, எத்தனை பேர் பற்றி யிழுத்த விதழ்" என்று இவர்கள் குலதருமம் ஏற்பட்டிருக்கிறது. கடையில் இன்னார்தான் சாமான் வாங்கலாம் என்னும் நியதி உண்டோ? அதுபோலவே இவளுடைய வியாபாரமா யிருந்தாலும் அதில் ஒருவிசேஷம் இருக்கிறது. இவள் ஒருவனுக்கு விற்றுவிட்ட ஒருஅல்குலையே திரும்பத் திரும்ப எத்தனையோ பேர்களுக்கு மாற்றி மாற்றி விற்கும் சம்பிரதாயம் உடையவளா யிருக்கிறுள். விற்ற அல்குலைத் தனக்கே உடையவளாயும் பிறர் யாருக்கும் சொந்தமில்லாததாகவும் செய்துகொள்ளுகிறுள். இவ்வாறு மனிதக் கணங்களின் பணத்தைக் கணத்தில் அவர்கள் உயிருக்கும் உலைவைத்து உறுஞ்சி விடுகிறுள். ஒருவனை அட்டையானது ஓரிடத்திற் கடிக்குமானுல் அதின்வழி அவனுடைய உயிர்க்கு ஆதாரமாகிய இரத்தத்தை யெல்லாம் வாங்கிவிடுகிறது.

அதற்கு மேலாகவே இவளைச் சேர்ந்தவர்களுடைய கதி ஆகிவிடுகின்றது. "மழைபெய்தால் தெரியும் வறட்டுப் பீ நாற்றம்" என்றபடி ஒவ்வோர் சமயங்களில் இவளுடைய நடபடிகளால் வெறுப்பு உண்டானாலும் இவளைவிட்டு நீங்க நமக்குக் கூடா திருக்கின்றதே? வேணுமென்றே விளக்கைப் பிடித்துக்கொண்டு கிணற்றில் விழுகின்றோமே? சூரியனுடைய நிழல் கடந்து போவதைப் பார்த்தபடிக்கே இருந்தால் அது நகருவது புலப்படாது என்றாலும் அந்நிழல் கடந்துபோவதில்லை எனப்படுமோ? சற்றுவிட்டுவிட்டுப் பார்த்தால் தள்ளித் தள்ளி நிழல் போய்க்கொண் டிருப்பதாய்த் தெரிந்து கொள்ளலாம். அதுபோல் இவளால் நமக்குவருந் துன்பம் தெரியாமலிருந்தாலும் இப்போது ஊடே ஊடே சமயங்களில் நமக்கு நன்றாய் அனுபவத்தில் தெரிய வருகிறது. கடைசியில் நாமும் அஸ்தமித்துப்போய்விட்டோம். கீர்த்தி அல்லது அபகீர்த்தி ஒன்றைத் தேட வேண்டியது. இனி அபகீர்த்திக்கு முன் வைத்துவிட்ட காலைப் பின்வாங்க முடியாது. நமக்கும் இவளை விட்டுப் போக்கில்லாமலும்இருக்கிறது. "கண்டதேகாட்சி கொண்டதே கோலம்" நீர் அவளை அதிகமும் கண்டிப்புப் பண்ணி விடாதீர்! இருக்கட்டும். அந்தமட்டில் விடும். இவள்மாதிரிச் சகிப்பாக நமக்கு வேறொருத்தி கிடைக்கமாட்டாது.

பெத்தப்பெருமாள்:—என்னகாணும் நீர்சொல்லுகிறீரே? இந்தச் சின்னப்பயல் சாவகாசம் வைத்துக் கொண் டிருக்கிறதுமட்டும் எனக்குஎன்னமோ பிடிக்கவே இல்லை. இவன் என்ன தரத்திலே சேர்ந்தவன்?

முத்தண்ணா:—அந்தவழியிற் போகக்கூடாதென்று தான் நான் இத்தனை சொன்னேனே? நமது பலநிலைமைக

ளும் இப்போது எவ்விதமாய் ஆகிவிட்டன என்பதை யோசித்து அதற்குத் தக்கபடி நடந்துகொள்ள வேண்டியதே தந்திரமானவழி. ஆகையினாலே நீர் அவ்வித மான பிடிவாத எண்ணத்தை அடியோடு எடுத்துவிடும். யாரும் தட்டித் தடவிக்கொண்டு போகட்டும். நமக்கில் லாமற் பிச்சா பொரித்துத் தின்றுவிடுவார்கள்? அந்தப் பயலால் இங்குளன்னகாரியம் நடந்துவிடப் போகிறது? நாய் குரைத்து விடிகிறதா கோழிகூவிவிடிகிறதா? அவனும் இங்கே நிலைத்த அன்றைக்குப் பார்த்துக்கொள்ளுவோம். இந்தப் பூச்சிக்கெல்லாமா நாம் பயப்படுகிறது? (என்று பின் இருவரும் இராக்குமுத்து அடைத்துக் கொண்டிருக்கும் கதவண்டை வந்து நின்று, அடியே! நாங்கள் போய் வருகிறோம் என்று இரைந்து சொல்லி விட்டு இருவரும் சென்றார்கள்).

இராக்குமுத்து:—அவர்கள் இருவரும் போய்விட்டார்கள் என்கிறதை நிதானித்து அறிந்து கதவைத் திறந்து வெளியே வந்து சின்னையனைக் கூப்பிட்டாள். அவனை அவ்விடம் எங்கும் காணக்கூடவில்லை. இவன் போனது என்ன மாயமா யிருக்கிறதென்று வெகு கவலையடைந்து அந்தப் போக்கிரிப் பயல்களுடைய வேலைதானோ வென்றும் பலவாறாக நினைத்துக்கொண்டிருந்தாள்; வீராயியும் சொக்குவும் சின்னையனைப் பற்றிய விபரம் தெரியாமலிருந்தார்கள்.

சின்னையன்:—முன் நடந்திருந்தசண்டை சச்சரவுகளில் திரும்பவும், இரண்டு ஆட்டுப் பாய்ச்சலுக்குஊடு அகப்பட்டிறந்த சந்நியாசியைப் போல், தனக்கு ஏதும் துன்பம் நேரிடுமென்று பயந்து வெளியேறினவன் நெடுகிலும் நடந்து தான் வட்டிக்குப் போட்டு வைத்திருக்கும் இருநூறு ரூபாயையும் முதலாளி வாச

விற் போய்க் காத்திருந்து அதைத்தன் பெண்ஜாதிக்கு நகை செய்ய வேணுமென்பதாகச் சொல்லி வாங்கிக் கொண்டுவந்து, பின் ஷாப்புக்குப் போய்ச் சிவானந்த வீரர் செப்பனிடக் கொடுத்துவைத் திருந்த திவ்ய தரமான விலைபெற்ற கடிகாரத்தைத் தன்னிடம் கொடுக்கும் படிக்குப் பொய் சொல்லி வாங்கிக்கொண்டு உச்சி நேரம் சாப்பாட்டுவேளையில் இராக்குமுத்துவீடுதிரும்பி வருவதானான்.

இராக்குமுத்து:—(சின்னையன் வியர்த்துக் களைத்துக் கடிகாரம்சகிதம் வருகிறதைப்பார்த்து முகமலர்ச்சியுடன் எழுந்து தலைவாசல்வரை ஓடிவந்து அவன்கையிலிருக்கும் கடிகாரத்தை வாங்கிக் கீழேவைத்துத் தன் முன்தானையால் அவன்மூக்கில் வாசனை ஏறும்படிக்கு வியர்வைகளைத் துடைத்துவீசி) அடே என் அருமையுள்ள சின்னையா! உன்னை இவ்வளவு நேரம் காணுமல் நான் எப்படிச்சகித்திருப்பேன்? கொஞ்சப்பாடாபட்டுக் கொண்டிருந்தேன்! நான் கடிகாரம் கேட்டேனென்று புறப்பட்டுப் போயிருந்தாய்? ஒரு வார்த்தை எனக்குச் சொல்லிப் போகக் கூடாதா? இதற்கு இப்போதுஎன்ன அவசரம்வந்துவிட்டது? காலதாமதம்ஆகிறது! சீக்கிரம் சாப்பிடலாம் வா! அடடா! ரெம்பக் களைத்தல்லவா போனுய்! நீ என்னிடம் சொல்லாமல் வெளியேறக் கூடாதென்று சொல்லிவைத் திருந்தேனே!

சின்னையன்:—(இவைகளில் வெகுஸந்தோஷமாக) அடீ ருக்குமுத்தூஉ! இனி எனக்கென்ன? எல்லாம் இங்கேதான் ஸ்திரமாகப் போய்விட்டது. இந்தக் கடிகாரத்தை யெடுத்து மாட்டிவை. சரியாய் ஓடும் உயர்ந்த விலைக் கடிகாரம். இந்தா இந்த ரூபாயையும் ஒப்புக் கொள் (என்று வேட்டி முடிப்பு அவிழ்த்து எடுத்துக் கொடுத்தான்).

இராக்குமுத்து:—(அதைப்பார்த்து) ஓஹோ! நீ வட்டிக்குப் போட்டுவைத்திருந்த ரூபாயா? வாங்கியாவந்துவிட்டாய்? நல்லது, அதிகஸந்தோஷம். உன் வீடு போலவே இந்த வீட்டை நினைத்துக்கொள். உனக்கு இவ்விடத்தில் ஒரு குறைவும் இருக்கமாட்டாது. உன் மனம்போலெல்லாம் சௌக்கியமாயிருந்து கொண்டிரு என்று ரூபாயைவாங்கிச் சரியாய் இருநூறையும் வட்டியுடன் எண்ணித்தன்வசமாய் வைத்துக்கொண்டனள்.

ஜமீந்தார்:—(தினந்தோறும் இராக்காலங்களில் இராக்குமுத்துவினுடைய வீட்டுக்குவந்து சுகபோகங்களை அனுபவித்துச் சலிப்படையாதவராகவே தனது ஊரின் ஞாபகத்தை அடியோடுமறந்து பலவகைகளிலும் அவளுடையவேண்டுகோள்களுக்குப் பொருள்களுந் தடையில்லாமல் மேன்மேலும் உதவிப் பெருங்கடனுட்பட்டுக் கண்டோர் தன்னை மதிப்புக் குறைவாய்ப் பேசும்படிக்கு இடந்தேடிக் கொள்வதானார்.)

சாமியார்:—(கிருஷ்ணதேவராகிய ஜமீந்தாருடன் இராக்குமுத்து வீட்டுக்குவருவார். இராக்குமுத்து சொல்லிவைத் திருக்கும் இடத்திற் படுத்துக்கொண்டு அவள் எப்போது தன்னிடம் வருவாள் என்று நினைத்துநினைத்து அதேதியானமாய் உற்று உற்றுப்பார்த்துத் தூங்காமலிருந்து வருவார். தீபவெளிச்சத்தில் அவளுடைய பேரழகுகளைப்பார்த்து அவளுடன் கலவிசெய்யக்கூடவில்லையே என்று ஏங்குவார். ஜமீந்தாருக்கு ஆசைபோகப் போகத்தைக்கொடுத்துத் தூங்கப்போட்டுவிட்டு இராக்குமுத்து இரகசியமாகத் தன்னிடம் வரும்போது அவர் 'காய்ந்தமாடுகம்பில் விழுந்ததைப்போல் அவளைப்பற்றிக்கொள்வர். இன்னம் ஜமீந்தாரிடம் சிபாரிஸுகள் செய்வதாகச்சொல்லிச் சொல்லி அவள் தன

க்கு இன்பத்தைக் கொடுக்கும்படிக்கு வேண்டிக்கொள்வர். ஒவ்வொருநாளும் அவளைப்புணரலாமென்று இந்திரிய ஸ்தம்பனக்குளிகைகளைச் சாப்பிட்டு வெகுபக்குவமாயிருந்துகொள்வர். இவர் முன் முன்னூறு ரூபாய்க்கு மேல் வாங்கியிருந்த அன்பதையும் அவளுடைய அன்பதைப்பெறவேண்டி அவளுக்குத் தாரைவார்த்துவிட்டார்).

இராக்குமுத்து:—(சாமியாருக்கு அதிகமாய் நினைத்தபடிக்கெல்லாம் போகம்தருவதில்லை. இவனால் இனி நமக்கு என்ன காரியம் என்று எண்ணினாள். என்றாலும் ஜமீந்தாரிடம் தன்னைப்பற்றிச் சிபாரிஸு பண்ணவேணும் என்பதையே முக்கியமாய் அவரிடம் வெளிக்குச்சொல்லி,வரவர ஏமாற்றிக்கொண்டு ஆசைப்பட்ட சாமியாருக்கு அதுதணியும்படி வஞ்சனையான வேறு வழிகளை அப்பால் தேடிக்கொள்வதானாள்.

(14.)

சிலதினங்கள் சென்று கோபமாய்ப் போயிருந்த முத்தண்ணாவும் பெத்தப்பெருமாளும் முக்கியமாய் இராக்காலங்களில் தங்களுக்குக் குஷாலாய்ப்பொழுது போக்குவதற்குத் தக்கவேறிடம் சரியானபடிகிடைக்காமற் சிரமப்பட்டு அதற்கு இராக்குமுத்துவைத்தவிர வேறேகதியும் இல்லாதவர்களாய், நாளையத்தினம் இரவு கறுப்பண்ணன்பூசை அவள் நடத்துவதாயிருக்குதே! நாம் கொஞ்சம் முன்னதாகவே அவளிடம்போய் அதற்குவேண்டிய காரியங்களுக்கு உதவியாயிருந்து கடைசியிற் கூடிக்குடித்து வெறித்து ஆனந்தமாயிருந்து வருவோமென்று தீர்மானித்து இருவரும் வியாழக்கிழமை உதயத்தில் இராக்குமுத்து வீட்டுக்கு வருவதானார்

கள். அந்தச்சமயத்தில் இராக்குமுத்துவும் சின்னைய னும் குட்டை ராமாயணபாராயணம் (சீட்டு விளையா ட்டு) பண்ணிக்கொண்டிருந்ததை அவர்கள் இருவரும் பார்த்து அந்தரங்கத்திற் சகியாதவர்களா யிருந்தார் கள்.

இராக்குமுத்து:—(வந்த இருவரையும் நோக்கி) வாருங்கள் சுவாமிமாறுகளே! இருவரும் திறந்த வீட் டில் நுழையும் பிராணிகள் (நாய்கள்) அல்லவா? வே றே வீட்டுக்குப் படிகட்டி மேலே ஏறிவிட்டதாக வல் லோ நினைத்திருந்தேன்? கண்பஞ்சடைந்து நெஞ்சடை த்து விக்கிப்போனீர்களே? இப்போது உங்களுக்கு இந்த வீட்டிற்குவாக்கண்தெரிந்துவிட்டதோ? வாருங் கள் இருங்கள் பலனைவாருங்களேன்? (என்றாள்).

முத்தண்ணு:—நாங்கள் இப்போது உன்னிடத்தில் ஏதாவது ஒருகாரியம் உண்டாயிருப்பதாக உத்தேசித்து வரவில்லை. வெய்யிலுக்குப் பகைவன் வீடு என்றும் நேசன் வீடு என்றும் உண்டோ? உன் நேசம் அன் றைக்கே மலையேறித் தொலைந்துபோய்விட்டது. சுடு கிற சட்டியைக் கைதாங்கிக் கொண்டிருக்குமா?

இராக்குமுத்து:—இருக்கட்டும் சாமிமாறுகளே! (மாறு-துடைப்பம்) நீங்கள் இல்லாமல் இந்த வீடுசுத்த மாய் விளங்குமா? எல்லாம் உங்கள் பாக்கியம் தானே சிலாக்கியமாய்ப் பெருக்கும்படிக் கிருக்கிறது? நீங்களா கத்தானே ரெம்ப ரெம்பக்கோவித்து முறுக்கித் தோ ளிற் போட்டுச் சுமந்துகொண்டு போய்விட்டீர்கள்? பொதிசுமக்கும் ஜெந்துக்க (கழுதைக) ளாகிவிட்ட தற்கு நான் பெண்பால் என்னசெய்வேன்? அடிக்க அடிக்க கைமீயந்துபவள் தானே?

பெத்தப்பெருமாள்:—(அவளைப்பார்த்து) நீ தான் மட்டுக்கடங்காத குறும்புகளெல்லாம் பண்ண ஆரம்பித்து விட்டாய்?

இராக்குமுத்து:—நான் ஏதோ ஆரம்பித்துவிட்டேன் என்று பேசுகிறீரே? நான் என்ன குரங்கா ஆரம்பிக்க?

பெத்தப்பெருமாள்:—உன்னையார் அடக்கியாள முடியும்? வானத்துக்குக்கோவணம் கட்டமுடியுமோ? எங்களைத்தவிர முந்தி இந்த வீட்டுக்குள் ஒரு காக்கையும் பறந்தறியுமா?

இராக்குமுத்து:—அப்படி இங்கே உங்களை அறியாமல் ஒரு வேற்று மனிதர் புழக்கம் உண்டாயிருந்ததா! இவன் சின்னையன் ஒரு அப்பிராணியாய்வந்து கூடினான். வாலிபனானதினால் வேலைக்கும் சலிப்பதில்லை. இவன் எனக்குப் பெற்றபிள்ளைபோல் என்னுடன் கல்மிஷம் இல்லாமல் உறவாடி இருக்கிறான். முடிந்தமட்டினும் வஞ்சனையில்லாமல் வீட்டுவேலைகளைப் பார்த்துக்கொண் டிருக்கிறான். அவனுக்கு நான் படி அளக்கிறதென்ன? இலவிசமாக அவன் எனக்குக்கிடைத்திருக்கிறதாயிருக்கிறது. வாயருமை கையருமைதான் அவனுக்குக் கோடிபொன்னாயிருக்கிறது. இல்லாவிட்டால் நான் உங்களுக்குத்தானே சிரமம் கொடுத்து வேறே சம்பள ஆள்வைக்கச்சொல்லவேண்டிய தாயிருக்கிறது? வெள்ளை மணலோடு கறுப்புமணல் சேர்ந்திருக்கிறது எப்போது தெரியவரும்? மழைபெய்து தண்ணீர் தரையை அலசி ஓடிவந்தால் அப்போது கறுப்பு மணல் துண்டாகப் புலப்படும். அந்தப்படிக்குத் தங்கள் பேரில் எனக்கு இருக்கும் அந்தரங்கப்பிரியம் சமயம்

வந்தால் தானே தெரியும், நாளையத்தினம் கறுப்பண்ணசாமி பூசையும் வந்துவிட்டது. அதற்காகவேண்டிய வேலைகளையெல்லாம் இவன் ஒருவன் தான் இருந்து பார்க்கவேண்டியதாய்த் தீர்ந்தது. மற்ற இனத்திகளெல்லாம் கண்ணியமாய்ப் புறப்படுகிறார்கள். நான் மண் குதிரையைப்போல் உங்களையே கதியென்று நம்பி நட்டாற்றில் விழுந்தேன்.

முத்தண்ணு:—நீ இப்போது எங்களை அநுசரித்துக்கொண்டிருப்பதில்லை. அப்படியானல் இதைக்காட்டிலும் நூறுபங்கு வேலைகள் க்ஷணத்தில் நடந்துவிடாதா? ஆகாயத்திலுள்ள மேகங்களெல்லாம் என்தேகத்தில் ரோகமாய்க் குடிகொண்டு வாதிக்கின்றன. நாலு பேருக்குமுன் எனக்குப் பிரதானமாயுள்ள முகத்தைக் காட்டவெட்கமாய்ப் போய்விட்டது. மூக்குமட்டுமா நான் இழந்திருக்கிறேன்? பெருமாளோ எப்போதும் குழாய்வழி அக்கினித்திராவகம் இறக்கிக்கொண்டிருப்பவனுகத்தீர்ந்தான். இந்தச் சீரழிவில் நாங்கள் உன்னைக்கட்டிச்சுகிப்பதற்கு முற்றிலும் முடியாதவர்களாய்த்தீர்ந்தோம். உன் முகதெரிசன மயக்கமொன்றே கொண்டு இவ்வாறு திரிந்துகொண் டிருக்கிறேம். இந்த வியாதிகளைத் தீர்த்துக்கொண்டு சுகிப்பதானவழி கர்னம்போட்டுப் பார்க்கிறேம் சாத்தியப்படவில்லை. எது குறைந்து போனலும் உன்பேரிலிருக்கும் ஆசாபாசம் மட்டும் எங்களுக்குக் குறையவேகாணேம். அவலை நினைத்துக்கொண்டு வெறும் உரலை இடித்துக்கொண்டது போலவே இருக்கிறது எங்கள் பாடு.

இராக்குமுத்து:—உங்கள் நிலைமைகளை நினைக்க எனக்கு வெகு பரிதாபமாயிருக்கிறது. நான் புரையற்ற திடகாத்திர சரீரமுடையவள். என்னை விட்டு நீங்

கள் கெட்ட ஸ்திரீகளிடத்தில் சாவகாசம் பண்ணிய தால் இப்படித்திராதரோகத்துக்கு ஆளாகிவிட்டீர்கள். அப்படியில்லையானால் உங்கள் கர்மாநுபவம் இப்படி விளைந்திருக்கின்றதே அன்றி வேறென்ன ? " பாவம் ஒருபக்கம் பழியொருபக்கமா? " நான் இதற்குக்கார ணமாய் ஒருக்காலும் ஆகமாட்டேன். நான் உங்களை விட்டு ஓடாமல் அகப்பட்டுக்கொண்டேனல்லவா? "அக ப்பட்டவனுக்கு அஷ்டமத்துச்சனி ஓடினவனுக்கு ஒன் பதாமிடத்து ராஜா" என்றபடியல்லவா இருக்கிறது ? எல்லாரும் தாசி நானுந்தாசியா? ஒரே பேர் பலமனித ருக்கு வழங்கப்படுவதா யிருந்தாலும் அவரவர் குண வேற்றுமை உண்டாகாம லிருக்குமோ ?

முத்தண்ணு:—நொண்டியை நொண்டியென்றழை த்தால் அவனுக்கு உடனே கோபம்வரும். அப்படி யிருக்க நீ கோபமாய்ப்பேசுவதன் காரியம் என்ன?நாங் கள் நீ எங்களுக்கு வியாதியைக்கொடுத்தாயென்று சொன்னோமா ? 'பட்டுக்கோட்டைக்குப் பாதையெது வென்றால் கொட்டைப்பாக்கு நாறு' என்றபடி பேசுகி றாயே ? வெகு நேர்த்தி ! நேர்த்தி ! நாங்கள் உன்னோடு கூடிச் சுகித்திருக்கும்படிக்கான பாக்கியத்தை இழந் தோமே என்ற ஆறாத்துயரத்தைச் சொன்னோம். இது போனாலும் உன் கண் காது மூக்கு முகத்தையாவது குளிரப்பார்த்து உல்லாசமாயிருக்கலாமென்றால் அதற் கும் விக்கினம் நேருகிறதே என்றகவலைதான்.

இராக்குமுத்து:—அதெல்லாம்வேண்டாமென்று யார் சொல்லுகிறார்கள்? உங்கள் திராதவியாதிகளுக்கும் வியாதிகளை நான் எவி ஓட்டிவிடுவேன். நீங்கள் ஒன்று க்கும் அஞ்சவேண்டியதில்லை. உங்கள் சோகந்தீரச் சீக் கிரமும் போகம் ஊட்டுவேன்.

முத்தண்ணு:—சரி, நீ இப்படி எத்தனையோ முறை குளிராட்டியிருக்கிறாய். 'சிங்கி குளிர்ந்தும் கொலும்' என்றபடி இருக்கிறது. இனி எங்கள் பேரில் வஞ்சமில்லாதபடி நடக்கவேணும். அப்படிக்கானால் நாங்கள் இந்தப்பூசைக் காரியங்களையெல்லாம் ஒரு விநாடியில் சிறப்புச்செய்துவிட மாட்டோமா?

இராக்குமுத்து:—மகாராஜராய் நீங்களே இருந்து எல்லாம் நடத்திவைக்க நான் என்ன வேண்டாமென்று சொல்லுகிறேன்? குருடி என்னத்துக்கு அழுகிறாள்? நெடுகிலும் பாந்தமாயிருந்த நீங்கள் தானே எனக்கு வேணுமென்று நான் தவம்செய்து கொண்டிருப்பதெல்லாம்? மறுபடி என்தேகம் உங்களுக்குச் சொந்தம் தானே? நாளைக்கு நீங்கள் இருவரும் இராமலெட்சுமணரைப்போல வந்திருந்து தான் பிரார்த்தனைக் காரியத்தைச் சிறப்பாய் நடத்திவைக்க வேணும்.

முத்தண்ணு:—என்ன செய்கிறது? உன் பாசம் எங்களைக்கட்டிக் குப்புறக் கவிழ்த்துகிறதே? விட்டுப் போகுதில்லையே!

அருக்குமங்கையர் மலரடிவருடியுங்
கருத்தறிந்தபி னரைதனிலுடைதனை
யவிழ்த்துமங்குள வரசிலைதடவியு மிருதோளுந்
றணைத்துமங்கையி னடிதொறு நகமெழ
வுதட்டைமென்றுப விடுகுறிகளுமிட
வடிக்களந்தனின் மயில் குயில்புறவென மிகவாய்விட்
டுருக்குமங்கியின் மெழுகெனவுருகிய
சிரத்தை மிஞ்சிடு மனுபவமுறுபவ
முலக்கையின் கனிநிகரென விலகிய முலைமேல்வீழ்ந்
துளுக்கலங்கிமெ யுருகிடவமுதுகு

பெருத்தவுந்தியின் முழுகிமெய்புணர்வற
வுழைத்திங்கன கலவியைமகிழ்வது தவிர்வேனே.

ஏன் பெத்தப்பெருமாள்! சங்கதியெப்படி இருக்கிறது?

பெத்தப்பெருமாள்:—கேட்பானேன்? சர்க்கரைப் பந்தலில் தேன்மாரிசொரிந்தது போலவே தான் இருக்கிறது. உமது பாட்டு என் மனதை வெகுவாய் உருக்கிவாட்டுகிறது. 'இந்த நிலவுக்கும் சந்தனப்பொட்டுக்கும் இப்படியா முளைக்கொட்டுறது' என்றபடி இருக்கிறது. கோணல்களையெல்லாம் சீக்கிரம் நேர் செய்து கொண்டு இனிக்கொண்டானடிக்கவேண்டியது தான் இப்போது மேலே நடக்கவேண்டிய காரியத்தைப் பேசும். பிரார்த்தனைப்பூசை நாளைரெம்பமுக்கியமாய் வந்திருக்கிறது. குற்றத்தையே நாம் பாராட்டிக்கொண்டிருக்கக்கூடாது தான். 'குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை' அல்லவா?

இராக்குமுத்து:—நான் எப்போதும் உங்களுக்குச் சொன்னபடி கேட்டுக் கொண்டிருக்கப்பட்டவள். உங்களையே தான் நான் நம்பிக்கொண்டிருக்கிறேன். 'காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும் ஞாலத்தின் மாணப்பெரிது." ஆகையினாலே இந்த உசிதசமயத்தைத்தெரிந்து தங்களாலான சகாயம் செய்து நாளைப்பிரார்த்தனைக் காரியத்தைச் சிறப்பாய் நடத்திவைக்கவேண்டியது உங்கள் கடமைதான். இனத்திகளெல்லாரும் அவரவர்மாப்பிள்ளைகளோடு பிரார்த்தனைக்குச் செறுக்காய் வருவார்கள். என்னை அவர்களுக்குமுன் தலை நிமிர்ந்திருக்கும்படிச் செய்வதில் உங்களுக்குத்தான் பெருமை.

பெத்தப்பெருமாள்:—எங்களுக்கு எது தான் பிர மாதமான காரியம்? நாங்கள் இருவரும் காடகனும் தமனகனும்போ லிருக்கிறோம். காற்றும் நெருப்பும் சேர்ந்தது போலத்தான். உனக்கு அந்தப்படியே குறை வில்லாமல் நாங்கள் அமக்களப்படுத்திவிடுகிறோம். 'கண் ணுள்ளபோதே கண் காட்சி.' தினம் வேணு மென்று லும் இந்த விதமான பூசையை நடத்திப் பிரஹ்மானந்த மாயிருக்கச்செய்ய எங்களிருவரால் முடியும். இராத்திரி ஒரு பொழுதில் பெரியபிரளயம் அடித்து விடுவோம். சகலமும் தேடிக்கொண்டு நாளைக்காலையிவ்விடம் வந்து சேருகிறோம். நாங்கள் இப்போதே போய்வருகிறோம் (என்று இருவரும் போய் விட்டார்கள்).

## (15).

சின்னையன்:—(இவ்வாறு இருவரும் சென்றபின் இராக்குமுத்து! உன்னிடம் ஒரு சங்கதிசொல்லயோசிக் கின்றேன்.

இராக்குமுத்து:—"தாய்க்கொளித்த சூலுண்டோ? நான் வேறு நீ வேறு? ஆண்பிள்ளைகளை நம்பக்கூடாதெ ன்று நான் முன் சொல்ல வில்லையா?

சின்னையன்:—என்ன நீ அப்படிச் சொல்லுகிறாய்! நான் பலபேர் இங்கே வரத்துப்போக்குக்கு இடமா யிருக்கிறதே என்று நினைத்தேன்.

இராக்குமுத்து:—நான் உனக்கு முன் எவ்வளவோ ஞானமார்க்கங்களைப் போதிக்கவில்லையா ? வீட்டுக்கு மனிதர்கள் தானே தெய்வம். நாலுமனிதர் வரப்போக இருந்தால் வீட்டுக்குச் சிறப்பு. அவர்களால் நமக்கு வேண்டிய பலகாரியங்களையும் சிரமமில்லாமல் சாதித்

துக் கொள்ளலாம். அப்படிக் கண்ட கண்டவர்களும் இங்கு வந்து கூடுவதுமில்லையே? முத்தனும் பெத்தனும் பிரார்த்தனைக்காரியத்துக்கு உதவிசெய்து துணையா வருவார்கள். ஜமீந்தாரென்பவர் நமது வீட்டுக்குவரக்கூடிய சாமானியமனிதரா? இன்னம் சிலபேர்கள் பார்த்ததின்பேரிலேயேஇவ்விடம்வந்துபோயிருக்கிறார்கள். கோடிதிரவியம் கிடைத்தாலும் இப்படி நமக்கு உற்ற மனிதர்கள் சம்பாதிக்கமுடியுமா? மேலும் நான் ஒருத்தி இவ்வளவு அழகுடன் இருந்தும் பிறர் ஆத்திரங்களைத் தீர்த்துக்கொள்ளத் தடைவைத்துக்கொண்டிருந்தேனால் எனக்கு என்னபுண்ணியம்? "ஊருடன் கூடிவாழ்" என்ற நீதிவாக்கியத்தை நான் அனுசரித்திருக்கிறேன். "ஊர் என்றது இடவாகுபேராய் ஊரிலுள்ள எல்லாச்சாதியாருக்கும் ஏற்பட்டது. ஜாதிவித்தியாசமில்லாமல் அவர்களுடன் கூடிவாழவேண்டியதே சிறப்பு. "பறைச்சியாவதேதடா பணித்தியாவதேதடா-இறைச்சிதோலெலும்பினு மிலக்க மிட்டிருக்குதோ-பறைச்சிபோகம் வேறதோ பணத்திபோகம்வேறதோ-பறைச்சியும் பணத்தியும் பகுந்துபாருமும்முளே" என்ற பெரியோர் திருவாக்கை நாம் பூசிக்கவேண்டாமோ?

சின்னையன்:—சரிதான், முத்தண்ணா என்பவன் நீ வாயில்வைத்துக் குடித்துக்கொண்டிருந்தபுகையிலைச் சுருட்டை வெடுக்கெனப்பறித்துத் தன்வாயிற் கவ்விப் புகையை உறுஞ்சுகிறானே!

இராக்குமுத்து:—அவன்தானே என் பேரிலுள்ள ஆசையினாலே அப்படிச்செய்தான். அவன் வியாதிக்காரனாயிருக்கிறதினாலே நான் மட்டும் அவன் எச்சிலைச் சேர்க்கிறதில்லை. ஜமீந்தாரும் நானும் ஒருகலத்தில்

சாப்பிட்டுவருகிறது உனக்குத்தெரியுமல்லவா? "வாயி லேகுடித்த நீரை யெச்சிலென்று சொல்லுநீர் - வாயி லேகுதப்புவேதம் மெனப்படக்கடவதோ - வாயிலெச் சில்போகவென்று நீர்தனைக்குடிப்பீர்காள் - வாயிலெச் சில்போனவண்ணம் வந்திருந்து சொல்லுமே."

"ஓதுகின்ற வேதமெச்சி லுள்ளமந்திரங்களெச் சில்-மோதகங்களானதெச்சில் பூதலங்களேழுமெச்சில்-மாதிருந்த விந்துவெச்சில் மதியுமெச்சிலொளியுமெச் சில் - ஏதிலெச்சிலில்லதில்லை யில்லை யில்லை யில்லையே." மஹான்கள்வாக்கு இப்படிக்கெல்லாம் இருக்கின்றதே?

சின்னையன்:—ஆஹா ஹா ஹா! சரிதான்! சரிதான். ஆனால் அந்த இரண்டு பயல்களைப் பார்க்கும்போது என்னை அறியாமல் குடல் படபட என்று நடுங்குகிறது. கொலைபாதகப்பயல்கள். காலனும் தூதுவனும் அவர் களன்றிவேறில்லை. எனக்கு அவர்கள் முன் நிற்கப் பய மாயிருக்கிறபடியினால் நான் ஒதுங்கிவிடுகிறது.

இராக்குமுத்து:—காலனும் என் அழகைக்கண் டால் பணிந்து என்பாதத்தில் விழுவான். நான் உனக்கு இருந்து கொண்டிருக்கிறேன். நீ ஒன்றுக்கும் அஞ்ச வேண்டியதில்லை. சின்னையா! என் சமீபத்தில் வா!

சின்னையன்:—அப்பாடி! அந்தவேதாளமும் பூதமும் தொலைந்து போய்விட்டன. என்னமோ என்னை ஒருவிதமாய்க் கிட்டக்கூப்பிடுகிறாயே? எனக்கு இன்னம் புண் ஆறவில்லை.

இராக்குமுத்து:—சும்மாவா! அதெல்லாம் இல்லை. நான் இப்போது பாலகிருஷ்ணஞ்செட்டிகடைக்குவைத் திருக்கும் சீட்டைத்தருகிறேன். நீ அந்தக்கடையில்

அதைக்கொடுத்தால் பன்னிரண்டு உஸிக்கிப்பாட்டில் கள் கொடுப்பார்கள். நீ அதைப்பந்தோபஸ்தாக என்னிடம் கொண்டுவந்து ஒப்பித்துவிடவேணும். உன்னைத்தவிர எனக்கு நம்பிக்கையானவர்க ளில்லை.

சின்னையன்:—சரி, நான் அப்படியே போய் ஒரு நொடிக்குள்பாட்டில்களை வாங்கி வந்து விடுகிறேன். சீக்கிரம் என்னிடம் அந்தச் சீட்டைக்கொடு.

இராக்குமுத்து:—(அப்படியே முன் முத்தண்ணு தன்னிடம் கொடுத்திருந்த சீட்டைக்கொடுத்துச் சின்னையனுக்குவேண்டும் விதங்களை கற்பித்து அனுப்பினள்).

சின்னையன்:—(கடைவீதியிற் போய்ச்சேர்ந்து தன்னைச் சந்தித்தவர்களை யெல்லாம், ஏன் அய்யா விஸிப்பாட்டி விற்கும் கடை எது? எது? பெரியமனது பண்ணிச்சொல்லவேண்டும் (என்று சுழலும் புத்தியுடன் சுற்றிவந்தான். கடைத்தெருச்சனங்களிற் சிலர் அதென்ன விஸிப்பாட்டி என்பது என்றார்கள். சிலர் பயித்தியக்காரா! இங்கே வந்து எங்களைத் தொந்தரை செய்யாதே! அதெல்லாம் எங்களுக்கு என்றும் தெரியாது! அப்படிப்போ என்றார்கள். சிலர் வேடிக்கையாகவே அவனைப் பொய்யான விடங்களுக்குக் கூட்டிப் போய்ப் பரிகாசம் செய்தார்கள். சிலர் அவன் சொல்வதைக் கேட்டு, விஸிப்பாட்டி மூப்பாட்டி நாப்பாட்டி வைப்பாட்டி இவைகளெல்லாம் நாங்கள் அறிந்ததில்லை என்றார்கள். அக்கூட்டத்தில் ஒரு சுபாவஸ்தன் அவனுடையசீட்டைப்படித்துப்பார்த்து, அதோபாலகிருஷ்ணஞ்செட்டிகடை இருக்கிறது. அங்கே இந்தச் சீட்டைக்கொடு என்று அவனை அனுப்பினன். அவ்விதமே

அவன் அக்கடை முகப்பிற்போய்நின்று பார்த்துக்கொண்டிருந்தான்.

பாலகிருஷ்ணஞ் செட்டி:—(சீட்டும் கையுமாய்ச் சின்னையன் நின்று கொண்டிருப்பதைப்பார்த்து) அது என்ன ஓய்! என்னவேணும்? இங்கே உள்ளேவாரும்! (என்றான்).

சின்னையன்:—இல்லே! ஒன்றுமில்லே! இந்தச்சீட்டுத்தான். விலிப்பாட்டி பன்னண்டு வேணும்.

பாலகிருஷ்:—(சீட்டைவாங்கிப்பார்த்து)இது முத்தண்ணுவையருடையதல்லவா? அவர் எங்களுடைய கடைக்கு ஆயிரம் ரூபாய் வரை பாக்கிவைத்துக்கொண்டு அந்தக்கடனை வெகு காலமாகக்கொடாமல் வீண்சாக்கும் போக்கும் சொல்லி நாள் கடத்திவருகிறார். அவர் நடபடிகளெல்லாம் இப்போது விசாரிக்க முன்னிலும் அதிகத் தரக்குறைவாய் வந்திருக்கின்றன. இவைகளை உத்தேசித்து இனிமேலும் கடன்கொடுத்துக்கொண்டு வர ஒருக்காலும் இங்கு சரிக்கட்டிவராது என்ன தபிரியமாய் இந்தச் சீட்டை இவ்விடம் கொடுத்தனுப்பியிருக்கிறார்? இப்படியாபாரம்பண்ணி எங்களால்முடியாது.நியாயசபை மூலம் அய்யரிடம் தொகையை வசூலிப்பதான நடபடிகள் இப்போது நடந்து கொண்டிருக்கிறது. இந்தப்படிக்குத்தப்பாமல் நீர் அவரிடம் போய்ச்சொல்லிவிடும். போரும் (என்று சீட்டை விட்டெறிந்தான்).

சின்னையன்:-(செட்டிகோபமாய் இரைந்து சீட்டை விட்டெறிந்து விட்டதில் பெரும்பயமடைந்து தான்வந்த காரியத்தைப்பெறுமல்வெறுங்கையனுக எப்படி இராக்குமுத்துவினிடம் போகிறதென்று அதிகக்கவலையுடன்

யோசித்துக்கொண்டு அந்தக்கடைவாசல் சமீபம் சாக்கடைமேலே ஜனங்கள் நடப்பதற்காகப்போடப்பட்டிருந்த பலகையின் பேரில் மீனாட்சியம்மன் தாயாரைப் போன்ற முகத்துடன் சீட்டும் கையுமாய் நின்றுகொண்டிருந்தான்). நகர்சங்கத்தலைவன்

(அந்தச்சமயத்தில் தனது இரண்டு சேவகரை முன்னால்ஓடவிட்டுக்கடைத்தெருக்கூட்டத்தை அதட்டி விலக்கும்படிக்குச் செய்து பின்னால் வண்டியிலேறிக் குதிரைகளைச் சவுக்கை ஓங்கிவிரட்டிக்கொண்டு ஆரவாரத்துடன் அந்தக் கடைக்குச்சமீபமாய் வந்து வண்டியை நிறுத்தி "வடிகாலின் வீச்சம் பொறுக்கமுடியவில்லை" என்று கண்டிப்புச்செய்வதானான்).

சின்னையன்:—(வண்டிச்சத்தத்தையும் குதிரைகள் குதித்துக் கனைக்கிறதையும் ஊரதிகாரி சவுக்கை ஓங்கிக்கொண்டு அதிகாரம் செய்கிறதையும் கண்டவுடன் திடுக்கிட்டு மனங்கலங்கித் தான் தப்பிக்கொள்ளவேணுமென்பதாக நின்றுகொண்டிருந்த பலகைக்குக் கீழே சடுதியில் நுழைந்து சும்மாவும் அங்கே இராமல் பயத்தினால் தனக்கு முட்டிவந்து விட்ட மூத்திரத்தை வடிகாலினிடத்திலேயே மறைவாயிருந்து பெய்துகொண்டிருப்பதானான்).

சேவகன்:—(வடிகாலின் ஆபாஸங்களை உற்றுப் பார்த்துக்கொண்டு வந்த சமயத்தில் சின்னையன் ஆபாஸப்படுத்தியிருப்பதைக்கண்டு அதட்டி) அடே! அவனா! அங்கே ஒண்ணுக்கு இருக்கிறவன்! அடேகாமாட்டே! உன்னைத்தானே! இங்கேவா! பூல்! உன்னை எஜமான் கூப்பிடுகிறார் (என்றான்).

சின்னையன்:—(உடனே தன் உடம்பைக்குலுக்கிப் பயந்து கைகால் உதறலெடுத்து மூத்திரம் பாதிபெய்ந்தும் பெய்யாமலும் எழுந்து நீரைக் கால்வழியாக விட்டு வஸ்திரத்தையும் நனைத்துக்கொண்டபடிக்குச் சீக்கிரம் சீக்கிரமாக நாலுதிசைகளிலும் பரக்கப்பரக்கப் பார்த்துத் தன்னைத்தப்பித்துக்கொள்ள வேணுமென்பதாய் ஓர்பக்கமாய் ஒதுங்கி மறைந்து சற்று யோசித்துப்பின் தன்கால் விசைகொண்டமட்டும் பெரிய ஓட்டம் எடுப்பதானான்).

சேவகன்:—(அதைக்கண்டு) கள்ளப்பயலே! தப்பி ஓடுகிறாயா? எங்கே தப்பிறை (என்று விசைகொண்டு அய்யனை விடாமற்பின்தொடர்ந்து போய் அவன் குரல் வளையில் கைபோட்டுக் கிட்டிபோல் பலமாய்ப்பிடித்துக் கீழே கிடத்தி அமுக்கிக்கொண்டான்).

சின்னையன்:—(சாவானென்று குரல் வளைப்பிடியைச் சேவகன் விட்டவுடன்) ஐயோ! நான் யாதொரு பாவத்தையும் அறியேனே! இந்த அநியாயம் உண்டா! நான் விலிப்பாடிவாங்கவல்லவா வந்தேன்! என்னைப் பிடியாதிர்கள்! உங்களுக்குப் பெரியபாவம் பாவம்! சூத்திரன் பிராமணனைத் தொடலாமா! அய்யா! உங்களுக்கு அனேக ஆசீர்வாதம் செய்கிறேன்! (என்று கூச்சற் போட்டு அழுது கொண்டு கீழே புழுதியிற்கிடந்து கிறுககாய்ச் சக்கரபாணம்போல் உருண்டு புறண்டு கொண்டிருந்தான்).

சேகவன்:—(அவனை விடாமல்) அடே! குறப்பார்ப்பான்! நீ இங்கே எஜமானிடம் வந்து சங்கதிசொல்லி வரலாம் வா! ஜலஸ்பரித்துக்குப்போய் ஆபாசம் நீ செய்தாயே? பின் கள்ளத்தனமாய் எய்த்து விட்டு மெள்

ளப் பதுங்கி ஓடுகிறாயா ? (என்றுபாப்பானைத்தலைவிரி கோலமாக இழுத்து வந்து நகரபரிபாலகன் முன்விட்டான்).

நகர்சங்கத்தலைவன்:—(சின்னையனைக்கோபமாய்ப் பார்த்து உறுஞ்சிக்கொண்டிருந்த தன் வாய்ச்சுருட்டைப்பிடுங்கிக்கையிற் பிடித்து மற்றொருகையை நீட்டி) ஹைறயெ கூஸ்! எங்கே ஓடினாய்! நாய்! பீப்பண்ணி! இவனும் ஒரு பிராமணனா? டாமபீஸ்ட்! (என்றார்).

சின்னையன்:—(கோபமாய் மனதிற்கொஞ்சம் துணிவுகொண்டு அய்யா ! நீங்க ஒங்களுக்குத்தான் எங்கிலீஸு தெரிஞ்சுபோச்சென்று "டாஸ்பூஸ்" என்று பாம்பாய்ச்சீறி மிரட்டாதீர்கள். எல்லாப்பயகளும் தான் அங்கே மூத்திரம் பேயுறான்கள். நான் என் வேட்டியிற் பேய்ந்து கொண்டால் உங்களுக்கென்ன? 'ஊருக்கு இளச்சவன் பிள்ளையார் கோயிலாண்டி' என்று பார்த்துக் கொண்டீர்களோ ? 'கோவணத்துக்கு மிஞ்சின தரித்திரமுமில்லை, தலைக்கு மிஞ்சின ஆக்கினையுமில்லை'. நான் யாதொரு தப்பிதமும் செய்யவில்லை. இந்தக்கடையில் விலிப்பாட்டி வாங்கவந்தேன். அவன் கொடுக்கமாட்டேனென்று வம்புபேசுகிறான். நான் யாருடைய மனிதன் என்னும் எங்கிருந்து வந்தேனென்றும் இந்தாகவலியங்களைச்சொன்னால் நீங்கள் மயங்கித் தலைகீழாய் அடித்து விழுந்து விடுவீர்கள்.

நகர்சங்கத்தலைவன்:—இவன் என்னென்னமோவெல்லாம் உளறுகிறான். அதென்ன விலிப்பாட்டி என்பது ? கடைக்காரன் கொடுக்காததற்கு என்னிடம் பிரியாதாசொல்லுகிறாய்? நல்லது சேவகா! இவனுக்கு ஏழைக் குறும்பு ஜாஸ்தியாயிருக்கிறது. நீ இவனை நியூ

ஸென்ஸுக்காகச் சார்ஜ்செய்து கொட்டடியிற் கொண்டுபோய் அடைத்துவைக்கச் செய் - நம்மை மதியாமற் பேசுகிறான் என்றும் சொல் - ஹைஹேயழுத்திரக் குண்டிப்பார்ப்பான் - கொடேஹேறல்.

சேவகன்:—(சின்னையனை நோக்கி) ஏ அய்யரே! இங்கே வா! எஜமானை எதிர்த்துப் பேசுகிறாய்! அக்கிரமம் அதிகம் செய்திருக்கிறாய்! ஸ்டேஷனுக்குவா!

சின்னையன்:—(வராமல் பெரும் வம்பு செய்திருந்தபடியால் சேவகன் அவன் கரத்தைப்பற்றி யிழுத்தான். அய்யன், பொத்தென்று கீழே விழுந்து பிராணன் போகிறவர்க ளுதைத்துக் கொள்வதுபோல் தனது இரண்டு கால்களையும் மாற்றி மாற்றி உதறி உதறித் தன்னைப் பிடிக்கும் சேவகன் முகம் உடம்பெல்லாம் பலமாய் உதைத்து) ஐயோ! நான் யாதொருபாவத்தையும் அறியேன்! சூத்திரா! என்னைத்தொடாதே! டேசனுக்கு நான்வரமாட்டேன்! நீபோ! என்னைத்தொடாதே! தொட்டால்பார் இதோ உன்தலை 'டபார்' என்று வெடிக்கிறது! தொடாதே என்றால் என்ன ரொம்பக்கெட்டுப் போனுப்லே இருக்கிறது. பார்தெகிடிக்கே.

நகர்சங்கத்தலைவன்:—வாயிற்சுருட்டைக்கையில் வெடுக்கெனப்பிடுங்கிப்புகையை ரெயில் எஞ்சின் போலக்கிளப்பிக் கோபமாகச் சிவந்த கண்களை உருட்டிப்பார்த்து, 'முண்டனுக்கு இரண்டு பேர்' என்றபடிக்குத் தனது இரண்டு சேவகரையும் துவாரபாலகரைப் போல் ஏவி அய்யனைக் கசாப்புக்காரர் ஆட்டைக்கொண்டு போவது போல் பலவந்தமாகப்பிடித்திழுத்து நிர்ப்பந்தித்துத் தள்ளிப்போகச் செய்தனன். அந்தப் படிக்கே சேவகர் அவனைப்போலீஸ் ஸ்டேஷனுக்குக்

கொண்டுபோய் அதிகாரியிடம் அவன் குற்றத்தை ஒன்று பத்தாகச்சொல்லிக் கொட்டடிக்குள் அடைத்து விடச்செய்து போயினர்.

சின்னையன்:—கொட்டடிக்குள் அடைபட்டு வெள்ளாடுபோற் சும்மாயிராமல், ஆதெய்வமே! தெய்வமே! இப்படியும் எனக்குச்செய்தாயா! ஏ! சுப்பிரமணியக்கடவுளே! நான் கார்த்திகைக்கு உன்னுடைய பூஜையை அலட்சியம் செய்து விட்டபடியினல் நீதான் இந்தத் தண்டனையைக் கொடுத்து எனக்குப் புத்திவரும்படி செய்திருக்கிருய்! இனிமேல் நான் உன்னை மறக்கமாட்டேன்! என்குலதெய்வமே! நான் செய்துவிட்ட பெரிய அக்கிரமங்களை யெல்லாம் நீ மன்னித்து இது சமயம் கிருபையாக என்னை இரட்சித்துக் காப்பாற்ற வேண்டும்! பரமதயாளமூர்த்தீ! புகலில்லாதவர்களையே காப்பாற்றக்கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் நீயேதஞ்சம்! எனக்கு இது சமயத்தில் மாமனு, மைத்துனனு, அல்லது வேறே யார்தான் கருமசிரத்தை யெடுத்து என் ஆபத்தைத் தீர்த்துவைக்கப் போகிருர்கள்! நான் எவரும் தேடுவாரற்ற ஏழையாய்ப் போய்விட்டேனே! அருமையான மனைவியையும் விட்டுப் பிரிந்தேனே! அவள் எப்படித் தவித்துக்கொண் டிருக்கிருளோ.

இவ்வாறு மனங்கசிந்து முறையிட்டுக் கொண்டிருந்தபோது, இந்தவாசகங்களைக் கேட்க நேர்ந்த ஸ்டேஷன் ஆபீஸர், மகமதியராயிருந்தும் ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளினது கலியுக வரப்பிரசாதங்களைப் பலவாய்க் கேட்டு அவரிடத்திற் பக்தியை உடையவரா யிருந்ததுமன்றி இந்துமதவுண்மைகளையும் தேர்ந்திருந்தவராகையால், அந்த அய்யனிடத்தில் அபிமானமுற்றுச் சின்

லேயனே நோக்கி, அப்பா! நீ சாதுவான பிராமணன். 'பறையர் தெருவில் வில்வம் முளைத்தவாறு போல்' பொய்யும் புலேயாட்டும் அக்கிரமமே காணியாட்சியா யுள்ள இந்த விடத்துக்கு நீ வந்தனேயே? இந்த ஆபீஸ் எல்லேக்குள்ளும் நீ வரத் தகாதவனுகக் காணப்படுகிற தே? நான் உன்னே விடுதலே செய்து விடுகிறேன். தப்பி ஓடிப்போய் விடு என்று அவனேவெளியேற்றியனுப்பி னர்.

சின்னேயன்:—அய்யா! ராவுத்தரே! நீர் புண்ணிய வான். நீர் வெகு நாளைக்குப் பிள்ளே குட்டிகளுடன் க்ஷேமமாயிருப்பீர் (என்று பலதரம் தன் தலேயில் அடி த்துச் சலாம் போட்டு விட்டு இராக்குமுத்து வீட்டுக்கு வழிநடக்கக் கால் வழங்காதவனுய்த் தனது பிசகுகளே உணர்ந்து பின் என்றாலும் அவளேக்கண்டு சங்கதியைச் சொல்லிப்போவதே நியாயமென்றுதீர்மானித்து அவள் வீட்டை நோக்கி இரவு எழுமணிக்கு வந்து சேர்ந்து நடந்தவைகளே யெல்லாம் அவளிடத்திற் பாடம் ஒப்பி விக்கும் குழந்தையைப் போலச் சொல்லிச் செல்லஅழு கையும் அழுதுநின்றுன்.

இராக்குமுத்து:—ஆஹா! உனக்கு இவ்வளவு மோசங்களெல்லாம் சம்பவித்து விட்டனவா? போன தை நினேத்து வருத்தப்படுவதிற்பயனென்ன? நீ ஒன்று க்கும் இனிப்பயப்படவேண்டியதில்லே. எல்லாத்துக் கும் அந்த எரிமலேயானே உன்னேக்காப்பாற்றுவான். உஸ்கிபாட்டில்கள் இல்லாவிட்டால் பெரிய காரியமல்ல. நீ தப்பி வந்து சேர்ந்ததே போதுமானது. 'தலேக்கு வந்தது தலேப்பாவோடே போனது' ஆயிரம் கொடுத் தாலும் உன்னேப்போல் எனக்குக் கிடைக்குமா? (என்று

அவனுக்கு வாய்ப்பாயசம் கொடுத்துத் தேற்றிவைத்துக்கொண் டிருந்தாள்).

சின்னையன்:—(கொட்டடியில் அடைபட் டிருந்த காலத்தில் தனக்கு உண்டாயிருந்த ஞானங்களெல்லாம் தனக்குச் சாக்கிரத்திற் சொப்பனம்போல் இல்லாமல் இப்போது இராக்குமுத்துவினுடைய விலக்கரியமாயை யிலேயே அகப்பட்டுப் பாம்பின்வாய்த் தேரை தேனை நக்கியவாறுபோலத் திருப்தியுடன் அவளுக்கு வேண் டிய பணிவிடைகளைச் செய்திருப்பதானன்.)

இராக்குமுத்து:—(பின் ஒரு சிறிதும் காலதாமதம் செய்யாமல் சீட்டுடன் தானே பாலகிருஷ்ணஞ் செட்டி கடைக்குப்போய் அவனைத்தனது சாகசங்களினுல் ஒரு விநாடியில் மயக்கிப் பாட்டில்களைக் கவர்ந்து திரும்பித் தன்வீடுவந்தனள். அவளுடைய மோகனமந்திர சக்தியைச்சொல்ல யாருக்கும் தாமில்லை. அன்றிரவு வந்த கிருஷ்ணதேவரிடமும் கருப்பண்ணசுவாமி பிரார்த்தனையை முன் தெரிவித் திருந்தபடிக்கு வேண்டிய பொருள்களைப்பெற்று மறுநாள் தனக்கு அதுகாரியத்தைப் போய் நிறைவேற்றிவர வேண்டியதா யிருப்பதற்குச் சாவகாசமும் முற்றும் செல்லுமென்று உத்தரவு கேட்டுக்கொண்டனள். சாமியாருக்கு அன்றிரவு போகம் கொடுப்பதாய் அவரைப் பொருள்கொண்டு வரச் சொல்லியிருந்தனள். அவ்விதமாகவே அவர் கொண்டுவந்திருந்ததையும் கைவசமாக்கிக் கொண்டனள்.

## (16.)

சின்னையன்:—மறுநாள் அதிகாலையில் தலையுடன் இராக்குமுத்துவினுடைய சேலைரவிக்கைகளை எடுத்துத் தன் ..மேலேபோட்டு அவைகளில் எழும் பரிமளவாச

னையைமோந்துகொண்டு வெளியேறிக் குளக்கரைக்குச் சென்று அவ்விடத்தில் ஜனங்கள் பழக்கமில்லாத ஓர் ஒதுக்கிடத்தில் அவைகளை நன்றாய் விடியுமுன் அவசரப்பட்டுத் துவைத்துக்கொண் டிருந்தான். துலுக்கன். ஒருவன் நாற்பது பிராயமுள்ளவன் அந்தச்சமயத்தில், சின்னையனுக்கு நல்லகாலம் மெல்ல நகர்ந்துவருவது போல, அப்பக்கமாய் இருமிக்கொண்டு கையிற் கம்பூன்றி மெதுவாய் அடிமேல் அடிவைத்து நடந்துவந்து தப்பி (பிசகி)த் தப்பிக்கொண்டிருப்பவனைப்பார்த்து நீர் யார்? இந்தத்தவலை உமதுவசம் வருவதற்கு என்னகாரணம்? என்றான்.

சின்னையன்:—தான் கோணல்வழியை விட்டு நேரான பாவனையைப் போலக், கூனல் முதுவுடன் நிமிர்ந்து பார்த்து, "நீர் அதையெல்லாம் ஏன் விசாரிக்கிறீர்? நீர் என்ன களவுபிடிக்க வந்தீரோ?களவாணிப்பயல் இப்படித்தான் இருப்பானோ? உமது காரியத்தைப் பார்த்துப்போம் என்றான்.

துலுக்கன்:—அது சரிதான். இந்தத்தவலை தேவடியாள் இராக்குமுத்து என்பவளுடைய தல்லவா? நான்தான் அவளுக்கு வாங்கிக்கொடுத்தவன்.

சின்னையன்:—அப்படியா சேதி! நீர் நல்ல கெட்டிக்கார ஆஸாமிதான். ஏது நீர் இந்தத் தவலையை மெல்லத் தூக்கிக்கொண்டுபோகக்குறிப்பாய்ப்பார்க்கிறீரோ?

துலுக்கன்:—இல்லை இல்லை. எனக்கு அந்தத்தேவடியாள் இராக்குமுத்து நீடித்த காலமுதற் கொண்டு தெரிந்தவள். அதினாலே அந்தத் தவலை அடையாளத்தைக்கண்டு கேட்டேன்.

சின்னையன்:—என் அப்பா! நீர் அந்த இராக்குமுத்துக்கு என்னவேணும்? அவளுக்கு நீர் ரொம்ப வேண்டியவரா? எனக்குத் தெரியாது. நான் அவள்வீட்டில் தான் இருந்துகொண் டிருக்கிறேன். நீர் அங்கேவரக் காணேமே?

துலுக்கன்:—சரி சரி. நான் இன்னமுமா அவளிடம் வரவேணும்? அந்த மூதேவிபார்வையால் நான் கெட்டகேட்டை யென் சொல்வேன்! அவளாலேதான் நான் தீராத நோக்காட்டுக்கும் இரையாகி இந்த வயதிலேயே நடக்கக்கூடச் சக்தியில்லாமல் முக்காலியாய்க் கம்பூன்றி நடைபிணமாகத் திரிகின்றேனே? இந்தப்பாடுகளுக்கு நான் இறந்துபோய் விட்டால் நன்மையாயிருக்கும். வைத்தவன் பார்த்து அழைத்துக் கொள்ள வேணு மென்பதாய் எப்போதும் அவனைப் பிரார்த்தித்துக்கொண் டிருக்கிறேன்.

சின்னையன்:—(ஆச்சரியமாய்) நீர் என்ன அவளாலேயா இப்படி ஆகிவிட்டீர்! அதிகமும் உமது உடம்பு மெலிந்து துர்ப்பலப்பட்டுப் போயிருக்கிறதே!

துலுக்கன்:—இங்கே பார் என் உடம்பை என்று தான் போர்த்துக்கொண்டிருந்த துப்பட்டியை முற்றும் விலக்கிக் காட்டினான்.

சின்னையன்:—(அவன் கிட்டவந்துபார்த்து) ஐயையோ! இதென்ன உடம்பு முழுக்கத் தகடுதகடாய்ப் புண்கள் மயமா யிருக்கின்றன! எப்படி இவைகளைச் சகித்துக்கொண் டிருக்கிறீர்? அப்பா! எனக்குப் பார்க்கிறதற்குக் கண் கூசுகிறது, சூடும் சூடும் (என்றுபதறினான்).

ஆலுக்கன்:—(மூடிக்கொண்டு இளைத்துச் சோர்ந்த குரலுடன்) நீர் அநியாயமாய் இந்த இளம் பருவத்தில் விடாத பிரமராக்ஷஸ—வாகிய ராக்குமுத்துவிடம் வந்து அகப்பட்டுக்கொண்டீரே! இதை நினைக்கையில் தான் உமது பேரில் பரிதாபமாயிருக்கிறது. ஆனால் நீர் என்னத்தைக்கண்டீர்! 'ஆற்றைக்கண்டீரா? அழகரைச் சேவித்தீரா?' நான் வாலிபத்தில் வாலிபத்தை (வாலையுடைய யானையை)ப் போலவே மதர்த்திருந்தேன். அந்தக் காலத்தில் எனக்கு ஒன்றும் தெரியவில்லை. இப்போது இரத்தம் போய்த் தோலும் எலும்புமானேன். இந்நிலையில் தான் புத்தியுண்டா யிருக்கிறது.

தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கு
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி - நெடுங்காம
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

என்றபடி சிற்றின்பமானது முதலில் இன்பத்தைத் தந்து பின் துன்பத்தைக்கொடுத்திருக்கிறது. வெள்ளம் வருமுன் அல்லவா அணைகோலிவைக்கவேண்டும்? பெருகிவந்தபின் என் செய்யலாம்? கண்கெட்டபின் சூரிய நமஸ்காரம் செய்து பிரயோசன மென்ன? என் கதை தான் இப்படியாச்சு. நீர் 'இளங்கன்று பயமறியாது' என்றபடி துள்ளித்திரிகிறீரே? இதுவரை அநுபவமுடைய பெரியவர்கள் யாரேனும் உமக்குப்புத்தி சொல்ல நேரவில்லையோ? அல்லது முந்நாளில் என்னைப் போலத்தான் இந்நாளில் நீர் சொல்லும் புத்தியை எல்லாம் வலது காதில் வாங்கி இடது காது வழி ஓடவிட்டிருக்கிறீரோ? உமது உடம்பைப்பார்க்கும் போதே வியாதிபோலத்தோற்றப்படுகிறதே? முகத்திலும் களையில்லையே?

சின்னையன்:—(நெஞ்சுபறை கொட்டப் பீதியடைந்து) வாஸ்தவம் தான் - முத்தண்ணு என்பவன் ஒருவன் அங்கே வந்து பழக்கம்-அவனுக்கு மூக்கு அழுகிப்போய் உடம் பெல்லாம் தடிப்புத் தடிப்பாயிருக்கிறது. மூக்கினுலேயே பேசுகிறுன். இனிக்குண்டியாலேயே சாப்பிட்டு வாய்வழியாக மலம் கழிப்பான் போலுமிருக்கிறது. எல்லாம் அவனுக்குத் தலை கீழ்ப்பாடமான நடபடிகள் தாம். இன்னெருபிள்ளை, அவனுக்குத் தேகமெல்லாம் சொறியும் வங்குமாயிருக்கிறது. மொட்டைத்தலைச்சாமியார் ஒருவர், ஜமீந்தார் யாரோ ஒருவர் இவர்கள் பழக்கமாய் இருக்கிறது.

துலுக்கன்:—"தலைமையுங் கீழ்மையுந் தவிர்த வின்றியே, மலையினு மரத்தினு மற்று முற்றினும், விலை நினைந் துளவழி விலகும் வேசைய, ருலைவுறு மனமென வுலாய தூதையே" என்றபடி, விலைமாதர் தன்மை ஏற்பட்டிருக்கின்றது. இப்போது எத்தனையோ பேர்கள் ராக்குமுத்துவிடம் பழக்கமாய்த்தானிருப்பார்கள். உன்றன் கண்ணைக்கட்டி இன்னமும் பலபேரைக்கட்டித்தான் கிடப்பாள். எனக்கு மூக்கறை முத்தண்ணு அக்கினித்திராவகம் பெத்தப்பெருமாள் இந்த இரண்டு பயல்களும் தெரியும். அவர்கள் இருவருக்கும் தீராத ரோகம். முத்தண்ணுவின் குழந்தைகளுக்கெல்லாம் அவன்ரோகம். ஒட்டிவந்து ஒரு பிள்ளையாவது பிழையாமற்போய் விட்டது. அவனுடையபெண்சாதிக்கும் அந்தச் சீக்கு ஒட்டிக்கொண்டு அவள் ஒரு நாளைக்குப் படும் துன்பம் கொஞ்சமல்ல. அவனுக்குப் பெண்டாட்டி சுகமேகிடையாது. பெத்தப்பெருமாளுக்கு ஒரே ஒருபையன் உண்டு. அவன் மகாபுத்திசாலி. அவனுக்கும் ரோகத்தினுடைய துன்பம் தான். நல்ல மாத்திற் கரையான் விழுந்தது போலாயிற்று.

அந்தப் பயல்களுடைய குடும்பங்களும் சந்ததிகளும் சொத்தாக நோக்காட்டைடையே சுதந்தரித் திருக்கின்றார்கள். சந்ததியும் அற்றுத்தான் போய்விட்டது. பெண்டாட்டிகள் பிண்டத்திற்குத் திண்டாடித்தெருவில் நிற்றார்கள். இப்போது இந்த ஊரில் இவ்விரண்டு பயல்களும் தான் பக்காத் திருடர்கள். பலநாள் திருடன் ஒருநாளைக் ககப்படுவான் என்றவிதமாய் அவர்களுக்கு முடிவுகாலம் அதிலேதான் வந்துசம்பவிக்கும்.

சின்னையன்:—அய்யா! எனக்கு அதிகபயமாயிருக்கிறது (என்று உடம்பைக் குறுக்கிக்கொண்டு) எனக்கும்தான் உடம்புக்கு என்னென்னமோ சீக்குகள். தேகாதியங்கமும் அரிக்கின்றது, நான் என்னத்தைச் சொல்வேன்? உமக்கு நான் உள்ளசங்கதிகளைச் சொல்லுகிறேன். எனக்கு இனி இராக்குமுத்தாவது சீக்குமுத்தாவது· என்னுடைய குறியின் நுனித்தோலில் புண் உண்டாகிப் பின் பூவிலும் தாவிவிட்டது· அதை வயித்திய சாலைக்குப்போய்க் காட்டிச் சவுக்கியம் பண்ணிக்கொள்ள எனக்குப் பெரிய மானக்கேடாக இருந்தது· வரவர அந்தச் சீக்குப் "புர் புர்" என்று ஏறிவிட்டது. அய்யைய்யோ! ராக்குமுத்து என்ன செய்தாள் தெரியுமா? கொடிய சண்டாளி· அதை அறுத்து அவளே சௌக்கியம் பண்ணிவிட முடியும் என்று இல்லாததெல்லாம் சேஷ்டை ஆரம்பித்தாள். நான் கத்தி என்றால் கத்தி எடுப்பேன் முக்காத ஓட்டம். அதை அவள் தெரிந்து தந்திரம்செய்தாள். வீறின சாரக்கில் எனக்கு என்னென்னமோ சேர்த்துப் பொறுக்கக் குடிக்கக்கொடுத்துவிட்டாள். நான் ஸ்மரணை தப்பி விழுந்துவிட்டேன். ஒரு கையை ஒரு தூணிலும் மறுகையை

இன்னொரு தூணிலும் இறுக்கிக்கட்டிவிட்டாள். கால்களையும் அப்படியே அகற்றிவைத்துக் கட்டிவிட்டாள். பாதகி கத்தியை எடுத்துக்கொண்டு சுன்னத்துக் கல்யாணம் பண்ணிவிட்டாள். இவ்வளவுதான் சுறீர் என்று என்பிராணன்தாவி ஓடிப்போய்விட்டது. அய்யா! நான் போட்ட கூச்சல் சொல்லிமுடியாது. கைகாலோ அசைக்கமுடியவில்லை. ராக்குமுத்துவாயைத்திறக்கவேமுடியவில்லை. பேசாமல் என்னென்னமோ பண்ணிப் புண்ணைக்கட்டிவிட்டாள். கட்டை அவிராமலே போட்டு உப்பில்லாக் கஞ்சியையே ஊற்றினாள். அப்பால் சௌக்கியமாகி விட்டது.

துலுக்கன்:—ஐயோ! உமக்கும் இவ்வளவுதூரம் ஆகிவிட்டதா? நீர் பயித்தியக்கார ஏழைப்பார்ப்பானாகத் தோணுகிறீர். போனது போய்த்தொலையட்டும். இனிமேலாவது நான் சொல்லுகிறதைப் புத்தியென்று கேட்டால் பிழைத்துப்போவீர். உமது குலதெய்வம்வந்து சொல்லுகிறதாக நினையும். நீர் தேகத்தை நன்றாய் வைத்துக்கொண்டிருந்தால் என்ன வேலையாவது பார்த்து ஜீவிக்கலாம். "சுவர்வைத்தல்லோ சித்திரம் வரையவேண்டும்?" இதோ என்னைப் பார்த்தீரா? என்தேகம் இப்படிப்போனதல்லாமல் இந்தச்சமயத்தில் குடிக்கக் கஞ்சிக்கும் இல்லாமல் என்னுடைய எல்லாச்சொத்துக்களையும் அவளே சன்னஞ்சன்னமாய் வாழைப்பழத்தில் ஊசியை யேற்றுவதுபோலத் தெரியாமல் தோலிருக்கச் சுளைவிழுங்கித் தனமாய் உறிஞ்சிவிட்டாள். சோற்றில் பெரும் பூசணிக்காயை மறைத்த அதிசயம்போலத்தான். இந்தஸ்திதியில் நான் ஒரு வேலை பார்த்துப் பிழைக்கவும் முற்றிலும் கூடாதவனாகத் தீர்ந்

டேன்; வேலைசெய்யவென்றாலும் என்னைக்கண்டு அசிங்கப்பட்டு வேலை கொடுப்பார் யாருமில்லை. இனி எனக்கு இந்தச் சிக்குச் சவுக்கியமாகுமென்று சொப்பனத்திலும் நினைக்கமுடியாது. பட்டினியும்கிடந்து சாகவேண்டியதுதான் வழி. அந்தச்சண்டாளி என்னுடைய சம்பத்துக்களை வைத்துக் கொண்டிருக்கிறளே? என் நிலைமையைப்பார்த்து இரங்கி ஒருபிடி அன்னம் கொடுப்பாளா? இரக்கமற்ற விஸ்வாஸத் துரோகி அவளே தான். சகலசாஸ்திரங்களும் தனக்கு வந்துவிட்டதுபோல் ஆட்களையெல்லாம் மயக்கி மயக்கிப் பேசுவாள். அவள் சாமர்த்தியம் வேறே எந்த ஆண்பிள்ளைக்கும் வராது.

சின்னையன்:—நீர் சொல்லுகிறது என்மனசுக்கு நன்றாய்ப்படுகிறது. குட்டியச்சுவரில் முட்டிக்கொள்ள வெள்ளெழுத்தா? நீர் சொல்லுகிறபடிக்கே அவளுடைய அநுபவங்களெல்லாம் மிகவும் சரியாகவே இருந்து கொண்டிருக்கின்றன. அய்யோ! நான் என்ன சொல்வேன். என்னிடத்தில் இருந்த கொஞ்சம் சொத்துக்களையும் அவள் தந்திரமாகவே என்னைக்கேட்டுக்கொண்டிருந்து கடைசியில் அதையும் கைவசம் பண்ணிக்கொண்டாள்; நானும் மயங்கித் தானகவே அவளிடம் கொண்டு வந்து அதை ஒப்பிவித்துப் பெரியபயித்தியகாரனைப் பிண்டத்துக்கு அவளிடம் தொங்கிக்கொண்டு இஞ்சிதின்ற குரங்குபோல் இருந்துகொண் டிருக்கிறேன். முன்போல இப்போது அவள் என்பேரிற்பிரியத்தைவைக்கக்காணேம். "வந்தபேதசிறிக்கி பந்தடித்தாள் வரவரச்சிறிக்கி கழுதைமேய்க்கிறள்" என்றபடி தீர்ந்தது. இப்போது என்னை ஏவக்கூடாதவேலைகளையெல்

லாம் ஏவுகிறாள். இந்த நிமிஷம் நான் அவளைவிட்டு வெளியேறினாற் பிண்டத்துக்குத்திண்டாட்டம். பெருங்கவலையாயிருக்கிறது. "முன்னாலே போனாற்கடிக்கிறது பின்னாலேபோனாற்கடிக்கிறது" என்ற கதையாய் என்பாடு முடிந்தது. சிவானந்தவீரர் எனக்குயாதொரு குறைவும் இல்லாமல் பிள்ளையைப்போல் ஆதரித்து வந்தார், கல்யாணமும் பண்ணிவைத்தார். நான் என் கற்புடைய பெண்சாதியுடன் எவ்வளவோ சௌக்கியமாகவும் மதிப்பாகவும் இருந்துகொண் டிருந்தேன். இனி எனக்கு அந்தப்பதவி திரும்பக்கிடைக்கப்போகிறதா? எனக்கும் இப்படி யொருகஷ்டகாலம் வருமென்று நான் கனவிலும் நினைக்கவில்லை. ஐயோ! (என்று அழுதான்).

துலுக்கன்:—என் அய்யா அழுகிறீர்! அழுதாற் பயனென்ன? நொந்தாற்பயனென்ன? இனி மேல் உள்ள மட்டுக்குள்ளாவது ஒரு முன்னுக்குவரும் வழியைத் தேடவேண்டியது தான். உமது கதைகளைக்கேட்கஎனக்கு மிகப்பரிதாபமாயிருக்கிறது. இந்த ஒரு மல்லாரிமுண்டையால் மட்டும் எத்தனை பேர்கள் தான் கெட்டு முட்டைச் சாம்பலாயும் குட்டிச் சுவராயும் போனார்கள்? விளக்கில் விட்டிலைப்போலும், பார்வைக்குருவியில் மற்றப்பறவைகளைப்போலும், தூண்டில் இரையில் மீன்களைப்போலும் அவளுடைய வெளிப்பகட்டைப்பார்த்து மதிமயங்கிக் கெட்டமானிடர்கள் எத்தனை எனச்சொல்லுவேன்? இப்போதும் அந்த லம்பாடியைப்பார்த்தால் என்றும் பதினாறுவயதுபோலவே தோற்றப்பட்டுக்கொண்டு சகல வியாதிகளுக்கும் களஞ்சியமாய் விளங்கிக்கொண்டிருக்கிறாள். ஆயிரம் இருந்தாலும் நம்மு

டைய குலபத்தினிகளுக்குச் சமானம் உண்டா? சவ்வாதெங்கே? பவ்வி எங்கே? நமது மனைவியர் நமக்கு வரும் நன்மை தீமைகளை கூடவே அனுபவிக்கக் கடமைப் பட்டவர்களா யிருக்கிறார்கள். நாம் இறந்தால் நம்முடைய வீட்டுப்பெண்கள் அமங்கலியாய்ச் சகல இன்பங்களையும் ஆயுள்கால முற்றும் வெறுத்துக்காலந் தள்ளிவிடுகிறார்களே? "கண்ணிற்பட்டாற்கறிக்கும் புருவத்திற்பட்டாற்கறிக்குமோ? இப்படிப்பட்ட சிறப்புகள் பற்பலவாயுள்ள தருமபத்தினிகளைநாம் கண்கலங்கவிட்டுக் காசுபெறாத பட்டிப்பிசாசுகளை நம்பிக் கெட்டலைகிறது என்னமதியீனமான காரியம்? நம்முடைய சொந்த மனைவியுடன் சேர்ந்திருந்தால், வேறே போக்கில்லாத அவர்களுக்குத் திருப்தி கொடுப்பது மல்லாமல் நமக்குத் தளர்ந்த காலத்தில்உதவக்கூடிய புத்திரப்பெரியசம்பத்தையும் மணிகளாய்ப்பெற்று வாழலாம். நமது பெண் சாதிக்கு நம்மைவிட கதியொன்று மில்லாமலிருக்க நாம் அதனை உணர்ந்தவர்களாய் நாம் உள்ளமட்டும் அவர்களுக்குத்திருப்தியைத்தரவேண்டியது நம்முடைய கடமை யல்லவா? நீர் இப்போது பெரும் நீலியாகிய அந்த ராக்குமுத்து விடம் சேர்ந்திருப்பதில் அவள் உம்மை குடிக்கச்சொல்லுவாள். மாமிசங்கள் சாப்பிடச் சொல்லுவாள். நீர் பிராமணராயிற்றே? அவையெல்லாம் உமக்குப்பிடிக்கிறதா ?

சின்னையன்:—(பெருமூச்சுவிட்டு) என்ன செய்கிறது? நான் அவைகளை யெல்லாம் ஒன்றும் அனுசரிக்கிறதில்லைத்தான்.

துலுக்கன்:—கேளுங்காணும், ராக்குமுத்து கதை கொஞ்சம் சுருக்கமாய்ச்சொல்லுகிறேன். முதலில்

கொழும்பிலிருந்து தக்கசம்பாத்தியம் செய்து கொண்டு ஒரு நல்ல ஜவான் பட்டாணிப்பையன் வந்திருந்தான். அவன் அநியாயமாய் இவளுடைய மாயையில் அகப்பட்டு எல்லாச்சொத்துக்களையும் பறிகொடுத்துத் தீபம் எரிந்து அணைந்தது போல் சொற்பக்காலத்துக்குள் முற்றும் இழந்து சொரூபம் குலைந்த குரங்காய்ப் பின் கல்யாணமும் வேண்டாமென்றுகவலையாய் எங்கோபோனவிடமே தெரியாமல் ஓடிவிட்டான். பிற்பாடு நான் மதத்தால் ஒன்றும் தெரியாமல் அவளுடைய வலையில் அகப்பட்டுத் திரிந்துகொண் டிருந்தேன். ஒரு நாள் நான் ஊரில் ஆஜரில்லை. அந்தச்சமயத்தில் அவள் என்னைப் பார்க்கவருகிறது போல் என் வீட்டுக்கு வந்து என்னுடைய மகனை வலுவிற்புணர அவன் நூறு ரூபாய் பெறுமான பிரோஸவைத்தூக்கி அவளுக்குத்தத்தம் செய்து விட்டான். நான் என்னுடையபிள்ளைகளுக்கு என் சொத்துக்களைப் பாகம் செய்து எழுதிவைத்து விட்டேன். அப்பால் அவள் என்னிடத்திற் பசையில்லையென்பதாக என்னுடைய இரண்டு குமாரர்களையும் பிசாசாய்ப்பிடித்து மயக்கிப்பலபொருள்களை யெல்லாம் பறித்து அவர்களை ஓட்டாண்டிகளாக்கிவிட்டாள். என்னுடைய மூத்தமகனுக்கும் அவன் பெண்சாதிக்கும் அவள் சண்டைமூட்டி விட்டு என்னுடைய அருமையான மருமகள் சங்கடம் சகிக்கமாட்டாமல் குளத்தில் விழுந்து இறந்து போனாள். அவள் மகாபுண்ணியவதி. மழை அவளுக்குப் பெய்யும். அவனுக்குக் கிடைக்கத்தக்க பெண்ணல்ல. அவளிருந்தால் என்னுடைய இந்த நிலைமைக்கு என்னை நன்றாய்க் காப்பாற்றுவாள். ஏதோ என் துரதிஷ்டம் இப்படியாகிவிட்டது. என் மக்கள்

இருவரும் இப்போது ரெங்கூனுக்குப் பிழைக்கப்போய் விட்டார்கள்.

சின்னையன்:—இது என்ன அநியாயமாயிருக்கிறது! சங்கதிகளைக் கேட்கக் கேட்கப் பெரிய விபரீதமாக வல்லவாயிருக்கிறது! நான் கெட்டேன்! கெட்டேன்! கெட்டேன்! நான் இனி என்ன செய்யப்போகிறேன்! (என்று கடன் பட்டார் நெஞ்சம்போலக் கலங்கி ஆறாத் துயரத்தோடு பரதவிக்கலானான்).

துலுக்கன்:—(மனமிரங்கி) சரி, நீர் நான் சொல்லுகிறதைக்கேட்டீராகில் முந்திக்கொண்டு தப்பிப்போய் விடுவீர்! வருத்தப்படாமல் இனிமேலாவது அந்தப்பாதகியினுடைய சாவகாசத்தை உடனே விட்டொழித்து எக்கேடுகெட்டாவது மறுகாரியம் பாரும். அப்படிச் செய்து விட்டால் நீர் எப்படியாவது முன்னுக்கு வந்து விடுவீர். நீர் பிராமணன். வீட்டுக்கு ஒரு பிடி அரிசி வாங்கினாலும் பிழைத்துப்போய்விடுவீர். "கிழவன் பேச்சைக் கின்னரக்காரன் கேட்பானா?" "ஏழைசொல் அம்பலமேறுமா?" நான் பழம் பெருச்சாளி. ஏதோ சொன்னேன்! உஷார்! உஷார்! கெட்டுப்போய்விடாதீர்! நான் பழம் புண்ணாளியுமாகையால் உமக்கு ஒரு பச்சிலை காட்டுகிறேன். அதைச்சாப்பிட்டுவந்தால் ஸ்திரீ வியாதிகளுக்கெல்லாம் குணமுள்ளதாயிருக்கும் (என்று அங்கு நிலத்தில் முளைத்திருந்த ஒரு மூலிகையைக் காட்டி க்ஷேமமாயிரும் (என்று எச்சரித்து அவனிடம் வருதிவாங்கிப்போய்விட்டான்).

சின்னையன்:—(யோசிக்கிறான்) ஆஹா! நாம் என்ன இவ்வளவு தூரம் மதிமோசம் போய்விட்டோம். நாம் அந்தரங்கமாய் வைத்துக்கொண் டிருக்கும் பழிக்கேது

வாகிய நடபடிகள் வெளிக்குத் தெரிந்தால் ஜாதியி லும் கூட்டமாட்டார்களே! நம்மை ஆதரித்து வந்த வீரர் திரும்பிவந்தால் நாம் அவருடைய முகத்தில் எப் படிப்போய் விழிப்போம்! அவரும் இல்லாத சமயத் தில் நம்முடைய கற்பரசியாகிய பெண்சாதி சாப்பாட்டு க்கு என்ன கஷ்டப்படுகிறாளோ! உயிரோடு தான் இரு க்கிறாளோ! அல்லது செத்துத்தான் போய் விட்டா ளோ! அடடா! அவளுக்குச்சமானமாக நமக்குவேறொ ருத்தி கிடைக்கப்போகிறாளா? அவளுக்கு மனதோடே என்பேரில் விசுவாசம்! என்னசெய்கிறது! கண்ணைக் கட்டிக்.காட்டில் விட்டதுபோலிருக்கிறது! ஒன்றுந்தெ ரியவில்லையே! பலவாறானசங்கடங்களெல்லாம் என்னை வந்து இம்சிக்கின்றனவே! நீர்க்கடுப்பு உபாதியும் சகிக் கக்கூடவில்லை! உட்கார்ந்து எழுந்திரிக்க ஒருமணிபிடிக் கிறது! கை கால் அசதி என்றாலும் சண்டாளிசுயகாரி யத்திலேயே கண்ணாய் நம்மை நகட்டி விடுகிறாள்! அக் கினித்திராவகப்பெத்தப்பெருமாள் என்ற பேர் அவனு க்கு அல்லாமல் இப்போது நாமும்சுவிகரித்துவிட்டோ ம்! முத்தண்ணுவுக்கு மூக்குமட்டும் அரை. நமக்குத்தே காதிக்கியமுமே அரையாய்ப் போய்விட்டதே! முருகா! முருகா! என் அப்பனே!சிந்தாகுலமானவைதீர்த்தெனை யாள்! சரவணசண்முகனே! இப்போது நேரமாகிவிட்ட படியால் சீக்கிரம்இவைகளைராக்குமுத்துவிடம் சேர்த்து விட்டு நமது வேறே காரியத்தைப்பார்க்கவேண்டியது தான் என்று உறுதிப் படுத்திக்கொண்டு துவைத்திரு ந்த சேலைமுதலியவைகளையும் நல்ல தண்ணீர் மொண்டு கொண்டதவலையையும் எடுத்துக்கொண்டு இராக்குமுத் துவிடம் வந்து சேர்ந்தான். பின் அதை விட்டு எந்த

விடத்திற்குப்போகிறதென்றும், நீர்க்கடுப்பைச் சொன்னால் திரும்பவும் இராக்குமுத்து வயித்தியம் செய்வதாய்ப் பிராணனுக்கு உலைவைத்துவிடுவாளென்றும், அக்கிரஹாரம் போனால் தன்னைப்பார்ப்போர் நகைப்பார்கள் என்றும் பலவிதங்களை நினைத்து நினைத்து மனத்திற் கவலையாகி இராக்குமுத்துவினிடத்திலேயே தங்கியிருப்பதானான்.

முன் பிரஸ்தாபித்து வந்த ஜமின்தார் கிருஷ்ணதேவரைப்பற்றிய விபரத்தைச்சொல்லி அவருக்கிங்கு விடைகொடுத் தனுப்புவாம். இவருக்குத் துணையாயிருந்த தாயும் தகப்பனும் இறந்துபோயிருந்தார்கள். அவர்களுக்கு இவர் ஒரேபிள்ளைதான். இவருக்குக்கல்யாணமாகி வெகுகாலம் வரைக்கும் புத்திரோற்பத்தி யில்லாதிருந்து பெரியபொருட்செலவினாலும் அரியதவத்தினாலும் ஈஸ்வர கடாக்ஷமாய், அந்திவானத்திற் பிரயோசனப்படக்கூடிய சந்திரன் ஒருவனைப்போலும் ஓர் ஆண் குழந்தை உண்டாயிருந்தது. இவனுக்குப் பால சந்திரன் என்னுந்திருநாமமிட்டுக் குலத்தை விளக்கவந்த மணிவிளக்கென்பதாகப்பெற்றோர் அப்பாலனைக் கண்ணைக்காக்கும் இமையினும் விசேஷமாக நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் மிக அருமையுடன் பரிபாலித்து வந்தனர். இவனுக்குப் பதினாறும் பிராயம்வந்துற்றபோது சோடசகலைகளால் விளங்குஞ் சந்திரனையேபோலுமாகிக் கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்து புகழ்விசவாழ்ந்து வரும்போது அவனுக்குக் காய்ச்சலுண்டாக்கி அதனாற்பெற்றவளும்மற்றவர்களும் தீராத்துன்பக்கடலுளாழ்ந்து தளர்வதானார்கள். கிருஷ்ணதேவரின் குலபத்தினியாகிய சந்திரவதியென்பவள்,

தன்னுடைய காந்தன்மாதவபுரிக்குச்சென்றதில் அங்கு ஒரு வேசையின் வசப்பட்டுத் தன் மதியை இழந்து வெகு பொருள்களையும் அவள் விஷயத்திற் பொருட்படுத்தாது தனதூஊரிலிருந்து தருவித்துத்தருவித்துக் கொடுத்துக் கெட்டுப் போகிறார் என்கிறதைத் தெரிந்து மகாதுயரத்திலாழ்ந்து, ஐயோ ! நானென்ன அவருக்கு இலட்சணக்குறைவாகவா இருந்து கொண்டிருக்கிறேன். உபசரிப்பிலும் என்னதாழ்வு செய்தேன் ? அப்படி அவருக்கு அதிக இச்சை உண்டாயிருப்பதானாலும் மற்ற எத்தனையோ நல்ல பெண்களைவைத்துச் சுகித்துத் தேகத்தை ஆரோக்கியமாய்ப் பேணிக்கொள்ளலாகாதா? சொத்து அழிந்தால் அழியட்டும். அநியாயமாய் இப்படிக் கொடிய வியாதிகளுக்கு இடம் தேடி அருமையான தேகத்தைக் கெடுத்துக் கொள்ளுகிறாரே! அந்தத்தேகத்தினுடைய அருமை எனக்குத் தெரிகிறது போல் மற்றொருத்திக்குத் தெரியுமா ? நல்லதும் கெட்டதும் நான் தானே கடைசியில் அநுபவித்துத் தீரக்கூடியவளாயிருக்கிறேன்?காமமெல்லாம் பின்னால் தானே துன்பங்களைக் காணியாட்சியாகக் கொடுக்கும்? சொத்தை அழித்துவிட்டாலும் திரும்பச் சம்பாதித்துக் கொள்ளலாம் ! தேகத்தினுடைய சுகம் கெட்டால் அதை மீளப்பெறுவது அசாத்தியமன்றோ? இச்சைப்பட்ட காமசுகமும் அவரால் இனி அநுபவிக்க முடியுமோ! இது என்னபாபம்? எவர் செய்தசாபம்! இந்தக்குடும்பத்திலும், "மூத்தோர்சொல் வார்த்தை அமிர்தம்" என்றபடி அவருக்குத்தக்க புத்தி சொல்லப்பட்ட பெரியவர்கள் இல்லாமற் போனார்களே! உருத்திராக்ஷப்பூனையைப்போன்ற சாமியாரப்பயல் ஒருவனை

அவர் நம்பி அவன் பேச்சைக்கேட்டு மட்டும் அவர் எப்படி முன்னுக்கு வரப்போகிறார்? இப்போது அரு மைக் கண்மணியாகிய புதல்வன் காயலாவா யிருப்பதற் குத் தந்தி சமாச்சாரம் அவருக்குப் போக்கி யிருந்தோ ம்! அதற்கு யாதாமொருபதிலுங்கூட வரக்காணேனே! இது ஏதோ பெரிய துர்ச்சகுனமாகவே தோற்றப்பட் டுக்கொண் டிருக்கிறது. வேசையர் வழிப்பட்டு நின்ற வர் எவ்வித ஒழுக்கத்தையும் அறந்தவராகத்தானே இருப்பர்? ஐயோ! என்ன செய்வேன்! இந்த எழுத் தைப் பிரமன் என்தலையிலுமா எழுதநேர்ந்தது! எல் லாம் நான் செய்த பாவம் தான். வேறொருவர் அதை அனுபவிக்க வருவார்களோ? என்று பிரலாபித்தாள்?

மாதவபுரியில் கிருஷ்ணதேவர் தனது குமாரனுக் குக் காயலா விருப்பதனைத் தந்தி மூலம் தெரிந்தவுடன் சற்று மன முளைவடைந்தாரேனும், பால சந்திரனுக்கு அந்தச் சிக்கு ஒன்றும் பண்ணிவிட மாட்டாதென்றும், நான் இவ்விடத்திலேயே இருக்க நேர்ந்ததைப்பற்றி யே முக்கியமாய் அப்படித் தந்தி அனுப்பி யிருக்கிறார்க ளென்றும், புத்திரனைக் கவனித்துக் கொள்ளத் தக்க வர்கள் மாயாபுரிக் கோட்டையிற் பலர் இருந்துகொண் டிருக்கிறார்க ளென்றும், இஷ்டர்களுடைய வார்த்தைக ளுக்கும் செவிகொடாமல் இராக்கு முத்துவினுடைய காமாநுபவத்தையே யாதிலும் பெரிதாக நினைத்துப் புத்தி அடியோடுங் கெட்டுப்போயிருந்தார். இப்படி இவர் அசம்பாவிதமாய்க் கதைப்படிப்பதற் கெல்லாம் சாமியார் சரிதான் சரிதான் என்று மொட்டைத்தலை யாட்டி உருட்டிக் கொண்டிருந்தான். "இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்-கெடுப்பாரிலானுங் கெடும்"

அதாவது, இதத்தை யெடுத்துச் சொல்லும்படிக்கான வர்களைத் தமக்குத் துணையாக அனுசரிக்காத காரணத்தால் காவலற்ற அரசன் பகைவர்கெடுப்பதற்கு இல்லையாயினும் தானே கெடுவன் என்பதாம். பாகனில்லாத யானைபோல நெறியில்லாநெறி சென்று கெடுவன். சிரிக்கச் சிரிக்கச் சொல்பவர் சீரழியச் சொல்வரென்றும், அழுக அழுகச்சொல்பவர் அரசாளச்சொல்வரென்றும் பழமொழி உண்டு. பிற்பாடு, கிருஷ்ண தேவருக்கு இராக்கு முத்தினுடைய சம்பந்தத்தால் குறியில் நோவுண்டாயிருந்தும் அதனோடு மேலும் மேலும் அவனுடைய தெவிட்டாத காமந்துய்ப்பதிற் சலியாமலே இருந்தபடியினாலே வியாதி அதிகப்பட்டு விட்டது. அதைத்தீர்த்துக் கொள்ளும்படிக்கு அவர் பற்பல பரிகாரங்களெல்லாம் பிற்பாடு தம்மாலியன்ற மட்டும் பொருட்செலவும் வெகுவாய்ச்செய்து பார்த்து ஒன்றுவது பலிக்காமல் ஒரு நாளைக் கொருநாள் சந்திரனை ஒளிமழுக்கஞ்செய்யும் இருள்போலக் கொஞ்சங் கொஞ்சமாய் வியாதியானது மேற்பட்டு முற்றிலும் வியாபித்துக் கடைசியில் அவர் தம் செயல்யாவும் அழியும்படிக் காகிவிட்டது. உப்புக்கண்டம் பறிகொடுத்த பார்ப்பாத்தி போல் அந்த ரங்கத்தில் தீராக்கவலையுடனிருந்தார்.

அந்தச் சமயத்தில் மாயாபுரிக்கோட்டையிலிருந்து பால சந்திரன் ஜன்னிகண்டு மரணவஸ்தையிலிருப்பதாகத் தந்திவந்தது. தாசியின் பட அரவம் தீண்டி விட்டபடியால் அவளுடைய சுகத்தில் அப்போது கிருஷ்ணதேவர் வெறுப்புற்றிருக்க நேரிட்டிருந்தது. அத்துடன்புண்ணிற்காய்ந்த வேலைத்திணித்தவாறுபோலத்

தந்தி சமாச்சாரத்தால் மிகவும் சோகப்பட்டுப் பாத
விப்பதானுர். அவர் தமக்கு உண்டாயிருக்கும் அபார
மாகிய மானக்கேடான சிக்கைப் பிறர் அறியக்கூடாதெ
ன்பதாய், நாம் எப்படி ஊருக்குப் போகிறதென்றெண்
ணிப் பெருங்கவலை கொண்டிருந்தார். மாயாபுரிக்கோட்
டையிலிருந்து பின் பரிசனர் வந்து அவரைக்கண்டு
உமது ஒரே செல்வக் குமாரன் பாலசந்திரன் உமது
ஞாபகமாகவே "அப்பா! அப்பா!" என்று சொல்லிக்
கொண்டு பிராணனை விட்டனன் என்று சொல்லிக்
கீழே விழுந்து குழவிகளைப்போற் கட கட வென்று
புறண்டு ஓ! வென்றழுதார்கள். கிருஷ்ணதேவரும்
அந்தக் கொடியவாசகத்தைக்கேட்டவுடன் ரிஷிகளின்
சாபத்தைப் பெற்றவரைப்போல உடனே சொரூபம்
குலைந்து கண்டோர் பரிதபிக்கும் படிக்கு மூர்ச்சித்துத்
திடீரென்று கீழே விழுந்து களையாற்றப் பெற்ற பின்,
மகனை நினைந்து முகத்திலும் மார்பிலும் அடித்துக்
கொண்டு பற்பலவாருகத் தனது செயல்களைத் தூஷித்
துக் குமாரனுடைய அருமைபெருமைகளைச் சொல்லிச்
சொல்லிப் பூஷித்துப் பிரலாபித்துக்கொண் டிருப்பதா
னுன். சாமியார் இவைகளைக்கண்டு இனி நாம் இங்கு
ஒரு நிமிஷம் தாமதித்திருந்தால், இந்தப் பயலால் தான்
இவ்வளவும் வந்தது, பரதேசிப்பயலைப் பிடியுங்கள் கட்
டுங்கள் அடியுங்கள் கொல்லுங்களென்று மற்றவர்களெ
ல்லாருங்கூடி நம்மைச் சரிப்படுத்திவிடுவார்கள் என்ப
தாக நெஞ்சுதுடிக்கத்திடுக்கிட்டுச் சிட்டைப்போல இரு
ந்தவிடம் தெரியாமற் பறந்தோடிப்போய் விட்டான்.
வந்திருந்தவர்கள் கிருஷ்ணதேவரைஉடனேபிரயாணப்
படுத்திச் சாவதானமாகத் தம்பதிக்கு அழைத்துக்

கொண்டு போய்ச் சேர்த்தார்கள். கிருஷ்ணதேவர் கால்களை அசைத்துச் சற்றும் நடக்கக் கூடாதவரா யிருந்தபடியினால் அவரைப் படுக்கைக் குருச்சியிற்கிடத் திப் பணியாளர்தூக்கிப்போய் மாளிகையின் ஓர்அறையி லுள்ள கட்டிலிற் போட்டுவைத் திருந்தார்கள். அப் போது தனதுஉயிர்க்காந்தன் சயன அறையினதுநிலைப் படியில் சந்திரவதியானவள் வந்து மோதித் தலைவிரி கோலமாய் வயிற்றிலும் வாயிலும் முகத்திலும் பலமா ய்ப் பல தரம் அடித்துக்கொண்டு விழுந்து, அருமை யானமகன் இறந்தானே! இறந்தானே! குலதீபமாய் வந்த செல்வன் இறந்தானே! வித்தையிற் சிறந்த புத்தி யுள்ள புத்திரன் போனானே! அரிய தவத்தில் வந்துதி த்த செல்வச் சுந்தரன் சென்றானே! பாலசந்திரனென் னும் தங்கப்பேர் இன்றோடு போய்விட்டதே! வடிவழகு ஒழுக இனி ஒருதரம் என் செல்வக்குழந்தை அம் மாவென்று கூவி என் முன் ஓடி வருவானோ! வெகு காலம் புத்திரனில்லா திருந்த குறையை நீக்கிப் பெரு மகிழ்ச்சியையும் ஆறுதலையும் கொடுத்துக்கொண்டிருந் தானே! இவனுக்காக நான் எத்தனையோ காலமெல் லாம் அன்னத்தையும் வெறுத்து அரிய நோன்புகள் புரிந்து அன்னமும் சொன்னமும் வழங்கி வெகு பாடு கள் பட்டிருந்தேனே! அடா குழந்தாய்! நீ இறந்தும் உன்னுடைய கீர்த்திப்பிரதாபங்கள் இந்த நாட்டைச் சுற்றிலும் இறந்து போக வில்லையே! நீ சிறிய வய துடையவனாயிருந்தாலும் கீர்த்தியில்பெரியவனாக ஆன தினாலே இறந்து போகும்படிக்கு ஏற்பட்டு விட்டதோ! உன்னுடனே கூடப்படித்த பிள்ளைகள் கண்ணிழந்த வர்களாய்ப் பரக்கப் பிரலாபித்துக் கடல்போற் கூவி

அழைக்கின்றார்களே ! அவர்களுக்கு ஒரு ஆறுதலை வந்து சொல்லடா ! பெற்ற என் வயிறு பற்றி எரியு தடா! என் மாணிக்கமே ! உன்னை எமனும் விரும்பிக் கொண்டு போயிருக்கிறான் ! தழைக்கவரும் தேவாமிர்த மே! நீ இப்படி மோசம் செய்து என்னைத் தனியாகத் தவிக்கவிட்டுப்போவாயென்று நான் கனவிலும் நினைக்க வில்லையே! இவ்வளவு காலம் குழந்தையில்லாமற்செய்த தெய்வம் நெடுகிலுமே அவ்வாறே சந்ததி இல்லாமற் செய்து விடலாகாதா ! ஐயையோ! உன்னைப்பிரிந்தும் என்னுயிர் தரித்துக்கொண் டிருக்கின்றதே! இப்படிக் கான வன்னெஞ்சக்களவி யென்று முன்னமே அறிந்து தான் நீ என்கையைவிட்டுத் தவறிப்போய்விட்டாயோ! உன் தகப்பனார் இல்லாதகாலங்களில் நான் உன்னுடைய செந்தாமரைமலர் போன்ற முகத்தைப்பார்த்து ஓர் ஆறுதலடைந்திருந்தேனே! எள்ளுந்தண்ணீரும் இறை ப்பாயென்றிருந்தேனே! நான் பெரும்பாவியானேனே! வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி யுடைந்தபா டாய் என்கதை முடிந்ததே! இதற்கு நான் என்ன செய்வேன் ! நாயகனுருடைய கிருபைக்குப் பாத்திர மற்ற பாவியேனுக்கு எத்தனைத்துன்பங்கள் தாம்வந்து கூடிக்கொண்டன! இரக்கமுள்ள தெய்வமென்று பெரி யோர்கூறுகின்றார்களே! அப்படியிருக்குமாகில ஏழையா கிய எனக்குத் தாங்கக்கூடாத துன்பங்களைக் குருவியின் பேரில் இராமபாணங்களைப்போல ஒன்றின்மே லொன் றாக ஏன் விதித் திருக்கின்றாரோ! என் நாயகராகிலும் சுகத்துடன் வந்து சேரக்கூடாதா! அவர் பட்ட படுக் கையாய்ப் பெருஞ் சிக்குடன் அவஸ்தைப்பட் டிருக் கின்றாரே! தெய்வமே கோபித்துவிட்டது! இவைகளை

நான் யாரிடத்திற்சொல்லி முறையிடுவேன்! என்று பற்பலவாருகத்தேறமாட்டாமல் அழுது புலம்பிக்கொண்டு மயங்கிவிழ்ந்தாள். சூழவிருந்தவர்களெல்லோரும் அக்கினி சம்பந்தத்தால் உருக்கும் வெண்ணெயைப் போல் மனமிளகி துக்கித்துப் பின் சந்திரவதியின் சோர்வைத் தெளிவித்து இனி நடந்துவிட்ட காரியத்திற்காக விசனப்படுவதிற் பிரயோசன மென்ன? "கிட்டாதாயின் வெட்டெனமற", "ஆண்டாண்டுதோறு மழுதுபுரண்டாலு மாண்டார் வருவரோ? என்பதாதிகளை யெடுத்துரைத்து உனது நாயகன் சிரஞ்சீவியாயிருக்குமட்டும் இனி எத்தனையோ புத்திரற் உண்டாகப் போகிறுர்கள். புத்திரோற்பத்திக்கான பாலியகாலம் உங்களுக்குத் தவறியா போய்விட்டது? என்பதான பலசமாதானங்களைச் செய்வதாஞர்கள்.

கிருஷ்ணதேவர், "உரலுக்கு ஒருபுறம் இடி மத்தளத்துக்கு இருபுறம் அடி" என்பது ஏற்பட்டிருக்க நமக்கு எப்புறமும் சர்வாங்க இடியும் அடியுமாகவன்றே பெருந்துன்பம் வந்திருக்கிற தென்பதாய் தன் குலபத்தினியின் முறைபாடுகளை யெல்லாம் செவியிற் கேட்டுக்கொண்டு மௌனத்துடன் கண்களாகின்ற மடைகளினின்றும் பெருநீர்ப் பெருக்கை வழியவிட்டு மேலும் துன்பங்களுக்குத்தாம் இடந்தேடிக் கொண்டு வந்திருப்பதனையும் எண்ணி எண்ணிப் பரதவித்து யந்திர பிம்பம்போற் சயனித்தபடிக்கே இருந்தனர். பின் பாலசந்திரனையும் உற்றூர்மற்றூர் சூழ்ந்து எடுத்துப் போய் அடக்கம்செய்து நன்காட்டினின்றும் திருப்பினர். என்றும் பிரகாசித்துக்கொண்டிருந்தபாலசந்திரன் என்றும் அஸ்தமானமான வாறுபோலாகி விட்டது.

உறவினர், கிருஷ்ணதேவருடைய சிக்கைப் போக்குவதற்காக அதனுடைய தன்மைகளை அவரைச்சூழ நின்று உசாவுவதானார்கள். கிருஷ்ணதேவர் தம்முடைய சிக்கின் விபரங்களை அவர்களுக்குச் சொல்லுவதற்கு நாணமுடையவராய், எல்லாவற்றிற்கும் கை தேர்ந்த வயித்தியர் ஒருவர் வேண்டும் என்றார். அந்தப்படியே டாக்டரை அவ்விடம் தருவிப்பதானார்கள். அவர்வந்து கிருஷ்ணதேவருடையசிக்கைப்பரீட்சித்துஅதிசயித்து இவ்வாறு சொல்வதானார். நான் இந்த வயித்தியத் தொழிலில் வந்தகாலமுதல் இவ்விதமான பெரியவியாதியை நான்பார்த்ததே இல்லை; மிதமிஞ்சிப்போய் விட்டது. பிராண அவயவத்தின் தண்டுமுற்றும் புண் அரித்துக்கொண்டே போய்விட்டது. இந்த நிமிஷமே அதை நறுக்கிவிடவேண்டும். இல்லாவிட்டாற் பெரு மோசம். இவ்வித வயித்தியத்தில் அவர் பிழைத்தால் உங்கள் அதிர்ஷ்டம்தான். நான் ஈஸ்வரனுக்குப்பயந்து உண்மையாய்ப்பாடுபடுகிறேன். உங்கள்சம்மதம் என்ன என்றார். உறவினர் இதைக்கேட்டு, இந்த உயர்ந்த குடும்பத்துக்கு இனிமேலும் ஒரு சந்ததி விருத்திக்கு ஏதுவில்லாமல் தீர்ந்துவிட்டதே என்று ஒருவர் முகத்தை யொருவர்பார்த்து மனங்கலங்கிப் போயிருந்தார்கள். குலத்திற் பெரியவரான ஒருவர் வீண்யோசனைகளிற் காலதாமதம் செய்துகொண்டிருப்பதிற் பிரயோசனமென்ன? வெள்ளம் வருவதற்கு முன்னல்லவா அதெல்லாம் அணைபோட்டு வைக்கவேணும்? இனி டாக்டர் சொல்லியபடி செய்யாவிட்டால் கிருஷ்ண தேவர் நிச்சயமாய் உயிர் நீங்கிவிடுவார். இரணவயித்தியம் செய்வதில் அவர் ஒருவாறு பிழைப்பார் என்கிற

நம்பிக்கையாவது இருக்கிறது. ஆகையினாலே சீக்கிரம் இனி டாக்டர் சொல்லுகிறதுபோல வேலை நடக்க வேண்டியதுதான் உசிதம். மிஞ்சிப்போன காரியத்துக்குக்கெஞ்சிக்கொண்டிருக்கலாமா? என்றுவெடுக்கெனத் தாழ்வடமசைய வெழுந்துபோய்க் கிருஷ்ணதேவருடைய நெற்றியில் விபூதியை நிறையப்பூசி, அவர்தலை மாட்டில் தேவார திருவாசகப் புஸ்தகங்களைத்துணையாயிருந்து காப்பாற்றுங்கள் என்று வைத்து டாக்டரை வேலைசெய்யும்படிக்குக் கேட்டுக்கொண்டார். உடனே டாக்டர் அந்தப்பெரியவரைத்தவிர மற்றவர்களையெல்லாம் வெளியேபோகும்படிக்குச் சொல்லிவிட்டு கிருஷ்ண தேவருக்கு உபாதிதோன்ரு திருக்க மயக்கம் கொடுத்துச்சற்றுநேரத்தில் முன்குறித்துள்ளபடிக்குச் சிகிச்சையைச்செய்து விட்டனர். அப்பாற் கிருஷ்ண தேவர் பத்தியம் காக்கச் சிலகாலத்திற் சுகப்பட்டு உடம்பு தேறிவிட்டாரேனும் உலகத்தில் முக்கிய இன்பமாய் ஏற்பட்டுள்ள காமாநுபவத்துக்கு அவர் முற்றிலுங் கூடாத நபும்சகராய்ப் பெரிய சம்பத்துகளுக்கும் வேறே சந்ததிச் செல்வதிற்கும் இடமின்றி, துன்ப சமுத்திரக்கரை காணக்கூடாத ரூபலாவண்ணியமுள்ள வாலிபமனையாளோடு மற்ற என்னபாக்கிய மிருந்தும் துன்பமாகவே காலத்தைக் கடத்தியிருக்க நேர்ந்தது. கியாதிப்பட வாழ்ந்திருந்த கௌரவகுடும்பத்தில் உதித்த இவருக்கு வேசியின் சம்சர்க்கத்தால் சீக்கிரத்திற் புருஷத்தன்மையோடு எல்லாம் அழிந்துபோய் விட்டதென்ற சமாச்சாரம் அந்த மாயாபுரிக் கோட்டையைச் சூழவிருந்த விடங்கள்தோறும் பரவி அனேகர் பரஸ்திரீகளின் கவனத்தில் பெரும் பீதியடைந்து வாழ்வதானார்கள்.

முத்தண்ணு இராக்குமுத்துவினிடம் வருதிபெற்றுக் கூட்டாளியுடன் வீதிவழிச் சென்றுகொண் டிருக்கும்போது, ஓ பிள்ளை! நான் சொல்வதைக்கேளும். உமக்கு இப்போது ரெடியாய்க்கிடைக்கக் கூடிய திருக்கிறதா? ஒரே குண்டுப்பாய்ச்சலாகவே அது இருக்க வேணும். தப்பக்கூடாது. அல்லது எனக்குத்தெரிந்த வேட்டை ஒன்றிருக்கிறது. அதை ஓங்கியொரு அடி அடித்துக்கொண்டு விடலாமா? "குளமிலதேனும் உளதே தொட்டி" என்றபடிக்கு நமக்கு ஏதாவது இந்தச் சமயங்களுக்கு ஒருலாட்டரி கிடைத்துவிடும்கட்டாயம். இன்று இராத்திரிக்கே நாம் ஒரு சம்பாத்தியத்தைத் தேடிவிடவேண்டியதல்லவா? அப்படியானல் தானே நாளை ருக்குச்சி கொண்டாட்டலுக்கு உபயோகமாகும்?

பெத்தப்பெருமாள்:—நறுக்கநறுக்கத் தளிர்க்கும் நகம்போல் நமக்குச்சம்பத்து வந்துகொண்டேதான் இருக்கும். நம்மை இராக்குமுத்து ரெம்பமதித்துக்கொண்டிருக்கிருள். அதற்குக்குறைவு நாம்தேடிக்கொள்ளலாமா? "விளை முளையாத தரையும் உண்டோ?" நமது கைவசம்வராத பொக்கிஷமும் உண்டோ? "நாம்துவைத்தாலும் வண்ணானும் வேணும்" என்றதுபோல் எனக்கு நீரும் சகாயத்துக்குச் சேர்ந்திருக்கிறீர். அக்கினியும் காற்றும் சேர்ந்தாற் கேட்கவும் வேண்டுமா? முந்தி உம்முடைய கருத்திலிருக்கிறதை சுக்கும். பின் என்னுடையதையும் சொல்லி அப்பால் எதுசெளகரியமோ அதில் தீட்டிவிடுவோம். என்ன பிரமாதம்?

முத்தண்ணு:—தாலூக்காகச்சேரியில் இப்போது வரி வசூலாகி கிஸ்திக்காகத் தேன்கூட்டிற்போல்

பலதுளி பெருவெள்ளமாகப் பெருந்தொகை சேர்ந்து கொண்டு வருகிறது. அதில் நாம் கொஞ்சம் பூனை போல் திரிந்து முந்திக்கொண்டு புலிபோற் பாய்ந்து விட்டால் தக்கபடிக்கு நமக்குவெகுநாளைக்குத் திருப்தியாய்க் கிடைத்துவிடும். தாய்க்கொளித்தசூலல்ல;முந்தி நமது கையாளாகிய ஆட்பாஞ்சானுக்குத் தாக்கல்கொடுத்தால் அவன் கூட்டாளிகள் சகிதம் வந்துவிடுவான். "தொழிலுடையான்போல் தொடுத்தலுமரிதே" என்றபடி கைதேர்ந்த அவனுடைய சகாயம் நமக்கு இருந்தால் வேலை சரியாய் முடியும்; உம்முடைய யோசனை என்ன? சரணம் தப்பினால் மரணம்.

பெத்தப்பெருமாள்:—நீர் சொல்லுகிறது சிரமமானவழியாக வல்லவா இருக்கிறது? இப்போது கூட்டாளிகள் தேவையில்லை. "முள்ளால் எடுப்பதற்குக் கோடரியா?" பெருமாள் கோயில் நகைகூடத்தான் இருக்கிறது. அதெல்லாம் சரியானபடி பெருமாளாகிய எனக்குத் சொந்தம். ஆனால் அது பலமான காவலிலிருக்கிறது. விற்றுப்பணமாகவேண்டிய சிரமம் வேறே அதில் இருக்கிறது. அதெல்லாம் காட்டுமுயல். வகையான வேட்டையிலது சமயல்வீட்டுக்கு வரவேணும். பின் பெருங் கோப்பிற் பார்த்துக்கொள்ளலாம். இப்போது சமயனுக்கு உதவக்கூடியதாகவும் லெகுவிற் பழுக்கக்கூடியதாகவும் ஏதாவது ஒருதட்டுத் தட்டிக் கொண்டாற் போதும். "சூரியனைநம்பிக் கடிகாரத்தை இழக்கலாகுமோ? பெரிய காரியங்களெல்லாம் நம்மை விட்டு எங்கே போகின்றன? கிணற்றுத் தண்ணீரை வெள்ளமா கொண்டுபோய்விடும்? இப்போது வடக்குத் தெருவில்தக்கபணக்காரன் ஒருவன்தன்வீட்டை இடித்

து போட்டுப் பெட்டிக்குட் பணத்தை வைத்துக் கொண்டு ஒருபக்கத்தைக் கட்டச்செய்து வருகிறான். செட்டினால் அவன் பந்தோபஸ்துக்கு ஆள்வைத் துக்கொண் டிருக்கவில்லை. கட்டிமுடிக்குமுன் இடிந்து கிடக்கும் சுவர்ப்பக்கம் நாம் சுலபமாய் உள்ளே நுழைந் து விடவும் கூடும். நாம் வெளிச்சத்தோடே இப் போதே அந்தப்பக்கம்போவோம். அந்தத்துப்பெல்லாம் யூகமாய்க் கவனித்துவந்துவிடலாம். அந்த விடத்திலும் தக்கபடி தான் நமக்குக்கிடைக்கும். (என்று இருவரும் வந்துக்கொண்டிருப்பதைப் பார்த்து, வாருங்கள் அய் யரவாள்! பிள்ளையவாள்! நமஸ்காரம். என்ன ஏழையா கிய அடியேன்பேரில் தயவு இல்லை? தங்கள் அன்னம் சாப்பிட்டு நெடுநாளாயிற்று. இப்போது ஏதாவது வேட்டைசாயவில்லையா?

பெத்தப்பெருமாள்:— அடடா! தாங்களெல்லாம் போலீஸ்புலிகள் அல்லவா?

போலீஸ்சேவகன்:—புலியெல்லாம்புளியாகக்காய்த்து அடிபட்டுப்போய்விட்டது. கள்ளன் பெரியவனு? காப்பான் பெரியவனு? என்ன உங்களுக்குக் குறை? இதோ பிள்ளையார்வயிற்றைத் தூறுத்திக்கொண்டு உங் களுக்குக் கிருபைசெய்ய எதிரே காத்துக் கொண்டே யிருக்கிறார். அவருக்குமட்டும் பிரார்த்தனைசெய்யுங்கள், உங்கள் காரியம் உடனே சித்தியாகிவிட்டது. சித்தி விநாயகரல்லவா? (என்று அவர்கள் மார்க்கத்தின் பக் கத்தில் உண்டாயிருந்த ஒரு பிள்ளையார் சிலையைக் காட் டினன்).

முத்தண்ணு:—நாங்கள் நினைத்துவந்த காரியம் இன்றைக்கு அனுகூலம்செய்து விட்டாயானல் பிள்ளை

யாருக்குச் சிதறுகாய்கள் உடைக்கிறோம்; அப்படி யில்லாவிட்டால் கல்லுச்சாமிக்கு தலையிற் கல்லுத்தேங்காய்கள் தான் உடைப்போம்.

பெத்தப்பெருமாள்:—அது உயிரில்லாதசாமி; நாம் சிருஷ்டித்து வைத்ததுதானே? நீ உயிருள்ளசாமியாகையாற் பிரயோசனம் உண்டு அப்பா! நாட்டுப்புலியல்லவா நீ? தயவுசெய்து எங்களுக்குச் சற்று சகாயமாக வரவேணும்?

போலீஸ் சேவகன்:—தாஸன் நான் தயாராக்காத்துக்கொண்டே யிருக்கிறேன். இரத்த ருசிகண்ட ஓநாயல்லவா? கரும்பு தின்னக் கூலியா? (என்று அவர்களுடன் தொடர்ந்து சென்றான்).

பெத்தப்பெருமாள்:—(உத்தேசித்த வீட்டினிடம் வந்து நின்று) இந்த வீட்டிற்கு நான் முன்போலப் பழக்கமுடையவனல்ல. அந்நியனாகிய நான் யாதொரு காரணமு மில்லாமல் உள்ளே பிரவேசித்தால் பார்ப்போர் என்மேல் சந்தேகப்படுவார்கள். இந்த வீட்டில் துப்புப்பார்த்துவிட வேணும்? செந்தலைப்புலியே! அதற்குத் தகுந்த உபாயம் நீ செய்யவேண்டும்?

போலீஸ்சேவகன்:—பொம்மை செய்பவர் அதற்கு உயிர்கொடுப்பாரா? தங்களுடைய சாமர்த்தியம் ஆயிரம் இருந்தாலும் என்னுடைய சகாயம்தான் வேண்டியதா யிருக்கிறது. பருப்பில்லாக் கல்யாணம் உண்டா? எனது உத்தியோகத்துக்கு எங்கும் சுதந்தரம் உண்டு. ஆகையினாலே நான் முந்திச் சும்மா உள்ளே போகிறேன். நீங்கள் என்னைக்குறித்து வருகிறவர்களைப் போல் உள்ளே நுழைந்து என்னிடம் வரலாம் என்று

அவன் கட்டிடவேலை நடந்துகொண்டிருக்கும் விதங்களைப் பார்ப்பவனுய்த் திறந்தவீட்டில் நாய் பிரவேசிப்பதுபோலச் சென்று கவனித்து நின்றனன்).

பெத்தப்பெருமாள்:—கங்கைக்குடமோ கள்ளுக்குடமோ, யார்கண்டார்கள் (என்றுபேசி முத்தண்ணுவுடன் சேவகன்பேரைச்சொல்லிக்கூப்பிட்டுக்கொண்டு வீட்டுக்குட் பிரவேசித்து நன்ருய் உளவுபார்த்தான பின் மனத்திருப்தியடைந்து சேவகனுடன் வெளியே வந்து அவனிடம் இராத்திரித்தொழில் நடத்தியபின் அவனுக்கு உபகரிப்பதாக உறுதிசொன்னுன்).

போலீஸ் சேவகன்:—எனக்கு இன்று இராத்திரிக்கு இந்த வீதி காவல்தான் ஏற்பட்டிருக்கிறது. பிர்ம்மா நினைத்தால் ஆயுசுபாரமா? சகலத்துக்கும் நானே தங்களுக்குச் சகாயமாக இருக்கும்போது கவலை என்ன வந்தது? கொண்டவன் தயவு இருந்தால் பெண்சாதி கூறையேறிச் சண்டைபோட என்னதடை? என்னை மட்டும் கண்பார்த்துகொள்ளவேணும்? நீங்கள் வரும் சமயத்தில் நான்விழித்துக்கொண்டு தயாராகத்தானிருந்து உங்களையும் கண்டுகொள்வேன். கொஞ்சம் உஷார் பண்ணிக் கொள்வதற்கு (சாராயம்சாப்பிட) ஏதாவது சில்லரை கொடுக்கவேணும்?

பெத்தப் பொருமாள்:—எங்களிடத்தில் ஒவ்வொரு நிமிஷமும் மாறிமாறிச் செல்வம் செல்வோம் என்றும் தரித்திரம் தரித்திரோம் என்றும் வந்துபோய்க்கொண்டே யிருக்கின்றன. இனி அடுத்தநிமிஷமுதல் என்றும் நிலையான சம்பத் துடைய வர்களா யிருக்கும்படிக்கான விதம் யோசித்திருக்கிறோம். உனக்கு அந்தக்காலத்தில்

யாங்கள் குறைவைக்க மாட்டோம் (என்று அப்போதே காரியம் சித்தியாகிவிட்டதாகப் பாவித்து ஸந்தோஷத்தோடு) நல்லது இப்போதே நாங்கள் போய் வருகிறோம் (என்று முத்தண்ணாவுடன் சென்றுவிட்டான்).

பெத்தப்பெருமாளும் முத்தண்ணாவும் சூரியன் சீக்கிரம் மேற்றிசை போகவில்லையே என்னும் பெரிய கவலை மேற்கொண்டிருந்தனர். காலம் செல்லச் செல்ல ஜகத்துளோருக்கு அவரவர்கள் கன்மாநுசாரங்கட்கேதுவாக நன்மை தீமைகளும் உற்பத்திலயங்களும் பற்பல வேற்றுமைகளி லுண்டாகிக் கொண்டிருப்பதியற்கை யன்றோ? இப்போழ் தெமது நினைவூடுவந்த காலத்திறனை யெவ்வாறளவிட் டிசைத்திடுந் தன்மையாம்? அநாதியாங் காலத்தினது விசித்திரங்களைச்சற்றமர்ந்துள்ளாயலாயி னஃதளக்கலாகா வியப்பு மேம்படுதன்மையுமே நம்பாலடைவிக்கும். ஆற்றொழுக்கன்ன காலத்தைக் கடந்தோரியாரே! "காலமென்றொருவலை கடக்கலாகுமோ" எனக் கம்பநாட்டாழ்வாரும் பாடியிருக்கின்றனர். சின்னையன் காலஞ்செல நல்லையனாகிமேலுறுகின்றான். பெத்தப்பெருமாளும் முததண்ணாவும் சிறுகாலஞ் சென்றிரவாகக்களவாடுவாராகின்றார். சிவானந்தன் றன்னுத்தமப்பண்ணியொடு நல்லுணர்வொழுக்கப் பத்தியினான் மேலாம்பத மனுபவிக்கின்றான். இவ்வாறிச்சரித்திரத்தவயவிகளி னன்மைதீமையாதிகளை காலமாகீண்ட் படத்தி னுதிதொட் டந்தங்காறுங் கவனிக்க லாகும். பிண்டத்திற்குள்ள தண்டத்திற்குமென் றிங்குச் சுருக்கச் சரிதத்தவர்களிற் கண்டவநுபவப்படிக்கே சகல சராசரங்களு நீக்கருங்காலசக்கரத் தட்பட்டுப் பல்வேறு

மாறுதல்களடைந்துவருகின்றன. பேரறிவுடையோரே வோர் கணத்தினருமை கணிக்கும்பெற்றியர். மற்றோர் நம்மை யெக்காலும் வஞ்சித்துச் சிறிது முணர்ச்சிக் கேதுவின்றிக் கடந்து சென்றுகொண்டே யிருக்கு மற்பக்காலநிலையைத் தெரியாவிட்டாலுந் தெற்றென விளங்குமோர் நாளினருமையறிவரோ? அல்லதொரு பட்சத்தினருமை காண்பரோ? அல்லதொரு மாதத்தி னருமை காண்பரோ? அல்லதொரு வருடத்தினருமை தானுய்வரோ? இல்லை! இல்லை!! தம்வாழ்நாண்முற்று மேவிக் காலமென்பது பெருமையுடைத்தென்பதனைச் சிறிதுஞ் சிந்தியாதே வீழ்நாளாக்கியாண்டுமாண்டு கழி வர். ஐயோ! இஃதென்ன பரிதாபம்! பணத்தையும் அறிவையும் நெருப்பையும் நாமுபயோகிக்கு மியல்பா னன்மையுமல்லது தீமையுமடையலாம். தீமை காய்போ லும், நன்மை கனிபோலு மிருக்கிறது. காயுங்கனியுஞ் சேரவிருந்தவிடத்து யாருங்கனியையன்றோ விரும்பிக் கைப்பற்றுவர்? அதுபோலியாந் தீமையை விலக்கி நன் மையையேயுறுதியாப்பிடிக்கவேண்டும். "நன்மைகடைப் பிடி" என்ப தவ்வையாரின்றிருவாக்கன்றோ? இதனைச் சிரின் விரிக்குந்திறன் பேரறிவாளர்பாலே யுளது.

இப்போது பெத்தனும் முத்தனும் தங்கட்கு மீள க்கிடைக்கலாப் பிறபகற்போதைத் திருட்டுத்தொழி னடாத்த வேறுவாவல்லே போகாதாவென வாத்திரப் பட்டிருக்க நேரிட்டது. நன்மைவிளைத்தவர்க்கு நன்மை விளைவதுபோலிவ்விருவரும் விளைக்குந்தீமைக்குத்தீமை யே விளைவதாயிருக்கும். யார்க்குங்காணவரித்தாக லின் உருத்திராம்சங்கொண்டு உச்சியிற்கண் மழுங்கப் பிரகாசித்திருந்த சூரியனும் மேல்புறம் கோணினுன். கோணினுலும் அவன் மேலென்று சொல்லும்படிக்கே

மேல் புறமானன். பெரியோர் எப்படியிருக்கினும் அவர்களது மகிமை குன்றுமோ? உக்கிரம் பொருந்த விளங்குபவரைச் சாந்தரூபமாய் அமைந்த காலத்திலேயே காணத்தக்கதாம். அதுபோல முன் பார்ப்பதற்குக் கூடாதிருந்த ஆதித்தனை யிப்போது யாவரும்அழகுறப் பார்த்து ஆனந்திக்கத்தக்கதாயிற்று. முத்தனும் பெத்தனும் இவ்விதம் விளங்கும் பகலவனை நோக்கி, ஆஹா! இது தங்கக்குடம் போன்று இருக்கிறது. ஆனல் இது எத்தனையோ மாற்றுகள் கொண்டதங்கக்குடம். இதனை நாம் திருடிக்கொள்ளக்கூடுமானல் நமக்குச்சமானம் இந்தப்பூமண்டலத்தில் யாருளர் என்று உளறிக்கொண்டனர். சந்தியாகாலமாகின்றதெனச் சிலர் விரைந்தனர். புதுமணத்திற்கொண்ட குலமா தின்பந்துய்க்குங்காலம் வந்ததெனச் சிலர் மனமுவந் தவசரப்பட் டிருந்தனர். சிலர் பொதுமாதரின் செந்தாமரைபோன்ற வடிகளினுதைகளைப் பெற்றுத் தம் மேனிவலி தீர்க்கலாமென வெதிர்பார்த்தனர். பெண்டீர்,மாதவருள்ளம்போலத்தெளிந்த நீர் நிலைகளையடைந் தாடித் தம்மை அலங்கரித்துக் கொள்வதானர்கள். சிலரின் றுடனமக்கிவ்வளவு வட்டி சேர்ந்துவிட்டதெனச்செருக்கியிருந்தனர். துணைமணம் பெறுதவர் நாமின்றிராப்போதைத் தனிமையிற் போக்க நேர்ந்ததென்று கவன்றிருந்தார். ஆந்தை கூகைகளினி நாமெங்கு முலவிக் களிபாடல் புரியலாமென்றிருந்தன. ஆன்மாக்களைப் பாசமானது மெல்ல மெல்ல வந்தணுகுமாறு போல விருளெங்கணும் பரந்து மூடவரலானது. இவ்வாறு வியாபிக்கு மந்தியிருளானது மகாவிஷ்ணுவினது நீண்ட கரிய மேனிபோலும். முன் தோன்றியிருந்த செவ்வானமானது அப்பிரானுடைய பொன் மகுடம் போன்றும் விளங்கியது. சூரிய

ளுனவ னம்மவுலியிற் பிறங்குஞ்ஜோதி மிகு மரதனம் போலும் விளக்கஞ்செய்திருந்தனன். மனத்தைத் திருடு மவ்விஷ்ணு ரூபவிருட்டிற் பெத்தனுமுத்தனுந் தனத்தைத்திருட வழிபார்த் திருந்ததுமோர் பொருத்தமே. 'பூரியோர்க்கில்லை சீரிய வொழுக்கம்' அஞ்ஞானவிருண் மூடப் பெற்றவர்களாகிய விருவருமிவ்விருளின் மிகவுங் கள்ளுமுண்டு களிப்பதானர்கள். இவை நிற்க.

முன் வீடு கட்டச் செய்திருந்தவன் அன்றிரவு தனக்குச் சம்பவிப்பதாயிருக்கும் தீங்கினைச் சற்றும் தெரியாதவனு யிருந்தான். இவனைப் போலவே அறிவிலிகள் தம்மிடத்து முண்டச்சண்டன் வருவானென்பதை நினையாமற் கவலை அற்றிருப்பர். வீட்டுக் காரனானவன்; தம்மைக்கொண்டே பிறரை அளக்குஞ் சுபாவத்தைப்போலத் தனக்குயாருந்தீங்கினை எப்போதும் போலவே புரியார்கள் என்னும் அனுபவத்தைக் கொண்டவனாய்ச் சுவர் பந்தோபஸ்துக்குறைவாய் இடிந்துகிடப்பதையும் பாராட்டாமல் ஒரு வீட்டிற்குள் பணப்பெட்டியைத் தலைமாட்டில் வைத்துக் கொண்டு பக்கத்தில் இருபது பிராயமுடைய தன்னுடைய மகனோடும் உஷாராகவே படுத்துக்கொண்டிருந்தவன் பின் தூங்கி விட்டான். உண்டமயக்கம் தொண்டருக்கும் உண்டல்லவா? இத் தூக்கமே பெத்தனுக்கும் முத்தனுக்கும் நன்மையைப்போலும் பாவத்தைப் பெருக்கக்காரணமாயிருந்தது. "விழித்தவனுக்கு ஆயிரம் பொன்" என்றபடி விழித்துச்சமயம் பார்த்துக் கொண்டிருந்த பெத்தனும் முத்தனும் பகலில் நன்ருய் உளவுபார்த்து வந்து விட்டபடியால் மிகத் தயிரியமாய் அவனுடைய வீட்டிற் புகுந்தார்கள். தலை

மாட்டில் வைத்திருந்த பெட்டியை, முன் ஜென்மத்தின் முயற்சி பின் ஜென்மத்தில்தானே விரைந்து பலன் தரும்விதம்போலப், பசக்கெனச் சுலபமாய்த் தூக்கிக் கொண்டு பெத்தன் சீக்கிரமாய் வெளியேறும் சமயத்தில் அங்கு ஒருபக்கம் படுத்திருந்தகுமாரன் விழித்துத் "திருட்டுப்பயலே!" என்று விரைந்தோடி வந்து அவனைப் பலமாய்ப் பிடித்துக்கொண்டான். "விட்டிலிப் பட்டர் பட்டுக்கொண்டாரே" என்னும் விதத்திலிருக்கும்போது முத்தன் உடனே தன் கைகொண்ட மட்டும் சிறுவனைப் பிரமைகொள்ளும்படிக்கு முகத்திலும் கன்னங்களிலும் குத்தி அறைந்தான். பெத்தன் பிடியைத் திமிறிக்கொண்டு பெட்டியுடன் விரைவாய், வினைதாளொழிந்தால் தினைப்போதளவு நில்லாத வுயிர் போலத் தப்பி ஓடிமறைந்தான். முத்தன் என்பவனும் "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்" என்றபடிக்கு அடுத்த க்ஷணத்திலேயே கைச்சுருக்காக அந்தப் பையனுடைய கடுக்கன இரண்டையும் குறிப்பாய்க் கை போட்டுப் பலமாய்க் காதுகளிலிருந்தும் இரத்தம் பீறிட அற்றுப் பிடுங்கிக்கொண்டு கள்ளப்பருந்துபோல் மாயமாய்ப் பறந்தான். சாமர்த்தியம் நன்மைக்கும் தீமைக்கும் வேண்டியதாகத்தானே இருக்கிறது? "காப்பானிலும் கள்ளன் பெரியன்" என்ற வாசகம் மெய்யாகிவிட்டது. "குதிரையும்கூடக் கொடுத்தேனென்று சொல்லு" என்ற ஓர் கதையின் வசனம் போலப் பெட்டிப் பணம்போனது மல்லாமல் கடுக்கன் ஜோடியையும் இழந்து என்றும் மானக்கேடாக மூளிக் காதுகளுடன் குற்றமற்ற பையன் இருக்கும்படிக்கு நேரிட்டுவிட்டது. "பூனைக்குக் கொண்டாட்டம் எலிக்குக்குத் திண்டாட்டம்" தானே?

(18).

முத்தண்ணு என்பவனுடைய பெண்சாதி பாக்கியம் என்பவள் அயிஸ்வரியவானுடைய புத்திரியா யிருந்தாள். அவள் அதிக ரூபலாவண்ணிய முடையவள். முத்தண்ணு என்பவன் தனக்குண்டாயிருந்த வியாதிகளையே இவளுக்குப் பெரிய சம்பாத்தியமாகக் கொடுத்திருந்தனன். ஸ்திரீதனச் சொத்துக்களை யெல்லாம் அழித்துவிட்டான். பெண்ணைப் பெற்றவர்கள் முத்தண்ணு விஷயமாக எவ்வளவோ கவலைகள் எடுத்துக்கொண்டு நல்ல மார்க்கங்களைப் போதித்தும் "கள்ளுகங்கை யாகுமோ" என்றபடிக்கு அவன் திருந்துவனாகவே இல்லை. நாய் வாலுக்கு மட்டை வைத்துக் கட்டினுற் குணக்குத் தீருமா? "துர்ச்சனரும் பாம்புந் துலையொக்கி னும்பாம்பு - துர்ச்சனரை யொக்குமோ நோதையீர் - துர்ச்சனர் தாம் - எந்தவிதத் தானு மிணங்காரே பாம்பு மணி - மந்திரத்தாலாமே வசம்" என்றார் பெரியார். பாக்கியம் என்பவள் எக்காலும் தீராத ரோக்காடுகளைச் சகிக்க முடியாமற் பெருந் துன்பமடைந்தாள். முத்தண்ணு என்பவன் அவளைப்பற்றி எது விஷயத்திலும் கவனிப்பதே இல்லை. "கொண்ட புருஷனை அண்டி இரு" என்பதாக அவள் தனக்குண்டாயிருந்த சொத்துக்களைப் புருஷன் இஷ்டம்போலவே செலவுசெய்யவிட்டு எளியவளாயிருந்தாள். அவள் ஒரு நாளைக்குக் காலட்சேபத்துக்குப் படுங்கஷ்டம் தெய்வத்துக்குத்தான் வெளிச்சம். பட்டினியும் கிடப்பள். இந்த நிலைமையில் அவள் தனக்குத் தன் புருஷன் கொடுத்த பல வியாதிகளினுடைய பெருந் துன்பங்களைத் தீர்த்துக்கொள்ளும் மருந்துச் செலவுகளுக்கு என் செய்வாள்? வெகு மானமும் யோக்கியமும் உடையவளா யிருந்த

படியினாலே, பொறுக்கும் பூமாதேவிபோலத் தனது சகிக்கொணாத பலவிதத் துன்பங்களையும் யாரிடத்தும் சொல்லாமல் பேணிக்கொண்டேயிருப்பாள். இவ்வாறே பலகாலம் சென்றபின் இவளுடைய பெற்றோர்கள் தாமே அவளுக்கு நேரிட்ட கொடிய ஆபத்துக்களை நிதானிக்க நேரிட்டு அய்யோவென்று பரிதபித்து அவளைத் தங்களுடைய மாளிகைக்கு அழைத்துப் போய்ப் பாதுகாத்து வருவதானார்கள். முத்தண்ணா, தான் பிறந்த பிராமண குலத்துக்கு முற்றுங் கூடாத பழி பாவங்களுக்கு ஏதுவான காரியங்களிலேயே கரும சண்டாளனென்று எல்லோரும் தூற்றும்படிக்குத் தலையிட்டுக் கெட்டுப்போய்த் திரிபவனாகி விட்டபடியினால் அவனை இனத்தார் ஜாதியிற் சேர்க்காமலே நாளடைவில் ஒதுக்கி விடும்படி நேரிட்டது. பாக்கியம் என்று பேரை மட்டும் உடையவளாகிய இவனுடைய பத்தினி நிர்ப்பாக்கியவதியாய்த் தான் பிறந்த விடத்தில் ஆறுதல் உண்டாயிருந்தும் தன் புருஷனுக்கு நேரிட்ட அசம்பாவிதங்களை யெல்லாம் எண்ணி யெண்ணி எக்காலமும் பெரிய கவலையுடன் தன் தலைவிதியை நொந்து காலங் கழித்துக்கொண்டிருந்தாள்.

பெத்தப்பெருமாள் என்பவனுடைய பத்தினி முத்தம்மாள் என்பவள். இவள் வாலிபமாயிருக்கும் காலத்தில் இப் பெருமாளையே விவாகம் செய்துகொள்ள வேண்டுமென்று பிடிவாதமா யிருந்தாள். பெருமாளும் அவளுடைய தாய் தகப்பன் சம்மதமின்றி இரகசியமாக ஒருநாளிரவில் அவளைக் கூட்டிக்கொண்டு வெளியேறிப் பல விடங்கள் சுற்றித் திரிந்து பின் மாதவபுரிக்குத் திரும்பி வந்து வாழ்ந்திருப்பதானான். முத்தம்மாளுக்குச் சற்று வாலிபகாலம் தவறியவுடன் பெருமாள்

அவளை அந்தரங்கத்தில் விரும்பாமலிருந்தான். நெருப்புக்குக் காற்று உதவியானது போல இராக்குமுத்துவினுடைய பெரியமபக்கமும்வந்து அவனுக்கு வாய்த்துக் கொண்டது. அவளுடைய சேர்க்கையாற் பெருமாள் குடிக்கவும் சூதாடவும் மற்றப் பொல்லாங்குகள் செய்யவும் பெரிய கைக்காரனாகத் தேறிவிட்டான். தனக்கு உண்டாயிருந்த சொத்துக்களெல்லாம் இராக்குமுத்துவுக்குப் பாதக்காணிக்கையாகக் கொடுத்துத் தீர்ந்த பிற்பாடு தன்னுடைய அருமைப் பெண்சாதியினுடைய நகைகளையும் அபகரித்துப் போதாக்குறைக்கு அந்த வேசைக்கு அளித்தான். இவ்வாறே பின் சிலகாலத்திற் குடியிருக்க முதல் வீடு இல்லாமல் ஒரு கூறைச்சாப்பு இறக்கிக்கொண்டு அதில் மனையாளைக் கூலிப்பாடுபட்டுப் பிழைக்கும்படிக்கு வைத்திருந்தான். முத்தம்மாள் படாத பாடெல்லாம் பட்டுக் கூலிவேலையிற் சம்பாதித்த உபாயப் பொருளைக்கொண்டு தன்னுடைய சிக்குள்ள ஒரு மகனை உற்று உற்றுப்பார்த்துத் தன் வயிற்றையுங் குறைத்துக்கொண்டு அவனைப்பாதுகாத்து வருவாள். காக்கைக்குத் தன்குஞ்சு பொன்குஞ்சல்லவா? "பெற்றவட்கேதெரியு மந்த பிள்ளை வருத்தம்". அக்குமாரனுடைய க்ஷேமத்தைப் பற்றியும் தன்னுடைய கஷ்ட நிவர்த்தியைக்குறித்தும் தெய்வங்களைப் பிரார்த்திப்பாள். பெருமாள், "சிதலைக்கில்லை செல்வமுஞ் செருக்கும்" என்றபடிக்கு ஒவ்வோர் சமயம் தன் பெண்சாதியிடம் வந்து அது வேணும் இது வேணும் என்று தன் விருப்புகளைக்காட்டி அவளிடத்திற் பெருஞ் சண்டைபோட்டு அவளிடம் அற்பமாய் ஏதாவது காலட்சேபத்துக்க உண்டாயிருப்பதையும் தட்டிப் பறித்துக்கொண்டேபோய்விடுவான். மூக்குக்குள் இருக்

கும் மயிரை வேண்டாம் வேண்டாம் என்று வெட்டிக் கொண்டு வந்தாலும் அது திரும்ப முளைத்துக்கொண்டே யிருக்கும். அதுபோலப் பெருமாள் சம்பந்தம் பணம் பறிக்க முத்தம்மாளுக்கு உண்டாகிக்கொண்டே இருந்தது. "குயவனுக்குப் பலநாள்வேலை தடிக்காரனுக்கு ஒரு நிமிஷவேலை" என்ற பழமொழியும் இவ்விருவர் விஷயத்தில் ஒத்திருந்தது: முத்தம்மாளிடத்தில் ஏதாவது இல்லாமலிருந்து கொடுக்கத் தடைப்பட்டால், நீ ஒளித்துவைத்துக்கொண்டு அப்படிச் சொல்லுகிறு யென்று நிர்க் கதியற்ற அவளை எமனைப்போலச் சிறிதும் இரக்க மின்றி நேர்ந்தபடிக்கெல்லாம் குடிவெறியிற் கூச்சற்போட்டு வைது முழு அடியாக அடித்துப் பெருந் துன்பஞ்செய்து போவான். "ஏழைகள் அழுதகண்ணீர் கூரிய வாளதாகும்" அல்லவா! அடிக்க அடிக்கக் கையேந்தக் கூடியவளிடத்தில் பெருமாள் தன்கொடுமையைக் காட்டுவது பேடியின் சுபாவமேயாகும். முத்தம்மாளை இவ்வாறு அவன் கல்நெஞ்சுடையவனுய்ப் படுத்திவைக்கும் பாடுகளைப் பார்க்கும் மற்றவர்களெல்லாரும் மனம் இரங்குவார்களென்றுலும் பெருமாள் பொல்லாதவனென்று அவனிடம் அதைப்பற்றிச் சொல்லவும் கண்டிக்கவும் மிகவும் பயந்து ஒதுங்கியிருப்பார்கள். "கொம்புளதற் கைந்துமுழம் குதிரைக்குப் பத்துமுழம், வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே, வம்புசெறி, தீங்கினர் தங் கண்ணிற் றெரியாததூரத்து, நீங்குவதே நல்லநெறி". மழையில் நனைந்து குளிரில் நடுக்கமெடுத்துத் துன்புறும் குரங்கைப்பார்த்துத் தூக்கணமானது இரங்கி, "அய்யோ! உனக்கு அவயவங்களெல்லாம் என்னினும் வெகு விசேஷமுள்ளதா யிருக்கின்றன. அவைகளைப்

பெருத அற்பஜெந்துவாகிய நானே திவ்யமான கூடு கட்டி அதனுள் சுகமாக வாழ்கின்றேனே? நீயும் அவ்விதமாய்ச் சுகமாயிருக்கலாகாதா" என்று பக்ஷி சொல்லியது. குரங்கு உடனே "நீயோ எனக்குப் புத்திசொல்லுகிறது" என்று கோபங்கொண்டு தூக்கணங் கூட்டிற் பாய்ந்து அதனைச் சின்னபின்னஞ் செய்துபோயிற்று. "துஷ்டனைக்கண்டால் தூரவிலகு" என்பதன்றிப் பெருமானுக்குப் புத்திசொல்லப் பிறர் நினைப்பது புத்தியீனமே.

(19).

கறுப்பண்ணசாமி முதலிய தேவதைகளுக்குப் பூசை நடத்துவதாகத் தாசிமார்களெல்லாரும் பேசி உத்தேசித்துக் கொண்டிருந்த தினமாகிய வெள்ளிக்கிழமை வந்தது. இதுநிற்க. முன்பதாகச் சில வாசகங்களைச் சொல்லி நிறுத்திவிடுகின்றோம். கசடர்கள், காடன் மாடன் காட்டேறிகளுக்கு விகாரமாகிய பெரும் பூசைபோட்டுக் கொந்தளிப்புடன் கொண்டாடிக் கும்பிடுகிறார்கள். இவர்களுடைய நிலைமையையும் அறிவீனத்தையும் என்ன சொல்லுவோம்? பதவியை அடையும் நல்லமார்க்கத்தைவிட்டு அவதிப்படுகின்றார்கள். இது "பட்டுக்கோட்டைக்குப் பாதை எது என்று கேட்கக் கொட்டைப்பாக்கு நூறு" என்றது போல் ஒன்றுக்கொன்று நேர் விரோதமான விபரீதமாகவே இருக்கிறது. இதுவன்றிப் "பேரைக்கொண்டாடிப் புலம்புகிறார் வெகு பேர்களுக்குப் பிழைப்பு" என்றபடிக்குச் சிவராத்திரி தினமானது மகாதேவனாகிய சிவபிரானுக்கே உரியதாயிருந்தாலும் அந்நாளில் அப்பெருமானைப் பூசித்துக் கடைத்தேறும் வகையை மறந்து அக்

கடவுளினது திருப்பேரை ஆதாரமாகவைத்துக் கொண்டு, "மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்" என்றவாறு தூர்த்தர்கள் தூர்த்த தேவதைகளை நாடிப் படுகுழிக்குச் செல்கின்றார்கள். அந்தோ! ஈங்கு நமது நிருத்தசபேசரைக்குறித்த மகிமைகளுக்கு ஒப்புச்சொல்ல அரிபிரமனாதியரே மிகத்தாழ்ந்திருக்கு நிலையில் முற்றும் அருவருப்புக்கேதுவாகிய கறுப்பன் முனியன் சங்கிலி வீரனாதியரைப்பற்றி ஒருகணமும் சிந்திக்கத் தாம் ஏற்பட்டுள்ளதோ? இந்தத் தூர்த்தேவதைகளை வழிபடுகின்றவர்களின் செயல்களைப் பார்க்கில் அவர்கள் அனைவரும் விழித்த கண் விழித்தபடிக்குப் பாழ்ங்குழியில் வீழ்ந்து மீளப் பெறாதவர்களாகவே தவிப்பார்களென்பது திண்ணம். இந்தத் தேவதைகளின் கோவதையான சரித்திரங்களை அத்துராத்துமாக்களிற் சிலர் மட்டும் ஏதோ சுருக்கமாய்த் தெரிந்திருக்கிறார்கள். ஒருத்தி தீக்குழிப் பாய்ந்து விட்டாளாம்; அவள் ஒரு தேவதை. இன்னொருபெண் நான்று கொண்டு பிராணனைவிட்டவளாம்; அவள் ஒரு தேவதை. இன்னொருவனுடைய பத்தினியைத் தூக்கிக் கொண்டுபோய் விட்ட சாமர்த்தியமுடையது ஒரு ஆண்தேவதை. புருஷனுடன் கோபித்துக் கிணற்றில் விழுந்துவிட்டவள் ஒருதேவதை. என்றும் சாராயவிறுடன் கூத்திகைப்பிடித்திருக்கும் தேவதை ஒன்று. இன்னம் பலவாயுள்ள இத்தியாதிகாரணங்களையுடைய பலதேவதைகளின் கதைகளை விசாரிப்பினும் தெரியக்கூடியதாயில்லை. அத்தேவதைகளைப்பற்றிய விபரங்களை அவர்களே சிரத்தையுடன் தெரிந்து கொண்டிருக்கவில்லை. எத்தனையோ மற்ற மதங்களுக்கெல்லாம் புராணங்கள் ஏற்பட்டிருக்கின்றதே? அது போலச் சங்கிலிக்கறுப்பனாதித் தேவதைகளுக்குப் புரா

பட்டிதொட்டிகளில் ஒரு மண்மேடை போட்டு அதில் ஒரு செங்கல்லைநட்டு அல்லது மண்ணைப்பிடித்து வைத்து அது ஒரு தேவதையாக விளங்கும். வெறும் பொட்டலாக இருக்கும் இடத்தில் ஒரு முனி இருப்பதாகக் கொள்வார்கள். ஒரு பழய காலத்துமரத்தில் அவ்விதத்தேவதைகளில் ஒன்று நிலையாயிருப்பதாகக் கூறுவார்கள். வீடுகளின் ஒரு அறை மதிற்களிலும் மஞ்சணையை ஓரிடத்தில் அப்பிவைத்துக்கொண்டு அதில் ஒரு தேவதையிருப்பதாக வணங்கிவருவார்கள். செத்துப்போயிருக்கும் மூதாதைகள் தங்கள் வீட்டில் ஆவியாகவாசஞ்செய்வதாய்ப் பாவித்துப்படைப்புகள் வைத்துக் கும்பிடுவார்கள். அத்தெய்வங்கள் காலவர்த்தமானங்களையும் சுகலாப நஷ்டங்களுடன் சொற்பனத்திற் சாதிப்பதாயும் பேசித் தடுமாறுவார்கள். மெத்தை வீடுகள் உண்டாயிருந்தால் அவைகளிலும் ஒவ்வோர் முனி முதலிய தேவதைகள் வாசமாயிருந்து தீரும். ஊர்ப்புறங்களில் இவ்விதத் தேவதைகளுக்குப் பிரீதி அதிகரிக்க உயிர்ப்பிராணிகளை இரத்தம் ஒழுகக்குத்திவைக்கும். கூர்மழுக்கமுமுள்ள கழுமரங்கள் உண்டாயிருக்கும் அவைகளுடன் சிறிய கூரைக்கோவில்களும் நாகரீகமற்ற விதங்களாய் அமைக்கப்பட்டிருக்கும். இலைகாய் இன்றித் தனியே பட்டுப் போய் நிற்கும் மரத்தில் தேவதையிருப்பதாய் அதை வெட்டாமலே முனியாய் ந்து விடுமென்று பெரும் பீதியுடன் பாதுகாத்து அதனிடத்தில் வெகு பயபக்தியாய் நடந்து கொள்வார்கள். இனிச் சிரமிந்த இத்தேவதைகளினுடைய பேர்களை எமக்குத் தெரிந்தமட்டும் சொல்லி வாயைக்கழுவுவாம். அங்காளம்மன், முடியழகி, பச்சைமலைக்காரி, எரிமலையான், கருமுனி, செம்முனி, முத்துமுனி, லாடமுனி,

தேவமுனி, லாடசன்னாசி, சட்டைநாதன், காத்தவராயன், கறுப்பண்ணன், பூங்குறத்தி, ராக்குச்சி, வீராயி, கருப்பாயி, இருளாயி, வீராட்சி, பேய்ச்சி, சடைச்சி, பிடாரி, காட்டேரி, ஆரியமாலை, வலக்காரி, பாம்பாலம்மன், பாளையக்காரி, பூவாடைக்காரி, திருமாளி, சத்த கன்னிகள், அண்ணமார், தூளுக்காணத்தம்மன், பெரியாண்டான், இருளாண்டி, தொட்டியன், மதுரைவீரன், நொண்டிவீரப்பன், மங்கிச்சி, ராவுத்தன், லாடசாமி, அக்கினிக்கண்ணி, பூங்காத்தான், வடக்கு மலையான், நையாண்டி, படாங்கிக்கண்ணி, பழிகாரக்கண்ணி, தந்திரக்கண்ணி, சிமிட்டுக்கண்ணி, ஆங்காரி முதலியவைகளே. இந்தப்பேர்களிற் சில நல்ல பொருளைத்தருவதாயிருந்தாலும் அவைகளுக்குக் கெட்ட பொருளையே தான் சொல்லவேண்டியது இத்தேவதைகளின் அடியார்களுக்குத்திருப்தியாயிருக்கின்றதன்றி வேறில்லை. இதனாலேயே அவர்களுக்குக்கெட்ட நடப்புக்கள் சர்க்கரைக்கஷாயம் என்பது நன்கு புலப்படுகின்றதன்றோ? இவ்விதத்தூர்த்தர்கள் கிடைக்கரிய மானிட ஜென்மந் தங்களுக்கு வந்துற்ற அரிய பெருமைகளை முற்றுந்தெரியாத அறிவிலிகளாய் நற்சங்கத்துக்கும் இடமின்றிக் கெட்டலைந்து சாகின்றார்கள். முந்தியதவத்தாற் சிலர் இவ்வடாத செயல்களைத் தெளிந்தாரேனும் அவர்கள் இழிகுண மனமுடையவர்களின் நீக்கப்படாத கூட்டுறவால் பன்றியுடன் சேர்ந்த கன்றும் பவ்வீ நுகர்ந்தவாறில் ஆகின்றார்கள். இது "நிலத்தியல் பானீர் திரிந்தற்றாகுமாந்தர்க் கினத்தியல் பதாகுமறிவு" என்ற குறட்பாவுக்கொத்திருக்கின்றது. வெளியிடங்களிலுள்ள தூசிகளெல்லாம் நமது கால்களில் ஒட்டிப்பின் நமது வீடுகளுக்குள் வந்து நிறைந்து ஆபாசப்படுத்துகின்றன.

ணங்கள் ஆதாரமாயிருப்பதாகத் தெரியவில்லை. வழி வழியாய்ப் படிப்பறிவில்லாதவர்களுக்குரிய தேவதைகளின் சரித்திரத்தை எழுதிவைக்கும் சாமர்த்தியமுடையவர்களும் எப்படி உண்டாயிருப்பார்கள்? தற்குறிகளுடன் ஜாதியில் நிஷேதமானவர்களும் இத்தெய்வங்களைக்கும்பிட ஏற்பட்டிருக்கின்றதென்பது நன்றாய்த்தெரிகிறது. அல்லாமலும் இந்த அருள் கெட்ட மதத்தை ஆசாரிய மூர்த்திகள் யாவரிருந்து ஸ்தாபித்தார்களென்பதும் எவருக்கும் புலப்படக் கூடியதாயில்லை. இந்த மதம் உலகத்துஉபகாரமாயிருக்குமாயின் ஆன்றோர்கள் இதனையும் ஆண்டு கற்பித்திராமலா இருப்பர்? "அரசன் எவ்வழி அவ்வழிகுடி" என்றது போலக் கறுமுணியாதித்தேவதைகளின் தீயகுணப்பெருக்கே அவைகளை வணங்குபவரும் காணியாட்சியாய்க் கொண்டிருப்பார்கள். விரை ஒன்று போடச் சுரை ஒன்று முளைக்குமா? அத்தேவதைகளோ பஞ்சமாபாதகங்களுக்குப் பிரதானமாயிருக்கின்றன. கள்ளு சாராயம் புகையிலைச்சுருட்டு பொடி காஞ்சா கருவாடு கேட்கின்றன. இரத்தமும் சாதமும் கலந்து பிசைந்த உருண்டைகளின் எறிபூசை கேட்கின்றன. துடிக்கத் துடிக்கப் பிராணனை வதைத்துச் சூலாட்டுப் பூசை படைக்கக் கேட்கின்றன. இலட்சணவதியான பாவியப்பெண்களைத்தமக்குப்பெண்டாளவிடக்கேட்கின்றன. ஆடுகள் கோழிகள் அன்றிக் கோகத்தியும் செய்யக்கேட்கின்றன. பாவகாரியங்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாயிருக்கின்றனவோ அவ்வளவுக் கவ்வளவு அந்தத் தேவதைகளுக்குத் திருப்தி அதிகமாயிருக்கிறது. தங்களுக்கு இரத்தப்பொட்டுவைக்கப் பிரீதிப்படுகின்றன. அத்தேவதைகளுக்கு அடிமைப்பட்டவர்களும் அவை கேட்டபடிக்கே மதிகெட்டு

மேற்குறித்த இரக்கமற்ற பழிபாதகங்களை மேலும் மேலும் கூசாமற்புரிந்து பூசைபோட்டுத் திருப்திசெய்து அவைகளின் தயவைப்பெறுகின்றார்கள். அத்தேவதைகள் செய்யும் தயவோவென்றால், அவர்களுடைய குழந்தைகளைப்பாய்ந்து கொல்லுகிறது. பெண்களைப் பிடித்துக்கொண்டு ஆட்டிமானங்குலையப் பெருங்கேடுகளைச் செய்துவைக்கிறது. இரத்தம் கக்க அறைந்து கொல்லுகிறது முதலானகொடுமைகள் தாம், "வாயாடி சதுரங்கக்காயாடியோ" என்றபடிக்கு இத்திறத்தார்களுக்கு இப்பொல்லாங்குகள் புலப்படுமோ? அவர்களுடைய பிசகானவழிபாடுகளுக்கும் அவைதக்கதண்டனைகளேயாம். மறுபடி காப்பாற்றுகிறதென்கிற பிரஸ்தாபம் இது வரை அத்தேவதைகளினுடைய அடியார்களின் வாக்கினின்றுமே பேசக்கேட்பதுவருத்தம். இத்தகையதேவதைகளுக்கு அடிமைப்பட்டவர்கள்மாபாதகங்களை செய்து பழகவகை உண்டாயிருக் கின்றதேயன்றி எவ்விதத்திலாவது ஒரு நன்மை உண்டாயிருக்கின்றதா? இந்தப் பழிக்கான பூசையிற் செலவு செய்யும் தொகையைக்கொண்டு அனேக காலம் குடும்பக் காலட்சேபம் செய்யலாம். அல்லது ஆற்றிற்போட்டு விட்டாலும் அது அவர்களுக்கு இவ்வித அனேகம் தீங்குகளையும் வரவொட்டாமற் காத்துவைக்கும். இந்தத் தேவதைகளைவணங்குகிறவர்களெல்லாரையும் நாம் பஞ்சமா பாதகர்களென்று வாய் கூசாமற் சொல்லுகிறதில் என்ன ஆட்சேபனை? துர் அப்பியாசங்களில் இயற்கையாகவே அனேகம் கீழ்மக்களுக்குப் பிரியமாயிருக்கிறது. அப்படிப்பட்டவர்களே இந்தப்பேய் பிசாசுக்களைத் தங்களுக்குப் பிரிய தெய்வங்களாகக் கருதிப் பூசிக்க மனம் ஒத்திருப்பார்களே தவிர அறிவுள்ளோர்

ஒரு காலத்திலும் அத்துன்மார்க்கத்திற் பிரவேசிக்க மாட்டார்கள். யோசிக்குமிடத்தில் இவ்விழிதொழிற் களையுடைய கடையர்களுக்குக் கோடங்கியை அடித்து உருட்டும் புரட்டும் கலந்த வஞ்சனைக்குறிகளைச் சொல் லும் பூசாரிகள் தான் குருமார்களாகிய வெறுமார்களா கத் தோற்றப் படுகிறது. தேவதைகளிடத்திற் பேசி அவைகளினுடைய அபிப்பிராயங்களைப் பலவாறாக அறி வில்லாத கூட்டங்களுக்குச் சொல்லுகிறவர்கள் இப் பூசாரிகளே. இவர்கள் குருமார்களாகையினாலே கோட் டையுடைய அங்கிகளைத் தங்களுக்குரிய உடுப்புகளாகத் தரிப்பார்கள் போலும். அது காரணத்தால் இவர்களுக் குக் கோடங்கி அல்லது கோடாங்கி என்னுங் காரணப் பேர் உண்டாயிருக்கிறது. இந்த அற்பத் தேவதைக ளெல்லாம் நாகரீகம் பரவிவரும் நகரங்களிற் கொண் டாடப் படுவதையும் பார்க்க ஆச்சரியமாகவே இருக் கிறது. அறிவு விளங்கப் பெறாத கிராமியர்கள் கூடி வசிக்கும் கிராமங்கள், பட்டிகளில் தான் விசேஷமாய் இக் கொண்டாட்டங்களை விமரிசைகளிற் காணலாம்.

ஒவ்வொரு ஜாதியாரிடமும் நாம் கற்றுக்கொள்ள க்கூடிய நல்விஷயங்கள் இருக்கின்றன. அந் நல்விஷயங் களின் தொகுதியே நாகரீகமாகும். முக்கியமாய் நகரங் களில் பற்பல மதஸ்தர்களும் ஜாதியார்களும்வசிப்பதால் அவர்கள் நாகரீகமுடையவர்களாய் விளங்குகின்றனர். நகர் என்னும் பதத்திலிருந்து நாகரீகம் என்னும் மொ ழி உண்டானதாய்த்தோன்றுகிறது. ஆகவே, நாகரீகர் கள் என்போர்பெரும்பாலும் நகரவாசிகளேயாவர். முற் காலத்திற் கிராமவாசிகள் நகரங்களுக்குப் போய் வரும் வழக்கம் உண்டாயினும் அதிகதினங்கள் அங்குதங்கிப்

பற்பல ஜாதியார்களின் நடை உடைபாவனைகளை அவர்கள் கவனிக்க அவகாசமிராது. அத்துடன் ஓரிடத்திலிருந்து மற்றொருவிடத்திற்குப் போய்வரச் சௌகரியமான பாதைகள்கிடையா. திருடர்களின் பயம் ஒருபக்கம். இப்படியாகப் பலவிதத்தடைகள் ஏற்பட்டுக் கிராமவாசிகளின் பூகோள சாஸ்திர பரிக்ஞானத்தை வெகுவாய்க் குறைத்துக் கொண்டிருந்தது. ஒவ்வொருவருக்கும் தாம் வசிக்கும் இடமே, "நத்தைக்குத் தன் கூடு நாகரீகமாய்த்தோன்றும்" என்றபடி பரமகிலாக்கியமென்றும் பூலோகமுழுவதும் தம்முடைய ஊரிலேயே அடங்கிவிட்டதென்றும் தாம் அனுசரிக்கும் மதமும் கொள்ளுங் கொள்கையும் சிறந்தவையென்றும் எண்ணிக்கொண்டிருப்பார்கள். சமுத்திரத்தின் ஆமைஒன்று தப்பி ஒரு கிணற்றில் வந்து சேர்ந்ததை அங்குள்ள தவளை ஒன்று அதன் விருத்தாந்தம் கேட்க நேர்ந்தபோது, "நீ வாசம் செய்ததாகச்சொல்லும் கடல் இந்தக்கிணற்றிற்கும் பெரிதாகவாயிருக்கும்" என்று கேட்டதென்ற கதை ஒன்றும் உண்டு. தம்மிடமுள்ள குற்றத்தைப்பிறர் எடுத்துக் காட்டினாலன்றி அவர்களுக்கு நன்றாய்த்தெரியாது. ஆகவே, தமது மதத்திலும் ஜாதிவழக்கங்களிலும் சம்பிரதாயங்களிலும் லௌகிகவைதிக அநுஷ்டானங்களிலும் உள்ள குறைகளை அறியாமல் "பழகினால் நாசிதுர்மணமேற்கும்" என்றபடியே தீமையைக்கூட நன்மையாகப் பாவித்துக்காலந்தள்ளிவருவர். இக்குறைகள் நகரங்களில் தான் கற்று நிவிர்த்திசெய்து கொள்ள முடியும் ஆதலின், நகரவாசிகளை நாகரீகர்கள் என்று மதிக்கும்படிக்கு ஏற்பட்டிருக்கின்றது. இவை நிற்க.

சுத்திகரிக்கப்பட்ட வீடு அசுத்தி யடைகின்றது. இப்படியே, பொல்லார் ஓர் ஏதுவைக்கொண்டு நல்லாரைச்சேர்ந்து கெடுக்கின்றார்கள். இது "தான் கெடுகிறதுமன்றிச் சந்திர புஷ்கரணியையும் சேர்த்துக்கெடுத்தான்" என்ற கதை தான். மேற் கூறியபடி புத்தகத்திற் சேர்க்கப்பட்டதூசிகளைத் துடைப்பங்கொண்டு நீக்குமாறு போல் தூர்ச் சாவகாசங்களை மதியால் விலக்குமாறு தேடவேண்டும். இதை யொழித்துக்குடிக்கவும் வெறிக்கவும் புலாலுண்ணலாதிக் கொடுமைகளுக்கு இழியும் தம்மனம் போன போக்கிற் கேதுவான செயல்களையுடைய தேவதைகளைப் பூசித்துப் பாவமூட்டை சுமப்பதானல்அதைப்பற்றியாம் இங்குச் சொல்லவரும் அபாயம் சொற்கடந்து நின்றது. இதற்கு அத்தகையார் திகையாமல் நாயாய்ப் பிறந்தாலும் நல்வேட்டையாவது ஆடி நயம்புரிவார்கள். ஸ்ரீ பட்டினத்தடிகளும் "நாயாய்ப் பிறந்திடி னல்வேட்டை யாடி நயம்புரியுந், தாயார் வயிற்றி னராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்க், காயாமரமும் வரளாங் குளமுங்கல் லாவுமென, வீயா மனிதரை யேன்படைத்தாய்கச்சி யேகம்பனே" என அமுதவாக்களித்திருக்கின்றார்கள். மூடவனுக்குக் கொம்புத்தேனெட்டுமோ? குருடனிராஜ விழிவிழிப்பானே? கீழ்மக்கள் செயலெங்கே மேன்மக்கள் செயலெங்கே? திருந்தாததன்மையோர்க்குக்கதிமோக்ஷமேது? மாண்டார் திரும்ப உயிர் பெறும் புதுமை கொண்டாலும் இவர்கள் மாண்படவாழ்வதின்றே? புலைத்தொழிலுடைய இவ்வினத்தாரை அருவருத்துச் சிவபுண்ணியச்செல்வர்கள் வெருவாய் மனம் பொறுமல் அவர்களுக்கு நிதியதுவாய்த் திட்டிக்கு வித்துச்சாபமும்

கொடுத்திருக்கின்றார்கள். அதனை ஒன்பதாந் திருமுறையாகிய திருவிசைப்பா, அருளிச்செய்த ஒன்பது நாயன்மார்களில் ஒருவராகிய திருமாளிகைத்தேவர் என்பார், "இணங்கிலாவீசனே சத்திருந்த சித்தத்தினேற்கு-மணங்கொள் சீர்த்தில்லைவாணன் மணவடியார்கள் வண்மைக்-குணங்களைக்கூறுவீறிற் கோறைவாய்ப்பீறற் பிண்டப்-பிணங்களைக்காணு கண்வாய் பேசாதப்பேய்களோடே" என்று தொடங்கி பதினொரு செய்யுட்கள் திருவாய்மலர்ந்திருக்கின்றார். அவைகளில், துட்டர், தூர்த்தவார்த்தைத்தொழும்பர்,பிழம்புபேசும் பிட்டர், வரட்டர், அரட்டுப்பேசுமழுக்கர், கழுக்களாயபிரட்டர், சிணுக்கர், சித்தையூத்தைப் பிணுக்கர், நாய்கள், பேதவாதப்பிசுக்கர், திருவிலாவுருவினர், சாடர், சாட்கைமோடச்சழக்கர், பிழக்கப்பிட்கப்பேடர், அள்ளல்வாயகள்ளர், அவியாப்பாவப்பெருக்கர், சுருதியைக் கருதமாட்டாவெக்கர், குண்டமிண்டவெத்தர்,பொக்கர்,கல்லாக்கச்சர், பொல்லாக்காயவர்,பசுநூல்கற்கும்பிச்சர், தெண்ணர், தெருளாவுள்ளத்திருளர், திட்டை முட்டைப்பெண்ணர், இறப்பொடு விறப்பினுக்கே யினியர், மீண்டும மீண்டும் பிறப்பர் என்ற இழிவுரைகள் வழங்கப்பட்டிருக்கின்றன.

கறுப்பண்ண சுவாமிக்குப் பூசை விசேஷமெனக்கொண்டிருக்கின்றார்களாகையால் இராக்கு முத்துவைச்சேர்ந்த பக்கத்து வீடுகளிலுள்ள இனத்தவர்களும் தங்கள் தங்கள் பந்துமித்திராதியருடன் புறப்படவேதானார்கள். அன்று காலை தொடங்கியே முத்தனும் பெத்தனும் கறுப்பண்ணன் பூசைக்காகத் தங்கள் பிரியமானவளுக்குவேண்டியிருப்பவைகளையெல்லாம் சேகரித்துக்

கொடுத்து நடத்திவைப்பதாய் வந்து சேர்ந்து முயற்சி களைப் பலமாய் நடத்திக்கொண்டு திரிந்தார்கள். ஊரு க்கு அஞ்சு மயில் தூரத்தில் மரங்கள் அடர்ந்த ஒருகாட் டில் இருக்கும் கறுப்பண்ண சுவாமி கோவிலுக்கு எல் லாரும் சாமான்கள் சகிதம் புறப்பட்டுப் போவதற்கு மாட்டு வண்டிகளை அமர்த்திக்கொண்டார்கள். அன்று சாயந்திரம் நாலு மணிக்குமேல் சேகரித்துத் தயாரான சமான்களுடன் எல்லாரும் அவரவர்களுக்கென்ற வண் டிகளிற் பிரயாணப்பட்டார்கள். இராக்கு முத்துவும் அவள் தாயார் வீராயியும் சொக்குப்பயலும் ஏறிக் கொண்ட கூட்டுவண்டியின் சாரத்தியத்தைச் சின்னைய னென்பவன், தானே நடத்துவதாகப் பிரயத்தனப் பட்டு உல்லாசமாய் நடத்திவரலானான். மற்ற வேசை யர்களும் அவரவர்களின் ஆசை நாயகருடன் கூடி வண்டிகளில் தனித்தனி தங்கள் தங்களாலான ஆடு கோழி முதலியவைகளுடன் கறுப்பண்ணன் பூசையை நடத்த வருவதானார்கள். பூசைவைக்கும் பூசாரியும் இன்று தனக்கு நல்லவேட்டைகிடைக்குமென்று தன் பெண்சாதி பிள்ளை குட்டிகளைக்கூட்டிக்கொண்டு அவிழ் த்து விட்ட கழுதைகளைப்போல்ஒழுங்குதவறிப்போய்க் கொண்டிருக்கும் அக்கூட்டத்தாருடன் சேர்ந்து நய வசனங்களைப்பேசி உடுக்கை முதுகிற்கட்டித்தொங்க விட்டுத் தொடர்ந்து வந்து கொண்டிருந்தான். கோவி லைச்சேர்ந்தபின் அவரவர்கள் பிரார்த்தனைப்படிக்குப் பொங்கல் வைத்து, "சாராயக்கடைக்கு அமாவாசி விர தம் கிடையாது" என்றபடிக்குச்சுக்கிரவாரத்தில்கிடாய் கோழிப்பலி கொடுத்துப் பிரார்த்தனைகள் செலுத்தி னார்கள். சில தாசிப் பெண்களுக்கு முன்னமே அவர்

கள் தேவதைகளில் சில பிடித்திருந்து அவர்களை வெகு துன்பப் படுத்திக்கொண் டிருந்தன. அத்தேவதைகள் குறிமுகத் திற்சொல்லியிருந்தபடிக்கு அவரவர்களுக்காக அவரவர்களைச்சேர்ந்தவர்கள் பிரார்த்தனைகளைச்செய்வ தானுர்கள். பிசாசுபிடித்தபெண்களைப் பிரம்பாற் பூசாரி சாடிச்சாடி அவதிக்குள்ளாக்கினுன். கருமுனி பிடித் திருந்த தேவடியாளை வைத்து ஆட்டி முனிபோகிறதா கச் சொன்னபடிக்கு அவளுடைய உச்சிமயிரை வகிர்ந் தெடுத்து அதின் நுனியை ஓர் ஆணியில்கட்டி அந்தப் படிக்கேஅங்கு உண்டாயிருந்த ஒரு புளியமரத்தில்அவ் வாணியை அறைந்து, பின் மயிரைக்கத்தரித்து முனி சாமி விட்டு விலகியதென்று கோடாங்கி உறுதிசொன் னுன். ஒவ்வொரு பூசையினின்றும் பூசாரிக்குச் சுதந் தரம் கூடிப்பெருகியது. பின், பக்கத்து மரங்கள் அட ர்ந்தவிடத்தில் எல்லாரும் சௌகரியமாய்த்தங்கி வெட் டுண்டிருந்த ஆடு கோழிகளைச் சமைத்துக்குடியைக்கெ டுக்கும் பெருங்குடிகளைக் குடித்து மாமிசாதிகளைக்கழு த்தளவு உண்டு ஆரவாரமானகளியாடல்களை அலங்கோ லமாகச் செய்திருக்கும் போது, பூசாரி அவ்விடம் வந்து அவரவர்களுக்குப் பற்பல தேவதைகளைத் தனது கோடாங்கி அதிரும்படிக்கு அடித்துப் பாடி வரவழை த்துக் குறிகளைச்சொல்லி அவர்களுக்குத்திருப்தி செய் து பலதக்ஷிணைகளையும் பெறுவதானுன். பூசாரியின் பாட்டுகளிற் சில வருமாறு:—

ஓங்காரங்கொண்டுமையா சுவாமி
உத்தமனுர்கிலாரியுடன் டேடே டேடே டேடே

(உடுக்கோலி
ஒலி குறிப்பு.)

ஆங்காரம் கொண்டுமே தான் சுவாமி
அலங்காரக் கருமுனியும் ரே ரே ரே
ஆடல் பாடல் ஸங்கீதம் அய்யா
அழகான கருமுனியும் ரே ரே ரே
லாடபாஷை தன்னுடனே முனிவர்
லாடகவி நயனபாஷை ரே ரே ரே
பாடனுடன் கருமுனியும் சுவாமி
பாததண்டை சலங்கையுடன் ரே ரே ரே
வெண்ணீறுதானணிந்து முனிவர்
வேடமிட்டுக்கொக்கரித்து ரே ரே ரே
கொக்கரித்துக் கூக்குரலும் முனிவர்
கோஷ்டமிட்டுப்பற்கடித்து ரே ரே ரே
சடையும் சடைமுடியும் முனிவர்
சத்தரிஷிவேஷம் பூண்டு ரே ரே ரே
வெண்ணீறு மடனுடனே முனிவர்
விசிறி விளையாடிபல்லோ ரே ரே ரே
விளையாடிக் கருமுனியும் அய்யா
விண்ணப்பமடல் பிடித்து ரே ரே ரே
மடலோலைகைப்பிடித்து முனிவர்
மட்டடங்கா வார்த்தையுடன் ரே ரே ரே
குடமுடனே பாணக்கங்கள் முனிவர்
கெஞ்சலித்துத்தானுறுஞ்சி ரே ரே ரே
பாணக்கமிள நீரும் சுவாமி
பானுடனே தானு முண்டு ரே ரே ரே
ஆணவங்கள் தன்னுடனே சுவாமி
அன்புடனே சித்தடியும் ரே ரே ரே

சித்தடியாம் பொற்கொடிமேல் சுவாமி
சுந்தரனூர்கருமுனியும் ரே ரே ரே
முத்தாலப்பாஷையுடன் சுவாமி
கூறும் லாடபரிபாஷை ரே ரே ரே
தத்தி விளையாடியல்லோ சுவாமி
தார் குழல்மேல் சன்ன தங்கள் ரே ரே ரே
மெத்தெனவே கூக்குரலாய் முனிவர்
மேன்மையுடன் சிறிவிளை ரே ரே ரே
ஆடியல்லோ கருமுனியும் அய்யா
ஆரணங்கு சித்தடி மேல் ரே ரே ரே
பாடிவிளையாட்டங்களும் சுவாமி
பரிவுகொண்டு மயக்கமுடன் ரே ரே ரே
சிறிவிளையாடையிலே முனிவர்
சித்தடியைப்பதம் பணிந்து ரே ரே ரே
கூறியல்லோ கேட்கிறூர் சுவாமி
கொம்பனேயே நீவாருமம்மா ரே ரே ரே

வேறு.

கறுப்பனுக்கு கறுப்பனுக்கு
கறுப்பனுக்கு கறுப்பனுக்கு

கறுப்பனுக்கையருவா வாங்கிவைக்கிறே மின்னியளே
குத்தியோடே சாராயம் கொடுக்கிறே மின்னியளே
பானேயோடே கள்ளுப்படைக்கிறே மின்னியளே [க்
கோட்டாளேக்காரியான கொள்ளேகொண்டாக்குச்சிக்கி
குண்டுமணிக் கண்டாங்கி வாங்கிச்சாத்துரோ மின்னி
[யலே, டுண்டுடு.

இப்படிப் பலபல விதங்கள் நினைத்த நினைத்தபடி க்குச் சாகித்தியங்களை தொண்டையும் உடுக்கும் கிழிய அடித்துப்பாடிப் பூசாரி வெறியுடன் இருந்தான்.

இந்தச் சொரூபங்குலேந்த தேவதைகளுக்குச் சிவ பெருமானுக்கே உரித்தான விபூதியைக் கையாண்டு வருகிறார்கள். இவர்கள் தெய்வங்களென்று மண்ணைப் பிடித்து வைத்தாலும் கல்லை நட்டுவைத்தாலும் பாதகம் ஒன்று மில்லை. ஆனால் அவைகளில் குணங்கெட்ட துஷ்டதேவதைகளை ஆரோபிக்கின்றார்கள். நிற்க.

பின் எல்லாரும் புறப்பட்டுத் திரும்பிவரும்போது சின்னையன் முன்போலவே வண்டி முகப்பிலிருந்து பெருங்குடிவெறியில் மாடுகளை அதட்டி அதட்டி நிதானமின்றி ஓட்டிக்கொண்டு வந்தவன் மார்க்கத்தில் வகைத்தப்பாய் வண்டியைக்குடம் கவிழ்த்துவிட்டான். இவ்வளவு தான் மற்ற எல்லாரும் கொல்லென்று கூச்சலிட்டு வந்து இராக்குமுத்துவின் வண்டியைச் சூழக்கூடிக்கொண்டார்கள். இராக்குமுத்துவின் கைஒடிந்துபோயிற்று. அவள் முகத்தில் பலமான அடி. முன்பற்கள் போய் விகாரமடைந்தாள். வீராயிக்கிழவி அதிக வயோதிகமாயிருந்தபடியால் தாக்கல் பொறுக்காதவளாய் உடனே பிராணன் துறந்து விட்டாள். சொக்குமட்டும் பிழைத்தாள். பக்கத்தில் வந்து கொண்டிருந்த பெருமாளும் முத்தண்ணாவும் சின்னையனைத்தோணினபடி திட்டி அவன் கூனல் முதுவும் நிமிரும்படி அடி அடி என்று வண்ணான் கல்லை வெளுப்பது போலச் சவட்டி விட்டார்கள். இதனுற் சின்னையனுக்கு நடத்தைக்கோணலும் இனித் திருந்துவதாகத்திரலாம். சின்னையன் பேரில் அவர்கள் இருவருக்கும் நெடுகிலும் இருந்து வந்த ஆங்காரங்களை யெல்லாம் இந்தச் சமயத்தில் அவர்கள் நன்றாய்த்தீர்த்துக்கொண்டார்கள். சின்னையன் பிற்பாடு போனவிடமே தெரியாமல் ஓடிப்போய் விட்டான்.

இந்தக் கலவரைப்பேரிரைச்சலேத்தான் சிவானந்தனும் சிவானந்தியும் தமது மாளிகையின் உப்பரிக்கையிற் சல்லாபமாய் வசனித் திருக்குங்காற் கேட்டு அய்யப்பட நேரிட்டது.

(20.)

பெத்தப்பெருமாள் ஒரு கொள்ளேயடிக்கச் சென்றதில்சிலரைக்குத்திக்கொன்றுவிட்டபடியால் அரசாங்கத்தார் அவனேப்பிடித்துக்கொடுப்பவருக்குத் தக்கபொருள் இனும் தருவதாக விளம்பரம் செய்திருந்தார்கள். ஒரு வேலேக்கென்று அமைந்த ஆயுதம் மற்ற வேலேக்கு உபயோகமாகாது;க்ஷவரக்கத்திவெட்டவும் அறிவாள்க்ஷவரத்துக்கும் உதவுவதில்லே. அதுபோல், பெத்தனுக்குத் திருடவும் கொலேயாதி பழிபாதகங்களேச் செய்யவுமே தெரிந்திருந்தது. “தொட்டிற்பழக்கம் சுடுகாடு மட்டே”. பெருமாளோ தனது உருவை மாற்றிக்கொண்டு யாவருக்கும் புலப்படாமல் வனந்தரங்களில் இராக்குமுத்துவுக்கு மட்டும் பிரசன்னமாகிப்பின் ஓடிவிடுவான். இராக்குமுத்து, நாமோ சொரூபம் குலேந்துபோனேம்; ஒரு ஆடவனும் நம்மில் மயங்கிப் பொருள்கொடான், இந்த வெட்டுக்குட்டியாகிய பெருமாளேப் பிடித்துக்கொடுத்து விட்டால் நமக்குப் பொருள் கிடைக்குமென்று தக்கலாகிரி வஸ்துவைக்கொடுத்து அவனே மயக்கி வீழ்த்தி அரசாங்கவீரரைப் பிடித்துப்போகச்செய்யும் உபாயத்தை நினேத்திருந்தாள். இச்சூழ்ச்சியை ஒரு வீரனிடம் பிரஸ்தாபித்திருந்தாள். அதனேச் சொக்குப்பையன் தெரிந்திருந்தான். பின் நடுராத்திரியில் நாடிவந்த பெருமாளுக்கு இராக்குமுத்து அவனுடைய சிரமபரியாயத்துக்கான உபசாரங்கள்பேசித் தனியிடம்

போய்ச்சாராயத்தில் அநேகவிருனசிலசரக்குகளைச்சேர்த்துக்கொண்டிருந்தாள். பெருமாள் எப்போதும் கிச்சுக்குரல்; சொக்குவுக்கு மிட்டாய் முதலிய தீனிப்பண்டங்கள் ஏதாவது கொடுக்கும் வாடிக்கை உண்டு. அது அவனுக்குக் கொடுத்துப் பிரியமாய் இருந்த சமயம் சொக்கு என்பவன் இராக்குமுத்துவினுடைய வஞ்சனையை ஊதி விட்டான். இவ்வளவு தான்; பெருமாளுக்குப் பெரும் கோபம் அண்டத்தை முட்டி வந்து விட்டது. இராக்குமுத்து திரும்பி லோட்டாவில் கூட்டுச்சரக்கை அவனிடம் கொண்டு வந்தாள். உடனே பெருமாள், நெய் ஊற்றிய ஓமக்கனல்போல் எழுந்து தன்னிடம் தயாரில்வைத்திருந்த கத்தியால் அவள் கழுத்திற் பலமாய்க்குத்தி மார்பின் வழியாக கீளப்பிளந்து அவள் உயிரை மாய்த்து விட்டான். பயந்து ஒதுங்கிய சொக்குவை, நீ பிழைத்து ஓடிப்போவென வெளியே விரட்டி வீட்டின் கதவுகளை அடைத்துத் துரோகிச் சிறுக்கியின் சகல சொத்துக்களும் அவளோடே நாசமாய்ப்போகட்டும், நானும் போகிறேன் என்று தானுகவே வீட்டில் எங்கும் தீயைவைத்து அதனுள்ளே இருந்தபடிக்குப் பெருமாளும் எரிந்து சாம்பலாய்ப் போனான்.

முத்தண்ணு இவ்விருவருடைய முடிவைத்தெரிந்து இரண்டு இறகுகளை இழந்தபறவையைப் போலச் சஞ்சலமடைந்தான். கொஞ்சக்காலத்தில் இவனுக்கு உண்டாயிருந்த த்ராதரோகமானது இக்கவலையுடன் விருத்தியடைந்து பெருங்கஷ்டப்பட்டான். "பட்டகாலிலேபடும் கெட்டகுடியே கெடும்" என்றபடிக்கு மூலரோகமும் வேறே அவனை வாதனை செய்ததற்குப்

பன்றிக்கறி விசேஷமென அதனை அதிகமாய் உண்டு திரிந்தான்.

இவனுடைய பெண்சாதி பாக்கிய மென்பவளை அவளுடைய பெற்றோர்கள் தங்களுடைய செல்வத்தில் வைத்துப் பரிபாலித்து வந்தார்களெனக் கூறியிருக்கின்றோமல்லவா? அவளுடைய மாளிகைக்குச் சில பக்தர்கள் வந்தவர்கள் ஸ்ரீசுப்பிரமணியக்கடவுள் கலியுகவரதரென்றும் திருச்செந்திற்பதிக்குத் தாங்கள் மச்சக் காவடிகொண்டு சென்ற அதிசயங்களையும், மற்றும் அக்கடவுளது கைகண்ட பல வரப்பிரசாதங்களையும் பிரஸ்தாபிக்கப்பாக்கிய மென்பவள் கேட்டுஉருகிக்குகபகவனிடம் ஒரே பக்தியுண்டாகி, அவ்வடியார்களை உண்டிமுதலியவைகளாலுபசரித்து வணங்கித்தனக்குத்திருச்செந்தில் வைபவங்களை இன்னம் சொல்லவேண்டும்; யானங்கு சென்று சிவகுமாரனைத் தெரிசிக்கும் பாக்கியம் பெறுவேனோ எனப் பிரார்த்தித்தனள். அடியார்கள் அவளுடைய பக்தி சிரத்தையைக்கண்டு பெருமகிழ்ச்சியுடன் அவளை வாழ்த்திப் பின் அவர்களிலொருவர் பின் வருமாறு சொல்வதாயினர்:—

“அருவமு முருவுமாகி யனுதியாய்ப் பலவாயொன்றாய்ப், பிரமமாய் நின்றசோதிப் பிழம்பதோர் மேனியாகக், கருணைகூர் முகங்களாறுங் கரங்கள்பன் னிரண்டுங்கொண்டே, ஒருதிரு முருகன்வந்தாங் குதித்தன னுலகமுய்ய.”

ஸ்ரீசெந்தி நகரின் மகிமையும் சிறப்பும் விசேஷமாயிருப்பதால் அவ்வளவையும் விரிவாயும் தெளிவாயும் எடுத்துச்சொல்ல யாவர்க்குமுடியாதாகையால் எங்கள் புல்லறிவுக்கு அனுபவமான சிலவற்றைக் கூறுகிறோம்.

இந்தத்திவ்யஸ்தலமானது திருநெல்வேலிப்பாலம் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து கிழக்கே ஏறக்குறைய 35 மயில் தூரத்திலுள்ள நீர்வளம்பொருந்திய ஒரு சிறந்த நகரம். இதற்குச் செல்லவேண்டுமானல் ரெயில்வே யாவது ட்ராம்வண்டியாவதுகிடையாது. ஆனல் மாட்டு வண்டிகளும் சாதாரணமாய்க் கிடைக்கின்றன. அவைகளின் வாடகை எப்போதும்ஒரேவிதமாயிருப்பதில்லை. ஆள் ஒன்றுக்கு ஒரு ரூபாய் முதல் ஐந்து ரூபாய் வரையில் சமையோசிதமாகவும் ஜனசங்கையின் ஏற்றக்குறைவுக்குத்தக்கபடியும் வண்டிக்கூலி ஏறியும் இறங்கியும் நிற்கும். தம்மைத்தவிர வேறொரு கடவுளில்லையெனத்தோற்றஞ் செய்திருக்கும் ஸ்ரீ ஷண்முக மூர்த்தியினது ஆலயம் தென் கீழ்க்கடற்கரையி லுள்ளது. சமுத்திரத்தின் அலைகள் இவ்வாலயத்தின் வெளிமதிலைச் சதா மோதினபடியே யிருப்பதானது, சமுத்திரா தேவியானவள் தன் பௌத்திரனுகிய முருகவேளைவிளித்து நின் பகைவனுகிய அரக்கன் சமயம் பார்த்து மோசம் செய்யக்கருதிமயில் உருக்கொண்டுகபடவாகனமாய்த்தாங்கி நிற்றலால் சர்வசாக்கிரதையாயிருமென்று எச்சரிக்கை செய்து கொண்டிருப்பதுபோ லிருக்கின்றது. இப்படி என்றும் பேரலை மோதப்பெற்றிருக்கும் இந்த ஷண்முகாலயமானது கந்தமாதனமென்னும் மலையினுள் கட்டப்பட்டிருக்கின்றது. இந்தக் கந்தமாதன பர்வதமானதுஇப்போதும் மகா உன்னதக்காட்சியாகத் தோற்றுகின்றது. சந்தனக்கல் நிறமுள்ள இந்தக்கந்தமாதனபர்வதச் சாரலின் ஒரு புறத்தில் கானக்குற வள்ளிநாயகம் தன் ஆசைக்காதலனுகிய ஆறிருபுயத்தோன்றலை அகமகிழ்விப்பான் கருதி மறைந்து கொண்ட ஒரு சிறுகுகைதோன்றுகின்றது. ஆனல், இக்குகையின்முடி

வு இவ்வளவு தூரம் தான் போகின்றதென்று திட்டமாகத் தெரியவில்லை. இக்குகையை அடுத்து இரண்டு கிணறுகள் உள்ளன. இவைகளின் ஜலம் அதிதுல்யமாயும் மிகு ருசிகரமாயும் இலேசாயுமிருக்கின்றது. இக்கோயிலையடுத்துச் சமுத்திரக்கரையில் அலைமோதுகின்ற அவ்வளவு சமீபத்தில் நாழிக்கிணறு என்பதோர் அற்புததீர்த்தமிருக்கின்றது. இது வெளித்தோற்றத்தில் ஏறக்குறைய முக்காலடி (9 அங்குலம்) சதுரமுள்ள அத்தனை சிறியதாயிருக்கின்றது. இதன் காரணம், தேவசேனாதிபதியாகிய அறுமுகக்கடவுள் அசுரயுத்தம் செய்த போது வேடிக்கை பார்த்திருந்த தேவசைனியங்களுக்குத் தண்ணீர் வேட்கை அதிகமாகி அதனால் தாளக்கூடாத தாக சோகம் உண்டானதாகவும் அக்கால் அக்குமாரவேளைத்தேவர்கள் வேண்டிக்கொண்டபடி தமது வேலாயுதத்தைப் பாய்ச்சி அச்சிறு துவாரத்தின் வழியே காசி கங்காதீர்த்தம் பொங்கிவழியவும் அது எப்போதும் குறைவுபடாமல் நிறைந்தவாறேயிருக்கவும் அருள்செய்தாரென்றும் சொல்லப்படுகிறது. அதற்கேற்றபடி இப்போதும் பல்லாயிரக்கணக்கான ஜனங்கள் அந்த நாழித்தீர்த்தத்தில் முகந்து முகந்து ஸ்நானம் செய்தும் சிறிதளவு ஜலமும் குறைந்து காணவில்லை. அஃதோடு, இப்படி ஏராளமான ஜனக்கூட்டம் ஸ்நானம் செய்யும் நீரானது அந்நாழிக்கிணற்றைச்சுற்றிச் சுமார் 20 அடியளவில் கிணற்றைப்போற் கட்டப்பட் டிருக்கும் தொட்டியில் தங்கி யிருக்கின்றது. அக்கழிவு நீரானது ஜனத்திரளின் தேகத்தினின்று நீங்கும் அசுத்த நீராகையால் அதிக துர்நாற்றமெடுத்துச் சுகாதாரக்கேட்டை யுண்டாக்கக் கூடியதாயிருக்கிறது. இந்த அசுத்தக்கழிவு நீரானது நாழிக்கிணற்றில் அடிக்கடி தளும்பித்தளும்பிச்சாதார

ணமாய்ச்சேர்ந்து கொண்டேயிருந்தும் நாழிக்கிணற்றி லுள்ள ஜலம் மட்டில் பரிசுத்தமாயும் எவ்வித துர்க்கந்த முமில்லாமலும் உவர்ப்புச்சுவையுமின்றியும் வெகுசுத்த ஜலமாய்க்காண்போர்க்கு அதியாச்சரியத்தை உண்டு பண்ணுகின்றது. இப்படித் திருவிழாக் காலங்களில் ஸ்நானம் செய்தலால் வெளியில் தங்கும் அசுத்த நீரானது திருவிழாமுடிந்து ஜனக்கூட்டம் நீங்கினபின் வெளிப்படுத்துவதற்காக ஜலசூத்திரமும்இவ்வெளித்தொட்டிலில் வைக்கப்பட்டிருக்கிறது. இந்தத் திருச்செந்தூர் என்ற பெரிய பட்டின முழுதுமுள்ள எல்லாக்கிணறு, குளம், வாய்க்கால், ஓடைமுதலிய வற்றிலுள்ள ஜலமெல்லாம் உப்பு நீராயிருக்க, இந்த நாழிக்கிணறும் வள்ளிக்குகையை அடுத்த இரண்டு கிணறுகளும் கோயிலுக்குள் உள்ள கிணறும் மாத்திரம் உவர்ப்புச் சுவையின் றிச்சுத்த சலமாய்ப் பானத்திற் குபயோகமா யிருப்பதானது கவனிக்கத்தக்கதே!

இந்தக் கந்தமாதன பர்வதத்துள் ஒரு புறத்திற் சுமார் 20 அடி ஆழத்தில் பூமிமட்டத்தின் கீழ் ஸ்ரீவெங்கடாசலபதி என்ற விஷ்ணுவாலயமொன்றிருக்கின்றது. இதில் ஸ்ரீவெங்கடபதி சேஷகிரி(திருப்பதி)யில் உள்ளது போல் நின்றதிருக்கோலமாய்ச்சேவைசாதிக்கின்றார். இவ்வேங்கடாசலபதியை அடுத்தாற் போல் ஸ்ரீ ரங்கநாதப் பெருமான் சேஷசயனத்தில் திருக்கண் கின்றார்.

இப்படி மகாசிறப்பும் மகிமையுமுள்ள இந்தச்சுப் பிரமணிய ஸ்தலத்தில் இப்போது நடந்த மாசி உற்சவமானது வருஷவாரி நடந்ததைவிடஎவ்வளவோ குறைவென்று உள்ளூர்வாசிகள் சொல்லிய போதிலும் ஏராள

மான ஜனப்பெருந்திரள்களால் நிறையப்பெற்று வெகு விமரிசையாகவும் வைபவமாகவுமே நடந்ததாகத் தோற்றியது. மற்ற எந்த மாதங்களிலும் எந்த உத்ஸவங்களிலும் வெளிவராமல் வருஷாந்தத்தில் ஒரே முறையாக இந்த மாசியுற்சவத்தின் போது ஏழாந்திருவிழாவன்று மாத்திரமே பக்தகோடிகளினிமித்தம் பரமகருணையோடு வள்ளி தெய்வானை சகிதம் உல்லாசமாய்ப் பவனிவந்த அறுமுக நாயனார் என்னும் ஷண்முகக்கடவுளின் கண்கொள்ளாக்காட்சி முதலிய சிறப்புகளைமனதினும் சிந்தித்திடல் எவர்க்குமே அருமை! அருமை! காலை 6-மணிக்கு நகர்வலம் வரவெழுந்தருளி மறுநாள் சாயந்திரம் 4- மணிக்குத்திருக்கோயில் பிரவேசிக்குமளவும் அங்கங்கும் அன்பர்கள் நிமிஷந்தோறும் வாங்கி வாங்கிப் புரோக்ஷிக்கும் பன்னீர்ப்புட்டிகள் இத்தனை ஆயிரமென்று திட்டமாய்க்கணக்கிடமுடியவில்லை. மண்டகப்படியாகும் ஒவ்வோரிடத்திலும் ஊற்றப்படும் பன்னீரானது இந்திரமருகன் அணிந்துள்ள ஏராளமான புஷ்பக்குவியல்களையும் ஆடை அலங்காரங்களையும் நன்றாய் நனைத்தூறிக்கொண்டுவெளியில் ததும்பிச்சிதறும் பன்னீரானது ஆங்காங்கு சிற்றருவிகள் போன்று பூமியிற் புரண்டுவழிந்தோடாநின்றது. இதனால் எங்கும் பன்னீர் மயம். எவ்விடத்தும் பன்னீர்மணம். தெருக்களெல்லாம் பன்னீர்வாசம். மண்டபங்களெல்லாம் பன்னீரோடையும் சந்தனக்குழம்புமாகவேதளும்பி நிற்றலால் உண்டாகும் சுகந்தமானது சுவர்க்கலோகத்தளவும் எட்டா நின்றதென்றும் சொல்லலாம். இங்குவரும் பால் காவடிகளும் விசேஷமே. பக்த கோடிகளும் பலவாயிரமே.

சுமார் முப்பது வருஷங்களுக்குமுன் இருகண்ணு மிழந்த ஒருவர் இந்த சுப்பிரமணியராலயத்திற்சென்று "திருச்செந்தூர் காவடிச்சிந்து" என்ற பெயரமைத்து நாயக நாயகி பாவம், தாய் மகளேசல், தாய் மகட்கறி வுறுத்தல், காதலிகொள்காதல், கபடநாயகன் கட்டுறை முதலிய ஸோகஸ்ருங்கார வருணனைகளால் அமைத்து ஸ்தோத்தரித்த மகிமையால் கண்ணிரண்டும் பெற்று அதனால் அருணசலக்கவிராஜன் என்ற கீர்த்திப்பெய ரும் அடைந்ததாக வெகுவாய்ச் சொல்லிக்கொள்ளப் படுகிறது.

இந்த மாசியுற்சவம் ஆரும் திருவிழாவிலிருந்து திருவனந்தபுரம் மகாராஜா அவர்களால் செய்யப்படும் அன்னதானத்தின் விசேஷம் அளவு கடந்த விதமாயி ருக்கின்றது. இத்தனைபேரென்ற கணக்குமிதமில்லா மல் அவ்வுற்சவத்திற்கு வரும் பல்லாயிரக்கணக்கான பலதேசப்பிராமணர்களுக்கும் காலை 8-மணிமுதல் மா லை 2-மணிவரையில் ஓயாமல்ஏகபோஜனம் நடந்த வண் ணமாகவே யிருக்கிறது. இப்படியான போஜன பந்திக ளாற்கழிவுபட்ட சாதமானது பெருங்குவியலாய்ச் சிறு குன்றுபோற் கொட்டப்படுகிறது. இந்த மகாஜன போ ஜன பந்தியானது ஸ்ரீவேங்கடாசலபதி சந்நிதியிலிரு ந்து சுற்றுப்பிரகாரமுழுவதும் நிரம்பிவிடுவதால் மாலை 4-மணி வரையில் பெருமாள் சேவைக் கிடமில்லாமல் அதற்குமேல் தான் சேவிக்கவேண்டியதாயிருக்கிறது. இப்படி ஏராளமான பிராமணபோஜனம் செய்விக்கும் திருவாங்கூர் மகாராஜா அவர்கள் தம் உதாரகுணத்தை யும் அளவு கடந்த பக்தி விசேஷத்தையும் எவ்விதம் சொல்லிமுடியும்? இந்த மகாராஜா அவர்கள் இந்த உற்

சவத்தின் ஏழாந்திருவிழா வன்று திவர்த்திக்காகக்கொடுக்கும் எண்ணையானது அன்றிரவில் மாத்திரம் 500 முதல் 800 வரையிலுள்ள பலவித அலங்காரமுள்ள திவர்த்திகளுக்கும் போடப்படும் போது அதனுற்கீழே சிந்தும் எண்ணையானது தேரோடும் வீதிமுழுதும் நனைந்து மண்ணைத்தனையும் எண்ணைமயமாகவே தோற்றும் படியாகச் செய்து விடுகின்றது.

இந்த ஏழாந்திருவிழாவன்று அறுமுகக்கடவுளுக்கு முதலில் பல நிறப்புஷ்பங்களால் அலங்காரமும் பசும் பொன்னுலாகிய விமானமுமாக முதல் முறை நகர்வலமும், இரண்டாவது வெள்ளைசாத்தல் என்று சகலமும் வெண்ணிறப்புஷ்பங்களும் வெள்ளியாற் செய்த விமானமுமாக இரண்டாமுறை நகர்வலமும், பின்னர் பச்சைசாத்தல் என்று எல்லாம் பசுமை நிறமாய், மருவு, மருக்கொழுந்து முதலிய வற்றாலும் பசுமை நிறமுள்ள பச்சைப்பட்டாலும் அலங்கரிக்கப்பட்டு மூன்று முறைநகர் வலமும் வந்து காட்சிதரும் அற்புதமும், இப்படி மூன்று முறை மாடவீதியைச் சுற்றிவருவதற்குள் பக்த ஜனங்கள் ஒவ்வொரு சுற்றிலும் வெள்ளை, பச்சை முதலிய புஷ்பமாலைகளை வாங்கி ஒன்றன்மேலொன்றாய்ச்சாற்றும்படிசெய்யும் விநோதமும், இவ்வளவிலும், சுவாமியும், வள்ளி தெய்வானைத்தாய்மார்களும் இந்த அபரிமிதமான புஷ்பமாலைகளாலும் வஸ்திராலங்காரங்களாலும் சிறிதளவும் மறைவுபடாமலும் சர்வமங்களதேஜோமயமாய்ப் பாதாதி முதல் ஒவ்வோர் அவயவத்தோற்றமும் நன்றாய்ப் பிரகாசிக்கும் படி அத்தனை நேர்த்தியாய் சோடனை செய்யும் அலங்காரங்களின் அழகும், இவ்வித வைபவத்துடன் நகர்வலம் வரும் வேடிக்கையானது பின்னும் விசேஷமாய் ஓர்வித ஊஞ்

சல் போல மந்தகாசவுல்லாசத்துடன் முன் வருதலும் பின் போதலுமாக ஆனந்தப்பவனிவரும் நேர்த்தியும் நேரிற்பார்த்த ஒவ்வொருவரின் மனத்தையும் உருக்கிப் பரவசமாக்கித் தன்னை மறந்து அளவு கடந்த ஆனந்த பாஷ்பங்களால் தேகாதியந்தமும் நனையச்செய்கின்ற தென்றால் இந்தத் திருச்செந்திநகர்ச் சேவற்கொடியோனின் தெரிசன மகாத்மியத்தைக்கண்ட அன்பர்களுக் குண்டாகும் ஆனந்தத்திற்கோர்எல்லையுமுளதோ? இது நேரில் தெரிசித்தார்க்கே அன்றி மற்றையோர்க்கு விசிதமாகாது.

இச்செந்திமாநகரில் ஸ்ரீ-நா-மு-கார்த்திகேய அய்யரென்பார் பஜனைமடாலயம் ஒன்றேற்படுத்தி அதற்குத் தக்க நிதியும் சேகரித்து அதன் வருவாயால் அக் கட்டடத்தில் அநேகம் பிராமணர்களுக்கு அன்னதானம் செய்து வருகின்றார். இவ்வுற்சவத்திற்கு வரும் பிராமணர்களுக்குப் பகலில் மகாராஜா அவர்களால் சுப்பிரமண்ய சந்நிதியிலும், இரவில் இந்தக்கார்த்திகேய அய்யரவர்களால் பஜனைமடாலயத்திலும் அன்னவிரயம் செய்யப்படுகின்றது.

இத்தேவாலயத்தின் பலபாகம் புதிதாய்க்கட்டப்பட்டு வேலை முடிந்திருக்கிறதோடு நில்லாமல் இன்னமும் பலபாகம் சீர்திருத்தியும் புதுப்பித்தும் பலவிதமான புதிய கட்டடமாகக் கருங்கற்களால் கட்டப்பட்டு வருகின்றது. இந்தத் தேவஸ்தானம் இவ்வளவு விமரிசைக்குவந்தற்கும் வந்து கொண்டிருப்பதற்கும்காரணம் தற்போது அதனைமேற்பார்த்து வருபவரின் புத்தி விசாலமும், அத்தியந்த பக்தியும், பொதுநல நோக்கமுமேயாம். இத்தகைய குணசீலரை உள்ளங்கவர்ந்தெழு

மகிழ்ச்சியாற் புகழ்ந்து வாழ்த்தாதா ரில்லை யென்றே சொல்லலாம்.

இவ்வாறு பெரியவர் சொல்லக்கேட்டுப் பாக்கிய மென்பவள் எந்நேரமும் ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளை நினைந்துருகிச்சாதுக்களனைவோரையும் பேணி வழியனுப்பித்தன்மாதாபிதாக்களிடம் தான்திருச்செந்தூர்போய் வினையோடவிருங்கதிர் வேலனைத்தெரிசிக்கவேண்டுமென்று மன்றுடிக்கொண்டனள். அவளுடைய நிலைமையின் நல்ல வழிக்கான விதங்களை அனுசரிக்கத்தக்கதே என்பதனைத்தெரிந்த உத்தமத்தாய் தந்தையர் அவளுடைய விருப்பத்தின் படிக்கே செந்திற்பதிக்கு அவளையழைத்துச்சென்று ஒரு விடுதியில் தங்கினார்கள். பாக்கியமென்பவள் அன்னத்தை ஒடுக்கிக் கருணாகரனாகிய கந்தனை உத்தேசித்துக்கொடிய தவவிரதங்களைச் செய்பவளானாள். தினம் புண்ணிய நீராடித் தேவாலயத்திற்கு வேண்டும் கயிங்கரியங்களைச்செய்து பவமகற்றும் சிவகுமரனை மனமுருகத்தெரிசித்துத் தன் கணவனுடைய செயல்களையும் தன் நிலைமைகளையும் சந்நிதியிற் சொல்லிச் சொல்லி முறையிட்டழுவாள். அவளுடைய பெற்றோரும் மற்றோரும் அவளுக்கு ஏதோகிறுக்குப்பிடித்திருக்கிறதென்று நினைத்திருந்தார்கள். ஒருசமயம்அவள் சந்நிதிவாசலிற் பசியாற்களைத்து வீழ்ந்து நித்திரை போயினள். கருணையங்கடவுள் அவள்கனவிற்பாலனைப் போல்வந்து, உனது கணவன் உத்தமனாய் உன்னைச் சீக்கிரம் வந்தடைவன். நீ அவனைச் சேர்ந்து இன்புற இல்லறவாழ்வைப் பெறுவை எனத் திருவாய் மலர்ந்தருளி மறைந்தனர். பெரும் பாக்கியத்தைப் பெற்றபாக்கியம் உடனேதிடுக்கிட்டு விழித்துத் தனக்குப்பசியின் உபாதி

யற்று அமுதவலிகொண்ட தேவரைப்போலத் தேகம் விளங்குவதையும் கனவிற்கண்டதையும் நினைந்து நினைந்து அடங்காப்பேரானந்த நீர் கண்களிற் பொங்கிவடிய வேற்பரனைப்போற்றிப் பணிந்திருந்தனள். அவளுடைய பெற்றோர் அவள் சகிதம் தங்கள் ஊருக்குத் திரும்ப உத்தேசித்தார்கள். பாக்கியம் அவர்களிடம் குமாரசுவாமியினுடைய கருணையைத் தெரிவித்தனள். அவர்களும் திருவருள் இருந்தவாறேதோவெனச் சில நாட்கள் மேலும் செந்தியிலேயே தங்கியிருப்பதானார்கள்.

## (21.)

இவள் இவ்வாறிருக்க, இவளுடைய நாயகனாகிய முத்தண்ணாவைப் பாலகிருஷ்ணஞ்செட்டிக்குக்கொடுக்க வேண்டிய தொகைக்காகப் பிடித்துக் கோட்டடியில் அடைக்கும்படிக்கு அரசாங்கத்தாரின்உத்தரவுபிறந்துவிட்டது. "கடன்பட்டார் நெஞ்சம் போற் கலங்கினானிலங்கைவேந்தன்" என்றபடிக்கு முத்தண்ணா நிலைதடுமாறித் தன்னைப் பல ஜனங்கள் எங்கும் ஏசுவதையும் சகிக்கமுடியாமல் உதவியற்றவனாய் ஆ! தெய்வமே! என்று சிந்தித்து ஊருக்குப் புறம்பே தனிமையான இடத்திலுள்ள ஒரு மரத்தில் நான்று கொண்டு பிராணனைவிட யத்தனித்தான். (முத்தண்ணாவும் தெய்வசிந்தனை செய்தானே! யாருக்கும் கொடிய துன்பத்திலாண்டவனுடைய நினைவு உண்டாவது இயற்கையே; முத்தண்ணாவோபடித்துக்கெட்ட பிராமணன். படித்தவர்கள் தெரிந்தே பிசகுவழிகளிற் பிரவேசிப்பர். படியாதவர்கள் மிருகங்களைப் போல் அறியாமலே தீயசெய்கைகளைச் செய்வார்கள். படித்தவர்கள்ஒருகாலத்திலேனும்

தமது பொல்லாங்குகளை உணராதிரார். அறிவிலிகளுக்கு அது தெரிவதேயில்லை. ஆதலின், படிப்பானது என்றும் யாவருக்கும் நன்மையே செய்யத்தக்கதாம். கல்வியானது அனைவோருக்கும் இன்றியமையாததேயாம்). அந்தச்சமயத்தில் விபூதி உருத்திராட்சம் சடைமுடியுடன்ஒரு பெரியவர் மங்களசொரூபத்துடன் முத்தண்ணுவின் திருஷ்டிக்குத் தோன்றுவதானார். அவன் அந்தப்பெரியவருடைய காட்சியைக்கண்டவுடன் நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்துருகத் தன்னை யறியாமல் அவரிடம் பக்திவிசுவாசம் கொண்டு அவரை விரைந்தணுகிப் பாதங்களில் அடியற்ற மரம் போல் வீழ்ந்து தான் மகாபாவியென்று தனது தன்மைகளை எல்லாம் உணர்ந்து முறையிட்டுக்கொண்டழுதனன். பெரியவர் அவனைத்தொட்டு எழுப்பித் தமது திருக்கண்ணாற் பரிவுடன் நோக்கினர். முத்தண்ணு, தனக்கு ஏற்பட்டிருந்த கல்விச்சாதுரியவாக்கியங்களால் மகாத்துமாவை நீளத் தோத்திரஞ் செய்து இவ்வாறு பாடுவதானான். "குலத்திடையுங் கொடியனொரு குடித்தனத்துங் கொடியேன், குறிகளினுங் கொடியனன்றிக் குணங்களினுங் கொடியேன், மலத்திடையே புழுத்திருக்கும் புழுக்களினுங் கடையேன், வன்மனத்துப் பெரும்பாவி வஞ்சநெஞ்சப் புலையேன், நலத்திடையோ ரணுவளவும் நண்ணுகிலேன் பொல்லா,நாய்க்குநகை தோன்றநின்றேன் பேய்க்குமிக விழிந்தேன், நிலத்திடைநா னேன்பிறந்தே னின்கருத்தை யறியே,னிர்க்குண நடராஜ நிபுணமணி விளக்கே". "யான்படும்பாடு சிவனே உலகர் நவிலும்பஞ்சுத் தான் படுமோ சொல்லத் தான்படுமோ எண்ணத் தான்படுமோ, கான்படு கண்ணியில் மான்படுமாறு கலங்கி நின்றேன் என்படு கின்றனை யென்றிரங் காவிடில் என்

செய்வேனே". "குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும்பொல்லேன் குற்றமே பெரிதுடையேன் கோல மாய, நலம் பொல்லேன் நான்பொல்லேன் ஞானியல் லேன் நல்லாரோ டிசைந்திலேன் நடுவே நின்ற, விலங்க லேன் விலங்கலா தொழிந்தே னல்லேன் வெறுப்பனவு மிகப்பெரிதும் பேச வல்லேன், இலம்பொல்லே னிரப் பதே யீயமாட்டே னென்செய்வான் றோன்றினே னே ழை யேனே."

"அப்பனீ யம்மைநீ யையனுநீ யன்புடைய மாம னு மாமியுநீ, ஒப்புடைய மாதரு மொண்பொருளுநீ யொருகுலமும் சுற்றமும் ஓருருநீ, துய்ப்பனவு முய்ப் பனவுந் தோற்றுவாய்நீ துணையாயென் னெஞ்சந்துறப் பிப்பாய்நீ, இப்பொன்னீ இம்மணிநீ இம்முத்துநீ இறை வநீ என்னையாளுந் தெய்வ நீயே."

இவ்விதப் பாட்டுகளைப் பெரியவர் கேட்டு மனம் இரங்கி முத்தண்ணாவினுடைய தேகமும் ஆத்மாவும் சுத்தியடையும்படிக்குத் தமது திருக்கரத்தால் விபூதி யை அவனது உச்சிநெற்றி தேகாதியங்கமும்பூசி வாயி லும் போட்டு "சித்தாந்த மெய்ச்சமயச் சிவநெறிக்கு வித்தாகித் திருமாலாதி, பெத்தாந்தக் கணத்தவர்க்கு மெவ்வெவர்க்கும் பெருவாழ்வு பெருக்கி மும்மைக், கொந்தாந்த மலமுக்குங் குறிகாட்டி நித்தியமாய்க் கொண்டார்க்குற்ற, பித்தாந்த மதப்பிணியைத் தபு மருந்தாந் திருநீற்றைப் பேணியுய்வாம்."

"பிணியெலாம் வரினு மஞ்சேன் பிறப்பினோ டிறப்பு மஞ்சேன், துணிநிலாவணியினான்றன் றொழும்ப ரோடழுந்தியம்மா, திணிநிலம்பிளந்துங்காணாச் சேவடி

பாவி வெண்ணீ, றணிகலா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே."

"நிலைகலங்கா தெங்குநிறை யருட்கடலின் வயிற் றோன்றி நிகரின் ஞானத், தலையொளிகான் றியாம்பிரம மெனத்தடுமா றும்மிருள்க டங்காதோட்டி, விலைமதித் தற் கரியதுவாய் வேண்டுவார் வேண்டியன விழைவி னீந்து, மலைமகனு யகன்றிருக்க ணருட்பேற்றைக் குறிக்கவரு மணியைத் தாழ்வாம்." என்ற திருப் பாடல்களை ஆதாரமாகக்கொண்டு நல்லுபதேசங்களைச் செய்து உருத்திராக்கமணிகளையும் கொடுத்து அணிந்து கொள்ளும்படி செய்தனர். முத்தண்ணு முத்தனுகி விட்டான். "கங்கைநதி பாவஞ் சசிதாபங் கற்பகந்தான், மங்க லுறும்வறுமை மாற்றுமே - துங்கமிகு, மிக்குண மூன் றும்பெரியோ ரிடஞ்சேரி, லக்கணமே போமென் றறி." பெரும் அந்தகாரத்திற் பளீரென மின்னல் தோன்றப் பொருள்கள் உடனே துலங்கியனபோலும் முத்தண்ணுவினுடைய இருதயத்திற் குடிகொண் டிருந்த அஞ்ஞான இருட்படலமானது மகாத்துமா வினது கருணு நோக்கால் நீங்க அதில் ஞானப்பிரகாச மாகியது. (கொடிய சூரனும் நமது பாலசுப்பிரமணியக் கடவுளுடைய ஒப்பற்ற தெரிசனையைப் பெற்ற மாத்தி ரத்தில் நல்ல சுபாவமாய் மாறினது இங்கறியத்தக்க தாம்). தனக்குத் தத்துவோபதேசம் அருளவேண்டு மென்று முத்தண்ணு பிரார்த்தித்தகாலையில் மகாநு பாவர், அவனுக்குப் பரிபக்குவகாலம் இன்னம் ஆக வேண்டியதா யிருக்கிறதென்று, மூர்த்தி தலம் தீர்த் தம் முறையாய்த்தொடங்கிச் சீக்கிரம் திருச்செந்தில் வரும்படிக்கு அக்குமரக் கடவுளினது பெருமைகளை

எடுத்து அவனுக்கு அநுக்கிரஹித்துத் தம் திருமேனி கரந்தனர். பெரியவரைக் காணுமல் முத்தண்ணு பட்ட துயரங்களைக் கூறமுடியாது. பின் அவன் தேறித் தேற்றுங் கொட்டை தெளிவித்த சலம்போல் மனச் சுத்தியடைந்து மகானுடைய திருவாக்கைச் சீக்கிரம் நிறைவேற்றுவதாய்க் காசியாதி பலஸ்தலங்களெல்லாம் சுற்றிப் பரமனைப் பாடிக்கொண்டு தநுக்கோடி தீர்த்த மாடி ஸ்ரீ இராமநாத சுவாமியை இவ்வெண்பாக்களால் துதிக்கின்றுன் :—

காப்பு.

எத்தமுதல் வந்தோனே யேரிபமு கத்தோனே
காத்தமுத வாக்கருளக் காதலித்துக்—காத்தமுதல்
வன்றுழ்ந்த நாதனுக்கு மாவெண்பா மாலைசொல
முன்றுழ்ந்தே னுன்றுண் முடி.



அப்பனே யென்ற னரியவு யிர்த்துணையே
செப்பரிய வாடலுறு சித்தனே—செப்பமா
யுந்தவென் நல்வினை யுன்றிருவந் தேற்குவரந்
தந்தா ளிராமநா தா. 1

எவ்வுலகும் வந்திறைஞ்ச விவ்விரா மேச்சுரத்தே
தவ்வுதிரை சூழநடுத் தங்கிடுமு—னெவ்வுதலே
யில்லாத் திருக்கோல மேற்றக்கா ணப்பெற்றேன்
சல்லாப ராமநா தா. 2

வல்வினைக்கு நன்மருந்தே மன்மறலி நாசகனே
யெல்லிலக் கத்தகு மென்றேநா—வில்வி
றெவர்க்கு மிசைக்கொணு வீசாநின் னேசத்
தவர்க்கருளி ராமநா தா 3

சத்துச்சித் தானந்தத் தாவிலுரு வாம்பொருளே
நத்துமெனைத் தாவிடையி னண்ணிம—கத்துவநீ
வெம்போரிட் டாருயிர்கொள் வீமநா மக்கூற்றச்
சம்போக்கி ராமநா தா. 4

எங்குநி றைந்தெவர்க்கு மெட்டாத தீங்கனியே
வெங்குணத் தேனை வெகுளாமே—பொங்குமென்[டை
துன்னிருளாந் துன்பொழிக்கத் தோன்றிவா தூயவி
தன்னி விராமநா தா. 5

தீர்த்தனே முக்கண்ணு செக்கரா ருஞ்சடையி
லார்த்தகங் கையமர்த் தத்தனே—தூர்த்தலர்
சீராபி ராமன்றூழ் செம்மலே யுன்பத்தி
தாரா யிராமநா தா. 6

மென்கொம் பனையாரை மேவுதிற மேற்கொண்ட
வென்கோ தகம்வந் திருப்பையோ—வென்கோள்
மனக்கவலை தீர்த்தென்னை மன்னிப்பாய் கானந்
தனக்கரு ளிராமநா தா. 7

முவ்வினையும் போக்கவல்ல முன்னவனே யெற்கமைந்த
யிவ்வினையைத் தீர்த்தருளா யீசரா—கவ்வையறு
தேகனு யுன்னடிக டோர்ந்தினிது போற்றிசெயத்
தாக ளிராமநா தா. 8

நல்வினைமுன் னுலேதா னுனின்றுன் போரடிவீழ்ந்
தல்லறீ ரும்வகையி லார்ந்ததுன்—றெல்லறிவிற்
றேர்ந்திடாத் தன்மையோ தினருக் கேயருளச்
சார்ந்திடுமி ராமநா தா. 9

உன்னைவிட் டிங்குநா னுய்வனோ கேடதுவாப்
பின்னை யொருவரையான் பேணுவனோ—தன்னே

ரெனத்தகு பேராருளேருமை மாது
தனத்தாரி ராமநா தா. 10

பத்துத்திக் கும்பரவப் பாம்பணிந்த கோமானீ
தத்தித்தொ மென்றாடுந் தன்மைதனை—நித்த
மிவணெங்கு மோர்ந்திலே னிந்திரன யன்மா
தவர்க்கருளி ராமநா தா. 11

மூவுலகத் தெத்தலத்து முந்தவித்த லத்தினினீ
மேவு மருமையெவர் மெய்யுணர்வர்—தாவுமவ
ராவரவ ரேழ்பிறப் பாங்கட லெற்காகவே
தாவளரி ராமநா தா. 12

அங்கஞ்ச ஞதியரி னங்கத்தைத் தானெஞ்சிச்
சங்காரத் தெல்லணியாத் தாங்கிநின்—றங்கெவர்க்கு
முந்தியவன் றானெனவே மூதறிவை முற்றிலுமே
தந்திடுமி ராமநா தா. 13

ஒன்பது மேலா முருவங் களைக்கடந்திங்
கன்பது வேயுருவ மானோனே—யென்பதையு [த்
வந்தணிபெம் மானென்று வந்தம்போக் கிச்சுகத்தை
தந்தருளி ராமநா தா. 14

எவ்வுயிரு மவ்வுயிரி யங்கறிவும் பூமணமு
மொவ்வுனதி டத்தகில முண்டாகி—யவ்வழியே
மீண்டொடுங்க நின்றாயென் மேலருணீ செய்பொதுத்
தாண்டவவீ ராமநா தா. 15

சூடு பிறைகுளிரச் சூடு சிவக்கொழுந்தே
பீடுறுமுன் பொற்கழலென் போகமு—நாடுறுமேற்
பின்னென்னை யுற்றிடாப் பேறொன்று மெஞ்சுமோ
தன்னேரி ராமநா தா. 16

உன்றிருவ டிக்கன்ப ரூடே வசித்தவருக்
கன்றிவாட் கண்மடவார் கண்மையி—லொன்றிம
தத்தவர்க் கேவல்செய் தன்மைய னுய்தலோ
தத்தகுமி ராமநா தா. 17

நால்வரா திப்பெரியர் நற்றமிழு வந்தநீ
மால்வருமென் புன்கவியை வாலன்சொற்—போல்வதா
யெண்ணித் திருச்செவியி னேற்றுத ரஞ்செயார்
தண்ணளியி ராமநா தா. 18

வேதவுரைக் கெட்டாத மெய்யுருவ னேயன்பர்
போதவுணர் விற்பொலியும் புண்ணியா—நாதா
வகமொழி மெய்யொத் துணையடைந்தே னேயேபா
தகமொழியி ராமநா தா. 19

என்கிரியை யாவையு மேற்றுனது பூசையா
வுன்கிருபை நீதா வுவப்பாக—வன்கிரிரா
சன்மகனே யாநஞ்சஞ் சாரமுத மாகக்கொண்ட
தன்மையே ராமநா தா. 20

பல்லுயிரைக் கொன்றுண்ட பாவந் தனைப்போக்கி
மல்லுபுரி கின்றவென் வன்புலனை—நல்லுறவா
மாதுமை பாகாவு வந்தருள்வாய் கொன்றையந்
தாதுபடி ராமநா தா. 21

புல்லையும் பேணிப் பொலனுறச் சென்னியிற்
றொல்லைதீ ரச்சூடு தோன்றலே—வொல்லைவந்
தஞ்சலென் றுறவந் தாதரஞ் செய்யெனது
தஞ்சத்தி ராமநா தா. 22

ஆற்றுமீ னூழிநீ ரார்ந்துவ ரேற்பபோன்
மாற்றுறப் பெற்றவென் வல்வினையை—யேற்றுணர்வு

கொள்ளா திருக்கின்றேன் கொண்டெனைக் காத்தரு
டள்ளாதி ராமநா தா. 23

வீண்வாத நோயாளர் மேலுறவாற் புந்திதனை
நாண்வாச மெல்லியர்பா ணடவிட்டு—வீண்வாடா
தேவரு நாடுதொண்ட ரிற்கூட்டித் தேவைவா
சாவரு ளிராமநா தா. 24

பெம்மானீ யேயென்றுன் பேரடியே னுதுமன
மிம்மாய வாழ்வுசத மென்றெண்ணி—யம்மாநன்
னேர்பொன்று மில்லாது நின்றேனுக் காணவத்தாற்
சார்புநீ ராமநா தா. 25

உற்றுநோக் குங்கா லுனதொரு சார்பன்றி
மற்றுமோ ரொன்றுபுகல் வந்தெனக்கு—முற்றுமோ
தேர்ந்துநலஞ் செய்யுமோ தேவைக் கிரங்குமுனைச்
சார்ந்தேனி ராமநா தா. 26

எத்தனையோ நாளெல்லா மேத்தா துனதடியைப்
பித்தனைப்போ லானேனுன் பித்தனே—யத்தனை
பிழைக்குமன் னித்தருள்வாய் பேசரிய ஞானந்
தழைக்கு மிராமநா தா. 27

ஆரிருந்தென் னார்போயெ னுண்டவநீ யேயெனக்குப்
பேரிருந் தாவினிதிப் பேறுக—வாரிரு
மரிக்குவிமு லைப்பங்க வந்தவருள் ளேசஞ்
சரிக்குமி ராமநா தா. 28

சண்டனுக் கஞ்சித் தடுமாறு வேனேவின்
கொண்டாரெவர்க்குங்கைக் கூப்புவனோ—முண்டகக்கண்
மாலயனென் றுந்தேடு மாவடிப ணிந்தபின்
சாலவு மிராமநா தா. 29

பத்தர்க் கருடருமுன் பானிறக்கோ லம்போற்றி
யெத்தருக் கெட்டா வியல்போற்றி—நத்தருண்
மங்கவரு மென்றனை வந்தருடி றம்போற்றி
சங்கரவி ராமநா தா. 30

இவ்வாறு பாடிப் புனிதனைப் பின் திருச்செந்தில் செல்வதாகக்கருதி வழிநடந்து நெடுகிலும் அப்பதியில் உலகுய்ய வெழுந்தருளியிருக்கும் சூர்வேரொடுகுன்று துளைத்த நெடும்போர் வேலபுரந்தரபூபதியை நினைந்து திசைநோக்கி இருகரங்களையும் சிரமேற் கொண்டுஇரு விழி கண்ணீரிறைப்பவெண்பாக்களைப்பாடிக்கொண்டே செல்வதானன். அவையும் வருமாறு:—

காவடி வேலோனே கந்தனே யெப்போதுங்
காவடிகள் கோடிக் கணக்காயுன்—பூவடியை
மேவிவரச் செந்தில் விரும்பினை நீயேயென்
னுவிக்கோ ருற்றதுணை யாம். 1

அருணகிரி நாத னருந்தமி ழேற்றுத்
தருணத்திற் காக்கவருந் தாளே—கருணையாற்
பொல்லாங் கிலாதென்னைப் போற்ற விசைந்தநமற்
றெல்லா வுறவெனக் கேன். 2

பல்லும்போய்ச் சொல்லும்போய்ப் பல்வளங்க ளெல்லாம்பொய், அல்லும் பகலு மலைந்தாயே—சொல்லுவதென், வேலனை தஞ்சமெண வேண்டாயோ பாழ் மனமே, காலனை தம்புரிவான் காண். 3

தேகமே யெற்குரிய சேர்க்கையில் லாப்போது
போகமே சொந்தம் பொருந்தியிடும்—நாகமேற்
சேனு பதித்துவந் தேவர்க்கு ழாமேற்றத்
தானுகி நின்றவனே சாற்று. 4

பேதிக்கு மாயையினாற் பித்தனைப் போலுழன்று
சாதிக்கு மோருண்மை சார்ந்திரேன்—வாதிக்குஞ்
சூரனை மாயைத் தொழிலுடன் போக்கியருள்
வீரனே செங்கையின்வே லா. 5

என்றுபல் கோடி யிணைந்தெழுவ தேபோலு
மன்றுளான் கண்பொலிய வந்தனை—யன்றுமுதல்
வேதநெறி யெங்கும் விளங்கின வைவேலா
போதநெறி யெற்குப் புகல். 6

கொன்றே னதன்றியுங் கொன்றுதின் றேனாயி
ரென்றே வனையிதற் கென்செய்வேன்—மன்றேநின்
றாடும்பி ரான்மகனே யாதரவா யுன்றாளைத்
தேடும் வகையெற்குச் செப்பு. 7

என்னுயிரைப் பேணலே யேற்றவித மென்றெண்ணி
மன்னுயிரை யையகோ வாட்டினே—னுன்னுடைய
வேதமொழி யோர்ந்திலேன் வேதனை வென்றாயெ
னேத மொழித்தாள்வை யே. 8

பல்லுயி ரஞ்சினும் பாதகம் பாராது
கொல்லுமெனக்கருள் கொள்வையோ—மல்லுறழ்தோ
ளண்ணலே தேவர்க் கரசனே பன்னிரு
கண்ணனே பார்த்தென்னைக் கா. 9

எல்லா முனதுசெய லென்றெண்ணி யேநெஞ்சம்
பொல்லாங்கி லாதிருக்கப் போதிப்பாய்—நல்லாருக்
கேயருள் கானகத் தேர்வள்ளி குஞ்சரிக்
கேயதோர் புத்தமுத மே. 10

என்னருளை நோக்குவர்க் கேதுமி ரங்காம
லுன்னருளை நோக்கியா னுற்றிருக்க—வென்னவித

மென்பா னுவப்பாய்நீ யின்னிசைக் கூத்தனு
மென்பாரன் றந்தசே யே. 11

எப்போ தரியவுயி ரென்னைவிட்டு நீங்குமோ
வப்போ துனைப்போற்ற வாவேனோ—விப்போதே
போற்ற வருடருவாய் பொங்கா வாபாண
னேற்றவொரு நற்குமா னே. 12

சாத்திரங்க ளெல்லாஞ் சரியாக வோதிடினு
மாத்திரங் கொண்டுன்னை யாய்வரோ—சேத்திரங்க
டோறும் விளையாடுந் துங்கமயில் வீரனே
தேறுவார் புண்ணியரச் சீர். 13

தத்துவங்க ளைக்கடந்த தற்பரசி காமணியே
த்துபவ ருக்கெளிய நண்பனே—தொத்துமிருட்
ாசபட லங்கட்கோர் பாற்கரனே சங்கரியி
னசமக னேவாவெ னேர். 14

ன்னிரு கண்ணனே பன்னிரு தோளனே
ன்னியி ரண்டுடைய பார்த்திபனே—யென்னிரு
ண்ணே கருதுகற் கண்டே யுனையன்றி
யண்ணே னொருதெய்வ மே. 15

செந்திற் பதிவளருஞ் சீமானே யுன்மகிமை
சிந்திக்கச் சொல்லவகை தேறுமோ—வந்திபக
முன்னைப்ப டித்தாடி யுள்ளமுரு கப்பணித்
தென்னைத் தடுத்தாள்வை யின்று. 16

வர்க்கு மேலவனு மீசனுதற் கண்ணுதித்துத்
தேவர்க்கு வாழ்வுதந்த செல்வனே—மூவர்
தெழிலையு மேற்றவா சோகமா வன்பு
டெழியருட் காரநீ புகல். 17

கூரிய வேற்படைக் கோமானே யுன்னுடைய
பாரிய தன்மையின் பண்பதனைச்—சீரியதாய்
வேதமே யெண்ணும் விதமறி யாதுழலாப்
போதமே தாலுரைப்பேன் பேசு. 18

வஞ்சவுல கப்பற்று வாடுமோ மேதிமே
லஞ்சவரு கால னகலுமோ—தஞ்சமா
நண்ணி யவர்க்கு நலமருளும் வேலோனைக்
கண்ணினாற் கண்டிடாக் கால். 19

கொன்றைப் பிரான்மகனைக் கோமானி னேசனை
யென்றைப் பழிக்கு மெழிலானை—நன்றாக
வுண்ணிகழ்ந் தானந்த மூற்றெடுத்துப் பொங்குமோ
கண்ணினாற் கண்டிடாக் கால். 20

மாயோன் மருகனை மன்றாடி மைந்தனைச்
சேயோங் கிருகன்னி சேர்ந்தோனைத்—தாயகமா
யென்றுந் துணைக்கொண்டி ருப்பார்க் கொருகுறை
யொன்றுவது முண்டோ வுணர். 21

உன்சொரு பஞ்செய்கை யுன்மகிமை யாவரே
யின்சொற்றி றங்கொண் டிசைத்திடுவர்—புன்சொல்
பாவுக் கிசைத்தென்ன பாங்குகாண் பேனரு [லைப்
டாவுமயில் வீரனே தா. 22

மேலான வுன்மேல் விரும்பினேன் பாடினேன்
பாலான சொல்லதாய்ப் பாவிப்பாய்—சேலான
கண்ணியின் பாலனே காத்தெனை யுன்னருட்
கண்ணிருத் தாயிந்தக் கால். 23

யொப்புவமை யில்லாத வுன்மகிமை யோருங்காற்
செப்புவது மெண்ணுவதுஞ் சேருமோ—தப்புவழிச்

சார்ந்தேனை நற்கருணைச் சண்முகநீ காப்பையென்று
தேர்ந்தே னெலாநலமுஞ் சேர்ந்து. 24

பேர்பெற்ற காவிரியின் பேர்வெள்ளத் திற்சிக்கி
யோர்வழியுங் காணாம லோய்ந்தேனைப்—பார்காண
முன்வந் தெடுத்தாண்ட மூர்த்திசிவ பாலவினி
யென்பணி யேற்பா யினி. 25

பஞ்சணை தன்னிலென் பாங்கர் விடவராத்
துஞ்சி யெனக்கோர் துயரத்தை—மிஞ்சியது
செய்திடா தென்னுயிர் திட்டமுட னேகாத்த
நெய்திகழ் வேலவ னீ. 26

இற்றுப்போய்த் தானாக வென்மேல் விழவிருந்த
கற்றூணைப் போன்றதுலாக் கட்டைக்கு—முற்றுநான்
தப்பமுன் னெச்சரித்த சத்திவே லாவுன்னை
யொப்பவன் வேறா ருளன். 27

பெருவிரலைக் கீறிப் பிளவைநோய் தீர்க்க
வருபவற் கஞ்சினேன் வாகா—யொருமுருகா
வென்றேக சிந்துருகி யேங்குமுன் வந்துதவி
யன்றெனைக் காத்தா னவன். 28

சோதிவேற் கந்தனே சோர்ந்தாவி நான்றுறங்கேன்
பீதிசெய் காலனெனும் பேதியின்—வாதனையா
லென்றுதமர் வீழ்ந்தழுத வெல்லைவயி லாங்கவர்பா
னின்றுமருந் தெற்குரைத்தாய் நேர். 29

என்றனைக் காத்தவித மெத்தனையெ னச்சொல்லக்
குன்றமர் கொற்றக் குமரனே—யென்றுமே
கூடாதெல் லாவுயிர்க்குட் கோதற்ற வாருயிராய்
வாடாதி ருந்தாட்டு வாய். 30

பேரறிவா ளர்பேணிப் பேசுந்தி ருத்தணிகை
யாரறிவா ரோவவரே யாவாரே—பாரறிவர்
மாயையின் சார்பான் மதிப்பிலார் பின்னமன்
பாயவரு மப்போதென் பார். 31

காயமுள்ள போதே கருணைக் குமரனடி
நேயமுடன் போற்றி நிகரற்ற—பாயமுத
முண்டுபே ரின்பத்தி ளுேங்கநிலைத் தாரேளுே
மண்டுபிணி யெல்லா மறந்து. 32

இன்பமுற்ற போததனை யேற்றுமகிழ் வேன்மற்றுத்
துன்பமுற்ற போதோ துயருறுவே—னென்பகர்வே
னிவ்விரண் டுஞ்சமமா வெண்ண வருள்புரிவாய்
தவ்விவரு வேலாயு தா. 33

மன்றமரு மாதிபக வன்குரு வாவந்தோய்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பாகக்—குன்றுத
வாதரவு செய்தென்னை யாண்டவனே யென்றனுக்குன்
பாதமன்றி வேறில்லைப் பற்று. 34

எத்தனைநாள் வாழ்ந்தாலு மித்தேகம் பொன்று
மென்றும், கத்தனே யென்றுங் கதியென்று—மித்தனை,
யேனுேவீ ணுளுலப்பி னேனென்றுஞ் சிந்திப்பே,
ளுேனுேவு கொண்டிட்ட நாள். 35

ஆசையை முட்டுமே லாசையி ளுல்வரு
மாசைவேற் கொண்டவன் மாவருளான்—வீசிலெனை
யார்கலி விட்டோடு மன்றே லதுவோயா
வார்கலிவி டுத்தவலை யாம். 36

தேகஞ் சதமென்று செப்பாதே யேமனமே
யேகுமுயி ரின்னகா லென்பதில்லை—வாகா

முருவழியு முன்னே யுறுகால னோடை
முருகனு மத்தை மொழி. 37

கொள்ளோரா ளெல்லாநான் கோதுடனி ருந்தவித
முள்ளவெகு தொல்லை யுறுகின்றேன்-மெள்ளநெஞ்சே
போனவக் காலமெல்லாம் போகநீ யின்றேமே
லானவா றக்கரத்தை யாய். 38

விட்டவுயி ரோடே விரும்பிவெகு வாப்பாடு
பட்டுச்சம் பாதித்த பாக்கியங்க—ளொட்டிவரா
சங்கையற வங்கைவேற் சங்கரிதன் பாலனுந்
துங்கமயி லானைத் துதி. 39

அற்பவென் னுவையு மாருற வென்பவ
ரற்புகொண் டெற்கா வடைவரோ—பொற்புறவென்
சம்பத்தோ வென்றூற் சரியென் றனுபவிப்ப
ரும்பர்சே னுபதியென் றேறு. 40

உன்னைப்பி ரிந்திடுவ மோவென்ற பெண்டிருங்
கொன்னவிற் காலன் குறுகிவந்—தென்னுயிர்க்கு
மற்றோ ருயிர்மாற்று வந்துகேட் டாலுமவர்
முற்றுமுரை யாரென் மொழி. 41

ஓர்பாடை மீதில்யா னூர்ந்துபோ மேல்வையிற்
சார்வா ருயிர்பேணித் தாமிருக்கக்—கூர்மூக்குக் [யா
கோழியுந் தன்னுயிரைக் கொண்டெனது யிர்த்துணை
மேழிசையு கந்தகந்த னே. 42

மெய்சோர்ந்த நோவில்யான் வீழ்ந்திட்டபோதென்னைக்
கைசோரு மட்டுமே காத்தெடுப்பார்—பொய்சார்ந்த
சுற்றத்தா ரப்பாற் சுருக்காக விந்தவுயி
ரற்றதில யென்பார்வே லா. 43

ஒருநா ளழுவா ருயிர்போன வற்கா
மறுநாட் டலேழுழ்கி மாம்சம்—பெருநாளாக்
கொண்டாடி யுண்பார் குறைதமக் கெண்ணுரே
மண்மாந்தர் நெஞ்சே மதி. 44

மூவாசை கொண்டு முழுதுங் கெடுவேனை
மாவாசை கொண்டு மகிழ்வாயோ—பாவாலே
பாடித் துதிப்பார்க்குப் பாதகமெ லாம்போக்கு
மாடிமக னேகிருபை யாற்று. 45

பெண்ணைப் பிடித்திட்ட பேயைப்போ லேதிரிந்தே
னுண்ணூங் துடல மொடுங்கினே—னெண்ணிறந்த
காலத்தைப் போக்கியது கந்தா வினிப்போதுஞ்
சீலத்தைத் தந்தாள் சிறந்து. 46

நின்றதுபோற் கொல்லு நிகரற்ற நோவுமுண்
டென்றேர்க ணஞ்சதமா வெண்ணுதே—பின்னைக்கே
பொய்ச்சடத் தேதாற் பொருதுசெந்தி லானின்ப
மெய்ச்சர ணத்தை விழைந்து. 47

நாளையென் றெப்போது நன்மைக்கு மாற்றுதே
வேளைய தற்கின்றே மேலாகும்—வேளைக்
குறித்த பலவறங்கட் கொண்டுநடத் தாயே
வெறித்தசெயல் யாவும் விடு. 48

நாளுமென் கண்ணெதிரே ஞாயிறு வஞ்சித்துக்
கோளுற வென்னுயிரைக் கொண்டதே—யாளுமென்
னீசா குருபரா வேரிருந்த கன்னியரி
னேசா துணைநிமலா நீ. 49

பள்ளமே நீரோடும் பாங்கினி லென்புந்தி
கள்ளமே வுஞ்சிறிய கன்னியரை—யுள்ளலா

கின்றதே பேருரைக் கேட்பதிலை செந்தியி
னன்றதே யீயுமன் று. 50

நல்லகனி தானென்று நாடாம னன்றினமும்
பொல்லாவெட் டிக்கனியைப் பூசித்தே—னெல்லார்க்கு
போதவொ ருத்தனே புங்கவ ரேத்துசெந்தி [ம்
னுதவ ருள்வாய் நலம். 51

ஊனக்கண் ணேதுவா லுண்டாயே சிற்றின்ப
ஞானக்காண் ணேதுவா னுடாயோ—கானக்கண்
மானைப்போ லேயுடைய வள்ளிம ணாளனைத்
தேனைக்கைப் பிக்குமத் தே. 52

இந்திரசா லம்போலு மிந்தக்கண் பார்ப்பதெல்லாந்
தந்திரமா வஞ்சித்துத் தாமழியு—மந்திரமா
நின்ற வொருவனே நின்மலன் பிஞ்ஞகற்கு
நன்றருள் செய்தவ னடு. 53

காற்றைப்பி டித்தடைத்துக் கால்சோர வோடோடிச்
சேற்றைப்பூ சித்திரியுஞ் சிந்தையீ—ராற்றை
முடிக்கணியு மெம்மான் முழுதுவக்கும் வேல
னடிக்கமல மென்றடை வீர். 54

உற்றபி ணிக்கெல்லா முண்டா மருந்துகளாற்
கொற்றமுற வாழ்ந்துயிர் கொள்வனே—பற்றல
ரற்றுவிழ வேற்கொண்ட வாறுமுகன் றுளன்றி
மற்றம ருந்தென் மருந்து. 55

அன்னமா யெவ்வுயிர்க்கு மானதும் போகசுக
வன்னமுள மாதராய் வந்ததுஞ்—சொன்னய
மேறுமக வானது மேனுமெல் லாநம
தாறுமுரு கேச னடி. 56

கொதித்தவெஞ் சூரனைக் கோதோட்டு நோக்கு
மதித்தவி ருறதாம் வாகு—முதித்தபல
வென்றுபோ லாமுருக வேளுனது பாதமு
மென்றுநான் போற்ற விரும்பு. 57

உன்னடிய னென்றபே ருற்றேனை யாளுவாய்
வென்னணிவி லோர்நெடிய வேலோனே—யுன்னவரு
மாகமுற வோங்கி வருகாலற் கஞ்சாமற்
றோகைப் புரவிமேற் றோன்று. 58

எப்போ துயிர்போமோ வென்னுடலைத் தான்விடுத்
தப்போ தலமந் தறிவழிவே—னிப்போதே
மன்றுடி மைந்தனே வந்தென் றுதிக்கிரங்க
மன்றுடி நின்றேன் மதி. 59

காலன் வலியைக் கருதி மனக்கலக்க
மேலதா கின்றேன் விளங்குமா—வேலனே
மேதியின் மேலவன் மேவவெனை யுற்றுனீ
சோதிம யூரமிசைத் தோன்று. 60

உன்வினை யாட்டி னுலகெலா நின்றுடு
மென்செய லேது மிலையாமே—யென்றறிந்
துய்யும் வழியி னுறுதியா நானிற்கச்
செய்யும் வகையெலாஞ் செய். 61

பூனைக்கண் மூடிப் பொருந்திய தோர்சமய
மானைபோற் பாய்ந்திட லானதுரே—ரேனையுயிர்
தன்னைப்பு சிக்கமனந் தாழ்ந்துபின் முந்துற
வென்னைவே லாயிழுக்கு தே. 62

பற்பல சொல்லும் பலநூற் றுணிபுகளை
யற்பதி வேற்கா தலம்பினேன்—பொற்புறத்

தேறினே னப்பாற் றிருமுருகா வுன்பத
மாறினே னென்னையாண் டாள். 63

சமரசூர்க் கொன்றவோர் சண்முகத் தெய்வமே
யமரர்சூழ்ந் தேத்தவரு மாதிக்—குமரனே
போக்குவர வற்றதோர் போத மெனக்கருள்
வாக்கும னங்கடந்த வா. 64

தக்கபாத்தி ரந்தேர்ந்து சாலவுத வாதிட்டி
மிக்கபொரு ளைப்புதைக்க வேண்டுவேன்—றுக்கமாச்
சாவேனென் றெண்ணந் தரிக்கிலேன் சண்முகா
பாவேந்து கண்ணியதி பா. 65

கந்தமணி மங்கையர்பாற் காதல்செய் மோகவெம்
பந்தம தேகிடப் பார்த்தருள்வாய்—கந்தம
தேயிருக் கும்வள்ளி சேரடி யேவிருப்
பாயிருக் கும்வேற்ப ரா. 66

வஞ்சமே தோற்றமா மங்கையர்ச் சிக்கித்தீப்
பஞ்சதனிற் பட்டதுபோற் பாழ்த்தேனை—நஞ்சமுத
முண்டோன் றிருக்குமா வுண்மையைக் காணமற்
றிண்டாடி நின்றேன் றிகைத்து. 67

பந்தன்ன வெம்முலைப் பாவைய ரின்பமு
வந்தன்ன வர்க்கேவன் வாழ்வென்னச்—செந்திலா
நத்தினே னையகோ நான்படும் பாடத்தைக்
கத்தினே னையாநீ காண். 68

செந்திலம் மாபதியைச் சேர்ந்தங்க வேலனைப்
புந்தியுரு கத்தொழுது போற்றினன்—வந்திடு
மக்கண மாருக்கு மாறுத போகம்வி
டெக்கணமுங் கொண்டாட வே. 69

முக்காலும் பூசிக்க முன்வந்தேன் சண்முகா
வெக்காலு மென்னைநே ரேவரே—யிக்காற்
றுறவிக்கு மாறாத அன்பாவந் தேதிர்
பிறவியு மற்றதென் பேச்சு. 70

நாறுமலர் தான்றேடி நன்று யருச்சனைசெய்
தேறுமயின் வீரனை யேத்தியே—நாறுமலப்
பாண்டவுட லையேற்றப் பண்பாக்கிக் கொண்டேனெ
ஞண்டவன் பேரருளி னால். 71

கந்தனுக்கு கந்தபல கந்தமல ராய்ந்தெடுத்
தந்தமி லாவவ னம்முடியி—லந்தமாச்
சூடிப்ப ணிந்தெழுந் தோதித் துயர்தீர
வாடிப் படித்தேனன் கார்ந்து. 72

நோவாதி யாற்கவலை நாங்குமா வாரிதியி
லேவாழ்வு தாளாம லேகண்ணீர்—காவாழ்ந்த
செந்திற்பே ருரானே சிந்திளேற் குன்னருள்
சிந்தத்த ளிர்த்தேன் சிறந்து. 73

செம்பொன் மணிமாடஞ் சேர்ந்த திருச்செந்தி
னம்பனை யோர்மனதா னம்பினே—னம்புவியிற்
செல்வமு மேனுட்டுச் செல்வமுங் கைவசமிவ்
வெல்வைவந் தென்னுற்ற தே. 74

மன்னுமா டந்தோறு மங்கையர்வாழ் செந்தி
மன்னிய மன்னனை வாயாரப்—பன்னிப்
படிக்கும்ப டிக்குநான் பண்டேர்ந்து கொண்டேன்
றெடுக்குமென் மேலே சுகம். 75

மாணர் விழியாரின் மட்டுப்ப டாமோக
மாளு ரேவரே யாவரே—காளுரும்

வேடுவெப் பெண்ணமுத வேட்கையாற் கொட்புற்றுப்
பாடுவகை மேவுபண் பா. 76

எவர்க்கு நண்ணரிய வின்பமுத வாரிதியே
மூவர்க்கு மேலான மூர்த்தியே—நாவர்க்க
மேற்றொணாச் சீரானே வெல்லுறுவேற் கையனே
யாற்றொணாத் துன்பை யழி. 77

நம்பனே நற்கதிக்கு நாயகனே நாண்மலரின்
வம்பனே யாவருக்கு மன்னனே—வம்பனே
னென்றெனைக் கைவிடா தேற்றருள் பல்கோடி
யென்றொளியை வென்றவிறை யே. 78

நன்மைவந் துற்றாலு நன்மைசென் றுற்றாலுந்
தொன்மைவந் தென்னுளே தோன்றிய—தன்மையிற்
றித்திக்க வாரமுது தேக்கெடுக்கு முன்னுடைய
சத்திய சீரடியென் சார்பு. 79

நோவில்லா வாழ்வையு நூல்பயில வாவையுந்
தாவில்லாச் செல்வசம் பத்தையும்—பாவிக்கு
முறவினரை யும்வேண்டே னெங்குமேவ லாநின்
னறமாருஞ் சீரடியை யார்ந்து. 80

இன்பத்திற் றுன்ப மிருக்கும் வகையையுந்
துன்பத்தி லின்பந் துலங்குவது—மன்பதின்
கோலவே லாதெரிந்து கொண்டேன் கனிந்தெனக்குச்
சாலவே நின்நிலையைச் சாற்று. 81

உன்வழிக் கோர்சிறிது மொவ்வா தொழுகினே
னென்வழிக் கொண்டே யிருந்தாலு—முன்வரு
முன்னையே தஞ்சமா வுற்றேனே சண்முகா
வென்னையேற் றாதரிப்பை யே. 82

மருந்துக்குப் பத்தியம்போன் மன்னுவேற் கோவுன்
பொருந்துவழி பாட்டிற்குப் போத—விருந்துமுறை
வாழ்கிலா தேனைநீ வந்தாண்ட மாகருணை
வாழ்த்தியா னும்வகையா மா. 83

அன்பருக் கன்றிமற் றோருக்குந் தோன்றாத
வின்பசொ ரூபமா யெவ்வுயிர்க்குந்—தன்பதத்தைத்
தந்தாள மாகருணை தாங்கியொளிர் வேலவனே
வந்தாள வென்னை மதி. 84

மங்கையர் போகமே மங்காப் பதமென்று
சங்கையி லாமதஞ் சார்ந்தேனே—யங்கையிற்
சிங்கார வேலவா சீருற வேயெனக்
கிங்காத ரஞ்செய்வை யே. 85

சூதுற்ற கொங்கைதேன் சொல்லுவவாட் கண்ணெண்
கோதுற்ற சொல்லினுற் கோதையா—சூதுற்ற [ணக்
பொற்பறி யாமல்யான் பூசிக்க நேசிக்க
வெற்புரந் தாள்வேல னே. 86

நம்பினே னுணற்ற நாரியர்தம் போகத்தின்
வெம்பினே னீதென்ன வேலோனே—யம்பினோர்
கண்ணிவள் ளிக்கேற்ற கண்ணியனே தேமே
வெண்ணியென் மேலருள்வை யே. 87

குஞ்சரி பாகனே கொற்றவேற் றீரனே
நெஞ்சகத் துன்னை நினைந்தேனும்—வஞ்சகமாம்
வஞ்சிய ரால்வரும் வாதனை நோவினி
லஞ்சியே வாடலா மா. 88

பற்றற்று நின்ற பரம்பொருளே கண்பாராய்
கற்றதற் கொவ்வக் கனவினு—நற்றவ

மேவிநின் றேனிலை வேற்குருநாந்தனி
லேவிநின் ருயேந்த லே. 89

நல்லிய லாரை நலமுடன் சேரமன்
மேல்லிய லாரை விரும்பினேன்—பல்லியஞ்
செல்போன் முழங்கிடுஞ் செந்தியா வென்மாய
வல்போக்கி வல்லையி லாள். 90

பேரவுணர்க் கொன்றோரி பேய்கழுகு தாமகிழக்
கூரவுண வூட்டிய கோமானே—பாரவுடல்
வியுழி யுன்னருளை வேண்டினேன் சண்முகா
நேய முடன்வாவென் னேர். 91

எள்ளினி லெண்ணெய்போ லெங்கு நிறைந்தோனே
யுள்ளிநின் ருருள் ளுறைவோனே—தள்ளிநின்
றேற்ரு தவர்தமக் கெட்டானே வேலவென்
சாற்ரு தரிப்பாய் தரித்து. 92

சல்லியஞ் செய்துறு சண்டனிட மேயெழு
வல்லிடு ...க்கெதிர் வாராம—ரெல்லிருந்த
கூர்வே ...ாவுனது கோதற்ற பூவடியைச்
சார் ...கருளினிது தா. 93

துலகாமற் றேயழியுந் தோன்றுவ வெல்லாங்
கலகாமற் றேதெளி கந்த—னிலகாமற்
றெங்குமி ருந்த னியைந்துன துள்ளிருந்
தங்குமி லங்கு மவன். 94

ஆரு முணர்வரிய வற்புதா லங்கார
சீருஞ் சிறப்புமே சேர்ந்திடத்—தாருமின்
வாமநெ டுந்தோள் மருவிய வேலோயென்
காமநெ கிழ்ந்திடக் கா. 95

வேலு மயிலும் விளங்குசே வற்கொடியு
மேலுங் கனிமொழிய ரின்பமு—மாலும்
பணியுமுன் கோலத்தின் பாங்கிலுறப் பாவித்
தணியுடன் வாழ வருள். 96

என்றுநான் கற்றே யிருப்பது திட்பமா
வொன்றுள தேயது வோயாமற்—றுன்றுவ
தாயுள்ள மாயை யுலக்கணிலு முன்னடிய
தேயுள்ளந் தேறு மியல். 97

பாவிக்கு நற்கருணை பாலிக்கு முன்னையே
பாவிக்கு நல்லாறு பற்றினே—ஆவிக்கு
மோசம்வ ராமுன் முருகனே யென்றனி
னேசம்வைத் தாளுவாய் நேர். 98

மாயையைப் போக்கும் வலியுள்ள தீரனே
தாயையே நேர்கருணை தந்தோனே—சேயையே
போலென் முகநோக்கிப் பொற்புறச் செந்திலா
மாலென் மனத்தொழிக்க வா. 99

பருவதரா சன்குமரி பங்கமி லாமகனே
பருவங் குலையுமுன் பார்த்தாள்—பருவரற்
சொல்லியே தோன்றுஞ் சுரகணந் தாந்தொழும்
வல்லியோர் பங்கவடி வா. 100

பண்ணைப்பொ ருந்தாமற் பாவித் துணையிறைஞ்சிப்
பண்ணைப் படித்தவென் பங்கிருந்து—பண்ணைத்
திருச்செந்தி யையனே திண்மையாந் தீய
மருச்சேரா தெற்கருள்ப வா. 101

ஆடுமயின் மீதிலு மாடுதனின் மீதினுஞ்
சாடுமயின் வேலனே தானூர்வாய்—நாடுமனங்

கண்ணியமா வீற்றிருக்குங் காரணனே பேரரிய
புண்ணியமா நீயே புகல். 102

செஞ்சடையா னுக்கினிய சேயே வருகவே
தஞ்சடையா தேத்துஞ் சரவணா—மஞ்சடையா
காயமுட் டும்மலையு கந்தவா கந்தவா
மாயமுட் போவனே வா. 103

ஆனந்த வேயுதித்த வாதித்த நாயகனே
யானந்த வாரிதிக் காதியே—மானந்
தனைத்தேவ ருக்காகத் தந்தோனே யென்வந்
தனையேற் றருள்வாயி தம். 104

குறையிலா மன்னவா கொற்றமார் பாலா
விறைவனே யென்றே யிறைஞ்சி—மறைமுற்றுங்
காணாத நின்னோர் கழலுக்கே தஞ்சமா
வாணாளைப் போக்கவருள் வாய். 105

நில்லாத பெண்டிருக்கு நேசப்பு தல்வருக்கும்
பொல்லாத பாடுபட்டுப் பொன்னுமண் ணுங்—கல்லாத
வற்பனேன் றேடி யலைந்தே னெருமுருகா
சொற்பனத்தை நம்பித் துணிந்து. 106

தாங்கிச் சுமந்துபெற்ற தாயுந்த கப்பனு
மோங்கவிருந் தாலுமெனை யுற்றவுயிர்—நீங்கியக்கான்
மண்ணிற்பு தைப்பரே மாமகே சாமுனைத்
திண்ணிய வேற்கொளென் றே. 107

அன்பருக் கின்பா யருளமுத வாரிதியே
யென்பரா வார்த்தவற் கேற்கவோ—மென்பதின்
மேற்பொருள்வி ளக்கோர் விளக்கே யடியனேற்
கேற்பதாஞ் சொற்சொல்ல வெண். 108

பொருளினைப் போதித்த புண்ணியனே யென்றன்
மருளினைப் போக்குவடி வேலா—வருளினைக்
கோஷிக்கு மேழ்கடலிற் கொண்டா யெனைநாளும்
போஷிக்கக் கொண்டாய் பொறுப்பு. 109

விண்முக நோக்கி விருப்பமு டன்காத்த
சண்முக னேயுனைச் சற்றுநேர—முண்முகமாய்
வந்தித் திருக்கவென் றுன் மாயையுங் கன்மமும்
வந்துபோ ராடுதே வந்து. 110

சிந்தையை யுன்பாற் செலுத்துவ தாயிருந்து
செந்திலா பூசைநான் செய்தக்கா—லந்தமற
வாராத வெண்ணமெலாம் வந்துசிந்தை யிற்புகுந்து
சோராத போரிடுவ தோ. 111

எல்லாப் பிழையு மெனக்குப் பொறுத்தருளா
னல்லாரு டன்கூட்டி நான்மகிழ—வெல்லாருஞ்
செந்தியின் மேவையா சீருறச் செய்யவுனை
வந்தித்தே னீயவ் வரம். 112

எத்தொழிலைச் செய்தாலு மீசா வுனைமுன்ன
நத்திக்கொண் டேயப்பா னுன்முயல—முத்தொழிலா
தங்கட்கு மேலோனே சத்திவேற் கையனே [ர்
புங்கமாம் போதம் புகல். 113

பெண்டுமக்க ளாதியாம் பேர்மாயை யின்மேவிக்
கொண்டுநா னின்றாலுங் கோததா—லண்டாது
மரையினீர் போலதா மன்னிமேல் வாழ
வரையற் றருள்வேல வா. 114

திங்குமர னேயுனைத் தேறுத சொற்கொடு
மீங்குறப் பாடுத லேற்குமென்—றெங்குமோர்

தொன்மொழிவ ழங்கிவரச் சோம்பாதி யற்றுவன்
புன்மொழிப் பாவிற் புகுந்து. 115

வாலிபம் போன்ற மதர்ப்பி னுனைமறந்த
வாலிப மிப்போது மாறியே—கேலிக்
கிடனு மெவர்க்கு மிருந்தேன் குகனே
திடனும் வகையெனக்குச் செய். 116

நற்பருவ மெல்லா நமனையு முன்னையு
மற்பமு மெண்ணும லாகினேன்—கற்பனைக்
கெட்டாத கந்தவே ளெந்தலே யென்றனை
நட்டாத ரஞ்செய் நயந்து. 117

கனகமலை யைச்சேர்ந்த காகமும் பொன்னு
மனகமலை வாசனுனை யார்ந்தேன்—சனகாதி
யோகர்க் கருள்சுரக்கும் யோகவேற் பண்பனே
பாகத்தாழ் வெற்கோ பகர். 118

பேராறு மேற்கொண்ட பெம்மான் றிருக்குமரா
வோராறு பூமுகத்தா வுற்றதோ—வீராறு
நாகமெனக் கொண்டவா ஞாலப்பேர் மாமையா
மோகமெனக் கோட்டாய் முயன்று. 119

மலைபோல நீயிருக்க வந்தெதிர்த்தாற் காலன்
மலைவே னவனைநான் மாள—வுலைவின்
முனிவர்க் கருள்சுரக்கு மூலவேற் றேவே
யினிவருந் தாழ்வெனக் கேது. 120

வாரணனே யாதி வரதேவர் மாமுனிவர் [னே
வாரணனே யென்றுதினம் வாழ்த்தெடுப்ப—வாரணை
நின்றாய் திருச்செந்தி னேராயிப் பூவுலகு
குன்றாத வந்தனையைக் கொண்டு. 121

வேதனுக்கு மெட்டாத வேதநெறி மாண்பதனைப்
போதமிலா யானோ பொருதுவேன்—போதமிகக்
கும்ப முனிக்குக் கொடுத்தருள் செய்தவா
வும்பரில் யாருனக் கொப்பு. 122

ஓம்பொரு டேறாத வோதிமத்தா னைச்சிறையிட்
டாம்பொரு ளீசனுக் காக்கியவா—வாம்பரி
யாமயி லூரு மரசனே செங்கையி
னாமவே லேந்துமன் னா. 123

கோதின் மனமாங் குகையம ரேதுவினாற்
போதக் குகனெனும் பொற்பாம்பேர்—மாதொரு
பாகன் மகனே பதமுற நீகொண்டாய்
சோகமறு மோர்மொழியைச் சொல். 124

அக்கினியி லென்னை யடைவித்துத் தீய்க்குமுன்
முக்கியமா வந்தெனது முன்றோன்றி—யுக்கிரஞ்செய்
யாபத்தை நீக்கியெனை யாள்வாய் திருச்செந்தி
னீபத்தா ரேற்றவனே நீ. 125

எக்காலு முன்றன்னை யெண்ணாது பற்பல
சிக்கான தொல்லையிற் சீர்கெட்டே—னிக்காலம்
வந்தருளல் வேண்டும் வனசரர் பெண்கொடியு
வந்தவடி வேலா மகிழ்ந்து. 126

தேடிவருங் காலன் சிறியனேன் முன்வந்தா
லாடிவரு மாமயின்மே லார்ந்தென்னை—நாடிவந்
தச்சத்தை நீக்கி யபயந் தனைத்தருவாய்
முச்சக மெச்சவென் முன். 127

நிலையிலாக் காயத்தை நேசமாய் நம்பி
யலையிற் றுரும்பா வலைந்தே—னுலையிற்

பொருள்போ லுருகினேன் போதுமினி வேலா
வருணேக்கி ஞலென்னை யாள். 128

கோட்டிகொள் ளுங்குரங்குங் கோறனக் கஞ்சிச்சொற்
கேட்டிருக் கும்பின்னர்க் கேண்மையா—மேட்டிமைவிட்
டென்னோர முஞ்சுழலு மென்மனக்கு ரங்கைவேன்
மன்னே யிதஞ்செய்ய வா. 129

நெஞ்சத்தைக் கும்பிட்டு நேர்வழியி லேசேரக்
கொஞ்சமோ கெஞ்சினேன் கோளாறை—மிஞ்சவே
செய்திருக் கின்றததுசெய்யவேற் சேவகனே
யுய்த்திறமெ னக்கரு ளுற்று. 130

தெள்ளுதமி ழுக்குதவு செந்தில்வாழ் தேசிகனே
யுள்ளுமடி யார்தமக் குற்றவனே—வெள்ளுறுங்
காதகரை வேரொடுங் கண்டித்துத் தேவரின்
பாதகமொ ழித்தபக வா. 131

மின்னார் மினுக்கினை மீக்கூறி யெக்காலு
மன்னார் மயக்கத்தி லாழ்வேனே—மின்னுருஞ்
சீரலை யார்ந்த சகமேத்து செம்மலெனைச்
சீரலை யாமலே செய். 132

பன்னிரண்டு தோளனே பன்னிரண்டு கண்ணனே
பன்னியி ரண்டுடைப் பார்த்திபனே—மன்னுயிர்க்
கூனுய காரணனே வொப்பற்ற வுன்றனைக்
காணுத கண்ணென்ன கண். 133

ஓங்குனது சீரினை யுற்றறி யாவுறவைத்
தாங்கிநான் வாழத் தரிப்பேனே—யேங்கினே
னையனே வேறுபுக லற்றதிற் செந்திவாழ்
துய்யனே நீயே துணை. 134

தாயினு மன்புடைய சண்முகனே யென்றனக்
காயிருந் தாதியே யாண்டவனே—வேயிருந்த
தோளிபா லாவென் றுயரமெல் லாஞ்சொல்ல
நாளிதோ வந்ததே நன்று. 135

ஆரினும் பாந்தனு வானுமெ னக்குநீ
சேரினும் மற்றுறவு சேராதே—யூரினுஞ்
செந்தியே தேர்ந்தேன் றிருமய மாகினேன்
பந்திப்ப தொன்றிலைப் பார். 136

பொங்கிவரு முன்மகிமைப் போதவொளியின் வெள்ள
மெங்குந்து லங்க விருக்கநான்—பங்கமா
மின்னொளி காட்டும் விளக்கை யடுப்பைமற்
றென்னெனம திப்பே னினி. 137

கண்ணிலாக் காமத்தைக் கண்டோரே தாம்வெறுப்ப
ரெண்ணிலா தேனுக்க தேற்றுமோ—புண்ணிலாழ்ந்
தெப்பாடு பட்டாலு மின்பதென் றேகொளுந்
தப்பதை வேலா தவிர். 138

காமத்தை விட்டவனுக் காண்பா ரெனைமதிப்ப
ரேமத்தை யுள்ளத்தி லேற்றிலே—னீமத்தை
மேவிய கல்லறை மேற்பொலிவு போலானேன்
றுவியகை வேலாயு தா. 139

செக்கர்ச்ச டைப்பிரான் சேயா கருமத்தை
முக்கரண சுத்தியா முற்பட்டேன் – றக்கபல
னுண்டாகு மோகுகா வோர்விதத் திற்கரை
கண்டாற லாமோ கதி. 140

வள்ளிதெய் வானை வளர்சேவ லங்கொடி
புள்ளிம யில்வேற் புனிதமா—வுள்ளடிய

செல்லாரு டன்வாழி யென்கவி தீர்க்குமோர்
வல்லான் சரவணப வன். 141

எல்லாம்வல் லானே யிறைவனுஞ் சண்முகனைச்
சொல்லாருஞ் செந்தியிற் சேவித்துப்—பொல்லாத
நோய்களெல் லாந்தீர்வே னானுதிக் கம்பெறுவே
னேய்ந்ததே பாக்கிய மின்று. 142

கேட்டுக் குறுமனனே கேளாயோ நீநல்ல
பாட்டுங் குருகியருள் பாங்கனை—வாட்டு
மிடுக்கண்க ளெக்களையுந் தீரனை வள்ளிமா
வடுக்கண்ணி நேசனை வாழ்த்து 143

தஞ்சத் தருள்புகழோன் றங்குசெந்தி யின்மேவி
யஞ்சக் காத்தா னருமகனை—யஞ்சொல்விற்
பாடுவே னுடுவேன் பாசபந் தங்களைச்
சாடுவே னோடோடத் தான். 144

ஆமைபோ லஞ்சடக்க லாவேனோ சங்காற்
கோமையு ணர்த்தந்த வுத்தமனே—தீமைசேர்
வன்பிறப் பாழிவிட்ட மர்வனோ வேலாவுன்
றன்பிறங்கு தாளே சரண். 145

சட்டமில் லாதபடி தன்கொள்கை யேகொண்டு
நட்டமிக வாயினே னுயினே—னட்டமிட
மன்றைமன் னும்பெருமான் வன்னக்கு மாரனரு
ணன்றைப் பெருவதெந்த நாள். 146

காலமெல்லாம் வீணே கடத்திமுதி யோனுனேன்
ஞாலத்தி னோர்சுகமு நான்காணேன்—வேலனை
முட்டாதல் னும்பகலு முன்னியி ருந்துனை
யிட்டார்த்தம் பெற்றுய்வ தென்று. 147

ஆர்ந்தவென்னி ரண்டுவினை யற்றிருக் கும்விதஞ்
சார்ந்துநா னுய்ந்திடச் சாற்றுயோ—சோர்ந்துன்
னடியனியான் செந்திலா வாகாக்கொ டுங்காலத்
தடியனுக்கா ளாகத் தகும். 148

இம்மையம் மைப்போக மெல்லார்க்குந் தாமீந்து
செம்மையா கத்திகழுஞ் சீரலையிற்—செம்மால்
கொண்டாடி யாதரிக்குங் கோதிலுனைக் கண்டவரைக்
கண்டாற்போ தும்மெனது கண். 149

நீரொன்றை நீத்த நிகரற்ற பல்லுணவு
காரொன்றை நீத்த கதிருகள்—நீருன்றைப்
பேணுத பாழ்நெற்றி பேராஞ்செந் திற்பதியைக்
காணுத கண்பயனே காண். 150

இவ்வாறில் முத்தண்ணு என்பவன் திருச்செந்திலைச்சேர்ந்து அங்கு கருணைப் பிரவாகம்பொங்க எழுந்தருளியிருக்கும் சிவசங்கரதேசிகனைக்கண்டுகண்கொள்ளாக்காட்சியாகத் தெரிசித்துப்போற்றிச் சகல பிணிகளுந் தீர்ந்து புரையற்ற தேவசரீரமாக மனக்களிப்புடன் விளங்கினன். இவனுடைய பத்தினியாகிய பாக்கியம் என்பவள் இவனைச் சந்நிதியிற் காணநேர்ந்தும் அவன் இன்னுனென்று தெரிந்து கொள்ள வில்லை, சிவக்குமாரனுடைய கடாட்சத்தால் அவர்க ளிருவரும் ஒருவரை யொருவர் தெரிந்து கொள்ள நேரிட்டு மங்களமாய் உறவினரும் மற்றெல்லோரும். கொண்டாடப் பின் தங்கள் பதியை அடைந்து கடன் உபாதியையும் தீர்த்துக் குறைவில்லாச் செல்வத்துடன் நல்ல புத்திர பாக்கியங்களையும் பெற்றுச் சண்முகப் பெருமானிடம் அசஞ்சல பக்தியை யுடையவர்களாய் வாழ்ந்திருப்ப தானுர்கள்.



"சின்னையை ஞாதியரின் கதி".

கௌரி என்பவள் சிவானந்தனுடைய கவனிப்பில் இருந்தும் தன் கணவன் போனகாலமுதற் கொண்டு வெகு கஷ்டப்பட்டு, ஒவ்வொருவேளை சாரமற்ற பருக்கைகளையத் தண்ணீரொடும் புசித்து எக்காலமும் துக்க சொரூபமாக வடிவேலரைத் தன் பூஜை வீட்டின் முன்னிருந்து பிரார்த்தித்துக்கொண்டே இருப்பள். சிலர் சின்னையன் கடிகாரத்தை வஞ்சித்து வாங்கிப் போனதாகவும், சிலர் அவன் கடைத் தெருவில் நகர பரிபாலகரால் பெரிய சிரமத்திற்குள்ளானான் என்றும், சிலர் அவனை ஊருணிக் கரையிற் கண்டதாகவும் வந்து சொன்னவைகளை எல்லாம் கௌரி என்பவள் கேட்டு மிகப் பரிதாபப்பட்டுக் கொண்டிருந்தாள். ஒரு பிராமணன் சின்னையன் ஊருணியிலிருந்து சேலைதப்பிப்போகும்போது அவனை அறியாமல் அவன்பின் தொடர்ந்துபோய் அவன் தாசி வீட்டில் நுழைந்ததைப்பார்த்துத் திரும்பிவந்து அதனையும் கௌரியிடம் தெரிவித்திருந்தான். கௌரி என்பவள் இந்தச் சமாசாரங்களையெல்லாம் பலவிபரீதங்களோடும் கேட்டு துடிதுடித்துத் தனக்குள்ளே பலபல விதங்களாக வெல்லாம் யோசித்துப் பெருங்கவலையுடன் பெருமூச்சுக்களை விட்டுக்கொண்டே இராத் தூக்கமும் பிடிக்காமலிருந்து இரவு விடிகிற நேரத்தில் அவள் தன் வீட்டு வாசலைத் திறந்து வெளியே வந்து சாணந் தெளித்துத்திரும்பும்போதுத் வெளித்திண்ணையில் ஒரு ஆள் நிறையப் போர்த்துப் படுத்திருப்பதனைப் பார்த்து அது யாரப்பா வென்று கேட்டாள். அதற்குப் பதிலொன்று மில்லாதிருந்தது. பின் யாரோ வொரு வழிபோக்கனு யிருக்குமென்று வீட்டுக்குட் போய்ச்

சற்று நன்றாய் விடிந்தபின் கையில் விளக்குமாறுடன் அவள் வெளித் திண்ணையைப் பெருக்கும்படிவந்தாள். அதுவரை அந்த ஆள் படுத்த படுக்கையாகவே இருக்கக் கண்டு கௌரி என்பவள், "அதுயாரையா படுத்திருக்கிறது எழுந்திருங்கள் பெருக்கவேண்டு மென்றாள். அப்போது அவன் படுத்திருந்தபடியே அசைந்துகொண்டு ஐயோ! ஐயோ! நோகிறதே! நோகிறதே! நான் என்ன செய்வேன்! பிழைக்கமாட்டேன்! பிழைக்கமாட்டேன்! கெட்டேன்! கெட்டேன்! தெய்வமே! தெய்வமே! என்று எழுந்திருக்க முடியாமல் புலம்பித் துக்கித்துக் கொண்டிருந்தான். கௌரி அவன் தன் புருஷன் என்று அரவத்தால் தெரிந்துகொண்டு திகிலடைந்து வாய் குழறலுடன் இது என்ன காரணம்? இவ்வளவு காலமாய் எங்கே போய்த் திரிந்தீர்கள்? இப்போது என்ன உங்களுக்கு இப்படிப் பெரிய சங்கடம் வந்திருக்கிறது என்றாள். சின்னையன் அடி கௌரீ! கௌரீ! நான் என்னடீ செய்வேன். இங்கே பாரடீ என் முதுகை என்றான். கௌரி போர்வையை நீக்கிப் பார்த்தாள். அவன் முதுகில் உண்டாயிருக்கும் அடித் திரள்களினாலாகிய பெரும் வீக்கங்களைக்கண்டு கௌரி தம்பித்துத் திகைத்து நின்று ஒன்றும் தோன்றாமற் சற்று மயங்கிப் பின் தெளிவடைந்து கைகளை நெரித்துக்கொண்டு கண்ணீர்வடித்து இது என்ன காரணம் பாவியேன் எனக்கு ஒன்றும் தெரியவில்லையே! எந்தப் பாபிஷ்டன் உங்களை இப்படிச் செய்தவன்! இது என்ன பெரிய அநியாயமாயிருக்கிறது! என்று பிரலாபித்து வாய்விட்டு அழுவதானாள். அந்தத் துக்கக் குரலைக் கேட்டவர்கள் அவ்விடம் வந்துகூடி பல பல விதங்களெல்லாம் சின்னையனைப் பற்றி இரக்க முற்றுப்

பேசினார்கள். ஒரு தடித்த மகோதரக் கிழப் பிராமணர் நொண்டி நொண்டிக் கம்பூன்றி நடந்து வந்து அத் திண்ணையில் உட்கார்ந்து சின்னையனுக்கு மருந்து தயாரிக்கும்படி செய்து அதனை அவன் முதுகிற் போடும் படி செய்தார். சின்னையனும் சற்று பலவந்தத்துடன் எழுந்து கஷ்டப்பட்டு உட்கார்ந்திருப்பதானான். வரவரக் கூட்டம் அவனிடத்தில் அதிகமாய்க் கூடி விட்டது. அவர்களில் அனேகர் சின்னையன் நடவடிக்கைகளைப்பற்றி இழிவாகவும் கோபமாகவும் பேசினார்கள். தாசி வீட்டில் செய்யத்தகாத நடவடிக்கைகளெல்லாம் அவன் செய்துகொண்டிருந்தானென்றும் இனி அவனைச் சாதியிற் சேர்த்துக்கொள்ளக் கூடாதென்றும் கௌரி அவனுக்கு அரைக்ஷணம் அங்குதங்கியிருக்க இடங் கொடாமல் அவனை வெளியே விரட்டி விடவேண்டுமென்றும் பேசினார்கள். சின்னையன் இவைகளை எல்லாம் கேட்டு, ஏதோ கெட்டலைந்தேன்! சீர்குலைந்தேன்! என் கஷ்டகாலம் என்று விசனித் தழுதான். அங்கு வந்திருந்த சிலபேர்கள் சின்னையன் அடி வாங்கின விபரங்களைச் சாங்கோபாங்கமாக எடுத்துரைத்தார்கள். வீட்டுக்குள் இவன் பிரவேசிக்கக் கூடாது; உன் புருஷன் பெரிய பிரஷ்டனாய்ப் போய்விட்டான் என்று கௌரியைப் பார்த்து புண்ணிற் காய்ந்த வேலைச் சொருகியது போலப் பிராமணர்களெல்லாரும் கண்டிப்பாய்ப் பேசிச் சென்றார்கள். கௌரி விசனப்பட்டு அழுது தன் புருஷனுக்கு வெளியே சோறு கொண்டுவந்து போட்டு உபசரித்துக் காப்பாற்றுவதாயிருந்தாள்.

இவை நிற்க, சிவானந்தன் சின்னையன் இவ்வாறு வந்துற்ற சங்கதிகளை யெல்லாம் விசாரித்துக் கவலை

மேற்கொண்டார். இவருடைய காரியஸ்தர் சுந்தரம் பிள்ளை முதல் மற்றவர்களும் சின்னையனை வந்து பார்த்து இரங்கி அவனுக்குப் பல புத்திமதிகளை எடுத் துரைத்துச் சென்றார்கள். சிவானந்தன் பல பிராமணரைத் தருவித்துச் சின்னையனுக்கு அவர்கள் சொல் லும் பிரகாரமெல்லாம் தாராளமாய்ப் பொருட் செலவு செய்து பிராயச் சித்தாதிகளை நடப்பித்து நம்பினவ னுகையால் அவனை முன்போலத்தன்னிடத்தில் அமர் த்தி அவன் பயித்தியக்காரச் சுபாவமா யிருப்பதனை மாற்றுவிக்கத் தக்க மருந்து படிப்புஒன்றேதான்என்று அதனை அவர் தெரிந்தவராகையாற் சின்னையனை நன்கு படிக்கவைத்து அவன் அறிவு ஒழுக்கம் உலக வியற்கை களை யுணர்ந்து தெளிந்து நல்வழிகளில் நிலைப்பற்றி நடக்கும்படிக்குச் செய்து க்ஷேமப் படத் தூக்கி வைத் துப் பெரும் புகழைப் பெற்றார்.

சின்னையன் சிவசுப்பிரமணியக் கடவுளினது கிருபைக்குப் பாத்திரனாக இருந்தபடியினாலே அவன் ஒரு காலத்தில் மனித சுபாவமாக அத்தெய்வத்தை மறந்து கெட்டுப்போக நேரிட்டாலும் இரக்கமுள்ள அக்கடவுள் அவனைக் கைவிடவில்லை. பிள்ளைகள் தவறு செய்தால் பெற்றோர்கள் கண்டித்துப் பிற்பாடு அவர்க ளைக் காப்பாற்றுவார்கள். அதுபோலப் பரம பிதா வாகிய ஆறுமுகத் தெய்வம் அவனைப் பலவாறிற் கண் டித்துப் பின் மார்ச்சால நியாயமாய்த் தடுத்தாட் கொ ண்டு இரட்சிக்க நேரிட்டது.

“தொட்டனைத் தூறுமணற்கேணி மாந்தர்க்குக் கற்றனைத்தூறு மறிவு” என்றபடிக்குச் சின்னையன் அறிவின் முதிர்ந்த திறவானகி விட்டான். கலியினும்

அற்புதத் திருவிளையாடல்களைக் கண்டோர் வியக்கக் காட்டி வரும் எமது சிவசுப்பிரமணியக் கடவுளினது திருவருளாற் சின்னையன் திவ்யவடிவினைப் பெற்றும் விளங்கினன். அவனைத் தனக்குற்ற பெருந்துணையாச் சிவானந்தன் கருதித் தனது பூஸ்திதிகளை யெல்லாம் மேற் பார்க்குந் தலைவனாக அமர்த்தி மேம்படச் செய்து பின் தானும் கற்புடைய சிவானந்தியும் முருகக் கடவுளி னுடைய பரிபூரண கிருபையினால் பெறுதற்கரிய புத்திரர்களைப்பெற்று இல்லறமே நல்லறமென்னும் வாக்கியத் திற் கிலக்கியமாய் இன்புறவாழ்ந் திருந்தார்கள்.

மங்களம்.








